University of Madras

Intermediate Examination in Arts

# SELECTIONS IN TAMIL

PUBLISHED BY THE UNIVERSITY





Madras
THE S. P. C. K. PRESS, PRINTERS TO THE UNIVERSITY

1917

# CONTENTS.

PART I. பக்கம்.

பதினெண் கீழ்க்கணக்கு ... ... ... ... ... 1

நாலடியார் ... ... ... ... ... ... 3

நான்மணிக்கடிகை ... ... ... ... ... 21

களவழி நாற்பது ... ... ... ... ... ... 22

திரிகடுகம் ... ... ... ... ... ... 26

ஆசாரக்கோவை ... ... ... ... ... ... 28

சிறுபஞ்சமூலம் ... ... ... ... ... ... 31

ஏலாதி ... ... ... ... ... ... ... 34

அறநெறிச்சாரம் ... ... ... ... ... ... 37

நீதிநெறிவிளக்கம் ... ... ... ... ... ... 43

PART II.

கலிங்கத்துப்பரணி ... ... ... ... .. 49

சோழமன்னர் சிலர் ... ... ... ... ... 74

விக்கிரமசோழ தேவருலா ... ... ... ... ... 83

களவெண்பா ... ... 88

பாரதம் ... ... ... ... ... ... ... 121

இராசசூயச்சருக்கம் ... ... ... ... ... 124

சூதுபோர்ச்சருக்கம் ... ... ... ... ... 162

நைடதச்சுருக்கம் ... ... ... ... ... ... 220

திருவிளையாடற் புராணம் ... ... ... ... ... 265

அரிச்சந்திர புராணம் ... ... ... 297

குசேலோபாக்கியானம் ... ... ... ... ... 341

PART III.

நாலாயிர திவ்வியப் பிரபந்தம் ... ... ... ... 372

முதலாயிரம் ... ... ... ... ... 372

பெரிய திருமொழி ... ... ... ... ... 383

திருவாய்மொழி ... ... ... ... ... 389

தேவாரம் ... ... ... ... ... ... 392

பட்டினத்துப் பிள்ளையார் ... ... ... ... ... 408

குமாரகுருபரர் ... ... ... ... ... ... 422

தாயுமானவர் ... ... ... ... ... ... 431

தேம்பாவணி ... ... ... ... ... ... 443

சீறாப்புராணம் ... ... ... ... ... ... 464

பக்கம்.

## PART IV.

புலவராற்றுப்படை ... ... ... ... ... 469
தொண்டைமண்டல சதகம் ... ... ... ... 486
சோழமண்டல சதகம் ... ... ... ... ... 491
பாண்டிமண்டல சதகம் .. ... ... ... ... 494
கொங்குமண்டல சதகம் ... ... ... ... 497
ஆசிரியரும் மாணுக்கரும் ... ... ... ... 499
தமிழ்த் தெய்வ வணக்கம் ... ... ... ... 501

## PART V.

புறநானூறு ... ... ... ... ... ... 505
சிலப்பதிகாரம் ... ... ... ... ... ... 512
நச்சிஞர்க்கினியர் ... .. ... ... ... ... 519
கம்பநாடர் ... ... ... ... ... ... 523

# பதினெண் கீழ்க்கணக்கு.



சங்க மருவிய நூல்கள் ஒவ்வொரு கணக்காய் நடைபெறும். அந்தக் கணக்கு மேற்கணக்கு கீழ்க்கணக்கு என இருவகைப்படும்.

"அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந்தாதி பதிற்றைம்ப தீரு
மிகுத்துடன் தொகுப்பது மேற்கணக் கெனவும்,
வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே."

அவைகளில்

ஐம்பதுமுதலா ஐந்நூறீரு
ஐவகைப் பாவும் பொருணெறி மரபின்
தொகுக்கப்படுவது மேற்கணக்காகும்.

அகநானூறு ஐங்குறுநூறு புறநானூறு முதலியன இக்கணக்கில் சேர்ந்தவை.

கீழ்க்கணக்கு நூல்கள் பின்வருமாறு இயல்பவை:—

அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
அறம்பொரு ளின்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட வுரைப்பது கீழக்கணக்காகும்.

சங்க மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாவன:—

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
கைந்நிலைய வாம்கீழ்க் கணக்கு.

என்றபடி

| | | |
|---|---|---|
| | நாலடியார் | திருக்குறள் (முப்பால்) |
| | நான்மணிக்கடிகை | திரிகடுகம் |
| நானாற்பது | இனியதுநாற்பது | ஆசாரக்கோவை |
| | இன்னாநாற்பது | பழமொழி |
| | களவழிநாற்பது | சிறுபஞ்சமூலம் |
| | கார்நாற்பது | முதுமொழிக்காஞ்சி |
| நாலைந்திணை | ஐந்திணையைம்பது | ஏலாதி |
| | ஐந்திணையெழுபது | கைந்நிலை. |
| | திணைமொழியைம்பது | |
| | திணைமாலை நூற்றைம்பது | |

என்பனவாம்.

இவைகளில் நாலுற்பதும் ஐம்பது பாவிற் குறைந்து வந்தவை. முப்பாலான திருக்குறள் ஐந்நூற்றின் மிக்கு வந்தது. முதுமொழிக்காஞ்சி வெண்பாவினமாகிய வெண்செந்துறையால் வந்தது.

கீழ்க்கணக்கு வெண்பாக்களெல்லாம் இரண்டடி முதல் ஆறடி யிறுதியாக வருவன. அவை எண்ணுச் சுருங்கிச் சிலவாக வருதலோடு, எழுத்தினு லகன்றுகாட்டாது சில எழுத்தினுல் வருவனவுமாம்.

# நாலடியார்.

—∞∞—

கீழ்க்கணக்கில் ஒன்றான இது, பல ஜைந முனிவர் இயற்றிய வெண் பாக்களினின்றும் சேர்ந்தெடுத்த நானூற்றின் தொகுதி. அதனால் இது நாலடிநானூறு என்றும் வழங்கும். கடவுள்வாழ்த்து, பிற்காலத்தில் பதுமனார் என்னும் ஜைநப் புலவர் சேர்த்தது. திருக்குறள்போல் இந்நூலுக்கு அதிகாரவடைவு செய்து உரையியற்றினவரும் அவரே.

ஜைந முனிவர்கள் இயற்றியதாயினும், இந்நூலில்

எங்கிலத்து வித்திடினும் காஞ்சிரங்காழ் தெங்காகா.
தென்னாட்டவரும் சுவர்க்கம் புகுதலால்,
தன்னாற்றா னாகு மறுமை. வடதிசையும்
கொன்னாளர் சாலப் பலர்

என்பது தவிர மற்றவை யெல்லாம் மற்ற மதத்தினர்க்கு அங்கீகாரமாகத் தக்கவைகளே. அதுபற்றியே போலும்

வெள்ளாளன் மரபுக்கு வேத மெனச்சான்றோ
ரெல்லாருங் கூடி எடுத்துரைத்த—சொல்லாய்ந்த
நாலடி நானூறும் நன்கினிதா என்மனத்தே
சீலமுட னிற்க தெளிந்து

என்றொரு வெண்பா வழங்கிவருகிறது. தமிழிலக்கியங்களில் மிக்க அபிருசியுள்ளவரான டாக்டர் போப என்னும் இங்க்லிஷ் பாதிரியார் "இந்திய ஜனங்களில் தமிழரே முற்பட்டவர்: அவர்களை அங்ஙனம் செய்வித்தவை குறளும் நாலடியுமே" என்பர்.

திருக்குறள்போலவே இந்நூலும் தக்க ஸந்தர்ப்பங்களில் பிரமாண மாக எடுத்துக்காட்டும் பெருமையுடையது என்பதை "ஆலும் வேலும் பல்லுக் குறுதி, நாலு மிரண்டும் சொல்லுக் குறுதி" என்னும் பழமொழி நன்கு விளக்குகின்றது. இந்நூலில் நன்மொழி புணர்த்திருப்பது "பழகு தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்" என்னும் ஔவை வாக்கால் விளங்கும்.

பொருள்

வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்[1]
நடுவண தெய்த இருதலையு மெய்தும்.
நடுவண தெய்தாதான் எய்தும் உலைப்பெய்
தடுவது போலுந் துயர்.[2]

[1] அறம் பொருள் இன்பம். [2] "கொலைஞருலையேற்றித் தீமடுப்ப வாமை, நிலையறியா தந்நீர்ப் படிந்தாடி யற்றே" எனவரும் நாலடியால் விளங்கும்.

## ஊக்கம்

2 நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும், நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.

3 இசையா தெனினும் இயற்றிஓ ராற்றால்
அசையாது நிற்பதாம் ஆண்மை.—இசையுங்கால்,
கண்டல்[1] திரையலைக்கும் கானலந் தண்சேர்ப்ப! [1] தாழை.
பெண்டிரும் வாழாரோ மற்று.

4 உறுபுலி ஊனிரை யின்றி ஒருநாள்
சிறுதேரை பற்றியும் தின்னும்.—அறிவினால்
காற்றொழி[1] லென்று கருதற்க: கையினால்
மேற்றொழிலு மாங்கே மிகும்.

1 காலால் செய்யப்படும் சிறுதொழில். கால் அறிவின் சிறுமையையும், கை அறிவின் மிகுதியையும் உணர்த்தவந்த குறிப்புச்சொற்கள்.

5 பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்
கருணை[1]ச்சோ றார்வர் கயவர்.—கருணையைப் [1] பொரியல்.
பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை[2] [2] முயற்சி.
நீரும் அமிழ்தாய் விடும்.

6 ஆற்றுந் துணையும் அறிவினை உள்ளடக்கி
ஊக்கம் உரையார் உணர்வுடையார்.—ஊக்கம்
உறுப்பினால்[1] ஆராயும் ஒண்மை யுடையார்
குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு.

1 முகம் கண் ஆகிய அவயவங்களால்.

7 தீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி[1]
தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்—சோங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னாம்? பெயர்பொறிக்கும்[2]
பேராண்மை யில்லாக் கடை.

1 பிடர்மயிரை ஒத்த மலர். 2 பெயரை எழுதிவைப்பதற்குரிய.

எந்நிலத்து வித்திடினும் காஞ்சிரங்[1]காழ்[2] தெங்காகா.
தென்னாட் டவரும் சுவர்க்கம் புகுதலால்,
தன்னாற்றா னாகும் மறுமை. வடதிசையும்
கொன்னாளர் சாலப் பலர்.

[1] எட்டிமரம். [2] விதை. நரகம் இருப்பதாதலால் தென்றிசையை இழிவினதாகவும், போகபூமியிருப்பதாதலால் வடதிசையை உயர்வினதாகவும் கொண்டார்.

ஊக்கி[1]த்தாங் கொண்ட விரதங்கள் உள்ளுடையத் [1] முயன்று.
தாக்கருந் துன்பங்கள் தாந்தலை வந்தக்கால்,
நீக்கி நிறூஉம் உரவோரே, நல்லொழுக்கம்
காக்குந் திருவத் தவர்.

## ஈகை & ஈயாமை

கடிப்[1]பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர். [1] குறுந்தடி.
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்.
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படுஞ் சொல்.

உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்று[1]ம் [1] வருத்தி.
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்.—கொடாஅது
வைத்தீட்டி னார்இழப்பர். வான்றோய் மலைநாட!
உய்த்தீட்டும் தேனீக் கரி[2]. [2] சாக்ஷி.

எனதென தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானும்.—தனதாயின்
தானும் அதனை வழங்கான், பயன்றுவ்வான்.
யானும் அதனை அது.

சிறுகாலை[1] யேதமக்குச் செல்வுழி வல்சி[2]
இறுகிறுகத் தோட்கோப்பு[3]க் கொள்ளார்,—இறுகிறுகிப்
பின்னறிவா மென்றிருக்கும் பேதையார், கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம்.

[1] இளமைப்பருவம். [2] உணவு. [3] கட்டுச்சோறு.

இச்செய்யுளின் கருத்து

கையாற் பொதித்தணையே காட்டக் கயற்கண்ணா ளதனைக் காட்டாள்
"ஐயா விளாம்பழமே யென்கின்றீர். ஆங்கதற்குப் பருவ மன்றென்
செய்கோ" எனச் சிறந்தாள்போல் சிறவாக் கட்டுரையால் குறித்தவெல்லாம்
பொய்யே பொருளுரையா முன்னே கொடுத்துண்டல் புரிமின்கண்டீர்

என்ற சீவகசிந்தாமணிச் செய்யுளால் நன்கு விளங்கும்.

14 நடுவூருள் வேதிகைச் சுற்று[1]க்கோட் புக்க
படுபனை[2] யன்னர் பலர்நச்ச வாழ்வார்.
குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றுப் பனை.[3] [3] ஆண்பனை.

[1] வேதிகைச்சுற்று—மேடையின் வட்டம்; மேடை—திண்ணை. சுற்றுக்கோள்—enclosure. [2] பயனுண்டாகும் பனை—பெண்பனை.

அறம்

15 மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது,
கைத்[1]துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்.
முற்றி யிருந்த கனியொழியத் தீவளி[2]யால்
நற்காய் உதிர்தலு முண்டு.

[1] கைப்பொருள் (கையிலுள்ளது). [2] தீக்காற்று—கோடைக்காற்று.

16 நின்றன நின்றன நில்லா எனவுணர்ந்
தொன்றின[1] வொன்றின வல்லே[2] செயிற்செய்க.
சென்றன சென்றன வாழ்நாள்: செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று.

[1] இசைந்தன—இசைந்தனவாகிய அறங்கள். [2] விரைந்து.

17 அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க.—கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி, மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு.

18 உறக்குந் துணையதோர் ஆலம்வித்[1] தீண்டி
இறப்ப[2] நிழல்பயந் தாஅங்,—கறப்பயனும் [2] மிகுதியாக.
தான்சிறி தாயினும், தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்.[3]

[1] உறங்கும் என்பது உறக்கும் என விகாரமாயிற்று. உறங்கிவிழுங்காலத்தின் அளவினதாகிய ஆலம் விதை: அதாவது சுருங்கிய அளவினதாகிய ஆலம் விதை. [3] வான் சிறிதென்னும்படி பயன் பெருத்துவிடும்.

19 ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம்.—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறம்நெறி ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு.

ஒப்புரவு

20 எற்றொன்று மில்லா விடத்தும் குடிப்பிறந்தார்
அற்று[1]த்தற் சேர்ந்தார்க் கசைவிட[2]த் தூற்[3]றுவர்.
அற்றக் கடைத்தும் அகல்யா றகழ்ந்தக்கால்[4] — [4] தோண்டினால்.
தெற்றென[5]த் தெண்ணீர் படும். — [5] விரைவாக.

[1] பொருளற்று. [2] தளர்வு வந்தவிடத்து. [3] ஊன்றுகோல்.

21 ஒருபுடை பாம்பு[1] கொளினும் ஒருபுடை — [1] இராகு.
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம்—திங்கள்போல்,
செல்லாமை செவ்வன்நேர் நிற்பினும், ஒப்புரவிற்
கொல்கார்[2] குடிப்பிறந் தார். — [2] தளரார்.

22 ஏட்டை[1]ப் பருவத்தும் இற்பிறந்தார் செய்வன — [1] வறுமை.
மோட்டிடத்தும் செய்யார் முழுமக்கள்.—கோட்டை[2]
வயிரஞ் செறிப்பினும், வாட்கண்ணாய்! பன்றி
செயிர்வேழ மாகுத லின்று.

[2] கோடு—கொம்பு.

23 அடுக்கன் மலைநாட! தற்சேர்ந் தவரை
எடுக்கல மென்னார் பெரியோர்.—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும், இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு.

24 அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்[1]போல்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.

[1] ஆலமரம் (பழுத்தமரம்.)

25 இன்னர் இனையர் எமர்[1]பிறர் என்னுஞ்சொல் — [1] உறவினர்.
என்னும்[2] இலராம் இயல்பினால்—துன்னித் — [2] சிறிதும்.
தொலைமக்கள்[3] துன்பம்தீர்ப் பாரே,யார் மாட்டும்
தலைமக்க ளாகற்பா லார்.

[3] தளர்ந்த மனிதர்.

## கல்வி

26 கல்வி கரையில: கற்பவர் நாள்சில:
மெல்ல நினைக்கிற் பிணிபல. தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகி[1]ற் றெரிந்து. — [1] அன்னப்பறவை.

27 வைப்புழி[1]க் கோட்படா: வாய்த்தீயிற் கேடில்லை:
மிக்க சிறப்பின் அரசர் செறின்[2]வவ்வார்: — [2] கோபித்தால்.
எச்ச[3] மெனஒருவன் மக்கட்குச் செய்வன — [3] legacy.
விச்சை[4] மற் றல்ல பிற. — [4] வித்தை.

[1] வைத்த இடம்.

28 இம்மை பயக்குமால்: ஈயக் குறைவின்றால்:
தம்மை விளக்குமால்: தாமுளராக் கேடின்றால்.
எம்மை யுலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர்[1] அறுக்கு மருந்து. — [1] மயக்கம்-delusion.

## புலவர்

29 தவ[1]லருந் தொல்கேள்வித் தன்மை யுடையார், — [1] கேடு.
இக[2]விலர், எஃகு[3]டையார், தம்முட் குழீஇ[4]
நகலின் இனிதாயின் காண்பாம், அகல்வானத்
தும்ப ருறைவார்[5] பதி. — [5] தேவர்.

[2] விரோதம். [3] எஃகுபோன்ற கூரறிவு. [4] கூடி.

30 நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்றால்.—நுண்ணூல்
உணர்வில ராகிய ஊதிய[1] மில்லார்ப் — [1] பயன்.
புணர்தல் நிரய[2]த்து ளொன்று. — [2] நரகம்.

களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்.
கடைநிலத்தோ ராயினும், கற்றுணர்ந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

கல்லாரே யாயினும், கற்றாரைச் சேர்ந்தொழுகின்,
நல்லறிவு நாளுந் தலைப்படுவர்.—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு[1]
தண்ணீர்க்குந் தான்பயந் தாங்கு.

[1] புதுஓடு—புதுப்பானை.

கற்றறிந்த நாவினார் சொல்லார்தஞ் சோர்வஞ்சி:
மற்றைய ராவார் பகர்வர். பனையின்மேல்
வற்றிய ஓலை கலகலக்கும்: எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி.

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியார்
உய்த்தக மெல்லா நிறைப்பினும்,—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே: பொருடெரிந்து
தேற்றும்[1] புலவரும் வேறு.

[1] அறிவுறுத்தும்

பல்லான்ற[1] கேள்விப் பயனுணர்வார் பாடழிந்
தல்ல லுழப்ப தறிதிரேல்,—தொல்சிறப்பின்
நாவின் கிழத்தி[2] உறைதலால் சேராளே
பூவின் கிழத்தி[3] புலந்து.

[1] ஆன்ற-நிறைந்த. [2] ஸரஸ்வதி. [3] லக்ஷ்மி.

நாறாத் தகடேபோல் நன்மலர்மேல் பொற்பாவாய்!
நீறாய் நிலத்து விளியரோ!—வேறாய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ, பொன்போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து.

(அரோ—அசை)

கல்லாது நீண்ட வொருவன், உலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
இருப்பினும், நாயிருந் தற்றே: இராஅ
துரைப்பினும், நாய்குரைத் தற்று.

மேலோர் & கீழோர்

38 கடமா[1] தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்.—இடமுடைய
வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்,
மான மழுங்க வரின்.

[1] (கடம் ஆ) காட்டுப்பசு. Also (கடம் மா) யானை.

39 அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்[1] [1] பரப்பும்.
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்.—திங்கள்
மறுவாற்றும். சான்றோர் அஃதாற்றார்; தெருமந்து[2] [2] மனங்கலங்கி.
தேய்வர் ஒருமா சுறின்.

40 பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லா
திழிந்தவை[1] காமுறூஉம் ஈப்போல்,—இழிந்தவை
தாங்கலந்த நெஞ்சினார்க் கென்னாகும்? தக்கார்வாய்த்
தேன்கலந்த தேற்றச்சொல் தேர்வு.

[1] இழிந்தவை என்பது இங்கே இடக்கரடக்கல்.

41 அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளால்மதிக்கற் பால. நயமுணராக்
கை[1]யறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும் [1] ஒழுக்கம்.
வையார் வடித்தநூ லார்.

42 சக்கரச் செல்வம்[1] பெறினும் விழுமியோர் [1] imperial wealth.
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல்.—எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேல், கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும்.

முந்திரி மிகச்சிறிய அளவைக்கும் காணி அதனின்மிக்க ஓர் சிற்றளவைக்கும் காட்டிய குறிப்புச் சொற்கள்.

43 பெருநடை தாம்பெறினும் பெற்றி பிழையா
தொருநடைய ராகுவர் சான்றோர்.—பெருநடை
பெற்றக் கடைத்தும், பிறங்கருவி நன்னாட!
வற்[1]றாம் ஒருநடை கீழ். [1] வற்று—வல்லது

44 பெருவரை நாட! பெரியார்கட் டீமை
கருநரை[1]மேல் சூடேபோல் தோன்றும்.—கருநரையைக்
கொன்றன்ன[2] இன்னா செயினும், சிறியார்மேல்
ஒன்றானும் தோன்றா கெடும்.

[1] கரு—பெரிய: நரை—வெள்ளேறு, வெள்ளெருது. [2] கொன்றது அன்ன—கொன்றதுபோன்ற.

45 விரி[1]நிற நாகம் விட[2]ருள தேனும்,
உரு[3]மின் கடுஞ்சினம் சே[4]ணின்றும் உட்கும்.
அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்,
பெருமை யுடையார் செறின்.

[1] மிக்க or படம் விரிந்த. [2] வெடிப்பு. [3] உருமு—இடி. [4] நெடுந்தூரம்.

46 ஊரங் கண[1]நீர் உரவுநீர்[2]ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்.—ஒரும்
குலமாட்சி யில்லாரும் குன்றுபோல் நிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.

[1] அங்கணம்—ஜலதாரை. [2] வலியமைந்தநீர்: மிக்கநீர்: ஆறு.

47 தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றி,மற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை[1] [1] மறுபிறப்பு.
எரிவாய் நிரய[2]த்து வீழ்வர்கொல் என்று [2] நரகம்.
பரிவதூஉம் சான்றோர் கடன்.

48 உபகாரம் செய்ததனை ஓராதே தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும்,—உபகாரம்
தாம்செய்வ தல்லால் தவற்[1]றினால் தீங்கூக்கல்[2]
வான்றோய் குடிப்பிறந்தார்க் கில்.

[1] தவறு. தவற்றினால்—provoked by faults. [2] கெடுதி செய்ய முயலல்.

49 கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும், தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை.—நீர்த்[1]தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால், சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயால் மீட்டு.

[1] நீர்த்து—நீர்மையுடையது: what is fitting.

50 ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறும் சான்றோர் பொறுப்பர். கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்,
எழுநூறும் தீதாய் விடும்.

51 தினையனைத்தே யாயினும் செய்தநன் றுண்டால்,
பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்.—பனையனைத்
தென்றும் செயினும், இலங்கருவி நன்னாட!
நன்றில நன்றறியார் மாட்டு.

52 இருக்கை யெழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப வொழிதல்[1]லோ டின்ன குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார். கயவரோ
டொன்று[2] உணரற்பாற் றன்று. [2] ஒன்றினும்.

[1] விடுப்ப ஒழிதல்—பெரியோரிருந்து போம்பொழுது அவர்பின் சென்று அவர் நிற்கவென நிற்றல். Departing when they dismiss என்பர் Pope.

53 கண[1]மலை நன்னாட! கண்ணின்[2] றொருவர்
குணனேயும் கூறற் கரிதால்.—குணனழுங்கக்
குற்றம் உழை[3]நின்று கூறும் சிறியவர்கட்
கெற்றால் இயன்றதோ நா? [3] அருகு.

[1] கணம்—கூட்டம். கணமலை—mountain group. [2] முன்னின்று. கண் இன்றி எனக்கொண்டு (பார்வையிலில்லாமல்) புறத்தில் என்று கொள்வர் இராஜ கோபாலப் பிள்ளை.

நட்பு

54 யானை யனையவர் நண்பொரீஇ[1], நாயனையார் [1] ஒரீஇ—நீக்கி.
கேண்மை கெழீஇக்[2] கொளல்வேண்டும். யானை [2] தழுவி.
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும். எறிந்தவேல்
மெய்யதா[3] வால்குழைக்கும் நாய்.

[3] மெய்யது + ஆ(க). எறிந்த வேல் மெய்யதா—while it has the dart in its body. தன்னையுடையவன் எறிந்த வேலானது தன் உடலிற்பட்டு உருவிநிற்க.

55 பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்.—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும்[1] தேயுமே [1] daily
தானே சிறியார் தொடர்பு.

56 கனைகடற் றண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்[1]றே.—நுனிநீக்கித்
தூரி[2]ற்றின் றன்ன தகைத்தரோ, பண்பிலா
ஈர மிலாளர் தொடர்பு.

[1] தின்றால் அற்று—தின்றாற்போலும். [2] வேர்.

இக்கருத்து

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே.—குருத்திற்
கெதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
மதுர மிலாளர் தொடர்பு.

என்ற நாலடி வெண்பாவிலும் அமைந்திருக்கிறது.

57 நளிகடற் றண்சேர்ப்ப! நாணிழற்[1] போல
விளியும் சிறியவர் கேண்மை.—விளிவின்றி
அல்கு நிழல்[2]போல் அகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு.

[1] shadows of the morn. [2] shadows of the afterday.

58 உணர வுணரும் உணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம்.—புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய்.

59 வேம்பி னிலையுள் கனியினும், வாழைதன்
தீஞ்சுவை யாதும் திரியாதாம். ஆங்கே
இனம்தீ தெனினும், இயல்புடையார் கேண்மை
மனம்தீதாம் பக்க[1] மரிது.

[1] திறம்.

60 பலநாளும் பக்கத்தா ராயினும், நெஞ்சில்
சிலநாளும் ஒட்டாரோ டொட்டார்.—பலநாளும்
நீத்தா[1] ரெனக்கை விடலுண்டோ? தன்னெஞ்சத்
தியாத்தா[2]ரோ டியாத்த தொடர்பு.

[1] பிரிந்தனர். விட்டு நீங்கினர். [2] நெஞ்சினால் பிணிக்கப்பட்டவர். மனதில் நட்பை உறுதியாகக் கொண்டவர்.

61 கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி.—தோட்ட[1]
கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல்.

[1] தோட்டையுடைய. தோடு—இதழ்.

62 செல்வுழிக் கண்ஒருநாள் காணினும் சான்றவர்
தொல்வழிக் கேண்மையின்[1] தோன்றப் புரிந்தியாப்பர்.
நல்வரை நாட! சிலநாள் அடிப்படின்[2]
கல்வரையும் உண்டாம் நெறி.

[1] உறவுபோல. [2] if trodden for a few days.

63 இறப்ப நினையுங்கால் இன்னா தெனினும்
பிறப்பினை யாரும் முனியார்—பிறப்பினுள்
பண்பாற்றும் நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்றும்
நண்பாற்றி நட்கப் பெறின்.

64 நறுமலர்த் தண்கோதாய்! நட்டார்க்கு நட்டார்
மறுமையும் செய்வதொன் றுண்டோ?—இறுமளவும்
இன்புறுவ தின்புற் றெழீஇ அவரொடு
துன்புறுவ துன்புறுக் கால்.

இக்கருத்து

சாக்காடு கேடு பகைதுன்ப மின்பமே
நாக்காடு நாட்டறை போக்குமென—நாக்காட்ட
நட்டார்க் கியையின் தமக்கியைந்த கூறுடம்
பட்டார்வாய்ப் பட்டது பண்பு.

என ஏலாதியில் வந்திருக்கிறது.

65 முட்டிகை[1] போல முனியாது வைகலும் [1] சுத்தி–hammer.
கொட்டியுண் பாரும் குறடு[2]போல் கைவிடுவர். [2] pincers.
சுட்டுக்கோல்[3] போல எரியும் புகுவரே [3] உலையாணி-poker.
நட்டா ரெனப்படு வார்.

66 காதலார் சொல்லும் கடுஞ்சொல் உவந்துரைக்கும்
ஏதிலார் இன்சொலிற் றீதாமோ?—போதெலாம்
மாதர்[1]வண் டார்க்கும் மலிகடற் றண்சேர்ப்ப!
ஆவ[2] தறிவார்ப் பெறின்.

[1] அழகிய.

[2] அதனால் (கடுஞ்சொல்லால்) உண்டாவது: உண்டாகிற நன்மை.

67 கடையாயார் நட்பிற் கமுகனையர். ஏனை
இடையாயார் தெங்கின் அனையர். தலையாயார்,
எண்ணரும் பெண்ணைபோன், றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு.

தலையாயாராகிய தொன்மையுடையாரோடு (கொண்ட) தொடர்பு (=நட்பு) எண்ணரும்பெண்ணை (பனை) போன்று இட்டஞான்று இட்டதே என்று அந்வயம். இட்டநாளில் இட்டதே—பனைவிதையைப் பூமியில் நட்டநாளில் விட்டஜலம் அவ்வளவே கொண்டு வளர்ந்து பயன் தருவதுபோல் தலையாயாரோடு நட்புச்செய்த நாளில் செய்த சிறிய உதவியேகொண்டு அந்நட்பு வளர்ந்து நன்மைசெய்யும். கடையாயார்...கமுகனையரென்றும்,...தெங்கனையரென்றும், தலையாயார் நட்பின்கண் பெண்ணை போன்றனையார் இட்டஞான்றிட்டதாமென்றும், தொன்மையுடையார் செய்யுட்களிலே நட்பைக் கூறுபடுத்துச் சொன்னார் என்பது பழையவுரை. இதில் தொடர்பு என்பது செய்யுள்.

68 குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்,—நட்டான்
மறை[1]காவா விட்டவன் செல்வுழி[2]ச் செல்க,
அறைகடல்சூழ் வையம் நக.

[1] friend's secret. [2] செல்உழி = செல்லும் இடம்: இங்கே நரகம்.

69 இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னார் துறத்தல் தகுவதோ?—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப! களைபவோ
கண்குத்திற் றென்றுதம் கை?

70 இறப்பவே தீய செயினும்தன் நட்டார்
பொறுத்தல் தகுவதொன் றன்றோ?—நிறக்கோங்
குருவவண் டார்க்கும் உயர்வரை நாட!
ஒருவர் பொறையிருவர் நட்பு.

71 நல்லா ரெனத்தான் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினும் அடக்கிக் கொளல்வேண்டும்.
நெல்லுக் குமியுண்டு; நீர்க்கு நுரையுண்டு;
புல்லிதழ் பூவிற்கு முண்டு.

72 மனத்தால் மறுவில ரேனுந்தாம் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர்.—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம்[1] தீப்பட்டக் கால். [1] வெட்டிய வனம்.

73 யாமாயின் எம்மில்லம்[1] காட்டுதும். தாமாயின் [1] மனையாள்.
காணவே கற்பழியு மென்பார்போல் நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறும். அதனால்
மறந்திடுக செல்வர் தொடர்பு.

மனைவி

74 மழைநிலைக்கு[1] மாடமாய் மாண்பமைந்த காப்பாய் [1] தவழும்.
இழை[2]விளக்கு நின்றிமைப்பின் என்னாம்?—விழைதக்க[3]
மாண்ட[4] மனையாளை இல்லாதா னில்லகம்
காண்டற் கரியதோர் காடு.

[2] ஆபரணங்கள். gems glisten therein like lamps. [3] விரும்பத்தக்க.
[4] மாட்சிமைப்பட்ட. "பாழொக்கும் பண்புடையா ளில்லா மனை" என்றது நான்மணிக்கடிகை.

75 நாலாறு மாறாய்[1], நனிசிறிதாய், எப்புறனும்
மேலாறு மேலுறை[2] சோரினும்,—மேலாய [2] மழைநீர்.
வல்லாளாய் வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின்
இல்லாள் அமர்ந்ததே இல்.

Reading—தற்புகழ. அமைந்ததேயில்.

[1] நாலு பக்கமும் வழியாய்.

76 குடநீர்அட் டுண்ணும் இடுக்கட் பொழுதும்,
கடல்நீர் அறவுண்ணும் கேளிர் வரினும்,
கடனீர்மை கையாறாக் கொள்ளும் மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

ஒருகுடம் நீரால் சோறமைத்து உண்ணுமாறு மிடிப்பட்டகாலத்தும் மனைக்கு மாட்சிமையுடையாள் கடல்நீரைவற்ற உண்ணும் கேளிர்வரினும் இல்லறநிகழ்த்து தலைக் கைக்கு நெறியாகக் கொள்ளும்.

**மகன்**

77 செந்நெலா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெலே யாகி விளைதலால்,—அந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர!
மகனறிவு தந்தை யறிவு.

78 சிதலை[1] தினப்பட்ட ஆல மரத்தை
மதலை[2]யாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை[3] தந்தைகண் தோன்றின்,தான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்.

[1] கறையான். [2] தாங்குந்தூண். [3] தளர்ச்சி.

இக்கருத்து

தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன
ஓங்குகுலம் நைய அதனுட் பிறந்த வீரர்
தாங்கல் கடனாகும்.

என்று சீவகசிந்தாமணியில் அமைந்திருக்கிறது.

**தற்புகழாமை**

கற்றனவும் கண்ணகன்ற சாயலும்[1] இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும். தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும்.

[1] இடமகன்ற ஒளி. எங்கும் பரந்துள்ள மேன்மை. world-renowned excellence.

"எம்மை யறிந்திலிர்; எம்போல்வார் இல்"லென்று
தம்மைத்தாம் கொள்வது[1] கோளன்று.—தம்மை
அரியரா நோக்கி, அறனறியும் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்[2].

[1] மதித்துக்கொள்வது. [2] கோட்பாடு. இங்கே மதிப்பு.

**அடக்கம்**

களிகடற் றண்சேர்ப்ப! நல்கூர்ந்த[1] மக்கட்
கணிகல மாவ தடக்கம். பணிவில்சீர்[2]
மாத்திரை[3] யின்றி நடக்குமேல், வாழூர்[4]
கோத்திரங்[5] கூறப் படும்.

[1] தரித்திரமடைந்த. [2] அடக்கமில்லாத தன்மை. [3] அளவு. [4] ஊரார்கள். [5] பிறப்பின் மூலம்.

இரவச்சம்

62 கரவாத திண்ணன்பின் கண்ணன்னா கண்ணும
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை.---இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால். என்கொலோ
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு?

புலாலுண்ணுமை

63 துக்கத்துட் டீங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு.—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே, புலன்[1]கெட்ட
புல்லறி வாளர் வயிறு.

[1] அறிவு.

போது

64 அறிவ தறிந்தடங்கி, அஞ்சுவ தஞ்சி,
உறுவ துலகுவப்பச் செய்து,—பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார், எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது.

65 நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள வல்லாற் பொருளில்லை.---தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ, தவம்கல்வி ஆள்வினை
என்றிவற்று ளாகும் குலம்.

66 பெரியார் பெருமை சிறுதகைமை. ஒன்றிற்
குரியா ருரிமை அடக்கம்.---தெரியுங்கால்
செல்வ முடையாரும் செல்வரே, தற்சேர்ந்தார்
அல்லல் களைப வெனின்.

67 ஓதியும் ஓதார் உணர்விலார். ஓதாதும்
ஓதி யனையார் உணர்வுடையார்.—தூய்தாக
நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார். செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயா ரெனின்.

68 கல்லா[1]க் கழிப்பர் தலையாயார். நல்லவை
துவ்வா[2]க் கழிப்பர் இடைகள். கடைகள்
"இனிதுண்ணேம் ஆரப்[3] பெறேஎம்யா" மென்னும்
முனிவினால் கண்பா[4] டிலர்.

[1] கற்று.
[2] அநுபவித்து.
[3] நிறைய.
[4] தூக்கம்.

89 பகைவர் பணிவிட நோக்கித் தகவுடையார்
தாமேயு நாணித் தலைச்செல்லார். காணாய்,
இளம்பிறை ஆயக்கால் திங்களைச் சேரா
தணங்கருந் துப்பி னரா[1]. [1] துன்பமில்லாத வலிமையுடைய இராகு.

90 தெளிவிலார் நட்பின் பகைநன்று. சாதல்
விளியா[1] வருநோயின் நன்றால்.—அறிய[2]
இகழ்தலின் கோற[3] லினிதே. மற்றில்ல [3] கொலைசெய்தல்.
புகழ்தலின் வைதலே நன்று.

[1] (மருந்தினால்) தீராமல். [2] நெஞ்சு அறிய. அளிய என்னும் பாடத்துக்கு நெஞ்சுநோவ என்பது பொருள்.

91 கல்லாது போகிய நாளும், பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்,—ஒல்வ
கொடாஅ தொழிந்த பகலும் உரைப்பின்,
படாஅவாம் பண்புடையார் கண்.

92 தான்கெடினும் தக்கார்கே டெண்ணற்க. தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத் துண்ணற்க.—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும், உரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்.

93 இளையா னடக்கம் அடக்கம். கிளை[1]பொருள் [1] வளரும்.
இல்லான் கொடையே கொடைப்பயன்.—எல்லாம்
ஒறுக்கும் மதுகை[2] யுர[3]னுடை யாளன் [2] தேகபலம். [3] மனவுறுதி.
பொறுக்கும் பொறையே பொறை.

94 கரும வரிசையால் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாருஞ் சேறல்,—அருமரபின்
ஓத மரற்றும் ஒலிகடற் றண்சேர்ப்ப!
பேதைமை யன்ற தறிவு.

**ஊழ்**

95 பல்லாவுள் உய்த்து விடினும் குழ[1]க்கன்று [1] இளமை.
வல்லதாம் தாய்நாடிக் கோடலை.—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே,தற் செய்த
கிழவனை[2] நாடிக் கொளற்கு. [2] உரியவன்.

96 சிறுகா, பெருகா, முறைபிறழ்ந்து வாரா,
உறுகாலத் தூற்றுகா, ஆமிடத்தே ஆகும்,
சிறுகாலைப் பட்ட பொறி[1]யும். அதனால் [1] fate.
இறுமிடத் தென்னை பரிவு?

97 உறற்பால[1] நீக்கல் உறுவர்[2]க்கும் ஆகா.
பெறற்பா லனையவும் அன்னவாம். மாரி
வறப்பிற்[3] றருவாரு மில்லை. அதனைச்
சிறப்பிற்[4] றணிப்பாரும் இல். [4] அதிகப்பட்டால்.

[1] வந்துசேரத்தக்க தன்மையுடையவை. வரத்தக்க தீவினைகள். [2] முனிவர்.
[3] வறண்டால்—பெய்யாவிட்டால்.



# நான்மணிக்கடிகை.

—— ——

கீழ்க்கணக்கில் ஒன்றாகிய இந்நூல் விளம்பிநாகனார் இயற்றியது. நூலில் உள்ள கடவுள் வணக்கத்தால் அவர் வைணவர் என்பது தெரிகின்றது. நான்கு மணிகளை இட்டிழைத்த அணிகலம்போல் அரிய பொருள்கள் நந்நான்கு அடங்கிய பாக்களையுடையது என்பது நூற்பெயரின் பொருள்.

1 கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும். மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம்[1] பிறக்கும். பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும். அறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி.

[1] ஒள்ளிய அரிதாரம் (கோரோசனை.)

2 மொய்[1]சிதைக்கும் ஒற்றுமை யின்மை. ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலு மேனியை.—பெய்த
கலஞ்சிதைக்கும் பாலின் சுவையை. குலஞ்சிதைக்கும்
கூடார்கண் கூடி விடின்.

[1] பெருமை.

3 இரும்பின் இரும்பிடை போழ்ப[1]. பெருஞ்சிறப்பின் [1] பிளப்பர்.
நீருண்டார் நீரால்வாய் பூசுப[2].—தேரின்
அரிய அரியவற்றாற் கொள்ப. பெரிய
பெரியாரான் எய்தப் படும்.

[2] பூசுவர்—சுத்திசெய்வர்.

4 நாற்றம் உரைக்கும் மலருண்மை. கூறிய
மாற்றம்[1] உரைக்கும் வினைநலம். தூக்கின் [1] சொல்.
அகம்பொதிந்த[2] தீமை மனமுரைக்கும். முன்னம்[3]
முகம்போல முன்னுரைப்ப தில்.

[2] உட்கிடந்த. [3] மனத்தின் விளைவினை.

5 மகனுரைக்கும் தந்தை நலத்தை. ஒருவன்
முகனுரைக்கும் உண்ணின்ற வேட்கை.—அகனீர்ப்
புலத்தியல்பு புக்கா னுரைக்கும். நிலத்தியல்பு
வானம் உரைத்து விடும்.

6 சொல்லான் அறிப ஒருவனை. மெல்லென்ற
நீரான் அறிப மடுவினை. யார்கண்ணும்
ஒப்புரவி னானறிப சான்றாண்மை. மெய்க்கண்[1]
மகிழான்[2] அறிப நறா[3].

[1] உடம்பின்கண். [2] களிப்பாலே. [3] (கள்) கள்ளுண்டமையை.

# களவழி நாற்பது.

கீழ்க்கணக்கில் நானாற்பதில் ஒன்றான இதனை இயற்றினவர் பொய்கையார் என்பவர். சோழன் செங்கணானும் சேரமான் கணைக்காலிரும்பொறையும் போர்ப்புறத்துப் பொருதபோது, சேரமானைப் பற்றிக்கொண்டு சோழன் சிறைவைத்தான். பொய்கையார் இந்நூலைப் பாடி அவனை விடுவித்தார். இந்நூலிற் காட்டிய உவமைகள் வியக்கத்தக்கவை.

சேரமான் கோக்கோதைமார்பனை இவர் பாடிய அகவல்கள் இரண்டு புறநானூற்றில் சேர்த்திருக்கின்றன.

தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியலில் "விருந்தே தானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்னும் சூத்திரவுரையில், "பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும்" என்பதில் குறித்த பொய்கையார் பொய்கையாழ்வா ராதல்வேண்டும். களவழி பாடினோர் இவரேயோ என்பது துணிவதற்கு இடமில்லை: அல்லர் என ஒருதலையாகக் கூறுவதற்கும் தக்க சான்று கிடைக்கவில்லை. இப்பெயர் பெற்றோர் பிறரின்மையால் அவரும் இவரும் ஒருவரே என்பது சிலர் துணிவு.

1 தெரிகணை யெஃகந் திறந்தவா யெல்லாம்
குருதி படிந்துண்ட காகம்,—உருவிழந்து
குக்கில்[1] புறத்த சிரல்வாய[2]: செங்கண்மால்[3]
தப்பியா[4] ரட்ட களத்து. [4] பிழைத்தார்.

[1] செம்போத்து. [2] சிரல்போன்ற வாயை உடையனவாயின. (சிரல்–the kingfisher. [3] மால்போன்ற சோழன்.

2 அஞ்சன[1]க் குன்றேய்க்கும் யானை அமருழக்கி [1] கருமை.
இங்கு லிக[2]க்குன்றே போல்தோன்றும்:—செங்கண்
வரிவரால் மீன்பிறழும் காவிரி நாடன்
பொருநரை யட்ட களத்து.

[2] இங்குலிகம்–சாதிலிங்கம்.

3 யானைமேல் யானை நெரிதர ஆனாது[1] [1] நீங்காது.
கண்ணோர் கடுங்கணை மெய்ம்மறைப்ப, வெவ்வாய[2]
மெண்ணருங் குன்றிற் குரீஇயினம் போன்றவே:
பண்ணா ரிடிமுரசிற் பாய்புன னீர்நாடன்
நண்ணாரை யட்ட களத்து.

[2] ஆயம்—நீளம்.

4 மேலோ[1]ரைக் கீழோர்[2] குறுகிக் குறைத்திட்ட[3]
காலார்தோ[4] டற்ற கழற்கால், இருங்கடலுள்
நீலச் சுறாப்பிறழ்வ போன்ற: புனனாடன்
நேராரை யட்ட களத்து.

[1] குதிரை முதலானவற்றின் மேலிருந்தோர். [2] கீழ்நின்ற நிலவாட்கள். [3] துணித்த. [4] வர்ணத்தோடு.

5 நிரைக்கதிர் நீளெஃகம் நீட்டி வயவர்
வரை[1]புரை யானைக்கைந் நூற[2],—வரைமேல்
உருமெறியப் பாம்பிற் புரளும்: செருமொய்ம்பில்
சேய்[3]பொரு தட்ட களத்து.

[1] மலை. [2] துணிக்க. [3] போர்வலியையுடைய சேய்.

6 கவளங்கொள் யானைதன் கைகள் துணிக்கப்,
பவளம் சொரிதரு பைபோல், திகழொளிய
ஒண்செங் குருதி உமிழும்: புனனாடன்
கொங்கரை யட்ட களத்து.

7 கொல்யானை பாயக் குடைமுருக்கி எவ்வாயும்
புக்கவா யெல்லாம் பிணம்பிறங்கத், தச்சன்
வினைபடு பள்ளி[1]யிற் றோன்றுமே: செங்கண்
சினமால் பொருத களத்து.

[1] இடம்

8 ஆர்ப்பெழுந்த ஞாட்[1]பினுள் ஆளா ளெதிர்த்தோடித்
தாக்கி யெறிதர வீழ்தரு மொண்குருதி,
கார்த்திகைச் சாற்[2]றிற் கழிவிளக்குப் போன்றனவே:
போர்க்கொடித் தானைப் பொருபுன னீர்நாடன்
ஆர்த்தமா வட்ட களத்து.

[1] போர். [2] சாறு—திருவிழா.

9 இடைமருப்பின் விட்டெறிந்த எஃகம்[1]காழ்[2] மூழ்கிக்
கடைமணி காண்வரத் தோன்றி—நடைமெலிந்து
முக்கோட்ட[3] போன்ற களிறெல்லாம்: நீர்நாடன்
புக்கம ரட்ட களத்து.

[1] வேல். [2] (வைரம்) இங்கே காம்பு. வேலின் காம்பு. [3] மூன்று கோட்டினை
[illegible]

10 இருசிறக ரீர்க்கும் பரப்பி எருவை[1] — [1] கழுகு.
குருதி பிணங்கவரும் தோற்றம்——அதிர்விலாச்
சீர் முழா[2]ப் பண்ணமைப்பான் போன்ற: புனனாடன்
நேரா ரட்ட களத்து.

[2] மத்தளம்.

11 இருநிலஞ் சேர்ந்த குடைக்கீழ் வரிநுதல்
ஆடியல் யானைத் தடக்கை ஒளிறுவாள்
ஓடா மறவர் துணிப்பத் துணிந்தவை,
கோடுகோ ளொண்மதி[1]யை நக்கும்பாம்[2] பொக்குமே:
பாடா ரிடிமுரசிற் பாய்புன னீர்நாடன்
கூடாரை யட்ட களத்து.

[1] கலைநிறைந்த சந்திரன். [2] இராகு.

12 ஓடா மறவர் உருத்து மதஞ்செருக்கிப்
பீடுடை வாளர் பிணங்கிய ஞாட்பினுள்
கேடகத்தோ டற்ற தடக்கைகொண் டோரி[1] — [1] நரிகள்.
இகலனவாய்த் துற்றிய[2] தோற்றம், அயலார்க்குக்
கண்ணாடி காண்பாரிற் றோன்றும்: புனனாடன்
நண்ணாரை யட்ட களத்து.

[2] வாயின்கட் கவ்விய.

13 கடிகாவிற் காற்றுற் றெறிய வெடிபட்டு[1] — [1] வெருவி.
வீற்றுவீற் றோடு[2] மயிலினம்போல், நாற்றிசையும்
கேளி ரிழந்தோர்[3] அலமருப வே:செங்கண்
சினமால் பொருத களத்து.

[2] திறந்திறமாக ஓடும். [3] கணவரை இழந்த மகளிர்.

14 இணரிய[1] ஞாட்பினுள் ஏற்றெழுந்த மைந்தர்
சுடரிலங் கெஃக மெறியச்சோர்ந் துக்க
குடர்கொடு வாங்குங் குறுநரி, கந்திற்
றொடரொடு கோணாய்[2] புரையும்: அடரைம்பூண்[3]
சேய்பொரு தட்ட களத்து.

[1] தொடர்ந்து மிடைந்த. [2] தூணிற் கட்டப்பட்ட சங்கிலியோடு நின்ற கோணாய். [3] ஐதாக (அழகாக)ப் பண்ணப்பட்ட பூண்.

15 ஓஓ உவமன் உறழ்வின்றி[1] யொத்ததே. [1] மாறுபாடின்றி.
காவிரி நாடன் கழுமலம்[2] கொண்டநாள் [2] சீர்காழி.
மா[3]வுதைப்ப மாற்றார் குடையெலாம், கீழ்மேலா [3] குதிரைகள்.
யாவுதை காளாம்பி[4] போன்ற: புனனாடன்
மேவாரை யட்ட களத்து.

[4] காளான்—mushroom.

16 திண்டோள் மறவர் எறியத் திசைதோறும்
பைந்தலை பாரிற் புரள்பவை, நன்கெனைத்தும்
பெண்ணை[1]யந் தோட்டம் பெருவளி புக்கற்றே: [1] பனை.
கண்ணார் கமழ்தெரியல் காவிரி நீர்நாடன்
நண்ணாரை யட்ட களத்து.

17 எவ்வாயும் ஓடி வயவர் துணித்திட்ட
கைவாயிற் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவல்,[1]
ஐவாய் வயநாகம் கவ்வி விசும்பிவரும்
செவ்வா யுவண[2]த்திற் றோன்றும்: புனனாடன் [2] கருடன்.
தெவ்வரை யட்ட களத்து.

[1] பருந்தின் சேவல்.



# திரிகடுகம்.

---

கீழ்க்கணக்கில் ஒன்றான இதனை இயற்றினவர் நல்லாதனார் என்பவர். காப்புச் செய்யுளால் இவர் வைணவர் என்பது தெரிகிறது. நூலின் முதற்பாட்டில் "இம்மூன்றுந் திரிகடுகம் போலு மருந்து" என்பதனால் இந் நூற்பெயரின் காரணம் விளங்கும். ["திரிகடுகஞ் சுக்கோடு திப்பிலி மிளகுமாகும்"—சூடாமணி நிகண்டு] திருக்கோட்டியூர் இராமாநுஜாசாரியர் செய்த உரை வழங்கிவருகின்றது.

1 பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும், பேணார்
திறன்வேறு கூறின் பொறையும்,—அறவினையைக்
காராண்மை போல்[1] ஒழுகலும், இம்மூன்றும்
ஊராண்மை[2] யென்னும் செருக்கு.

[1] மேகம் ஆளுதல்போல. [2] பிறரின் மேற்பட்டுச் செல்லுகின்ற ஆண்மை.

2 தாளாள்[1] னென்பான் கடன்படா வாழ்பவன்.
வேளாள னென்பான் விருந்திருக்க உண்ணாதான்.
கோளாள்[2] னென்பான் மறவாதான். இம்மூவர்
கே[3]ளாக வாழ்தல் இனிது.

[3] நட்பாளர்.

[1] முயற்சியுடையவன். [2] பிறரறிவித்த காரியங்களை மனதிற் கொள்ளுதல் வல்லவன்.

3 உண்பொழுது நீராடி உண்டலும், என்பெறினும்
பால்பற்றிச்[1] சொல்லா விடுதலும்,—தோல்வற்றிச்
சாயினும் சான்றாண்மை குன்றாமை, இம்மூன்றும்
தூஉயம் என்பார் தொழில்.

[1] ஒரு பக்ஷத்தைப் பற்றி.

4 பல்லவை[1]யுள் நல்லவை கற்றலும், பாத்துண்[2]டாங்
கில்லறம் முட்டா[3] தியற்றலும்,—வல்லிதின்[4]
தா[5]ளின் ஒருபொரு ளாக்கலும், இம்மூன்றும்
கேள்வியு[6] ளெல்லாம் தலை.

[3] குறையுறாமல்.

[6] கேட்கப்பட்ட செயல்களுள்

[1] பலசபைகள். [2] பகுத்துண்டு. [4] தன் வல்லமையால். [5] தன் முயற்சியால்.

5 முந்தை[1] எழுத்தின் வர,[2]வுணர்ந்து பிற்பாடு [1] இளமை.
தந்தையுந் தாயும் வழிபட்டு—வந்த
ஒழுக்கம், பெருநெறி சேர்தல்,இம் மூன்றும்
விழுப்ப[3] நெறிதூரா வாறு. [3] உயர்வு.

[2] கல்வியறிவுண்டாதல்.

6 நல்விருந் தோம்பலின் நட்டா[1]ளாம். வைகலும் [1] சினேகிதை
இல்புறஞ் செய்தலின்[2] ஈன்றதாய்.—தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி. இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்.

[2] மனையறத்தைக் காப்பாற்றலினால்.

7 வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும், உள்ளத்
துணர்வுடையா னோதிய நூலும்,—புணர்வின்கண்[1]
தக்க[2] தறியும் தலைமகனும், இம்மூவர்
பொத்[3]தின்றிக் காழ்த்த[4] மரம். [3] பொந்து. [4] வயிரம்பற்றிய.

[1] பிறர் தன்னைச் சார்ந்தவிடத்து. [2] அவர்க்குச் செய்யத்தக்கது.

8 உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும்.
நட்பின் கொழுமுளை[1] பொய்வழங்கின் இல்லாகும்.
செப்ப[2] முடையார் மழையனையர். இம்மூன்றும் [2] நடுவுநிலைமை.
செப்ப நெறி[3]தூரா வாறு. [3] செவ்விய வழி.

[1] செழித்த ஆரம்பம்.



# ஆசாரக்கோவை.

——∞∞——

கீழ்க்கணக்கில் ஒன்றான இதனை இயற்றியவர் பெயர் முதலியன

ஆரெயின் மூன்று மழித்தா னடியேத்தி
ஆரிடத்துத் தானறிந்த மாத்திரையான் ஆசாரம்
யாரும் அறிய அறனாய மற்றவற்றை
ஆசாரக் கோவை எனத்தொகுத்தான் தீராத்
திருவாயி லாய திறல்வண் கயத்தூர்ப்
பெருவாயின் முள்ளியென் பான்

என்னும் தற்சிறப்புப் பாயிரத்தால் விளங்கும். ஆரிடம் என்பது இருடிகள் அருளிய நூல். வடமொழியில் உள்ள ஸ்மிருதிகளில் சொல்லிய ஆசாரங்களில் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்த பாக்களின் கோவையாகும் இந்நூல். இது பெரும்பான்மை சுக்கிரஸ்மிருதியை அநுஸரித்திருப்பதாக வடநூற் புலவர் கூறுகின்றனர்.

இந்நூற் பாக்கள், பத்துப்பாட்டு சீவகசிந்தாமணி முதலிய இலக்கிய வுரைகளிலும், நன்னூல் முதலிய இலக்கண வுரைகளிலும், மேற்கோள்களாகக் காட்டியிருக்கின்றன.

1 நன்றி யறிதல், பொறையுடைமை, இன்சொலோ,
டின்னாத எவ்வுயிர்க்குஞ் செய்யாமை, கல்வியோ,
டொப்புர வாற்ற வறிதல், அறிவுடைமை,
நல்லினத் தாரோடு நட்டல்: இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து.

2 வைகறை யாமம் துயிலெழுந்து, தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து, வாய்வதின்,[1]
தந்தையுந் தாயுந் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை.

[1] பின்பு கங்குல் புலர்ந்தபோது.

3 கிடக்குங்கால் கைகூப்பித் தெய்வந் தொழுது,
வடக்கொடு கோணம்[1] தலைவையார், மீக்கோள்[2]
உடற்கொடுத்துச் சேர்தல் வழி.

[1] கோணதிசை. [2] மேற்போர்ப்பதொன்று.

4 காட்டுக்[1] களைந்து, கலங்கழீஇ, இல்லத்தை [1] துரால்.
ஆப்பிநீர்[2] எங்குந் தெளித்துச் சிறுகாலை, [2] சாணநீர்.
நீர்ச்சால் கரகம் நிறைய மலரணிந்,
தில்லம் பொலிய அடுப்பினுள் தீப்பெய்க:
நல்ல துறல்வேண்டு வார்.

5 முறுவல் இனிதுரை கானீர் மணைபாய்
கிடக்கையோ டிவ்வைந்து மென்ப தலைச்சென்றார்[1]க்
கூணொடு செய்யுஞ் சிறப்பு.

[1] தம்மிடத்து வந்தவர்.

6 விரைந்துரையார், மேன்மே லுரையார்,பொய் யாய
பாரந்துரையார், பாரித் துரையார்.—ஒருங்கெனைத்தும்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி யறிந்து.

7 விருந்தினர் மூத்தோர் பசுசிறை[1] பிள்ளை [1] பக்ஷிகள்.
இவர்க்கூண் கொடுத்தல்லால் உண்ணாரே என்றும்
ஒழுக்கம் பிழையா தவர்.

௮ உண்ணுங்கால் நோக்கும் திசைகிழக்குக் கண்ணமர்ந்து
தூங்கான் துளங்காமை நன்கிரீஇ யாண்டும்
பிறிதியாதும் நோக்கான் உரையான் தொழுதுகொண்
டுண்க உகாஅமை நன்கு.

9 முன்றுவ்வார் முன்னெழார் மீக்கூறார் ஊணின்கண்.
என்பெறினும் ஆற்ற வலமிரார், தம்மின்
பெரியார் நிரலிருந்தக் கால்.[1]

[1] நிரல்—வரிசை. மைபக்தியாக இருந்து உண்ணும்போது.

10 கைப்பன வெல்லாம் கடை,தலை தித்திப்ப,
மெச்சும் வகையால் ஒழிந்த இடையாகத்
துய்க்க முறைவகையால் ஊண்.

11 நின்றக்கால்[1] நிற்க அடக்கத்தா லென்றும்.
இருந்தக்கால்[2] ஏவாமை ஏகார். பெருந்தக்கார்
சொல்லின் செவிகொடுத்துக் கேட்டீக.[3] மீட்டும் [3] கேட்க.
வினவற்க சொல்லொழிந்தக் கால்.

[1] பாடஞ்சொல்லுதலை நிறுத்தினால். [2] ஆசிரியர்முன் இருந்தபோது.

12 தன்னுடம்பு, தாரம், அடைக்கலம், தன்னுயிர்க்கென்
றுன்னித்து வைத்த பொருளோ டிவைநான்கும்
பொன்னினைப் போல்போற்றிக் காத்துய்க்க: உய்க்காக்கால்
அன்றே விழுமம் தரும்.

13 நந்தெறும்பு தூக்கணம் புட்காக்கை என்றிவைபோல்
தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத் தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்[1]
எப்பெற்றி யானும் படும்.

[1] இல்வாழ்க்கையின் ஒழுக்கம்.



# சிறுபஞ்சமூலம்.

கீழ்க்கணக்கில் ஒன்றான இதனைச் செய்தவர் பெயர்

மல்லிவர்தோள் மாக்காயன் மாணாக்கன் மாநிலத்துட்
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினால்—கல்லா
மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலம்செய் தான்

என்னும் தற்சிறப்புப் பாயிரத்தால் விளங்கும். செவ்வியம்—சித்திரமூலம்—கண்டுபரங்கி—பேரரத்தை—சுக்கு ஆகிய ஐந்துங் கொண்டிருக்கிய கஷாயம் போல், இந்நூலில் ஒவ்வொரு பாவிலும் உரைத்துள்ள ஐந்து பொருள்கள் நன்மை செய்வனவாமென்று பொருள்கொண்டு உவமையாகுபெயராய் வந்தது இந்நூற்பெயர்.

1 கொன்றுண்பான் நாச்சாம். கொடுங்கரி[1]போ வான்நாச்சாம்.
நன்றுணர்வார் முன்கல்லான் நாவுஞ்சாம்.—ஒன்றானும்
கண்டுழி நாச்சாம் கடவான்.[2] குடிப்பிறந்தான்
உண்டுழி நாச்சாம் உணர்ந்து.[3]

[1] பொய்ச்சான்று. [2] கடன்வேண்டி வந்தானொருவனைக் கண்டால் கடன்கொண்டவனுடைய நாவும் சாம். [3] குடிப்பிறந்தானுடைய நா, ஒருவனுதவி பெற்றவிடத்து, அவ்வுதவிசெய்தான் திறத்தொடு தீமை சொல்லமாட்டாது மற்றவன் செய்த நன்றியை நினைத்துச் சாம்.

2 பிழைத்த பொறுத்தல் பெருமை. சிறுமை
இழைத்ததீங் கெண்ணி யிருத்தல்.—பிழைத்த
பகைகெட[1] வாழ்வதும், பல்பொருளார்[2] நல்லார்
நகைகெட[3] வாழ்வதும் நன்று. [3] இகழ்ந்துநகும் நகையினைக் கெட.

[1] தான்செய்த பிழைகளைப் பின்பு கெட. [2] பலபொருள்களையும் உதவினோர்.

3 தேவரே கற்றவர். கல்லாதார் தேருங்கால்
பூத[1]ரே. முன்[2]பொருள் செய்யாதார்—ஆதரே.[3]
துன்பமி லேம்பண்டு யாமே வனப்புடையேம்
என்பார் இருகா லெருது.

[1] பூதபைசாசங்கள். [2] மூப்பு வருவதற்குமுன். [3] பேதையர்.

4 வான்குருவி கூ[1]டரக்கு[2] வாலுலண்டு[3] கோ[4]ற்றறுதல்
தேன்[5]புரிந்தி யார்க்கும் செயலாகா—தாம்பரீஇ.
வல்லவர் வாய்ப்பன[6] வென்னார். ஒரோவொருவர்க்
கொல்கா[7]தோ றொன்று[8] படும்.

1 தூக்கணங்குருவி செய்யுங்கூடு. 2 பேரெறும்புகளால் செய்யப்படும் அரக்கு. 3 வாலிய உலண்டென்னும் புழுக்களால் நூற்ற நூல். 4 வேறொரு புழுவாற் செய்யப்பட்ட கோற்கூடு. 5 தேன்பொதி. 6 வாய்ப்பச் செய்யலானவை. 7 (செயலாற்) குறைபடாமல். 8 ஒரோவொரு செய்கை.

5 பண்டாரம்[1] பல்கணக்குக் கண்காணி[2] பாத்[3]தில்லார்[4]
உண்டா ரடிசிலே[5] தோழனிற்—கண்டாரா
யாக்கைக்குத் தக்க அறிவிலார்க் காப்படுப்பின்[6]
காக்கைக்குக் காப்படுத்த சோறு.

1 பொக்கிஷம். 2 மேல் விசாரிப்புக்காரன். 3 பகுத்து—(தரத்துக்கேற்றபடி) பகுத்து. 4 தன் வீட்டில் உறையும் மங்கையர். 5 தனக்காக்கும் உணவு. 6 அறிவில்லாதாரையும் தன் தோழரைப்போலக் கொண்டு தேறிக்காக்காவிடின்.

6 வருவாய்[1]க்குத் தக்க வழக்கறிந்து, சுற்றம் 1 வரும்படி.
வெருவாமை வீழ்ந்து[2],விருந் தோம்பித்—திருவாக்கும்
தெய்வதையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

2 வெருவாதபடி தழுவி.

7 வார்சான்ற கூந்தல்! வரம்புயர, வைகலும்
நீர்சான் றுயரவே, நெல்லுயரும்.—சீர்சான்ற
தாவாக் குடியுயரத், தாங்கருஞ்சீர்க் கோவுயர்தல்
ஓவா[1] துரைக்கும் உலகு. 1 ஒழியாமல்.

8 தான்பிறந்த இன்[1]னினைந்து, தன்னைக் கடைப்பிடித்து[2]த்,
தான்பிற ரால்கருதற் பா[3]டுணர்ந்து,—தான்பிறரால்
சாக வெனவாழான், சான்றோரால் பல்யாண்டும்
ஆக வென[4]வாழ்தல் நன்று. 4 வாழ்கவென என்றும் பாடம்

1 இல்—குடி. 2 ஒழுக்கத்தின் வழுவாதவகைக் கடைப்பிடித்து. 3 மதிக்கப் படுஞ் செய்கை.

9 காடுபோல் கட்கினிய இல்லம்; பிறர்பொருள்
ஓடுபோல்; தாரம் பிறந்ததாய்.—ஊடுபோய்[1]க்
கோத்தின்னா[2] சொல்லானாய்க், கொல்லானேல், பல்லவர்
ஓத்[3]தினா லென்ன குறை[4]. [3] நூல்கள். [4] காரியம்.

[1] பிறரூடுபோய். [2] இன்னாதவற்றை.

10 சத்தம்மெய்ஞ் ஞானம் தருக்கம் சமயமே
வித்தகர் கண்டவீ டுள்ளிட்டாங்—கத்தகத்
தந்தஇவ் வைந்தும் அறிவான் தலையாய
சிந்திப்பின் சிட்டன்[1] சிறந்து.

[1] சிஷ்டன்—பெரியோன்.



# ஏலாதி.

கீழ்க்கணக்கில் ஒன்றான இந்நூலை இயற்றினவர்

இல்லறநூ லேற்ற துறவறநூல் ஏயுங்கால்
சொல்லறநூல் சோர்வின்றித் தொக்குரைத்து—நல்ல
அணிமேதை யாய்நல்ல வீட்டு நெறியும்
கணிமேதை செய்தான் கலந்து

என்ற சிறப்புப்பாயிரத்தின்படி கணிமேதையார் (கணிமேதாவியார்) என்பவர். அவர் தமிழாசிரியர் மகனார், மாக்காயனார் மாணாக்கர் என்றும், பிரதிகளில் தெரிகின்றது. ஆறு சரக்குகள் சேர்ந்த ஏலாதி கடுகம் ஏலாதி சூரணம் போலுதலால், உவமையாகுபெயராய் வந்தது நூலின் பெயர். நூலின் முதற் செய்யுளால் இவரை ஜைநர் எனக்கொள்வர். [ஏலாதியாவன:—ஏலம்–இலவங்கம்–சிறுநாவற்பூ–மிளகு–திப்பிலி–சுக்கு]

1 கொல்லான், கொலைபுரியான், பொய்யான், பிறர்பொருண்
செல்லான், சிறியா ரினஞ்சேரான்,—பல்லார் [மேல்
மறை[1]யிற் செவியிலன், தீச்சொற்கண் மூங்கை[2],
இறை[3]யிற் பெரியார்க் கிறை.

[1] இரகசியம். [2] ஊமை. [3] முதன்மை.

Reading–பெரியார்க்கிவை.

2 குணநோக்கான், கூழ்[1]நோக்கான், கோல[2]மு நோக்கான்,
மணநோக்கான், மங்கல[3]மு நோக்கான்,—கண[4]நோக்கான்,
கால்காப்பு[5] வேண்டான்: பெரியோர்நூல் காதலற்[6]கு
வாய்காப்பு[7]க் கோடல் வனப்பு.

[1] செல்வம். [2] தோற்றப்பொலிவு. [3] புண்ணியம். [4] சுற்றம். [5] மனைவாழ்க்கை. [6] தன் புத்திரனுக்கு. [7] வாய்த்த காவலாக. ஒருவன் தன் குமாரனுக் குள்ள குண முதலானவைகளைக் கவனியாமல், அவனுக்குப் பெரியோர் நூலிற் பயிற்சியே விசேஷமென்று கொள்வான். பெரியோர்செய்த ஆகமத்தைக் காதலற்கு வாய்ப்பாகக் கோடல் ஒருவற் கழகாவது.

3 காலில்லார், கண்ணில்லார், நாவில்லார், யாரையும்
பா[1]லில்லார், பற்றிய நூலில்லார்,—சாலவும்
ஆழப் படுமூ[2] ணமைத்தார் இமையவரால்
வீழப் படுவார் விரைந்து.

[1] பால்—தம்பக்கம். காலில்லார் முதலானவர்க்கு ஊணமைத்துக் கொடுத்தார் இமையவரால் விரும்பப்படுவர்; அதாவது சுவர்க்கம் பெறுவர் என்பதாம்.
[2] வயிற்றில் தங்குதற்குரிய உணவு.

4 சாவ தெளி,தரிது சான்றாண்மை. நல்லது
மேவ லெளி,தரிது மெய்போர்த்தல்.—ஆவதன்கண்
சேற லெளிது, நிலையரிது. தெள்ளியராய்
வேற லெளி,தரிது சொல்[1].

[1] பொறிகளை வெல்வதாய்ச் சொல்வது எளிது, வேறல் அரிது.

5 ஊணொடு கூறை[1] எழுத்தாணி புத்தகம் [1] ஆடை.
பேணொடும்[2] எண்ணும் எழுத்திவை—மாணொடு
கேட்டெழுதி யோதிவாழ் வார்க்கீந்தார் இம்மையான்
வேட்டெழுத வாழ்வார் விரிந்து.

[2] விருப்பத்தோடும். கேட்டெழுதி ஓதிவாழ்வார்க்கு ஊண் முதலான ஆறையும் ஈந்தார், இம்மையில் உலகத்தார் விரும்பித் தமதாணை விரிந்தெழுத மன்னராய் வாழ்கின்றார்.

6 சாதல்[1], பொருள்கொடுத்தல், இன்சொல், புணர்வுவத்தல்[2],
நோதல்[3], பிரிவிற் கவறலே[4]—ஓதலின்
அன்புடையார்க் குள்ளன ஆறு குணமாக
மென்புடையார்[5] வைத்தார் விரித்து[6].

[1] சாவிற்சாதல். [2] கூடியிருத்தலை விரும்புதல். [3] நோவின் நோதல். [4] பிரிந்தால் கவலைப்படுதல். [5] மெல்லிய திறப்பாட்டையுடையார். [6] வகுத்துரைத்தார்.

7 இடைவனப்பும், தோள்வனப்பும், ஈ[1]டின் வனப்பும்,
நடைவனப்பும், நாணின் வனப்பும்[2],—புடைசால்[3]
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல. எண்ணோ
டெழுத்தின் வனப்பே வனப்பு.

[1] ஈடு—பெருமை. [2] நாணுடைமையினால் வரும் அழகு. [3] பக்கம் தசை நிரம்பிய.

அறுவர்[1]தம் நூலும் அறிந்,துணர்வு பற்றி[2],
மறுவரவு[3] மாறான[4] நீக்கி,—மறுவரவில்[5]
மாசா ரியனாய்[6] மறுதலைச்சொல் மாற்றுதலே[7]
ஆசா ரியன தமைவு[8]. [8] அமைவு—இயல்பு.

அறுசமயத்தார். [2] அதனாலே கூரிய உணர்வுடையனாய். [3] (அவற்றுள்) குற்றமாய்த் தோன்றுவனவற்றையும். [4] மறுதலைப்பட்ட பொருள்களையும். [5] மறு வரவு இல்—மறுபிறப்புண்டாகுதல் இல்லாத. [6] மாசாரியன் ஆய்—நல்ல ஒழுக்கம் உடையவனாகி. [7] தன்மாட்டு மறுதலைச்சொல் வாராமற் சொல்லுதல்.



# அறநெறிச்சாரம்.



இதனை இயற்றிய ஆசிரியர் முனைப்பாடியார் என்பவர். நூலின் தற்சிறப்புப் பாயிரத்தாலும், நூலில் உள்ள பல பாக்களாலும், இவர் ஜைநர் என்பது துணிவு. ஜைந ஸமயத்தையும் ஜைந ஆகமத்தையும் சிறப்பாகக் கொண்டுரைக்கும் வெண்பாக்கள் நீங்க, அறமும் ஒழுக்கமும் முதலியன கூறும் ஏனைப் பாக்கள் ஸமய க்ஷாத்திரமின்றி எல்லோரும் மேற்கொள்ளத் தக்கவை. இந்நூற்பயனை உரைக்கின்ற விடத்தில், ஆசிரியர்

> ஆதியின் தொல்சீர் அறநெறிச் சாரத்தை
> ஓதியும் கேட்டும் உணர்ந்தவர்க்குச்—சோதி
> பெருகிய உள்ளத்த ராய்வினைகள் தீர்ந்து
> கருதியவை கூடல் எளிது.

என்று கூறியிருக்கின்றனர். கடவுள்வணக்கம் நூற்பயன் நாந்தி நீங்கலாக, இந்நூலில் 222 வெண்பாக்கள் உள்ளன.

பிரசங்காபரணம் என்னும் புறத்திரட்டில் இந்நூற்பாக்கள் சில எடுத்திருக்கின்றன. புறத்திரட்டில் சங்கச் செய்யுள்கள் முதலாகக் கம்பராமாயணம் நளவெண்பா முதலிய பிற்காலத் திலக்கியங்கள் வரையில் பல நூல்களினின்றும் எடுத்த பாக்களைச் சேர்த்திருத்தலால், இந்நூல் ஏறக்குறைய ஐந்நூறு வருஷங்களுக்கு முற்பட்ட பழையநூல் என்பது துணியலாம்.

### அறம்

1 மெய்ம்மை பொறையுடைமை மேன்மை தவமடக்கம்
செம்மையொன் றின்மை[1] துறவுடைமை—நன்மை
திறம்பா விரதந் தரித்தலோ டின்ன
அறம்பத்தும் ஆன்ற குணம்.

[1] பக்ஷபாதமின்மை.

2 ஈட்டிய ஒண்பொருளும் இல்லொழியும். சுற்றத்தார்
காட்டுவாய்[1] நேரே கலுழ்ந்தொழிவர்.—மூட்டும்
எரியின் உடம்பொழியும். ஈர்ங்குன்ற நாட!
தெரியின் அறமே துணை.

[1] இடுகாட்டில்.

3 இன்சொல் விளைநிலமா, ஈதலே வித்தாகி,
வன்சொற் களைகட்டு, வாய்மை யெருவட்[1]டி,
அன்புநீர் பாய்ச்சி, அறக்கதி ரீன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.

Reading "அறப்பைங்கூ ழாக்குவார்க் கென்று மிடும்பை யில." [1] அட்டி (அட்டு-பகுதி)-சொரிந்து.

4 முற்செய் வினையின் பயன்றுய்த், ததுவுலந்தால்[1] [1] ஒழிந்தால்.
பிற்செய் வினையின்பின் போகலால்,—நற்செய்கை
ஆற்றுந் துணையும் அறமறவேல், நன்னெஞ்சே!
கூற்றம் குடில்[2]பிரியா முன். [2] சிற்றில். (உடம்பாகிய) சிறுவீடு.

ஒழுக்கம்

5 எப்பிறப் பாயினும் ஏமாப்[1] பொருவற்கு
மக்கட் பிறப்பிற்[2] பிறிதில்லை;—அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின்.

[1] ஏமாப்பு—காவல், safe-guard. [2] மனிதப்பிறப்பைக் காட்டிலும்.

6 நல்வினைப்பி னல்லால் நறுந்தா மரையா[1]ளும் [1] இலக்குமி.
செல்லாள் சிறந்தார்பி னாயினும்.—நல்வினைதான்
ஓத்து[2]ம் ஒழுக்கமும் தானமும் உள்வழி
நீத்தல்[3] ஒருபொழுதும் இல். [3] விட்டு நீங்குதல்.

[2] ஓத்து—(ஓதப்படுவது)—வேதம், வேதநெறி.

7 பலகற்றோம் யாமென்று தற்புகழ வேண்டா.
அலர்கதிர் ஞாயி[1]ற்றைக் கைக்குடையும் காக்கும். [1] சூரியன்.
சிலகற்றார் கண்ணும் உளவாம், பலகற்றார்க்
கச்சாணி[2] யன்னதோர் சொல்.

[2] தேர் முதலியவற்றின் கடையாணி. linch-pin.

8 எள்ளி[1]ப் பிறருரைக்கும் இன்னாச்சொல் தன்னெஞ்சில்
கொள்ளிவைத் தாற்போல் கொடிதெனினும்—மெள்ள
அறிவென்னும் நீரால் அவித்தொழுக லாற்றின்
பிறிதெனினும்[2] வேண்டா தவம்.

[1] இகழ்ந்து. [2] வேறு நன்மை செய்வதாயினும்.

9 பிறர்க்கின்னா செய்தலின் பேதைமை யில்லை.
பிறர்க்கின்னா தென்றுபே ரிட்டுத்—தனக்கின்னா
வித்தி[1] விளைத்து வினைவிளைப்பக் காண்டலின் [1] விதைத்து.
பித்து[2] முளவோ பிற. [2] வைபத்யமான செய்கைகள்.

10 முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்
றிழித்துரைக்கும் சான்றோ[1]ரை அஞ்சியே தேவர்
விழித்திமையா நின்ற நிலை.

[1] here ironical. தேவர் இமையாதிருத்தல் இத்தன்மையரை அஞ்சியே போலும் என்பதாம். தற்குறிப்பேற்றம்.

11 ஒளியும், ஒளிசான்ற செய்கையும், சான்றோர்
தெளிவுடைய ரென்றுரைக்குந் தேசும்,—களி[1]யென்னும்
கட்டுரையாற் கோதப் படுமேல்[2], இவையெல்லாம்
விட்டொழியும் வேறாய் விரைந்து.

[1] கள்ளுண்டு களித்தல். [2] குற்றப்பட்டால் (கோதுபட—to be in fault.)

12 ஓதலும், ஓதி யுணர்தலும், சான்றோரால்
மேதை யெனப்படும் மேன்மையும்,—சூது
பொருமென்னும் சொல்லினால் புல்லப் படுமேல்,
இருளாம் ஒருங்கே யிவை.

13 தனக்குத் தகவல்ல செய்தாங்கோ ராற்றால்
உணற்கு விரும்புங் குட[1]ரை—வனப்புற்ற [1] குடல், stomach.
ஆம்பற்[2]றாள் வாடலே போல அகத்தடக்கித் [2] அல்லி.
தேம்ப[3]த்தாம் கொள்வ தறிவு. [3] வாட, மெலிய

14 தம்புண் கழுவி மருந்திடுவர்: தாம்பிறிதின்
செம்புண் வறுத்த வறைதின்பர்.—அந்தோ
நடுநின் றுலக நயனிலா மாந்தர்
வடுவன்றோ செய்யும் வழக்கு.

Reading—"உலகினயனிலா"

15 இம்மை யடக்கத்தைச் செய்து புகழாக்கி
உம்மை யுயர்கதிக் குய்த்தலால்—மெய்ம்மையே
பட்டாங்[1] கறமுரைக்கும் பண்புடை யாளரே
நட்டா ரெனப்படு வார்.

[1] பட்டாங்கு (பட்ட+ஆங்கு=தோன்றின விதம்) நூல்களிற் சொன்ன விதம்.

16 அறுதொழி னீத்தாரை[1] மெச்சா தவற்றோ
டுறுநரைச் சார்ந்துய்யப் போதல்—இறுவரைமேல்
கண்ணின் முடவன் துணையாக நீள்கானம்
கண்ணிலான் சென்ற துடைத்து.

[1] அறுதொழிலுக் குரியரான முனிவர் (நீத்தார்—துறவிகள்.)

## இல்வாழ்க்கை

17 கொண்டான் குறிப்பொழுகல், கூறிய நாணுடைமை,
கண்டது கண்டு விழையாமை,—விண்டு[1]
வெறுப்பன செய்யாமை, வெஃகாமை, நீக்கி[2],
உறுப்[3]போ டுணர்வுடையாள் பெண். [3] அங்கலக்ஷணம்.

[1] வேறுபட்டு (விள்—பகுதி). [2] besides, exclusive of, தவிர.

18 வினைகாத்து[1] வந்த விருந்தோம்பி நின்றால்,
மனைவாழ்க்கை நன்று தவத்தின்.—புனைகோதை
மெல்லியல் நல்லாளும் நல்லள், விருந்தோம்பிச்
சொல்[2]லெதிர் சொல்லா ளெனில். [2] கணவன் சொல்லுக்கு.

[1] தீவினை அணுகாதபடி காத்து.

19 மடப்ப[1]தூஉம் மக்கட் பெறுவதூஉம் பெண்பான்[2]
முடிப்பதூஉம் எல்லாருஞ் செய்வர்.—படைத்ததனால்[3]
இட்டுண்டில் வாழ்க்கை புரிந்து[4]தாம் நல்லறத்தே
நிற்பாரே பெண்டிரென் பார்.

[1] மடப்பது—to be artless, to be simple. [2] பால்—modes of dressing ladies' hair. [3] சம்பாதித்ததைக் கொண்டு. [4] இட்டுண்டு இல்வாழ்க்கை நடத்தி.

20 மருவிய காதன் மனையாளும் தானும்
இருவரும் பூண்டுய்ப்பி னல்லால்[1]—ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னும் இயல்புடை வான்சகடம்[2]
செல்லாது தெற்றிற்று[3] நின்று. [3] தடைப்பட்டு.

[1] உய்ப்பினல்லால்—செலுத்தினாலன்றி. [2] பெருமைபொருந்திய பண்டி.

21 அடங்கி[1] யடங்கினார்க் கீதல் தலையே. அடங்கா
தடங்கினார்க் கீதல் இடையே.—நுடங்கிடையாய்!
ஏற்பானுந் தானும் அடங்காக்கால் அஃதென்ப
தோற்பாவைக் கூத்தினுட் போர்.

முதலடி ஐஞ்சீரடி—தொல்—பொரு—371—சூ—உரையைப் பார்க்க.

[1] அஹங்கார மமகாரம் அடங்கி.

22 பாப்புநீர் வையகத்துப் பல்லுயிர்கட் கெல்லாம்
இரப்பாரில்[1] வள்ளல்களு மில்லை—இரப்பவர்
இம்மைப் புகழும் இனிச்செல் கதிப்பயனும்
தம்மைத் தலைப்படுத்த லால்[2].

[1] இரப்பார்போல். [2] மேம்படுத்தலால்.

## ஞானம்

23 தெரிவில் இளமையும் தீப்பிணியும் மூப்பும்
பிரிவும் துயிலும் ஒரீஇப்[1]—பருவந்து[2]
பத்தெட்டு நாளைப் பயனிலா வாழ்க்கைக்கு
வித்துக்குற் றுண்பார்[3] பலர்.

[1] நீக்கி. [2] துன்பப்பட்டு.

[3] விதையைக் குற்றி உண்பார். மேல் விளைந்து பயன்படும் விதையைக் குற்றி உண்பார் என்பது, நன்மை விளைவித்துக்கொள்ளலான உடலை வீணே கழிய விடுபவர் என்பதாம். "நனிபேதையே நயனில் கூற்றம், விரகின்மையின் வித்தட்டுண்டனை" என்றும், "வாழ்தலின் வரூஉம் வயல்வளனறியான், வீழ்குடியுழவன் வித்துண்டாஅங்கு" என்றும் புறநானூற்றில் வருகின்றன.

24 போற்றி[1]யே போற்றியே யென்று புதுச்செல்வம்
தோற்றியார்[2] கண்ணெல்லாம் தொண்[3]டேபோல்—ஆற்றப்
பயிற்றிப் பயிற்றிப் பலவுரைப்ப தெல்லாம்
வயிற்றுப் பெருமான் பொருட்டு.

[1] துதிக்கப்படுவீராக. [2] படைத்தவர். [3] அடியான்.

25 பரிந்தெனக்கோர் நன்மை பயப்பாய்போல் நெஞ்சே
அரிந்தென்னை ஆற்றவுந் தின்னல்—புரிந்துநீ
வேண்டுவ வேண்டுவே னல்லேன். விழுக்குணம்
பூண்டேன். பொறியிலி[1] போ.

[1] அதிட்டமற்றவனே. குருடனே.

26 உள்ளா ரிருந்தும்தம் உள்ளமற[1]ப் பெற்றாரேல்
கள்ளவிழ் சோலையாம் காட்டுளார்[2]. காட்டுள்ளும்
உள்ள மறப்பெறு கல்லாரேல்[3] நாட்டுள்ளும்
நண்ணி நடுவூ ருளார்[4].

[3] பெறவிட்டால். [4] பெருதவர் நடுவூருளார் போல்வர்.

[1] பரிஷ்காரமாய், முழுவதும். [2] உள்ளத்தைத் தப்[illegible]மாகப் பெற்றவர் காட்டுளார் (காட்டிலுள்ள தவசிகள்) போல்வர்.

27 நின்னை அறப்பெறு கிற்கிலேன்: நன்னெஞ்சே!
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்?—நின்னை
அறப்பெறு கிற்பேனேல்[1], பெற்றேன்மற் றீண்டே[2]
துறக்க[3]ந் திறப்பதோர் தாள்[4]. [3] சுவர்க்கம். [4] திறவுகோல்.

[1] நான் பெறக்கூடுமாயின். [2] இவ்வுலகிலே, இவ்வுலகிலிருந்தே.

28 தானே தனக்குப் பகைவனு நட்டானும்.
தானே தனக்கு மறுமையும் இம்மையும்.
தானேதான் செய்த வினைப்பயன் துய்த்தலால்,
தானே தனக்குக் கரி[1]. [1] சாக்ஷி.

29 இறந்த பிறப்பிற்றாம்[1] செய்த வினையைப் [1] பிறப்பில் தாம்.
பிறந்த பிறப்பால் அறிக.—பிறந்திருந்து
செய்யும் வினையால் அறிக இனிப்பிறந்
தெய்தும் வினையின் பயன்.

வீடு

30 இந்திய[1]க் குஞ்சரத்தை[2] ஞானப் பெருங்கயிற்றால்
சிந்தனைத் தூண்பூட்டிச் சேர்த்தியே—பந்திப்பார்,
இம்மைப் புகழும் இனிச்செல் கதிப்பயனும்
தம்மைத் தலைப்படுத்து வார்.

[1] இந்திரியம். [2] (இந்திரியமாகிய) யானையை.

31 உணர்ச்சியச் சாக உசா[1]வண்டி யாகப்
புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி—உணர்ந்ததனை
ஊர்கின்ற[2] பாகன்[3] உணர்வுடைய னாகுமேல்
பேர்கின்ற தாகும் பிறப்பு.

[1] ஆராய்வு—inquiry. [2] செலுத்துகின்ற [3] சாரதி. here ஆத்துமா.

32 இருளே உலகத் தியற்கை. இருளகற்றும்
கைவிளக்கே கற்ற வறிவுடைமை. கைவிளக்கின்
நெய்யேதன் னெஞ்சத் தருளுடைமை. நெய்பயந்த
பால்போல் ஒழுக்கத் தவரே பரிவில்லா
மேலுலகம் எய்து பவர்.

போத

33 நல்லற மெந்தை. நிறையெம்மை. நன்குணரும்
கல்வியென் தோழன். துணிவெம்பி.—அல்லாத
பொய்ச்சுற்றத் தாரும் பொருளோ? பொருளாய
இச்சுற்றத் தாரி[1] லெனக்கு. [1] சுற்றத்தாரைப்போல்.

# நீதிநெறிவிளக்கம்.



இந்நூ லியற்றிய குமரகுருபரர் முந்நூறு வருஷங்களுக்கு முன் திருநெல்வேலியில் ஸ்ரீவைகுண்டம் என்னும் பதியில் சைவ வேளாளர் குலத்தில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமசுந்தரி யம்மையாருக்கும் தவப்புத்திரராய்ப் பிறந்தவர். திருமலை நாயகருடைய வேண்டுகோளால் இயற்றினது நீதிநெறிவிளக்கம் என்பர். இவர் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்தவர். காசியில் இவர் ஏற்படுத்திய மடம், குமாரசாமி மடம் என வழங்கிவருகின்றது. இவர் பாடியுள்ள பிரபந்தங்களின் நடை சங்கநூல்களின் நடையை ஒத்தது. இவர் நைஷ்டிகப்பிரம்மசாரி.

நீதிநெறிவிளக்கத்தில் கல்வி அரசு அமைச்சு முயற்சி முதலியவற்றை விளக்கி, முடிவில் நீத்தார் தன்மையும் மோக்ஷசாதனமும் கூறியிருக்கின்றன. ஒவ்வொரு வெண்பாவிலும் உரைக்கும் பொருளை நுட்பமாகவும் திட்பமாகவும் உரைத்தலால், இந்நூல் வித்யார்த்திகளுக்கு மிகவும் உபயோகமான பாடபுத்தகமாய் விளங்குவதாயிற்று. திருநெல்வேலியில் கலெக்டராயிருந்த ஸ்டோக்ஸ் என்பவர் இங்க்லிஷ் மொழிபெயர்ப்போடு இந்நூலை முதலில் அச்சிட்டார். இந்நூலுக்கு முதலில் உரையியற்றியவர் உரையாசிரியர் காஞ்சீபுரம் சபாபதி முதலியார்.

இவர் இயற்றிய ஏனைநூல்கள் மீனாக்ஷியம்மன் பிள்ளைத்தமிழ்—காசிக்கலம்பகம் – மதுரைக்கலம்பகம் – சகலகலாவல்லிமாலை – திருவாரூர் நான்மணிமாலை–சிதம்பரச் செய்யுட்கோவை முதலியன.

## கல்வி

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்;
புறங்கடை[1] நல்லிசையும் நாட்டும்;—உறுங்கவ[2]லொன்
றுற்றுழி[3]யும் கைகொடுக்கும். கல்வியின் ஊங்கி[4]ல்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை.

[1] தலைவாயில், entrance. [2] மிகுதியாகிய கவலை. [3] உற்ற+உழி=நேரிட்டவிடத்து. [4] ஊங்கு–மிக்கது.

எத்துணைய வாயினும் கல்வி இடமறிந்[1]
துய்த்துணர்[2] வில்லெனின் இல்லாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை இன்றெனின் என்னும்[3]? அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து[4]. [4] மணமுடையதுபோலும்.

[1] நல்லாசிரியனை அறிந்து. [2] ஆராய்ந்தறிதல். [3] என்ன நன்மை உண்டாகும்.

கலைமகள்[1] வாழ்க்கை முகத்த தெனினும் [1] ஸரஸ்வதி.
மலரவன்[2] வண்டமிழோர்[3]க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு[4] மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர்[5] செய்யும் உடம்பு. [5] இவர்–இப்புலவர்.

[2] பிரமன். [3] தமிழ்ப்புலவர். [4] பயன்படா உடம்பு.

கற்றோர்க்குக் கல்வி நலனே கல[1]னல்லால் [1] ஆபரணம்.
மற்றோ ரணிகலம் வேண்டாவாம்.—முற்ற[2] [2] பரிஷ்காரமாய்.
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா. யாரே
அழகுக் கழகுசெய் வார்?

முற்றும் உணர்ந்தவ ரில்லை: முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க.—சிற்றுளியால்
கல்லும் தகரும்: தகரா கனங்குழாய்!
கொல்[1]லுலை[2]க் கூட[3]த்தி னால்.

[1] கொல்லன், black-smith. [2] உலைக்களம், forge. [3] கூடம்–சம்மட்டி–hammer.

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க.—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே[1] இவர்க்கு[2]நா மென்று[3].

[1] எத்தன்மைத் தாம். [2] இவர்க்குமுன். [3] என்று கருதி.

தன்னை வியப்பிப்பான்[1] தற்புகழ்தல், தீச்சுடர்[2]
நன்னீர் சொரிந்து வளர்த்தற்[3]றால்.—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ(து)[4]. இன்பம்
நயவாமை யன்றே நலம்[5]. [5] இன்பம்.

[1] வியக்கும்படி செய்பவன். [2] விளக்கை. [3] பிரகாசிக்கச் செய்ததுபோலாம். [4] மதிப்பென்பது.

அரசு

கண்ணிற் சொலி[1]ச்செவியி னோக்[2]கும் இறைமாட்சி[3]
புண்ணியத்தின் பால[4]தே யாயினும்—தண்ணளியால்
மன்பதை[5] ஓம்பாதார்க் கென்னாம்? வயப்படைமற்
றென்பயக்கும் ஆணல் லவர்[6]க்கு.

[1] கண்ணின் குறிப்பால் செய்தி தெரிவித்தல். [2] வேவுகாரர் சொல்ல (தான் நேரிற் கண்டதுபோல்) செய்தி அறிதல். [3] royalty. [4] பூர்வ புண்ணியத்தின் பாற் பட்டது. [5] மனிதர். [6] ஆண்மையில்லாதவர்.

குடிகொன் றிறைகொள்ளும் கோமகற்குக் கற்றா[1]
மடிகொன்று[2] பால்கொளலும் மாண்[3]பே.—குடியோம்பிக்
கொள்ளுமா[4] கொள்வோர்க்குக் காண்டு[5]மே மாநிதியம்
வெள்ள[6]த்தின் மேலும் பல. [6] வெள்ளம்-a large number.

[1] கன்றையுடைய பசு. [2] கொய்து. [3] நற்செய்கை. [4] கொள்ளும் ஆ(று) — வாங்கும் முறையில். [5] கண்டோம்.

ஈகை

கண்ணோக் கரும்[1]பா, நகைமுகமே நாண்மல[2]ரா,
இன்மொழியின் வாய்மையே தீங்கா[3]யா,—வண்மை
பல[4]மா, நலங்கனிந்த பண்புடையா ரன்றே [4] பழம்.
சலியாத[5] கற்ப தரு. [5] கொடுப்பதிற் சலியாத.

[1] அரும்பு — மொக்கு. [2] அன்றலர்ந்த மலர், புதிய மலர். [3] மதுரமுள்ள காய்.

வாங்கும் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களி[1]றோ துயருறா.—ஆங்கதுகொண்
டூரும் எறும்பிங் கொருகோடி உய்யுமால்,
ஆரும் கிளை[2]யோ டயின்று[3]. [2] நிறைந்த சுற்றம்.

[1] அசைகின்ற இயல்பினையுடைய யானைகள். [3] அயின்று (அயில்—ப)—உண்டு.

புகழுடம்பு

களைக[1]ணாத் தம்மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
விளைவுன்னி[2] வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய[3]
தூனுடம்[4] பென்று புகழுடம்[5] போம்புதற்[6]கே
தானுடம் பட்டார்க டாம்.

[1] ஆதரவு. [2] விளைவு உன்னி—(வேறொரு) பயனை எண்ணி. [3] தளரும் இயல்பினையுடையது. [4] மாமிசத்தாலான உடம்பு. [5] கீர்த்தியாகிய சரீரம். [6] பாது காத்தல்.

அமைச்சு

செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும்[1] வாய்வெரீஇ[2]ப் போரா—கவிழ்மதத்த
கைம்மா[3] வயத்ததே பாகு.மற் றெத்திறத்தும்[4]
அம்மாண் பினவே[5] அமைச்சு. [5] அத்தன்மையரே.

[1] அரசன் கோபித்தாலும். [2] சொல்லுதற்கஞ்சி (வெருவி—வெரீஇ). [3] யானை.
[4] எவ்விதத்தும்.

ஊக்கம்

உறுதி பயப்ப[1] கடைபோகா[2] வேனும் [2] முற்றுப்பெரு.
இறுவரை[3] காறும் முயல்ப.—இறுமுயிர்க்கும் [3] முடிவுகாலம்.
ஆயுண் மருந்[4]தொழுக்கல்[5] தீதன்றால். அல்லனபோல்[6]
ஆவனவு முண்டு சில.

[1] நன்மை தரும் முயற்சிகள். [4] பிழைக்கு மருந்து. [5] வாயில் விடுதல்.
[6] ஆகாதனபோல்.

முயலாது வைத்து முயற்றின்மை[1] யாலே [1] முயற்சியில்லாமை.
உயலாகா[2] ஊழ்த்திறத்த[3] வென்னார்[4].—மயலாயும்[5]
ஊற்ற மிறு[6]விளக்கம் ஊழுண்மை[7] காண்டுமென்
றேற்றார் எறிகால்[8] முகத்து[9]. [8] வீசுங்காற்று. [9] எதிரில்.

Reading—ஊற்றமி றாவிளக்கம்.

[2] தப்புவனவல்ல. [3] ஊழ்வினையின் பகுதிகள். [4] என்று கருதார். [5] மயங்கி
யும். [6] ஆதரவில்லாத, மறைவில்லாத. [7] ஊழ் என்பது உளதென்பதை.

உலையா[1] முயற்சி களைக[2]ணா ஊழின் [1] கெடாத. [2] ஆதரவு.
வலிசிந்தும்[3] வன்மையும் உண்டே.—உலகறியப் [3] கெடுக்கின்ற.
பான்முளை[4] தின்று[5] மறலி[6] யுயிர்குடித்த [4] ஊழின் முளையை.
கான்முளை[7]யே போலும்[8] கரி[9]. [8] அசை. [9] சாக்ஷி.

[5] கெடுத்து. [6] யமன். [7] பிள்ளை (மார்க்கண்டேயர்).

மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்டுஞ்சார்,
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்,—செவ்வி
அருமை[1]யும் பாரார், அவமதிப்புங் கொள்ளார்,
கருமமே கண்ணாயி னார்.

[1] செவ்வியருமை—காலத்தின் அருமை.

சிறுமுயற்சி செய்தாங்[1] குறுபயன்[2] கொள்ளப் [1] அதனால்.
பெறுமெனின் தாழ்வரோ?[3] தாழார்.—அறனல்ல[4]
எண்மைய வாயினும்[5] கைவிட்[6] டரிதெனினும் [6] நீக்கிவிட்டு.
ஒண்மையிற்[7] றீர்ந்தொழுக லார்[8]. [8] நீங்கி நடவாதவர்.

[2] பெரும்பயன். [3] தாமதிப்பரோ. [4] பாவமான செய்கைகள். [5] எளியவாயினும். [7] ஒள்ளிய அறச்செய்கையினின்றும்.

சொற்சேலவு

சொல்வன்மை[1] உண்டெனின் கொன்னே[2] விடுத்தொழிதல்
நல்வினை கோற[3]லின் வேறல்ல.—வல்லே[4]த்தம் [4] விரைவாக.
ஆக்கங் கெடுவ துளதெனினும்[5] அஞ்சுபவோ
வாக்கின் பயன்[6]கொள் பவர்.

[1] யாவரும் ஏற்றுக்கொள்ளத்தக்க சொல்லாற்றல். [2] வீணுக, பயன்படுத்தாமல். [3] கெடுப்பது. [5] கெடுவதாயிருந்தாலும். [6] சொற்செலவால் வரும் பயனை.

நன்மனைவி

கற்பு[1]டுத் தன்பு[2] முடித்துநாண்[3] மெய்ப்பூசி [1] கற்பாகிய உடை.
நற்குண நற்செய்கை[4] பூண்டாட்கு—மக்கட்பே[5]
றென்பதோர் செல்வ[6]மும் உண்டாயின், இல்லன்றே
கொண்டாற்[7]குச் செய்தவம் வேறு. [7] கொண்டகணவன்.

[2] அன்பாகிய மலர். [3] நாணமாகிய கலவைச்சாந்து. [4] நற்குண நற்செய்கையாகிய ஆபரணம். [5] பிள்ளைப்பேறு. [6] பாக்கியம்.

தவப்போர்வை

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக[1] மன்று; பிறிதொன்றே.—கஞ்சுகம் [1] சட்டை.
எப்புலமும் காவாமே மெய்ப்புலங்[2] காக்கும்.மற்
றிப்புலமும் காவா திது[3]. [3] இத்தவப்போர்வை.

[2] உடம்பாகிய புலம் ஒன்றையே.

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள்[1]! யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்.—வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு.

[1] அறிவில்லாதவர்களே.

அநுதாபம்

நன்மக்கள் செந்நாத் தழும்[1]பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்—முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி உள்ளுடைவார்[2]
தீய[3] செயினும் சில.

[3] சில தீய—சில பொல்லாங்குகளை.

[1] புகழ்ந்து புகழ்ந்து செந்நாவில் ஏறிய தழும்பு. [2] மனம் வருந்துகின்றவர்கள்.

யோகியர்

எவரெவ ரெத்திறத்தார் அத்திறத்த ராய்[1]நின்
றவரவர்க் காவன கூறி—எவரெவர்க்கும்
உப்பா[2]லாய் நிற்பமற் றெம்முடையார்[3] தம்முடையான்[4]
எப்பாலு[5] நிற்ப தெனை.

[5] உள்ளும் புறம்பும்.

[1] அப்பக்குவத்துக் கமைந்தவர்களாய். [2] புறம்பாய். [3] எம்மை யடிமை யாகவுடைய யோகியர். [4] தம்மை யடிமையாகவுடைய கடவுள்.

நிரவதிகவின்பம்

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்புணர்விற் றோன்றுவதே இன்பம்.
இறந்தவெலாம்[1] துன்பமலா தில்.

[1] ஒழிந்தவெல்லாம்.

ஜீவன்முக்தர்

கற்றுங் கறிந்தடங்கித் தீதொரீஇ[1] நன்றாற்றிப்[2]
பெற்றது கொண்டு[3] மனந்திருத்திப்—பற்றுவதே[4]
பற்றுவதே பற்றிப் பணி[5]யறநின் றொன்[6]றுணர்ந்து
நிற்பாரே நீணெறி[7]ச்சென் றார்[8].

[7] வீடு. [8] சென்றடைந்தவர்.

[1] தீமையை ஒழித்து. [2] நன்மையைச் செய்து. [3] கிடைத்ததனால். [4] பற்றத் தகுந்ததையே, அதாவது வீட்டுநெறியும் அதற்கமைந்த உபாயமும். [5] தொழில். [6] கடவுளை.



# PART II.

---

## சயங்கொண்டார்

# கலிங்கத்துப்பரணி.

தென்னாட்டின் பழைய சரித்திரத்தை அறிதற்கு உதவியான நூல்களில் கலிங்கத்துப்பரணி என்பது ஒன்று. இது I—வது குலோத்துங்கச் சோழன் தன் மந்திரத்தலைவனான கருணாகரத் தொண்டைமானைத் தண்டத்தலைவனாகச் செலுத்திக் கலிங்கராஜனை வென்ற திறத்தைக் கூறுகின்ற ஒரு பிரபந்தம்.

பரணியாவது, ஆயிரம் யானையைக் கொன்ற வீரனைத் தலைமகனாகக்கொண்டு, கடவுள் வாழ்த்தும், கடைதிறப்பும், பாலைநிலமும், காளிகோயிலும், பேய்களோடு காளியும் காளியோடு பேய்களும் சொல்லத் தான் சொல்லக் கருதிய தலைவன் கீர்த்தி விளங்கலும், அவன் வழியாகப் புறப்பொருள் தோன்ற வெம்போர் வழங்க விரும்பலும், என்றிவையெல்லாம், இருசீரடி முச்சீரடி ஒழித்து ஒழிந்த மற்றையடிகளான், ஈரடிப் பஃறாழிசையால் பாடுவது. காடுகெழு செல்விக்குப் பரணிநாட் கூழும் துணங்கையுங் கொடுத்து வழிபடுவதோர் வழக்குப்பற்றிப் பரணி என்கிற பெயர் இவ்விதமான பிரபந்தங்களுக்கு உண்டாயிற்று. களப்போரில் வெற்றி கொண்ட அரசனது வெற்றித்திறத்தைச் சிறப்பித்துப் பாடுகின்ற புலவன் அவ்வரசனது வேல் முதலான படைகளால் அமைத்த பரணின்மீது இருந்துகொண்டு இந்தப் பிரபந்தம் பாடுவதனால் இந்தப் பிரபந்தம் பரணி எனப்பெறும் என்றும் சில புலவர் கூறிவருகின்றனர்.

பரணிப் பிரபந்தத்தில் கடைதிறப்பும் பாலைநிலமும் காளிகோயிலும் பேய்(கூளி)களுமான பகுதிகளை வைத்துப் பாடுகின்ற கருத்துப் பின் வருமாறு. பகைவரை வெல்லக் கருதிச்சென்ற அரசன் குறித்த காலத்தில் வாராமையால், அவன் மனைவியர் கோபங்கொள்வர். அது கண்ட அரசன் தன் புலவரை அனுப்ப, அவர் அக்கோபந் தணிவித்துக் கடைதிறக்குமாறு செய்வர். அப்போது அப்புலவர், அரசன் பகைமேல் சென்ற வழியில் உள்ள பாலையின் கொடுமையையும், பாலையின் அதிதேவதையான காளியையும், காளிக்கு ஏவல்செய்யும் பேய்களையும், அப்பேய்கள் பசியால் வருந்தினதையும், அரசன் பகைவரைக் களத்தில் கொன்றதால் அப்பேய்கள் பசிதணிந்து மகிழ்ச்சி அடைந்ததையும் கூறி, அம் முகத்தால் அரசனுடைய வெற்றித்திறங்களைப் புனைந்துரைப்பர்.

இக்கலிங்கத்துப் பரணியை இயற்றினவர், குலோத்துங்கச் சோழனுடைய சமஸ்தானப் புலவரான சயங்கொண்டார் என்பவர். இவருடைய ஊர் தீபங்குடி என்பது. இவர் பரணி பாடுவதில் வல்லவர் என்பது "வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ சயங்கொண்டான் விருத்தமென்னும், ஒண்பாவில் உயர் கம்பன் கோவையுலாவந்தாதிக் கொட்டக்கூத்தன்...... ." என்ற தனிப்பாட்டால் விளங்கும். இந்நூலை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் பழைய இலக்கியங்களில் இவ்வாசிரியர்க்குள்ள பயிற்சியின் பரப்பு நன்கு புலப்படும். அங்கங்கே கூறும் பொருளுக்கேற்ற ரஸமும் ரஸத்துக்கேற்ற நடையுமாக இந்நூல் இனிது முடிந்திருக்கின்றது. இந்நூலினின்றும் சில பாடல்களைச் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார் எடுத்தாண்டிருப்பது இந்நூலின் கௌரவத்துக்கு ஒரு சான்று. நூல் இயற்றிய காலம் கி-பி. பதினோராவது நூற்றாண்டின் முடிவுகாலம் என்பது சிலாசாசனங்களின் உதவியால் துணியப்படுகின்றது.

## 10. அவதாரம்.

அன்றிலங்கைபொருதழித்த அவனேஅப்
பாரதப்போர்முடித்துப்பின்னை
வென்றிலங்குகதிராழிவிசயதரன்
எனஉதித்தான்விளம்பக்கேண்மின்.

Reading—கேண்மோ.

தேவரெலாம்குறையிரப்பத்தேவகிதன்
திருவயிற்றில்வசுதேவற்கு
மூவுலகும்தொழநெடுமால்முன்னொருநாள்
அவதாரம்செய்தபின்னை,

வேறு

இருள்முழுதும்அகற்றும்விது[1]குலத்தோன்தேவி — [1] சந்திரன்.
இகல்விளங்குதபன[2]குலத்திராசராசன் — [2] தபனன்—சூரியன்.
அருள்திருவின்திருவயிற்றில்வந்துதோன்றி,
ஆலிலையில்அவதரித்தா[3]னவனேமீள — [3] விஷ்ணு.

[அவதாரம் செய்தவளவில்]

வேறு

அலர்மழைபொன்மழைபொழிய,அவைகண்டு
கங்கைகொண்டசோழன்தேவி,
குலமகடன்குலமகனைக்கோகநத[1] — [1] தாமரை.
மலர்க்கையால்எடுத்துக்கொண்டே,

Reading—அலர்மழையும் பொழிந்தனவங் கவைகண்டு.
கோகனக மலர்க்கரத்தி லெடுத்துக்கொண்டாள்.

அவன்இவர்க்குப்புத்திரனும்அடையாளம்
அவயவத்தின்அடைவேநோக்கி,
இவன்எமக்குமகனுகிஇரவிகுலம்[1] [1] சூரியகுலம்.
பாலிக்கத்தகுவன்என்றே,

Reading—அவனிபர்க்குப் புரந்தரனுமடையாளம் (அவனிபர்க்குப் புரந்தரன்—அரசர்க்கிந்திரன்—ராஜேந்திரன் என்றவாறு).

தான்வேண்டிக்கோடலுமே
தன்னுடையதேவியரிற்றலைமைத்தேவி
தேன்வேண்டுமொழிச்செல்விதிருமகட்குத்
திருமகனுய்க்கொடுத்தபின்னை,

வேறு

"திங்களின்இளங்குழவிசெம்மலிவன்"என்றும்
"செய்யபரிதி[1]க்குழவிஐயனிவன்"என்றும் [1] சூரியன்.
தங்களின்மகிழ்ந்திருகுலத்தரசர்தாமும்
தனித்தனிஉவப்பதோர்தவப்பயனுமொத்தே,

பண்டுவசுதேவன்மகன்ஆகிநிலமாதின்
படர்களையும்மாயனிவன்என்றுதெளிவெய்தத்
தண்டுதனுவாள்பணிலம்நேமி[1]யெனும்நாமத்
தன்படைகளானதிருஐம்படைதரித்தே.

[1] தண்டு...நேமி=விஷ்ணுவின் பஞ்சாயுதம்.

வேறு

திருமார்பின்மலர்மடந்தைதிருக்கழுத்தின்
மங்கலநாண்என்னமுந்நூல்[1] [1] உபவீதம்–பூணூல்.
பெருமார்பின்வந்தொளிரப்பிறப்பிரண்டா
வதும்பிறந்துசிறந்தபின்னர்,

போதங்கொள்மாணுருவாய்ப்புவியிரந்த
அஞ்ஞான்று[1]புகன்றுகொண்ட [1] வாமனுவதாரத்தில்.
வேதங்கள்நான்கினையும்வேதியர்பால்
கேட்டருளிமீண்டுங்கற்றே,

நிறைவாழ்வைப்பெறல்நமக்கும்அணித்தென்று
நிலப்பாவைகளிப்ப, [1]விந்தத்
துறைவாளைப்புயத்திருத்தி, உடைவாளை[2]த்
திருவரையின்ஒளிரவைத்தே,

[1] விந்தம்–அரவிந்தம்–தாமரை. [2] உறைவாளை எனவும் பாடம்.

வேறு

ஈரிருமருப்புடையவாரணம்[1]உகைத்தே  [1] ஐராவதம்.
இந்திரன்எதிர்த்தவரைவென்றுவருமேல், யான்
ஓரிருமருப்புடையவாரணம்உகைத்தே
ஒன்னலரை[2]வெல்வன்"எனஅந்நெறிபயின்றே,  [2] பகைவர்.
இற்றைவரையும்செலஅருக்கன்[1]ஒருநாள்போல்  [1] சூரியன்.
ஏழ்பரிஉகைத்திருள்அகற்றிவருமேல், யான்
ஒற்றைவயமாகடவிமாநிலவளாகத்[2]  [2] வளைந்த இடம்.
துற்றஇருள்தீர்ப்பன்"எனமற்றதுபயின்றே,

வேறு

உரைசெய்பலகலைகளின்உரிமைபலசொல்லுவதென்?
உவமைஉரைசெய்யின்உலகத்
தரைசர்உளரல்லர்எனஅவைபுகழமல்குகலை
அவையவைகள்வல்லபிறகே,

Reading – (அரைசருள ரல்லரென) அமரருளரல்லரென.

இசையுடன்எடுத்தகொடிஅபயன்அவனிக்கிவனை
இளவரசில்வைத்தபிறகே,
திசையரசருக்குரியதிருவினைமுகப்பதொரு
திருவுளமடுத்தருளியே,

Reading—திருவுளமெடுத்தருளியே.

வளர்வதொர்பதத்தினிடைமதகரிமுகத்தினிடை
வளையுகிர்மடுத்துவிளையா
டிளவரி[1]எனப், பகைஞர்எதிர்முனைகளத்தழிய
எறிபடைபிடித்தருளியே,

[1] இளவரி – (அரி–சிங்கம்) பாலசிங்கம்
Reading—எதிர்முனை தனக்கழிய.

குடதிசைபுகக்கடவுகுரகதரதத்திரவி
குறுகலும்எறிக்கும்இருள்போல்,
வடதிசைமுகத்தரசர்வருகதம்[1]உகத்தனது  [1] கதம்—உக்கிரம்.
குரகதம்[2]உகைத்தருளியே.  [2] குதிரை.

Reading—"குலவுதலுமொய்க்குமிருள்போல்,
வடதிசைமுகத்தரசர்வருகெனவெனத்தனது
வயப்பரியுகைத்தருளியே."

புரமெரிமடுத்தபொழுததுவிதுவெனத்திகிரி[1] — [1] சக்ராயுதம்.
புகையெரிகுவிப்பவயிரக்
கரமெரிமடுத்தரசர்கரமெதிர்குவிப்பதொரு
கடவரை[2]தனைக்கடவியே, — [2] யானை.

Reading—புகையெதிர் குடிப்ப. அரசர் கரமொடு
குவிப்பதொரு கடவரையினை.

குளமுதிரமெத்திய[1]தொர்குரைகடல்கடுப்ப, எதிர்
குறுகலர்கள்விட்டகுதிரைத்
தள[2]முதிரவெட்டி, ஒருசெருமுதிரஒட்டினர்கள்
தலைமலைகுவித்தருளியே,

Reading—தளமுறிய. [1] மெத்துதல்—மிகுதல். [2] தளம்—படை.

வேறு

மனுக்கோட்டம்அழித்தபிரான்
வளவர்பிரான்திருப்புருவத் — [1] அழகிய புருவமாகிய வில்.
தனு[1]க்கோட்ட[2]நமன்கோட்டம் — [2] வளைக்க
புக்கதுசக்கரக்கோட்டம்.

Reading—மனக்கோட்டம் தவிர்த்த பிரான்.
இருபுருவத் தனுக்கோட்டம் படப் பொடியாய்.

வேறு

பொருநராதிபர்[1]கண்கள்சிவந்தில: — [1] அரசர்.
போரிலோடியகால்கள்சிவந்தன.
விருதராசபயங்கரன்செங்கையில்
வேல்சிவந்தது: கீர்த்திவெளுத்ததே.

Reading—கண்கள் பசந்தன. கால்கள் கறுத்தன

வேறு

மாவுகைத்தொருதனிஅபயன்இப்படி
வடதிசைமேற்செல, மன்னர்மன்னவன்
தேவருக்கரசெனவிசும்பின்மேற்செல[1]த்,
தென்றிசைக்குப்புகுந்தனசெப்புவாம்.

[1] மன்னர்...மேற்செல. இது மங்கலவழக்கு.

வேறு

மறையவர்வேள்வி[1]குன்றி, — [1] யாகம்.
மனுநெறிஅனைத்தும்மாறித்,
துறைகள்ஓர்ஆறு[2]ம்மாறிச், — [2] அரசருக்குரிய அறுதொழில்.
சுருதியும்முழக்கம்ஓய்ந்தே,

Reading—மனுநெறி வழக்குமின்றி.

சாதிகள் ஒன்றோடொன்று
தலைதடுமாறி, யாரும்
ஓதியநெறியில்நில்லா
தொழுக்கமும்மறந்துபோயே,

ஒருவரையொருவர்கைம்மிக்,
கும்பர்தம்கோயில்சாம்பி,
அரிவையர்கற்பிற்சோம்பி,
அரண்களும்அழிய, ஆங்கே,

கலி[1]யிருள்பரந்தகாலைக்,
கனைவிருள்காக்கத்தோன்றும்
ஒலிகடல்அருக்கன்என்ன,
உலகுய்யவந்துதோன்றி,

[1] கேடு—வறுமை.

காப்பெலாம்உடையதானே
படைப்பதும்கடனுக்கொண்டு,
கோப்பெலாம்குலைந்தோர்தம்மைக்
குறியிலேநிறுத்திவைத்தே,

Reading—காப்பது கடனுக்கொண்டு. குலைந்த பாரை.

விரிபுனல்வேலைநான்கும்
வேதங்கள்நான்கும்ஆர்ப்பத்,
திரிபுவனங்கள்வாழ்த்தத்,
திருவபிடேகம்[1]செய்தே,

Reading—புவனங்கள் வாழ.

[1] பட்டாபிஷேகம்.

வேறு

அறைகழலரசர்அப்பொழு
தடிமிசைஅறுகெடுத்திட,
மறையவர்முடியெடுத்தனர்
மனுநெறிதலையெடுக்கவே.

குவிகை[1]கொடாசர்சுற்றிய
குரைகழல்அபயன்முத்தணி
கவிகையின்நிலவெறித்தது:
கலியெனும்இருள்ஒளித்ததே.

[1] அஞ்சலியத்தம்.

வேறு

நிழலில் அடைந்தனதிசைகள்.
நெறியில் அடைந்தனமறைகள்.
கழலில் அடைந்தனர் உதியர்[1]
கடலில் அடைந்தனர் செழியர்[2].

1 சேரர். 2 பாண்டியர்.

கருணையொடும்தனதுபய
கரம்[1]உதவும்பொருள்மழையின்,
அரணிய[2]மந்திரவனல்கள்[3]
அவைஉதவும்பெருமழையே.

3 ஓமாக்கினி.

1 உபயகரம்—இரண்டுகைகளும். 2 அரணி—தீக்கடைகோல்.
அரணிய—தீக்கடைகோலால் உண்டாக்கிய.

பரிசில்[1]சுமந்தனகவிகள்.
பகடு[2]சுமந்தனதிறைகள்.
அரசு[3]சுமந்தனகழல்கள்.
அவனிசுமந்தனபுயமும்.

1 வெகுமதி. 2 யானை. 3 அரசர்.

வேறு

விரித்தவாளுகிர்விழித்தழற்புலியை
மேலிருத்திஇமய[1]த்தினைத்
திரித்தகோலில்வளைவுண்டு:நீதிபுனை
செய்யகோ[3]லில்வளைவில்லையே.

1 இமயமலை. 3 செங்கோல்.

Reading—வெம்புலி.

கதங்களிற்பொருதிறைஞ்சிடாஅரசர்
கால்களிற்றளை[1]யும், நூல்களின்
பதங்களிற்றளை[2]யும்அன்றி, வேறொரு
பதங்களிற்றளைகள் இல்லையே.

1 விலங்கு. 2 செய்யுளுறுப்பில் ஒன்று.

மென்கலாபமடவார்கள்சீறடி
மிசைச்சிலம்பொலிவிளைப்பதோர்
இன்கலாம்விளைவதன்றிஎங்குமோர்
இகற்கலாம்[1]விளைவதில்லையே,

1 கொடுமை, பகை,

வேறு

வருசெருவொன்றின்மையினால், மற்போருஞ்
சொற்புலவோர்வாதிற்போரும்,
இருசிறைவாரண[1]ப்போரும், இகல்மதவா 1 கோழி.
ரண[2]ப்போரும்இனையகண்டே, 2 யானை.

[கலையிலும் கவியிலும் இசையிலும் முறையிலும் மறையிலும் பொழுது போக்கி யிருந்தவன்.]

காலாற்றண்டலையுழக்கும்காவிரியின்
கரைமருங்குவேட்டையாடிப்
"பாலாற்றங்கரைமருங்குபரிவேட்டை
யாடுதற்குப்பயணம்என்றே.

முரசறை"கென்றருளுதலும், முழுதுலகும்
ஒருநகருள்புகுந்ததொப்பத்,
திரைசெய்கடலொலியடங்கத்திசைநான்கிற்
படைநான்கும்திரண்டதாங்கே.

Reading – ஒருநாளில் பிறந்ததொப்ப. திசைநான்கும்.

அழகுமேல்அழகுபெறஅணியனைத்தும்
அணிந்தருளிக், கணிதநூலிற்
பழகினார்தெரிந்துரைத்தபழுதறுநாள்
பழுதற்றபொழுதத்தாங்கே,

வேறு

மற்றவெங்கடகளிற்றின்உதயக்கிரியின்மேல்
மதிகவித்திடஉதித்திடும்அருக்கன்எனவே
கொற்றவெண்குடைகவிப்பமிசைகொண்டுகவரிக்
குலமதிப்புடைகவித்தநிலவொத்துவரவே,

ஒருவலம்புரி[1]தழங்கொலிமுழங்கியெழவே, 1 வலம்புரிச்சங்கம்.
உடன்முழங்குபணிலம்[2]பலமுழங்கியெழவே, 2 சங்கம்.
பருவம்வந்துபலகொண்டல்கள்முழங்குமெனவே
பலவிதங்களொடுபல்லியம்[3]முழங்கியெழவே,

3 பலவாத்தியம்,

பொன்னின்மாலைமலர்மாலைபணிமாறுடனே
புவனிகாவலர்கடேவியர்கள்சூழ்பிடிவரச்
சென்னியாணையுடனாணையைநடத்தும்உரிமைத்
தியாகவல்லிநிறைசெல்வியுடன்மல்கிவரவே,
Reading—நிறைசெல்வமுடன்.

பிடியின்மேல்வருபிடிக்குலம்அனேகமெனவே
பெய்வளைக்கைமடமாதர்பிடிமீதின்வரவே,
முடியின்மேல்முடிநிரைத்துவருகின்றதெனவே
முறைசெய்மன்னவர்கள்பொற்குடைவிரித்துவரவே,

தென்றிசையினின்றுவடதிக்கின்முகம்வைத்தருளி,
முக்கணுடைவெள்ளிமலையோன்
மன்றில்நடமாடியருள்கொண்டுவிடைகொண்டதிகை
மாநகரிவிட்டருளியே,

விட்டவதிகைப்பதியினின்றுபயணம்பயணம்
விட்டுவிளையாடி, அபயன்,
வட்டமதிஒத்தகுடைமன்னர்தொழ, நண்ணினன்
வளங்கெழுவுகச்சிநகரே.

## 11. காளிக்குக் கூளி கூறியது.

அம்பொன்மேருஅதுகொல்இதுகொல்என்
றாயிரங்கதிர்வெய்யவன்ஐயுறும்
செம்பொன்மாளிகைத்தென்குடதிக்கினில்
செய்தசித்திரமண்டபம்தன்னிலே,

மொய்த்திலங்கியதாரகைவானின
முகட்டெழுந்தமுழுமதிக்கொப்பென
நெய்த்திலங்கியநித்திலப்பந்தரில்
நின்றுவெண்குடைஒன்றுநிழற்றவே,

அங்கண்ஞாலம்அனைத்தும்புயத்தில்வைத்
தாடகக்கிரி[1]யிற்புலிவைத்தவன்,
சிங்கவாசனத்தேறியிருப்பதோர்
சிங்கவேறெனச்செவ்விசிறக்கவே,

[1] பொன்மலை, மேரு.

வீணையாழ்குழல்தண்ணுமைவல்லவர்
வேறுவேறிவைநூறுவிதம்படக்
காணலாம்வகைகண்டனனீயினிக்
காண்டல்வேண்டும்எனக்கழல்போற்றவே,

தாளமும்செலவும்பிழையாவகை
தான்வகுத்தனதன்னெதிர்பாடியே
காளமும்களிறும்பெறும்பாணர்தம்
கல்வியிற்பிழைகண்டனன்கேட்கவே,

Reading — தாளமும் சதியும்.

வெங்களிற்றிலிழிந்தபின்வந்தடி
வீழ்ந்தமன்னவர்வெந்[1]நிடமுன்னிடு
தங்கள்பொற்குடைசாமரைஎன்றிவை
தாங்கள்தம்கரத்தால்பணிமாற[2]வே,

[1] வெந் (வெரிந்) — முதுகு. வெந்நிடுமுன் — திரும்புமுன். [2] இரட்ட.

தென்ன[1]ராதிநராதிபரானவர் [1] பாண்டியர்.
தேவிமார்கள்தன்சேடியராகவே,
மன்னராதிபன்வானவராதிபன்
வந்திருந்தனன்என்னஇருப்பவே,

மண்டலீக[1]ரும்மாநிலவேந்தரும் [1] தேசத்தையாளுமன்னர்.
வந்துணங்கு[2]கடைத்தலைவண்டைமன் [2] உணங்கு—வாடும்.
தொண்டைமான்முதல்மந்திரபாரகர்
சூழ்ந்துதன்கழல்சூடியிருக்கவே,

முறையிடத்தருமந்திரவேலையாள்
முன்வணங்கி, முழுவதும்வேந்தர்தம்
திறையிடப்புறம்நின்றனர்என்றலும்,
செய்கைநோக்கிவந்தெய்திநெருக்கவே,

[பலதேசத்தரசர்களும்.]

''எந்நகரங்களும்நாடும்எமக்கருள்
செய்தனை: எம்மையிடச்
சொன்னதனங்கள்கொணர்ந்தனம்'' என்றடி
சூடுகரங்களொடே,

வேறு

"ஆரம்இவை. இவைபொற்கலம்.
ஆனைஇவை. இவைஒட்டகம்.
ஆடலயம்[1]இவை. மற்றவை
யாதுமுடியொடுபொட்[2]டகம்.
ஈரமுடையனநித்திலம்
ஏறுநவமணிகட்டிய
ஏகவடம்இவை. மற்றவை
யாதும்விலையில்பதக்கமே.

[2] பொட்டு—ஓர் ஆபரணம்.

Reading—ஏழு கொடுகடைகட்டிய.

[1] ஆடல் அயம் – கூத்தாடும் குதிரைகள்.

"இவையும்இவையும்மணித்திரள்.
இனையஇவைகனகக்குவை.
இருளும்வெயிலும்எறித்திட
இலகுமணிமகரக்குழை.
உவையும்உவையும்இலக்கணம்
உடையபிடி. இவைபுட்பக
டியர்செய்கொடிஇவை. மற்றிவை
உரிமையரிவையர்பட்டமே.

"ஏறியருளஅடுக்கும்இந்
நூறுகளிறும். இவற்றெதிர்
ஏனைஅரசர்ஒரொத்தர்[1]ஓர்
ஆனைவிடுவரெனிற்புவி
மாறியருளஅவர்க்கிட
யாமும்இசைவம்"எனப்பல
மானவரசர்தனித்தனி
வாழ்வுகருதிஇருப்பரே.

[1] ஒரொருத்தர்.

வேறு

அரசர்அஞ்சலெனஅடியிரண்டும்அவர்
முடியின்வைத்தருளி, "அரசர்மற்
றுரைசெயும்திறைகள்ஒழியநின்றவரும்
உளர்கொல்"என்றருளுபொழுதிலே,

"கடலகந்திறைகொடடையவந்தரசர்
கழல்வணங்கினர்கள். இவருடன்
வடகலிங்கர்பதியவன்இரண்டுவிசை
வருகிலன்திறைகொ"டெனலுமே,

"எளியனென்றிடினும்வலியகுன்றரணம்
இடியநம்படைஞர்கடிதுசென்
றளியலம்பு[1]மதமலைகள்கொண்டணைமின்:
அவனையுங்கொணர்மின்"எனலுமே,

[1] அளி அலம்பு—வண்டுகள் ஒலிக்கும்.

இறைமொழிந்தளவில்"எழுகலிங்கமவை
எறிவன்"என்றுகழல்தொழுதனன்,
மறைமொழிந்தபடிமரபின்வந்தகுல
திலகன்வண்டைநகரரசனே.

Reading—நகரதிபனே.

வேறு

"அடையஅத்திசைப்பகைதுகைப்பன்"என்
றுசைகொண்டடல்தொண்டைமான்
"விடைஎனக்"கெனப்புலியுயர்த்தவன்
விடைகொடுத்தஅப்பொழுதிலே,

"கடல்கலக்கவோ? மலையிடிக்கவோ?
கடுவிடப்பொறி[1]கணபணப்[2]பணிப்
பிட[3]ரொடிக்கவோ? படைநினைப்"பெனப்
பிரளயத்தினிற்றிரள்பருக்கவே,

[1] பொறி—புள்ளி. [2] பணம்—படம். பணி—பாம்பு. [3] பணிப்பிடர்—ஆதி சேஷனுடைய பிடரி.

வேறு

"அகிலவெற்புமின்றனையானவோ?
அடையமாருதம்புரவியானவோ?
முகில்அனைத்தும்அத்தேர்களானவோ?
மூரிவேலைபோர்வீரரானவோ?

“பார்சிறுத்தலின்படைபெருத்தவோ?
படைபெருத்தலின்பார்சிறுத்ததோ?
நேர்செறுத்தவர்க்கரிதுநிற்பிடம்
நெடுவிசும்பலால்இடமும்இல்லையே”

எனஎடுத்துரைத்ததிசயித்துநின்
றினையவிண்ணுளோர்நினைய, மண்ணுளோர்
மனம்நடுக்குறப், புறமறைத்தவால்
மாதிரங்களைச்[1]சாதுரங்கமே.

[1] திக்குகள்.

வேறு

எழுந்ததுசேனை. எழலும்
இருந்ததுபாரின்முதுகு.
விழுந்தனகானும்மலையும்.
வெறுந்தரையானதிசைகள்.

அதிர்ந்தனநாலுதிசைகள்.
அடங்கினஏழுகடல்கள்.
பிதிர்ந்தனமூரிமலைகள்.
பிறந்ததுதூளிபடலம்.

நிலந்தருதூளிபருகி
நிறைந்ததுவானின்வயிறு.
வலந்தருமேகநிரைகள்
வறந்தனநீர்கள்சுவறி.

தயங்கொளிஓடைவரை[1]கள்
தருங்கடதாரைமழையின்,
அயங்[2]களின்வாயின்நுரையின்,
அடங்கினதூளிஅடைய.

[2] அயம் – குதிரை.

[1] ஓடைவரை – (ஓடை–நெற்றிப்பட்டம்) – யானை.

வேறு

எழுதூளிஅடங்கநடந்துதயத்
தேகுந்திசைகண்டதுமீளவிழும்
பொழுதேகல்ஒழிந்து, கடற்படைஎப்
பொழுதும்தவிராதுவழிக்கொளவே,

தண்ணாரின்மலர்த்திரள்தோளபயன்
தானேவியசேனைதனக்கடையக்
கண்ணாகியசோழனசக்கரமாம்
கருணாகரன்[1]வாரணமேற்கொளவே,

[1] பின்னால் கலிங்கராஜன் மந்திரி "அத்தண்டுகொண்டவன் சக்கரம் வந்ததே' என வருவதனால் இது விளங்கும்.

வேறு

மறிந்தோடிவடவரசர்சரியவென்று
வருமணிகப்பல்லவர்கோன்வண்டைவேந்தன்
எறிந்தோடைஇலங்குநடைக்களிற்றின்மேற்கொண்
டிரைவேட்டபெரும்புலிபோல்இகல்மேல்செல்ல,

வேறு

பாலாறுகுரைத்தலைபொன்முகலிப்
பழவாறுகடந்தெறிகொல்லியெனும்
நாலாறும்அகன்றொருபெண்ணையெனும்
நதியாறுகடந்துநடந்துடனே,

வயலாறுகடந்துமணிப்புனல்வாய்
மண்ணாறுவயங்கெழுகுன்றியெனும்
பெயலாறுபரந்துநிரைந்துவரும்
பேராறும்இழிந்ததுபிற்படவே.

வேறு

கோதாவிரிநதிமேலாறொடுகுளிர்
பம்பாநதியொடுசந்தப்பேர்
ஓதாவருநதியொடுகோதமையுடன்
ஒலிநீர்மலிதுறைபிறகாக,

கடையிற்புடைபெயர்கடலொத்தசுரர்
கலங்கும்பரிசுகலிங்கம்புக்
கடையப்படரெரிகொளுவிப்பதிகளை
அழியச்சூறைகொள்பொழுதத்தே,

Reading–"புடையொரு கடலொத்தமரர் ... கலங்கப்புக்.'

"கங்காநதியொருபுறமாகப்படை
கடல்போல்வந்தது. கடல்வந்தால்
எங்கேபுகலிடம்?எங்கேஇனிஅரண்?
யாதோஇதுவிதிவிதி"என்றே,

Reading—யாதோ அதிபதி.

"இடிகின்றனமதில், எரிகின்றனபதி,
எழுகின்றனபுகை, பொழிலெல்லாம்
படிகின்றன, குடிகெடுகின்றனம்என
வளைகின்றனபடைபடை"என்றே,

"உலகுக்கொருமுதல்அபயற்கிடுதிறை
உரைதப்பியதெமதரசே! எம்
பலகற்பனைதனைநினைவுற்றிலை. விடு
படைமற்றவன்விடுபடை"என்றே,

உரையிற்குழறியும்உடலிற்பதறியும்
ஒருவர்க்கொருவர்முன்முறையிட்டே
அரையிற்றுகில்விழஅடையச்சனபதி[1]
அடியிற்புகவிழுபொழுதத்தே,

[1] அரசன்.

வேறு

அந்தரமொன்றறியாதவடகலிங்கர்
குலவேந்தரதிபன்வீரம்
வெந்தறுகண்வெகுளியினால்மெய்விதிர்ப்பக்
கைபுடைத்துவியர்த்துநோக்கி,

"வண்டினுக்கும்திசையானைமதங்கொடுக்கும்
மலர்க்கவிகை[1]அபயற்கன்றித்
தண்டினுக்கும்எளியனோ?"எனவெகுண்டு
தடம்புயங்கள்குலுங்கநக்கான்.

[1] வண்டினுக்கும் மதங்கொடுக்கும் கவிகை என்றதனால் அவன் உலக முழுவதும் ஆண்டமை குறித்தபடி.

"கானரணும்மலையரணும்கடலரணும்
சூழ்கிடந்தகலிங்கர்பூமி
தானரணம்உடைத்தென்றுகருதாது
வருவதும்அத்தண்டுபோலும்."

### வேறு

என்றுகூறலும்,
கலிங்கர்மந்திரி
"ஒன்றுகூறுகேன்"
என்றுணர்த்துவான்.

அரசர்சீறுவ
ரேனும்அடியவர்
உரைசெயாதொழி
யார்கள்உறுதியே.

"ஏனைவேந்தை
எறியச்சயதரன்
தானையல்லது
தானவர்வேண்டுமோ?

"விட்டதண்டெழ
மீனவர்[1] ஐவரும்
கெட்டகேட்டினைக்
கேட்டிலைபோலுநீ.

"போரின்மேற்றண்
டெடுக்கப்புறக்கிடும்
சேரர்வார்த்தை
செவிப்பட்டதில்லையோ?

"வேலைகொண்டு
விழிஞம்அழித்ததும்
சாலைகொண்டதும்
தண்டுகொண்டல்லவோ?

"கண்டநாயகர்
காக்கும்நவிலையில்
கொண்டதாயிரம்
குஞ்சரமல்லவோ?

1 பாண்டியர்.

"உழுந்துதாமுடை
மண்டலம்தண்டினால்
இழந்தவேந்தர்
எனையரென்றெண்ணுகேன்.

"கண்டுகாண் உன்
புயவலிநீயும். அத்
தண்டுகொண்டவன்
சக்கரம்வந்ததே.

"இன்றுசீறினும்
நாளை அச்சேனைமுன்
நின்றபோழ்தினில்
என்னைநினைத்தியால்"

வேறு

என்றிவைஉரைத்தலும், "எனக்கெதிர்உரைக்கஇமை
யோர்களும்நடுங்குவர். புயக்
குன்றிவைசெருத்தொழில்பெறாதுநெடுநாள்மெலிவு
கொண்டபடிகண்டிலையால்.

"என்னுடையதோள்வலியும்என்னுடையவாள்வலியும்
யாதும்அறியாதுபிறர்போல்
நின்னுடையபேதைமையினால்உரைசெய்தாய். இது
நினைப்பளவில்வெல்லஅரிதோ?

"வேழம்இரதம்புரவிவெம்படைஞர்என்றினைய
நம்படைஞர்சென்றுகடுகச்
சோழகுலதுங்கன்விடவந்துவிடுதண்டினெதிர்
சென்றமர்தொடங்கு"கெனவே,

"பண்ணுகவயக்களிறு; பண்ணுகவயப்புரவி;
பண்ணுககணிப்பில்பலதேர்;
நண்ணுகபடைச்செருநர்; நண்ணுகசெருக்களம்
நமக்கிகல்கிடைத்த"தெனவே,

கலிங்கமவையேழினும்எழுந்ததொருபேரொலி.
கறங்குகடல்ஏழும்உடனே
மலங்கியெழும்எழிசையெனத்திசைதிசைப்புற
வருந்தொனிஎழுந்தபொழுதே.

### வேறு

துளைமுகமதமலை[1] அதிர்வனதொடுகடல்
பருகியமுகிலெனவே,
வளைமுகம்நுரைபுகவருபரிகடலிடை
மறிதிரைஎனவெழவே,

அலகிலொடலகெனகலகலஎனுமொலி
அலைதிரைஒலியெனவே,
உலகுகள்பருகுவதொருகடல் இதுவென
உடலியபடையெழவே,

விடபிகள்[1]மொடுமொடுவிசைபடமுறிபட
வெளிபடநெறிபடவே,
அடவிகள்பொடிபட, அருவிகள்அனல்பட,
அருவரைதுகள்படவே,

விசைபெறவிடுபரிஇரதமும்மறிகடல்
மிசைவிடுகலமெனவே,
இசைபெறஉயிரையும்இகழ்தரும்இளையவர்
எறிசுறவினமெனவே,

ஒருவர்தம்உடலினில்ஒருவர்தம்உடல்புகல்
உறுவதோர்படியுறவே,
வருபவர்மிடைபடநடவுவர்விரலிட
வழியிடைவெளியரிதே.

வெளியரிதெனமிடைமனுபரன்அநுபமன்
விடுபடையதனெதிரே
எளிதெனவிரைபெறுபுலியெனவலியிலொ
டெடுமெடும்எடுமெனவே,

[1] யானை.

[1] மரங்கள்.

## 12. போர் பாடியது.

எடுமெடுமெடுமெனஎடுத்ததோர்
இகலொலிகடலொலிஅவிக்கவே,
விடுவிடுவிடுபரிகரிக்குழாம்
விடும்விடும்எனுமொலியிசைக்கவே,

வெருவரவரிசிலைதெறித்தநாண்
விசைபடுதிசைமுகம்வெடிக்கவே,
செருவிடைஅவரவர்தெழித்ததோர்
தெழி[1]உலகுகள்செவிடெடுக்கவே, [1] பேரொலி.

எறிகடலொடுகடல்கிடைத்த[1]போல்
இருபடைகளும்எதிர்கிடைக்கவே,
மறிதிரைதிரையொடுமலைத்தபோல்
வருபரியொடுபரிமலைக்கவே,

[1] கிடைத்தல்—எதிர்த்தல், கிட்டுதல்.

கனவரையொடுவரைமுனைத்தபோல்
கடகரியொடுகரிமுனைக்கவே,
இனமுகிலொடுமுகில்எதிர்த்தபோல்
இரதமொடிரதமும்எதிர்க்கவே,

பொருபுலிபுலியொடுசிலைத்த[1]போல் [1] சிலைத்தல்—ஒலித்தல்.
பொருபடையொடுபடைசிலைக்கவே,
அரியினொடரியினம்அடர்ப்பபோல்
அரசரொடரசரும்அடர்ப்பவே,

விளைகனல்விழிகளின்முளைக்கவே,
மினலொளிகனலிடைஎறிக்கவே,
வளைசிலைஉரு[1]மெனஇடிக்கவே, [1] உரும், உருமு—இடி.
வடிகணைநெடுமழைபடைக்கவே,

குருதியின்நதிவெளிபரக்கவே,
குடையினம்நுரையெனமிதக்கவே,
கரிதுணிபடும்உடல்அடுக்கியே
கரையெனஇருபுடைகிடக்கவே,

வேறு

மருப்பொடுமருப்பெதிர்பொருப்பிவையெனப்பொரும்
மதக்கரிமருப்பினிடையே
நெருப்பொடுநெருப்பெதிர்சுடர்ப்பொறிதெறித்தெழ
நிழற்கொடிதழற்கதுவவே,

வேறு

எயிறுகளுடையபொருப்பைவலத்திடை
எதிரெதிர்இருபணையிட்டுமுறுக்கிய
கயிறுகள்இவையெனஅக்கரடக்கரி
கரமொடுகரமெதிர்தெற்றி[1]வலிக்கவே, [1] இறுக்கி.

முடுகியபவன[1]பதத்தில்உகக்கடை [1] பவனம்—வாயு
முடிவினின்உலகம்எனச்சுடர்விட்டெழு
கடுகியவடவனல்[2]த்திணைவைத்தது [2] வடவாமுகாக்கினி, ஊழித்தீ.
களமுறுதுரககணத்தின்முகத்திலே.

அலைபடைநிரைகள்நிரைத்தசெருக்களம்
அமர்புரிகளமெனஒப்பிலவிற்படை
தலைபொரஎரியும்நெருப்பினில்மற்றது
தழல்படுகழை[1]வனம்ஒக்கினும்ஒக்குமே. [1] மூங்கில்.

தழல்படுகழைவனம்எப்படிஅப்படி
சடசடதமரம்[1]எழப்பகழிப்படை [1] ஒலி
அழல்படுசுவையொடிழிச்சியகைச்சிலை
யதனொடுபகழிதொடுத்துவளைப்பரே.

அடுசிலைபகழிதொடுத்துவிடப்புகும்
அளவினில்அய[1]மெதிர்விட்டவர்வெட்டினர்.
உடல்சிலஇருதுணிபட்டன. பட்டபின்
ஒருதுணிகருதும்இலக்கைஅழிக்குமே.

[1] அயம் — குதிரை.

ஒருதுணிகருதும்இலக்கைஅழித்தன
உருவியபிறைமுகஅப்பகழி[1]த்தலை,
அரிதரிதிதுவும்எனப்பரிஉய்ப்பவர்
அடியொடுமுடிகள்துணித்துவிழுத்துமே.

[1] அர்த்த சந்திர முகாஸ்திரம்.

வேறு

விடுத்தவீரர் ஆயுதங்கள்
மேல்விழாமல்யந்திரத்
தெடுத்தவேலிபோல்கலிங்கர்
வட்டணங்கள்[1] இட்டவே. [1] பரிசைகள்.

இட்டவட்டணங்கள்மேல்
எறிந்தவேல்துறந்தவாய்
வட்டமிட்டநிணமதிற்கு
வைத்தபூழை[1] ஒக்குமே.
[1] கோபுரவாயிற் கதவிலிட்டுப் புகும் வழி.

வாளில்வெட்டிவாரணக்கை
தோளில்இட்டமைந்தர்தாம்
தோளில்இட்டுநீர்விடும்
துருத்தியாளர்ஒப்பரே.

வேறு

நேர்முனையில்தொடுத்தபகழிகள்
நேர்வளைவிற்சுழற்றும்அளவினில்
மார்பிடையில்குளித்தபகழியை
வார்சிலையிற்றொடுத்துவிடுவரே.

அசையவுரத்தழுத்தும்இவுளி[1]யை [1] குதிரை.
அடுசவள[2]த்தெடுத்தபொழுதவை [2] சவளம் – ஈட்டி.
விசையமகட்கெடுத்தகொடியென
விருதர்[3]களத்தெடுத்துவருவரே. [3] படைவீரர்.

இருதொடையிற்றிருக்குமறவர்கள்
எதிர்பொருகைக்களிற்றின்வலிகெட
ஒருதொடையைச்சுழற்றியெறிவர்கள்;
ஒருதொடையிட்டுவைப்பர்எறியவே.

வேறு

பொருநர்கள்சிலர்தம்உரத்தினிற்கவிழ்
புகர்முக[1]மிசையடியிட்டயிற்படை
விருதரைஅரிவர்சிரத்தை. அச்சிரம்
விழுபொழுதுடையெனும்அக்களிற்றையே.
[1] புகர்முகம்—யானை.

விடுபடைபெறுகிலமற்றெனச்சிலர்
விரைபரிவிழவெறிதற்குமுற்பட,
அடுகரிநுதல்படவிட்டகைப்படை
யதனையொர்நொடிவரையிற்பறிப்பரே.

வேறு

அலகில்செருமுகில்போலவண்டைய
ராசன் அரசர்கள்நாதன்மந்திரி
உலகுபுகழ்கருணாகரன்றன
தொருகையிருபணேவேழம்முந்தவே,

உபயபலமும்விடாதுவெஞ்சமம்
உடலுபொழுதினில்வாகை[1]முன்கொள,
அபயமிடுபடைஎழ்கலிங்கமும்
அடையஒருமுகமாய்முறிந்தவே.

[1] வாகைமாலை: வெற்றி.

அணிகள்ஒருமுகமாகஉந்தின.
அமரர்அமரதுகாணமுந்தினர்.
துணிகள்படமதமாமுறிந்தன.
துரகநிரையொடுதேர்முறிந்தன.

கரிகள்கருவிகளோடுசிந்தின.
கழுகுநரியொடுகாகம்உண்டன.
திரைகள்திசைமலையோடதிர்ந்தன.
திமிலகுமிலமெலாம்விளைந்தவே.

புரசை[1]மதமலைஆயிரம்கொடு
பொருவம்எனவரும்எழ்கலிங்கர்தம்
அரசன்உரைசெய்தஆண்மையும்கெட
அமரில்எதிர்விழியாதொதுங்கியே,

[1] யானைக் கழுத்தணி கயிறு.

அறியுமுழைகளிலோபதுங்கிய(து)?
அரியபிலனிடையோமறைந்தது?
செறியும்அடவியிலோகரந்தது?
தெரியஅரியதெனுஅடங்கவே,

எதுகொல்இது? இதுமாயைஒன்றுகொல்?
எரிகொல்? மறலிகொல்? ஊழியின்கடை
அதுகொல்? எனஅலறுவிழுந்தனர்
அலதிகுலதியொடேழ்கலிங்கரே.

வழிவர்சிலர்கடல்பாய்வர், வெங்கரி
மறைவர்சிலர், வழிதேடிவன்பிலம்
இழிவர்சிலர், சிலர்தூறுமண்டுவர்,
இருவர்ஒருவழிபோகலின்றியே.

ஒருவர்ஒருவரின்ஓடமுந்தினர்,
உடலின்இழிவினையோடஅஞ்சினர்,
வருவர்வருவர்எனுவிரைந்தனர்,
வாடிஅபயம்எனுநடுங்கியே.

மழைகள்அதிர்வனபோல்உடன்றன
வளவன்விடுபடைவேழம்என்றிருள்
முழைகள்நுழைவர்கள்போரில்இன்றுநம்
முதுகுசெயும்உபகாரம்என்பரே.

வேறு

ஒருகலிங்கம்
ஒருவன்அழித்தநாள்
ஒருகலிங்கம்[1] 1 சேலை.
இருவர்உடுத்ததே.

வேறு

அப்படிக்கலிங்கர்ஓட
அடர்த்தெறிசேனைவீரர்
கைப்படுகளிறும்மாவும்
கணித்துரைப்பவர்கள்யாரே!

ஒட்டறப்பட்டபோரில்
ஊர்பவர்தம்மைவீசிக்
கட்டறுத்தவர்போல்நின்று
கட்டுண்டகளிறநேகம்.

Reading – உகைப்பவர்தம்மை.

வரைசிலபுலிகளோடும்
வந்துகட்டுண்டவேபோல்
அரைசரும்தாமும்கட்டுண்
டகப்பட்டகளிறநேகம்.

வேறு

நடைவயப்பரிஇரதம்ஒட்டகம்
நவநிதிக்குலம்மகளிர்என்
றடையஅப்பொழுதவர்கள்கைக்கொளும்
அவைகணிப்பதும்அருமையே.

இவைகவர்ந்தபின்"எழுகலிங்கர்தம்
இறையையும்கொடுபெயர்தும்"என்
"றவன்இருந்துழிஅறிக"என்றனன்
அபயன்மந்திரிமுதல்வனே.

உரைகள்பிறபடும்அளவில்ஒற்றர்கள்
ஒலிகடற்படைகடிதுபோய்,
வரைகளிற்புடைதடவி, அப்படி
வனமிலை[1]ப்புரைதடவியே,

"கவடு[1]பெற்றிலம்அவனைமற்றொரு
கவடு[2]பெற்றனம். ஒருமலைக்
குவடுபற்றியநமதடற்படை
கொணாஅப்பரி"செனலுமே,

வேறு

[படையானது]

"எக்குவடும்எக்கடலும்எந்தக்காடும்
இனிக்கலிங்கர்க்கரணாவதின்றே. நாம்சென்
றக்குவடும்அக்கடலும்வளைந்துவெய்யோன்
அத்தமனக்குவடணையும்அளவிற்சென்றே,

"தோலாதகளிற்றபயன்வேட்டைப்பன்றித்
தொழுவடைத்துத்தொழுவதனைக்காப்பார்போல
வேலாலும்வில்லாலும்வேலிகோலி
வெற்பதனைவிடியளவும்காத்துநின்றே,

[1] மிலைதல்—அணிதல்.
[1] கவட்டை நெறி.
[2] மரக்கிளை.

"செம்மலையாம்ஒளிபடைத்ததியாதோ?என்றும்
செங்கதிரோன்உதயஞ்செய்துதயமென்னும்
அம்மலையோ இம்மலையும்"என்னத்தெவ்வர்
அழிகுருதியெதிர்பாக்கஅடுக்கும்போழ்தில்,

வரைக்கலிங்கர்தமைச்சேரமாசையேற்றி,
வன்னூறுபறித்தமயிர்க்குறையும்வாங்கி,
அரைக்கலிங்கம்உரியுண்டகலிங்கரெல்லாம்
அமணரெனப்பிழைத்தாரும்அநேகர் ஆங்கே.

வேடத்தால்குறையாதுமுந்நூலாக
வெஞ்சிலைநாண்மடித்திட்டு,'விதியிற்கங்கை
ஆடப்போந்தகப்பட்டேம்காந்தேம்'என்றே
அபிதானமிட்டுய்ந்தார்அநேகர் ஆங்கே.

குறியாகக்குருதிகொடியாடையாகக்
கொண்டுடுத்துப்போர்த்துப்[1]பால்குஞ்சிமுண்டித்
'தறியீரோசாக்கியரைஉடைகண்டா'லென்
றப்புறமெண்ணியமிடுவர்[2]அநேகர் ஆங்கே.

[1] துப்பு — ஆயுதம். [2] இயம் — ஒலி. சொல்.

'சேனைமடிகளங்கண்டேம்;திகைத்துநின்றேம்;
தெலுங்கரேம்'என்றுசிலகலிங்கர்தங்கள்
ஆனைமணியினைத்தாளங்கொட்டியாடி,
அடிப்பாணர்எனப்பிழைத்தார்அநேகர் ஆங்கே.

இவர்கள்மேல்இனியொருவர்பிழைத்தாரில்லை.
எழுகலிங்கத்தோவியர்கள்எழுதிவைத்த
சுவர்கள்மேல்உடலன்றிஉடல்களெல்லாம்
தொட்டீர்த்துப்பிடித்தறுத்தார்சூரராங்கே.

கடற்கலிங்கம்எறிந்துசயத்தம்பம்நாட்டிக்
கடகரியுங்குவிதனமுங்கவர்ந்துதெய்வச்
சுடர்ப்படைவாள்அபயனடிஅருளினோடும்
சூடினான்வண்டையர்கோன்தொண்டைமானே.

Reading—கடக்களிறும் வயமாவுந்தான்முன்கொண்டு.



# சோழமன்னர் சிலர்.



மஹாபாரத ராமாயண காலங்களில் தமிழ்நாடு மூன்று பிரிவினதாய் இருந்தது. சேர சோழ பாண்டிய மன்னர்கள் பரம்பரையாக ஒவ்வொருவர் ஒவ்வொரு பிரிவை ஆட்சிசெய்துவந்தனர். சங்ககாலத்து நூல்களில் இவர்களில் பலர் புகழ்ப்பெற்றிருக்கின்றனர். அக்காலத்துச் சோழர்களில் சிறப்புற்றிருந்தவர் கரிகாலன், பெருநற்கிள்ளி, கோச்செங்கண்ணன் என்போர்.

இடையில் கி. பி. 4-ம் நூற்றாண்டு முதல் 9-ம் நூற்றாண்டு வரையில், பல்லவராஜர்கள், காஞ்சீபுரம் மல்லாபுரம் முதலிய இடங்களை ராஜதானியாகக் கொண்டு, மேம்பட்டிருந்தனர். அக்காலத்தில் சோழர்கள் பல்லவர்களுக்குக் கீழே சிற்றரசர்களாய்க் காலங்கழித்தனர். பின்னர் **விஜயாலயன்** என்னும் சோழன் தஞ்சாபுரியைப் பிடித்து அதைத் தனக்கு ராஜதானியாக்கிக்கொண்டான். அவன் பிள்ளை ஆதித்தன். ஆதித்தன் மகனான **பராந்தகன் I.** (கி. பி. 905-7) 10-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரசுபெற்று, நாற்பது வருஷகாலம் ராஜ்யத்தைப் பெருக்கிச் சீர்செய்து அரசாண்டிருந்து, 947-ல் பரலோகமடைந்தான். இவன்காலத்தில் சோழராஜ்யம் பிரபலம் அடையத் தலைப்பட்டது.

பராந்தகன் பரம்பரையில் நல்ல கீர்த்தி அடைந்தவர்கள் **ராஜராஜனும்** அவன் மகன் **பரகேசரிவர்மன்** என்னும் முதலாம் **ராஜேந்திரனும்**. ராஜராஜன் (985) கல்விமான்களை ஆதரித்தவன். பிரஹதீசுரம் என்கிற பெரிய சிவாலயத்தைக் கட்டினவன் அவனே. திருமுறைகண்ட சோழனும் அவனே. முதலாம் ராஜேந்திரன் 1012-ல் சிங்காதனம் ஏறினான். கங்கை கொண்ட சோழன் அவனே. இவனுக்கு நான்கு பிள்ளைகள் உண்டு. முதல் குமாரன் ராஜாதிராஜன் (1018). இரண்டாங் குமாரன் இராஜேந்திரதேவன் (1052). மூன்றாங் குமாரன் வீரராஜேந்திரதேவன் (1062). நான்காவது பெண்; அவள் பெயர் அம்மங்காதேவி. அவளைச் சளுக்க மன்னனான முதலாம் ராஜராஜன் மணம்புரிந்தான். இந்த அம்மங்காதேவி வயிற்றில் பிறந்தவனே முதலாம் **குலோத்துங்கன்**. இந்தக் குலோத்துங்கன் முதலாம் ராஜேந்திரனுடைய இரண்டாவது பிள்ளையின் மகளான **மதுராந்தகியை** மணஞ்செய்துகொண்டான். இவன் இளமையில் வேங்கைநாட்டுக்கு இளவரசனாக இருந்தவன்.

வீரராஜேந்திரனுக்கு அதிராஜேந்திரன் என்று ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும் உண்டு. அந்தப் பெண் குந்தளராஜனான விக்கிரமாதித்தனுக்கு மணஞ்செய்து கொடுக்கப்பட்டாள். வீரராஜேந்திரன் வேங்கைநாட்டை

ஜயம்பண்ணி முதலாம் குலோத்துங்கனுடைய சிற்றப்பனுகிய விஜயாதித்தனை அந்த நாட்டை ஆளும்படி நியமித்தான். அதனுல் இளவரசனுகிய குலோத்துங்கன் நாடிழந்து துன்புற்றிருந்தான்.

வீரராஜேந்திரனுக்குப் பின் அவன் மகனுன அதிராஜேந்திரன் சிங்காதனம் ஏறினுன். அப்போது குலோத்துங்கன் சோழராஜ்யத்தின்மீது படையெடுத்துச்சென்று அதிராஜேந்திரனைக் கொன்று சோழராஜ்யத்துக்கு அதிபதியானுன். இதைக் கேள்வியுற்றுக் குந்தளராஜனுன விக்கிரமாதித்தன் இவனைத் தண்டிக்கவேண்டுமென்று வந்து சண்டைசெய்து தோல்வியடைந்து திரும்பிவிட்டான். குலோத்துங்கன் தந்தைவழியில் சளுக்கன்: தாய்வழியில் சோழன். இவனுக்கு அநபாயன், அபயன், கரிகாலன், ஜயதரன் என்று பல மறுபெயர்கள் உண்டு.

அம்மான் பெண்ணுகிய மதுராந்தகி இவனுக்கு முதன் மனைவி. தீனசிந்தாமணி என்று அவளுக்கு வேறொரு பெயரும் உண்டு. இவளையன்றி, இவனுக்குத் தியாகவல்லி, ஏழிசைவல்லபி என வேறு இரு மனைவியரும் உண்டு. மதுராந்தகிக்குப்பின் தியாகவல்லி பட்டமஹிஷியானுள். இவன் 1070 முதல் 1118–9 வரையில் நாற்பத்தொன்பது வருஷம் அரசாண்டான்.

முதலில் இவன் வடக்கில் வெற்றிகொண்டு, பின்பு பாண்டிய சேர தேசங்களையும் வென்றுன். சிலகாலத்துக் கப்பால், கலிங்கத்தரசன் சில வருடம் கப்பம் கட்டாமையால் தன் தண்டத்தலைவனுன கருணைகரத் தொண்டைமானையும் தன் மகன் விக்கிரமனையும் அனுப்பிக் கலிங்கத்தை வென்று தன்னுட்டுடன் சேர்த்துக்கொண்டான்.

நெடுங்காலமாக வழங்கிவந்த சுங்கவரியைத் தவிர்த்ததனுல் இவனுக்குச் "சுங்கந்தவிர்த்த சோழன்" என்றொரு பெயர் வழங்கலுற்றது. நிலவரியை ஒழுங்குசெய்யும்படி தன் நாட்டிலுள்ள பயிர்நிலங்களையெல்லாம் கிரமமாக அளப்பித்தான். காடுகளை வெட்டிப் பட்டணங்களை உண்டாக்கினுன். பல ஏரிகளைக் கட்டினுன். பேரம்பலத்தைப் பொன்வேய்ந்தான். அதிகம் சைவப் பற்றுள்ளவனுகையால் இவனுக்குத் திருநீற்றுச்சோழன் என்றும் ஒருபெயர் உண்டு. கல்விமான்களை ஆதரித்தவனேயாயினும், வைஷ்ணவத் துவேஷம் பாராட்டியிருந்தான்; மற்ற மதங்களிடத்தில் அவ்வளவு துவேஷம் பாராட்டவில்லை. சேக்கிழார் பெரியபுராணம் பாடியது இவன் காலமே.

இவனுக்கு மக்கள் எழுவர். அவருள் பட்டம்பெற்றவன் விக்கிரமன். இவன் 1110–ல் இளவரசாக நியமனம் பெற்றுன். இவனுடைய ஆட்சி பதினெட்டு வருஷம் நடந்தது. பிரதிநிதியாய் வேங்கைநாட்டை ஆண்டிருந்தபோது தெலுங்கவீமன் என்னும் ஓரரசனை ஜயித்தான். இவனுக்குத் தியாகசமுத்திரம் என்றும் அகளங்கன் என்றும் மறுபெயர்கள் உண்டு.

இவனுக்கு மனைவியர் முக்கோக்கிழானடி, திரிபுவன முழுதுடையாள், தரணி முழுதுடையாள் என்பார் மூவர். வைஷ்ணவமதத்தில் அபிமான முள்ள சோழர்களில் இவன் ஒருவன். ஸ்ரீரங்கத்தில் அகளங்கன் திருவீதி திருவிக்கிரமன் திருவீதி என்று இரண்டு திருவீதிகள் கட்டுவித்தான். இவன்காலத்தில் பெரிய க்ஷாமம் வந்தது.

விக்கிரமசோழனுடைய மகன் இரண்டாம் குலோத்துங்கன். இவனுக்குக் குமாரகுலோத்துங்கன் என்றும் ஒரு பெயர் வழங்கும். இவன் மகன் இரண்டாம் ராஜராஜன்.

கலிங்கத்துப்பரணி என்கிற பிரபந்தம் முதலாம் குலோத்துங்கனை நோக்கியது.

ஒட்டக்கூத்தர் இயற்றியனவாக வழங்குவன மூவருலா. அவைகளை முறையே விக்கிரமசோழனையும் இரண்டாம் குலோத்துங்கனையும் இரண்டாம் ராஜராஜனையும் புகழ்ந்து பாடியவை.

முதலாம் குலோத்துங்கன் முதலானவர்களைப்பற்றிய அகவல் பாக்களாலான மெய்க்கீர்த்திகள் சில, சிலாலேகைகளின் முகப்பில் கண்டவை. அவைகளை அக்காலத்துப் புலவர் பாடிக் கொடுத்திருக்கவேண்டும்.

"சொற்சீ ரடியாற் றொழிற்படு புகழை
வேந்தர்பாற் கூறின் மெய்க்கீர்த்தி யாகும்"

இக்காலத்தில் மிக்க சிறப்புற்றிருந்த புலவர்கள் சேக்கிழார், ஜயங்கொண்டார், கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி என்போர்.



# மெய்க்கீர்த்தி.

## முதல் குலோத்துங்கன்.

புகழ்சூழ்ந்த புணரி அகழ்[1]சூழ்ந்த புவியில் [1] கடலாகிய அகழி.
பொன்னேமி[2] அளவும் தன்னேமி நடப்ப, [2] சக்கரவாளகிரி.
விளங்கு சயமகளை இளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்ரம[3]த் தொழிலால் [3] பராக்கிரமம்.
புதுமணம் புணர்ந்து, மதவரை[4] யீட்டம் [4] யானை.
வயிரா கரத்து வாரி அயின்முனைக்
குந்தள அரசர்[5] தந்தளம் இரிய [5] மேலைச்சளுக்கியர்.
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித், தென்றிசைத்
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவை
தனிமையும் தவிர வந்து புனிதத்
திருமணி மகுடம் உரிமையிற் சூடித்,
தன்னடி யிரண்டும் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட, முன்னை
மனுவாறு பெருகக், கலியாறு வறப்பச்,
செங்கோல் திசைதொறும் செல்ல, வெண்குடை
இருநில வளாகம் எங்கணும் தணுது
திருநிழல் வெண்ணிலாத் திகழ, ஒருதனி
மேருவிற் புலிவிளை யாட, வார்கடல்
தீவாந் தரத்துப் பூபர்திறை விடுத்த
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப, விலங்கிய
தென்னவன் கருந்தலை பருந்தலைத் திட[6]த்தன் [6] பருந்து அலைத்திட.
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப, இந்நாள்
பிற்குலப் பிறை[7]போல் நிற்பிழையா மெனும் [7] தேய்பிறை.
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்கை
வில்லெதிர் கோடா வேள்புலத் தரசர்
அளத்தியில் இட்ட களிற்றின நீட்டமும்

பட்டவெம் பரியும் விட்டதன் மானமும்
கூறின வீரமும் கிடப்ப, ஏறின
மலைகளும் முதுகு நெளிப்ப, இழிந்த
நதிகளும் சுழன்றுடைந் தோட, விழுந்த
கடல்களும் தலைவிரித் தலமரக், குடதிசைத்
தந்நாள் உகந்து தானும் தானையும்
பன்னாள் இட்ட பலபல முதுகும்
பயத்தெதிர் மாறின ஜயப்பெருந் திருவும்
பழிஉகந்து கொடுத்த புகழின் செல்வியும்
வாளார் ஒண்கண் மடந்தையர் ஈட்டமும்
மீளாது கொடுத்த வெங்கரி நிரையும்
கங்கமண் டலமும் சிங்கண மென்னும்
பாணி[1]யிரண்டும் ஒருவிசைக் கைக்கொண், 1 நாடு.
டீண்டிய புகழொடு பாண்டி மண்டலம்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள
வருபரித் தரங்கமும் பொருகரிக் கலங்களும்
தந்திர வாரி[2]யும் உடைத்தாய் வந்து 2 சேதுசமுத்திரம்.
வடகடல் தென்கடல் படர்வது போலத்
தன்பெருஞ் சேனையை ஏவிப், பஞ்சவர்
ஐவரும் பொருத மொய்க்களத் தஞ்சி
வெரிநளித்[3] தோடி அரணெனப் புக்க 3 முதுகுகாட்டி.
காடறத் துடைத்து நாடடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொற்றை[4] வெஞ்சுரம் ஏற்றிக், கொற்ற 4 சிறுமலை.
விஜய ஸ்தம்பம் திசைதொறும் நிறுத்தி, [சிறை இடம்.
முத்தின் சிலாப[5]மும் முத்தமிழ்ப் பொதியிலும் 5 முத்துக்குளிக்
மத்தவெங் கரிபடு மையச் சைய[6]மும் 6 சையமலை.
கன்னி[7]யும் கைக்கொண் டருளித் தென்னாட் 7 கன்னியாகுமரி.
டெல்லை காட்டிக், குடமலை நாட்டுள
சாவே[8] றெல்லாம் தனிவிசும் பேற 8 சாசத்துணிந்தவர்.
மாவே றியதன் வரூதினி[9]த் தலைவரைக் 9 சேனை.
குறுகலர் குலையக் கோட்டா றுட்பட
நெறிதொறும் நிலைகளிட் டருளித், திறல்கொள்

ஆரமும் திருப்புயத் தலங்கலும் போல
வீரமும் தியாகமும் விளங்கப் பார்தொழச்
சிவனிடத் துமையெனத் தியாக வல்லி
உலக முடையாள் இருப்ப, அவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலகம்
ஏழிசை வல்லபி ஏழுல குடையாள்
வாழிய வமர்ந்தினி திருப்ப, ஊழிய
திருமால் ஆகத்துப் பிரியா தென்றும்
திருமக ளிருந்தென வீரசிம் மாசனத்
துலகமுடை யாளோடும் வீற்றிருந் தருளிய
கோவிராஜகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர் *

## விக்கிரம சோழன்.

பூமாலை மிடைந்து பொன்மாலை திகழ்தரப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திருநில மடந்தையொடு ஜயமக ளிருப்பக்,
கனவரை மார்பம் தனதெனப் பெற்றுத்
திருமகள் ஒருதனி இருப்பக், கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத், திசைதொறும்
திகிரியொடு செங்கோல் நடப்ப, அகில
புவனமும் கவிப்பதொரு புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக், கருங்கலி
ஒளித்துவன் பிலத்திடைக் கிடப்பக், குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கல்மிசை ஏறவும்
கலிங்க பூமியைக் கனையெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை அடிப்படுத் தருளித், தென்றிசைத்
தருமமும் தவமும் தானமும் தழைப்ப
வேதமும் மெய்ம்மையும் ஆதியுகம் போலத்

* South Indian Inscriptions, Vol. III, page 160 *et seq.*

தலைத்தலை சிறப்பவந் தருளி, வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட
நிறைமணி மகுடம் முறைமையிற் சூடி,
மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பித் தனித்தனி பார்த்து
மண்முழுதுங் களிப்ப மனுநெறி வளர்த்துத், தன்
கோயிற் கொற்ற வாசற் புறத்து
மணிநா வொடுங்க, முரசுகள் முழங்க,
விசயமும் புகழும் மென்மேல் ஓங்க,
வாழி வாழிஇம் மாநிலம் காக்கத்
திருமணிப் பொற்றேட் டெழுதுபத் தாண்டு
வருமுறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் பயிலும்
செம்பொன்அம் பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாசல் கூடசா லைகளும்
உலகு வலங்கொண் டொளிவிளங்கு நேமிக்
குலவரை உதயக் குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் வேய்ந்து, பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து,
இருநிலம் தழைப்ப இமையவர் களிப்பப்
பெரிய திருநாள் பெரும்பெயர் விழாஎனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்
அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தர்
இம்பர் வாழ எழுந்தருள் வதற்குத்
திருத்தேர் கோயில் செம்பொன் வேய்ந்து,
பருத்திரள் முத்தின் பயில்வடம் பரப்பி,
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் பெயரால் செய்துசமைத் தருளிப்,
பைம்பொற் குழித்த பரிகல முதலாச்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சிந்நமும்
அளவில் லாதன ஒளிபெற அமைத்துப்,
பத்தாம் ஆண்டில் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற ஆதித்த வாரத்துத்

திருவளர் மதியின் திரயோதசிப் பக்கத்து
இன்ன பலவும் இனிதுசமைத் தருளி,
ஒருகுடை நிழற்கீழ்த் தலமுழுதும் களிப்பச்,
செழியர்வெஞ் சுரம்புகச், சேரலர் கடல்புக,
அழிதரு சிங்களர் அஞ்சிநெஞ் சலமரக்,
கங்கர் திறையிடக், கன்னடர் வெருநிடக்,
கொங்கர் ஒதுங்கக், கொங்கணர் சாய,மற்
றெத்திசை மன்னரும் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி உரிமையில் இறைஞ்ச,
அங்கவன் மகிழும் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலகம் தியாக பதாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வநிதை
திரிபுவன முழுதுடை யாளவன் றிருவுளத்
தருள்முழுது முடையா ளெனவுட னிருப்ப,
ஊழிய அங்நெடு மாலா கத்துப்
பிரியா தென்றும் திருமகள் இருந்தென
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணிய கற்பின் தரணிமுழு துடையாள்
இவன்திரு மார்பத் தருளொடும் இருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துத்
திரிபுவன முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீவிக்கிரம சோழ தேவர். *

## இரண்டாங் குலோத்துங்கன்.

பூமன்னு பூத்த ஏழுல குந்தாம்
முன்செய் தவத்தால் பரிதிவழித் தோன்றி,
நெடுமால் இவனெனச் சுடர்முடி சூடி,
இருநில மகளை உரிமையிற் புணர்ந்து,

.... .... .... ....

ஒருகுடை நிலவும் பொருபடைத் திகிரி
வெயிலும் கருங்கலி இருளினைத் துரப்ப,
நீடுபல் ஊழி ஏழ்கடற் புறத்தினும்
கோடாச் செந்தனிக் கோல்இனி துலாவ,
மீனமும் சிலையும் சிதைத்து வானுயர்

* South Indian Inscriptions, Vol. III, page 182 *et seq.*

பொன்னெடு மேருவிற் புலிவீற் றிருப்ப,
உம்பர் யானை ஓரெட் டினுக்குத்
தம்பம் என்னத் தனித்தனி திசைதொறும்
விசய ஸ்தம்பம் நிற்ப,
பசிபகை யானது தீங்கு நீங்க,
மன்னுயிர் தழைப்ப, மனுவாறு விளங்க,
மாதவர் தவமும் மங்கையர் கற்பும்
ஆதி அந்தணர் ஆகுதிக் கனலும்
மீதெழு கொண்டல் வீசுதண் புனலும்
மேதினியில் வளரும் சாதி ஒழுக்கமும்
நீதி அறமும் பிறழாது நிகழப்,
பாவும் பழனப் பரப்பும் பணைக்கை
மாவும் அல்லது வன்றளைப் படுதல்
கனவிலும் காண்டற் கரிதென, வருநதிப்
புடையினும் பல்வேறு புள்ளினும் அல்லது
சிறையெனப் படுதல் இன்றி, நிறைபெருஞ்
செல்வமோ டவனி வாழப், பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னர் சேரலர்
சிங்கணர் கொங்கணர் சேதிகர் திரிகர்த்தர்
வங்கர் அங்கர் வத்தவர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகயர் சீனரென்
றறைகழல் வேந்தரும் அல்லா அரசரும்
முறைமையில் வருநிதித் திறைகொணர்ந் திறைஞ்ச,
அம்பொன் மலர்க்கொடிச் செம்பியன் கிழானடி
ஒருமருங் குடனமர்ந் திருப்ப, அருள்புரி
சிமயப் பொற்கொடி இமயப் பாவையும்
சிவனும் போலப் புவனமுழு துடையாள்
இவன்திரு மணிமார்பத்(து)
உலகமுழு துடையாள் எனவுட னிருப்பச்,
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந் தருளிய
ராஜகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
குலோத்துங்க சோழ தேவர்



# விக்கிரமசோழ தேவருலா.



இந்தப் பிரபந்தத்தை இயற்றினவர் ஒட்டக்கூத்தர் என்பவர். இவருக்குக் கூத்தன் கவிச்சக்கரவர்த்தி என ஒரு பட்டம் வழங்குவ துண்டு. இவர் கைக்கோள மரபைச் சேர்ந்தவர். இவருடைய கவித்திறமை "கோவையுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன்" என்பதால் விளங்கும்.

விக்கிரமன், குலோத்துங்கன் II, ராஜராஜன் II என்னும் மூவரையும் தனித்தனியாகப் புகழ்ந்து பாடிய உலாக்கள் மூன்றும் இவ்வாசிரியர் செய்தனவே. குலோத்துங்கனுக்கு இவர் ஆசிரியர்; அவன் முடிதரித்த போது ஒட்டக்கூத்தர் அவனைப் புகழ்ந்து

"ஆடுங் கடைமணி நாவசையாமல் அகிலமெங்கும்
நீடுங் குடையைத் தரித்தபிரான் இந்த நீணிலத்தில்"

என்று இரண்டடியைச் சொன்னவளவில், அரசன்

"பாடும் புலவர் புகழ்ஒட்டக்கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்கச் சோழனென் றேயெனைச் சொல்லுவரே"

என்று பாட்டை முடித்ததாகப் புலவர் கன்னபரம்பரை வழங்கிவருகின்றது. கம்பநாடரும் குமாரகுலோத்துங்கன் என வழங்கும் இவ்வரசன் காலத்தவர் என்பதே தற்காலம் உறுதிப்பட்டிருக்கின்றது.

இவர் ராமாயணத்தில் கம்பர் பாடாதுவிட்ட உத்தரகாண்டம் மாத்திரம் பாடியுளர். கைக்கோளர் சிறப்பை உணர்த்தும் ஈட்டியெழுபதும் குலோத்துங்கச் சோழன் கோவையும் இவருடைய ஏனை நூல்களில் முக்கியமானவை.

உலா என்பது தமிழிலுள்ள பிரபந்த வகைகளில் ஒன்று. அது தக்க பருவமுற்ற தலைமகனைக் குலம் குடிப்பிறப்பு மங்கலம் பரம்பரை முதலியவற்றான் இன்னானென்பது தோன்றக் கூறி, அவன் மாதர் நெருங்கிய வீதியிடத்து உலா வந்ததாக நேரிசைக் கலிவெண்பாவால் பாடுவது.

சீர்தந்த தாமரையாள் கேள்வன் திருவுருவக்
கார்தந்த வுந்திக் கமலத்துப்—பார்தந்த
ஆதிக் கடவுள் திசைமுகனும் ஆங்கவன்றன்
காதற் குலமைந்தன் காசிபனும்—

... ... ... ...

தெள்ளருவிச்
சென்னிப் புலியே றிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதியும்—இன்னருளின்
மேதக்க பொய்கை கவி[1]கொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திபனும்—ஈதல்லால்
எண்கொண்ட தொண்ணூற்றின் மேலும் இருமூன்று
புண்கொண்ட வென்றிப் புரவலனும்—கண்கொண்டு
கோதிலாத் தேவர் குனிக்குந் திருமன்றம்
காதலாற் பொன்வேய்ந்த காவலனும்—தூதற்காய்ப்
பண்டு பகலொன்றில் ஈரொன்பது சுரமும்
கொண்டு மலைநாடு கொண்டோனும்—தண்டினால்
கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியனும்—வங்கத்தை
முற்று முரணடக்கி மும்மடிபோய்க் கல்யாணம்
செற்ற தனியானைச் சேவகனும்—பற்றலரை
வெப்பத் தடுகளத்து வேழங்க ளாயிரமும்
கொப்பத் தொருகளிற்றாற் கொண்டோனும்[2]—அப்பழநூல்
பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியால்
ஆடரவப் பாயல் அமைத்தோனும்[3]—கூடலார்
சங்கமத்துக் கொள்ளும் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனும்—அங்கவன்பின்
காவல் புரிந்தவனி காத்தவனும் என்றிவர்கள்
பூவலய முற்றும் புரந்ததற்பின்—மேவலர்தம்
சேலைத் துரந்து சிலையைத் தடிந்திருகால்
சாலைக் கலமறுத்த தண்டினான்—மேலைக்
கடல்கொண்டு கொங்கணமுங் கன்னடமும் கைக்கொண்
டடல்கொண்ட மாராட் டரசை—அடலை

[1] களவழி நாற்பது. [2] விஜயராஜேந்திரன். [3] இராஜமஹேந்திரன்.

இறக்கி வடவரையே எல்லையாத் தொல்லை
மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி—அறத்திகிரி
வாரிப் புவனம் வலமாகத் தந்தளிக்கும்
ஆரிற் பொலிதோள் அபயற்குப்—பார்விளங்கத்
தோன்றிய கோன் **விக்கிரம சோழன்** தொடைத்தும்பை
மூன்று முரசு முகின்முழங்க—நோன்றலைய
மும்மைப் புவனம் புரக்க முடிசூடிச்
செம்மைத் தனிக்கோல் திசையளப்ப—

... ... ... ...

நீராழி யேழும் நிலவாழி யேழுந்தன்
போராழி யொன்றால் பொதுநீக்கி—

... ... ... ...

உறைகின்ற நாளில் ஒருநாள்—

... ... ... ...

எய்திய பள்ளி யினிதெழுந்து—பொய்யாத
பொன்னித் திருமஞ் சனமாடிப் பூசுரர்கைக்
கன்னித் தளிரறுகின் காப்பணிந்து—முன்னை
மறைக்கொழுந்தை வெள்ளி மலைக்கொழுந்தை மௌலிப்
பிறைக்கொழுந்தை வைத்த பிரானைக்—கறைக்களத்துச்
செக்கர்ப் பனிவிசும்பைத் தெய்வத் தனிச்சுடரை
முக்கட் கனியை முடிவணங்கி—மிக்குயர்ந்த
தானத் தொழின் முடித்துச் சாத்துந் தகைமையன
மாநற் கலன்கள் வரவருளி—

[அவற்றை அணிந்து உடைவாள் தரித்துக் கோயிலினின்றும் வெளிவந்து பட்டத்துயானையின்மீது ஏறி]

கொற்றக் கவிகை நிழற்றக் குளிர்ந்திரட்டைக்
கற்றைக் கவரிகளின் காலசைப்ப—ஒற்றை
வலம்புரி யூத வளைக்குல மார்ப்பச்
சிலம்பு முரசம் சிலம்பப்— புலம்பெயர்ந்து
வாட்படை கொட்ப மறமன் னவர்நெருங்கக்
கோட்புலிக் கொற்றக் கொடியோங்கச்,—சேட்புலத்துத்
தென்னரு மாளுவரும் சிங்களரும் தெற்றுதகை
மன்னரும் தோற்க மலைநாடு—முன்னங்

குலையப் பொருதொருநாட் கொண்ட பரணி
மலையத் தருந்தொண்டை மானும்,—பலமுடிமேல்
ஆர்க்கும் கழற்கால் அனகன் றனதவையில்
பார்க்குமதி மந்திர பாலகரில்—போர்க்குத்
தொடுக்குங் கமழ்தும்பை தூசிஞெடும் சூடக்
கொடுக்கும் புகழ்முனையர் கோனும்,—முடுக்கரையும்
கங்கரையும் மாராட் டரையும் கலிங்கரையும்
கொங்கரையும் ஏனைக் குடகரையும்—தங்கோன்
முனியும் பொழுது முரிபுருவத் தோடு
குனியும் சிலைச்சோழக் கோனும்,—சனபதிதன்
தோளும் கவசமும் சுற்றமும் கொற்றப்போர்
வாளும் வலியும் மதியமைச்சும்—நாளுமாய்
மஞ்சைக் கிழித்து வளரும் பெரும்புரிசைக்
கஞ்சத் திருமறையோன் கண்ணனும்,—வெஞ்சமத்துப்
புல்லாத மன்னர் புலாலுடம்பு பேய்வாங்க
ஒல்லாத கூற்றம் உயிர்வாங்கப்—புல்லார்வந்
தாங்கு மடமாதர் தத்தம் குழைவாங்க
வாங்கும் வரிசிலைக்கை வாணனும்,—வேங்கையினும்
கூடார் விழிஞத்தும் கொல்லத்தும் கொங்கத்தும்
ஓடா விராட்டத்தும் ஒட்டத்தும்—நாடா
தடியெடுத்த வெவ்வே றரசிரிய வீரக்
கொடியெடுத்த காலிங்கர் கோனும்,—கடியரணச்
செம்பொற் பதணச் செறியிஞ்சிச் செஞ்சியர்கோன்
கம்பக் களியானைக் காடவனும்,—வெம்பிக்
கலக்கிய வஞ்சக் கலியாணர்ப் போரில்
விலக்கிய வேணாடர் வேந்தும்,—தலைத்தருமம்
வாரிக் குமரிமுதல் மந்தா கினியளவும்
பாரித் தவனனந்த பாலனும்,—பேரமரில்
முட்டிப் பொருத வடமன்னர் மும்மதிலு
மட்டித்த மால்யானை வத்தவனும்,—மட்டையெழக்
காதிக் கருநாடர் கட்டாரணம் கட்டழித்த
சேதித் திருநாடர் செல்வனும்,—பூதலத்து
முட்டிய தெவ்வர் சடைகட்ட மொய்கழற்கால்
கட்டிய காரானைக் காவலனும்,—ஒட்டிய

மான வரசர் இரிய வடகலிங்கத்
தானை துணித்த வதிகனும்,—மீனவர்தம்
கோட்டாறும் கொல்லமும் கொண்ட குடநுளம்பன்
வாட்டா மதயானை வல்லவனும்,—மோட்டரணக்
கொங்கை[1]க் குலைத்துக் குடகைக் குவடொடித்த
செங்கைக் களிற்றுத் திரிகத்தனும்,—அங்கவன்பின்
வல்லவனும் கோசலனும் மாகதனும் மாளுவனும்
வில்லவனும் கோளனும் மீனவனும்—பல்லவனும்
என்னும் பெயரி னிகல்வேந்தர் மண்டலிகர்
முன்னும் இருமருங்கும் மொய்த்தீண்ட,—

[பேதைமுதல் பேரிளம்பெண் ஈறான பெண்டிர் கண்டுமகிழ]

பெருகுடையா நீரேழும் பாரேழும் போற்றும் வையம்
ஒருகுடையான் போந்தான் உலா.

[1] கொங்குநாட்டை.



# நளவெண்பா.



நளவெண்பாவை இயற்றினவர் "வெண்பாவிற் புகழேந்தி" என்று புகழ்ப்பெற்ற புகழேந்திப் புலவர். இவருடைய பிறப்பிடம், "மாலார் களந்தைப் புகழேந்தியும் தொண்டை மண்டலமே" என்றபடி, தொண்டை மண்டலத்தில் செங்கற்பட்டை அடுத்த பொன்விளைந்த களத்தூர். இவர், இரண்டாங் குலோத்துங்கன் காலத்துப் புலவரான ஒட்டக்கூத்தர் கம்ப நாடர் என்பவர்களோடு ஏககாலத்தில் இருந்தவர்.

இவரிடம் ஒட்டக்கூத்தருக்கு அதிக பொறாமை உண்டு. அரசனும் ஒட்டக்கூத்தருக்கு இணக்கமாக இருந்தமையால், இவர் உறையூரையடுத்த மள்ளுவநாட்டில் முரணைநகரில் சிற்றரசனாயிருந்த சந்திரன் சுவர்க்கியை அடைந்து அவனிடம் சமஸ்தானப் புலவராய் வீற்றிருந்தார். அக்காலத்தில் இவர் நளவெண்பாவைப் பாடியிருக்கவேண்டும். "சங்கநிதிபோல் தருசந்திரன் சுவர்க்கி" "தாருவெனப் பார்மேல் தருசந்திரன் சுவர்க்கி" என்றும், "வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான் தண்டார் புனைசந்திரன் சுவர்க்கி" என்றும், "மாமனுநூல் வாழ வருசந்திரன் சுவர்க்கி, தாமரையாள் வைகும் தடந்தோளான் காமருபூந், தாரான் முரணை நகர்" என்றும், சந்திரன் சுவர்க்கியை இவர் நளவெண்பாவில் பலவிடங்களில் புகழ்ந்திருக்கிறார். இரத்தினச்சுருக்கம் என்பது இவர் செய்த வேறு நூல். பெண்கள் எளிதில் படிக்கவும் கேட்டறியவும் எளிய நடையில் அல்லியரசிமாலை கோவலன்கதை முதலியவைகளை இவர் பாடினதாகப் புலவர்கள் சொல்லிவருகின்றனர்.

நூலின் பாயிரமாக உள்ள பாக்களால் நளவெண்பாவுக்கு முதனூல் பாரதம் என்பது விளங்கும். நடையிலும் நயத்திலும் நளவெண்பா வெகுவாய்ப் பெருந்தேவனாருடைய பாரதவெண்பாவை ஒத்தது.

நளனைக் கலி சேர்ந்ததற்கு, "நாராயணாய நமவென் றவனடியில், சேராரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்" என்றும், நளன் வாகுகனாய் மாறியிருந்த வடிவம் நீங்கியதற்கு, "மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்வாகப், புக்கோர் அருவினைபோல் போயிற்றே" என்றும், நூலின் இடையே காட்டிய உவமைகளால் இவர் வைணவரென்பது துணியலாகும். இவர் நாலாயிரப் பிரபந்தத்தில் நன்கு பயின்றவர் என்பதற்கும் நளவெண்பாவில் சில ஆதாரங்கள் உண்டு.

இவரைப் பற்றிய கன்னபரம்பரையான கதைகளை விநோதரசமஞ்சரியில் காணலாம்.

# நளவெண்பா.

காமர்[1] கயல்புரளக் காவி[2] முகைநெகிழத் — [1] அழகிய.
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம்[3] போலும் தகைமைத்தே, சாகரஞ்சூழ் — [3] கண்.
நன்னாட்டில் முன்னாட்டும் நாடு[4]. — [4] நிடதநாடு.

[2] நீலோற்பலம்.

[நிடதநாட்டில் தலைநகரம் மாவிந்தம் என்பது.]

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை அறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான்[1] தனிக்காத்தான்—மாதர் — [1] நளன்
அருகூட்டும் பைங்கிளியும் ஆடற்[2] பருந்தும் — [2] ஆடல்-வலிமை
ஒருகூட்டில் வாழ உலகு.

**நளன் அன்னத்தைக் காணல்.**

[அவன் ஒருமுறை இளவேனிற்காலத்தில் தன் சோலைக்குச் சென்றான்.]

நீணிறத்தால் சோலை நிறம்பெயர, நீடியதன்[1] — [1] தன்-அன்னத்தின்.
தாணிறத்தால் பொய்கைத் தலஞ்சிவப்ப,—மாணிறத்தான்
முன்அப்புள்[2] தோன்றும் முளரி[3]த் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே ஆங்கு.

[2] நீரில். [3] தாமரை.

"பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமல்",
மேதி[1]க் குலமேறி மென்கரும்பைக்—கோதிக் — [1] எருமை.
கடித்துத்தான் முத்து[2]மிழும் கங்கைநீர் நாடன்,
"பிடித்துத்தா" என்றான் பெயர்ந்து.

[2] கரும்பிலும் முத்துப் பிறக்குமென்பது புலவர் கொள்கை.

நாடிமட வன்னத்தை, நல்ல மயிற்குழாம்
ஓடி வளைக்கின்ற தொப்பவே,—நீடியநல்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.

அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே,—அன்னம்
மலங்கிற்[1]றே தன்னுடைய வான்கிளை[2]யைத் தேடிக்,
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

[1] சுழன்றது, கலங்கினது. [2] சுற்றம்.

"அஞ்சல்[1] மடவனமே! உன்றன் அணிநடையும் [1] அஞ்சாதே.
வஞ்சி அனையார் மடநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகாண்" என்றான், களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்.

[அங்ஙனம் அரசன் சொன்ன வார்த்தையைக் கேட்டுத் தடுமாற்றந்தீர்ந்த அன்னம்]

"திசைமுகந்த வெண்கவிகை[1]த் தேர்வேந்தே! உன்றன் [1] குடை.
இசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசை[2]யில் [2] குற்றம்.
தமையந்தி என்றோதும் தையலாள், மென்றோள்
அமை[3]யந்தி என்றோர் அணங்கு[4]". [3] மூங்கில்.

[4] தெய்வப்பெண் போன்றவள்.

[அந்த வார்த்தையைக் கேட்ட நளன் "அப்பெண் யாருடைய குமாரி?" என்று கேட்டான். அன்னம் அதற்கு]

"எழுவடு[1]தோள் மன்னா! இலங்கிழை[2]வர் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை—உழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயும் மாடொலிநீர் நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு[3].

[1] எழுஅடு-தூணை ஒத்த. [2] தமயந்தி. [3] பூங்கொம்புபோன்றவள்.

"நாற்குணமும் நாற்படையா, ஐம்புலனும் நல்லமைச்சா,
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா,—வேற்படையும்
வாளுமே கண்ணா, வதன மதிக்குடை[1]க்கீழ்
ஆளுமே பெண்மை யரசு".

[1] முகமாகிய சந்திரவட்டக் குடை.

[என்றது. அப்போது நளன்]

"அன்னமே! நீஉரைத்த அன்னத்தை என்னாவி
உன்னவே சோரும். உனக்கவளோ—டென்ன
அடை"வென்றான், மற்றந்த அன்னத்தை முன்னே
நடைவென்றாள் தன்பால் நயந்து.

[அதற்கு அன்னம் "நான் அவளுடைய நடையைக் கற்கும்படி அவள் வீட்டை அடைந்திருக்கிறேன்" என்றது. அதன்மேல் நளன் "இனி உன் வாயுடைய தென் வாழ்வு" என்றான்.]

அன்னம் தமயந்தியிடம் தூதுபோதல்.

[உடனே அன்னம் "அவள் உன் மனைவியாகும்படி இணங்குவிக்கிறேன்" என்று சொல்லி, அவளிடம் பறந்துபோயிற்று.]

"இவ்வளவில் செல்லுங்கொல்? இவ்வளவில் காணுங்கொல்?
இவ்வளவில் காதல் இயம்புங்கொல்?—இவ்வளவில்
மீளுங்கொல்?" என்றுரையா விம்மினான், மும்மதநின்
றாளுங்கொல் யானை அரசு.

மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி அருகணைய,—நன்னுதல்[1]ம்
தன்னூடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
"என்நாடல் சொல்"என்றாள் ஈங்கு.

[1] நல்நுதல்—நல்ல நெற்றியுள்ளவள்—தமயந்தி.

[அன்னம் "நளன் என்பான் ஓரரசன் உளன். அவனுக்கு நிகரானவர் எவ்வுலகிலும் இல்லை.]

"அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியும்—திறங்கிடந்த
செங்கண்மால்[1] அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ [1] விஷ்ணு.
அங்கண்மா ஞாலத் தவற்கு?"

[என்றது. அதைக் கேட்டு மோகமடைந்து]

"வாவி யுறையும் மடவனமே! என்னுடைய
ஆவி உவந்தளித்தாய் ஆதியால்;[1]—காவினிடைத்
தேர்வேந்தற் கென்நிலைமை சென்றுரைத்தி" என்றுரைத்தாள்,
பார்வேந்தன் பாவை பதைத்து.

[1] அளித்தாய் ஆதி—கொடுத்தாயாவாய். ஆல்—அசை.

[அன்னம் "அவ்வரசன் உன்னையே மணம்புரியும்படி செய்விக்கிறேன்" என்று சொல்லி, அரசனிடம் திரும்பியது. அவ்வளவிலே தமயந்தியிடம் உண்டான வேறுபாட்டைக் கண்டு, தாதியர் அதனை அவளுடைய தாயிடம் அறிவித்தனர். அவள் அச்செய்தியை விதர்ப்பராசனான வீமனிடம் அறிவித்தாள். வீமன் தமயந்தியை வந்து பார்த்து, அவளுக்கு ஸ்வயம்வரம் நடத்தவேண்டுமென்று எண்ணினான்.]

"மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறை"கென் றியம்பினான்,—பைங்கமுகின்
கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடும் நன்னாடன்
வேந்தர்மேல் தூதோட விட்டு.

**அரசரும் தேவரும் தமயந்தியின் சுயம்வரத்துக்கு வருதல்.**

செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்[1]தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரில் ஈண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து.

[1] கந்து—கட்டுத்தறி.

புள்ளுறையும் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமும் இனிதுறைந்தார்,—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

[இங்கே செய்தி இப்படியிருக்க, மாவிந்தநகரத்துச் சோலையினின்றும் அன்னத்தைத் தூதாக அனுப்பிச் சோலையில் காத்திருந்து, அன்னம் திரும்பி வந்தபோது]

"அன்னக் குலத்தின் அரசே! அழிகின்ற
என்னுயிரை மீள எனக்களித்தாய்.—முன்உரைத்த
தேமொழி[1]க்குத் தீதிலவே" என்றான், திருந்தா[2]ரை
ஏ[3]மொழிக்கும் வேலான் எடுத்து. [3] ஏம் (ஏமம்)—களிப்பு.

[1] தேம்மொழி—தேன்போலும் வார்த்தையுடைய தமயந்தி. [2] பகைவர்.

கொற்றவன்றன் ஏவலினால் போய்,அக் குலக்கொடிபால்
உற்றதுவும், ஆங்கவள்தான் உற்றதுவும்,—முற்றும்
மொழிந்ததே அன்னம். மொழிகேட் டரசற்
கழிந்ததே உள்ள அறிவு.

[நளன் இங்ஙனம் அறிவழிந்து தழல்படு தளிர்போல் சாய்ந்து கிடக்கையில்]

கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்[1]வந் தெய்தினார்,—போதில் [1] தூதர்.
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
அடையாத[2] வாயி லகம். [2] மூடாத.

[தூதர் வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில், நளன் தேரேறி விதர்ப்ப ராஜதானியான குண்டினபுரத்துக்கு விரைந்து செல்லலுற்றான். இங்ஙனம் நிகழ்கையில்]

நெற்றித் தனிக்கண் நெருப்பைக் குளிர்விக்கும்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்[1]—உற்றடைந்தான்,
தேனாடும் தெய்வத் தருவும் திருமணியும்
வானாடும் காத்தான்[2] மருங்கு. [2] இந்திரன்.

[1] நாரதமுனிவர்.

வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்[1]
ஆரும் இலரால்என் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினான், நாகம் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து.

[1] வீரசுவர்க்கம் அடைபவர்.

"வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சயம்வரத்து—மாமன்னர்
போயினார்" என்றான் புரந்தரற்[1]குப், பொய்யாத [1] இந்திரன்.
வாயினான் மாதவத்தோர் மன்[2]. [2] தவத்தோர் மன்—தவராஜன்

மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் வானவரும்
கோல்வளை[1]தன் மாலை குறித்தெழுந்தார்,—சால்புடைய
விண்ணாடு நீங்கி, விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து.

[1] கொம்பாலாகிய வளை யணிந்தவள்.

பைந்தெரியல்[1] வேல்வேந்தன் பாவைபால் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போல் தேர்மேல் வருவானைக் கண்டார்,
பெருவானில் தேவர் பெரிது.

[1] பசுமை தெரியல்—பசுமையாகிய மாலை.

**நளன் தமயந்தியிடம் தூதுபோதல்.**

காவல் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
"ஏவல் தொழிலுக் கிசை"என்றான்.—ஏவற்கு
மன்னவனும் நேர்ந்தான், மனத்தினால் மற்றதனை
பின்னதென ஓரா திசைந்து.

"செங்கண் மதயானைத் தேர்வேந்தே! தேமாலை
எங்களிலே சூட்ட இயல்வீமன்—மங்கைபால்
தூதாக" என்றான்.அத் தோகை[1]யைத்தன் ஆக[2]த்தால்
கோ[3]தாக வென்றான்அக் கோ. [3] கோது—சாரமற்ற பொருள்.

[1] மயில்—மயில்போன்றவள். [2] மார்பு—இங்கே மனம்.

தேவர் பணிதலைமேல் செல்லும்: திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபால் மீண்டேகும்:—பா[1]வில் [1] நெசவுபா.
குழல்போல நின்றுழலும் கொள்கைத்தே, பூவின்
நிழல்போலும் தண்குடையான் நெஞ்சு.

"ஆவ துரைத்தாய். அதுவே தலைநின்றேன்
தேவர்கோ னே!அத் திருநகரில்—காவல்
கடக்குமா றென்?"என்றான், காமநீ ராழி[1] [1] நீராழி—கடல்.
அடக்குமா றுள்ளத் தவன்.

[இந்திரன், "உன்னை ஒருவரும் காணார். நீ போய் அவளைக் காண்" என்றான். நளனும் சென்று தமயந்தியின் கன்னிமாடத்தை அடைந்தான். தமயந்தி]

"காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்.
யாவனோ? விஞ்சைக் கிறைவனோ?—தேவனோ?
உள்ளவா சொல்"என்றாள், ஊசற் குழை[1]மீது
வெள்ளவாள்[2] நீர்சோர விட்டு. [2] பிரகாசமுள்ள கண்.

[1] ஊசலாடும் காதணி.

[அப்போது நளன் தான் இன்னானென்றும் வந்த காரியம் இன்னதென்றும் சொன்னான்.]

"என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகம் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவாய்" என்றான், தொடையிற்றேன் தும்பிக்கே
ஊட்டுவான், எல்லாம் உரைத்து.

"இயமரம்[1]நின் றார்ப்ப, இனவளை[2]நின் றேங்க, [1] வாத்தியம்.
வய[3]மருதோள் மன்னா! வகுத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டால் என்று நினை"கென்றாள், நீள்குடையான்
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து.

[2] வளை—சங்கு. [3] வயம்—பலம்.

போதரி[1]க்கண் மாதராள், "பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார்[2] தம்மோ டவையகத்தே,—சோதிச்
செழுந்தாள வெண்குடையாய்! தேவர்களும் நீயும்
எழுந்தருள்க" என்றாள் எடுத்து.

[1] அரி—ரேகை. [2] ஆசைப்பட்டவர்.

விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும், நன்குரைத்த—பெண்ணணங்கின்
வன்மொழியும், தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியும், சென்றுரைத்தான் மீண்டு.

"அங்கி[1] அமுதநீர் அம்பூ அணியாடை [1] நெருப்பு.
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றாய்" எனவருணன் ஆகண் டலன்[2]தருமன்[3]
மற்றோனும்[4] ஈந்தார் வரம்.

[2] இந்திரன். [3] இயமன். [4] அக்கினி.

அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடும் தார்வேந்தன் சார்ந்தனன்,மேல்—மங்கை
வயமருவு கின்ற மனக்கா வலர்க்குச்
சயம்வரந்தான் கண்டதோர் சார்வு.

வையம் பகலிழப்ப, வானம் ஒளியிழப்பப்,
பொய்கையும் நீள்கழியும் புள்ளிழப்பப்,—பையவே
செவ்வாய அன்றில் துணையிழப்பச், சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு[1]. [1] அத்தகிரி

[நளனே நினைவாக இரவெல்லாம் தமயந்தி துயிலில்லாமல் வருந்தியிருந்தாள்.]

பூசுரர்[1]தம் கைம்மலரும் பூங்குமுத[2] மும்முகிழ்ப்ப[3]க்,
காசினி[4]யும் தாமரையும் கண்விழிப்ப,—வாசம் [4] பூமி.
அலர்ந்ததேம் கோதையாள் ஆழ்துயரத் தோடு
புலர்ந்ததே அற்றைப் பொழுது.

[1] பார்ப்பார். [2] அல்லி. [3] குவிய.

**தமயந்தியின் சுயம்வரம்.**

முரசெறிந்த நாளேழும் முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த[1] தோள்மன்னர் வந்தார்,—விரைசெறிந்த
மாலை துவள முடி[2]தயங்க வால்வளை[3]யும்
காலை முரசும் கலந்து.

[1] மலையோடொத்த. [2] கிரீடம். [3] வெண்மையான சங்கு.

மன்ற[1]லந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான், [1] வாசனை.
கன்று குதட்டிய கார்நீலம்[2]—முன்றில் [2] நீலோற்பலம்.
குறுவிழிக்கு[3] நேர்நாடன்[4] கோதை பெருங்கண்ணின்
சிறுவிழி[5]க்கு நோற்றிருந்த சேய். [5] நுட்பமான பார்வை.

[3] சிறிய கண்ணுக்கு. [4] வீமன்.

நித்தி[1]லத்தின் பொற்றோடு[2] நீலமணித் தோடாக [1] முத்து.
மைத்தடங்கண் செல்ல, வயவேந்தர்—சித்தம்
மருங்கே வர,வண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்,
அருங்கேழ்[3] மணிப்பூண் அணங்கு. [3] நிறம்.

[2] காதணி.

மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென், றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்,
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

["இவன் சோழன்; இவன் பாண்டியன்; இவன் சேரன்; இவன் குருநாடன்; இவன் பாஞ்சால நாட்டரசன்; இவன் கோசல நாட்டரசன்" என்று]

காவலரைத் தன்சேடி காட்டக்கண், டீரிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாநின்,
றாசலா டுற்றாள் உளம்.

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு[1] நெஞ்சுடைய[2] நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார்? வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து.

[1] உக்கு—அழிந்து. [2] மனம் நிறைகெட.

[அதன்மேல் தமயந்தி]

"மின்னுந்தார் வீமன்தன் மெய்ம்மரபில் செம்மைசேர்
கன்னியான் ஆகின், கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட அரு"ளென்றாள், சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து.

கண்ணிமைத்த லால், அடிகள் காசினியில் தோய்தலால்,
வண்ண மலர்மாலை வாடுதலால்,—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே யன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு.

குறிப்பு.—கண்ணிமைத்தல் கால்நிலந்தோய்தல் மாலைவாடுதல் என்பவை தேவர்க்கில்லை.

விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்,
கண்ணகன் ஞாலம் களிகூர,—மண்ணரசர்
வன்மாலை[1]த் தம்மனத்தே சூட, வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

[1] வலிய மயக்கத்தை.

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே,—ஒண்டாரை[1]க்
கோ[2]மாலை[3] வேலான் குலமாலை[4] வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.

[1] கூர்மை. [2] கிரணம். [3] வரிசை. [4] மாலையணிந்த.

மல்லல் மறுகில் மடநா[1] குடனாகச்
செல்லும் மழவிடை[2]போல் செம்மாந்து,[3]—மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்,
நன்மாலை வேலான் நளன்.

[1] கன்றுபோடாத இளம்பசு. [2] இளங்காளை. [3] இறுமாந்து.

கலி தோடர்தல்.

வேலை[1] பெருஅமுதம் வீமன் திருமடந்தை
மாலை பெறுதகலும் வானாடர்,—வேலை
பொருந்[2]கலிநீர்[3] ஞாலத்தைப் புன்னெறியில் ஆக்கும்
இருங்கலி[4]யைக் கண்டார் எதிர்.

[1] பாற்கடல். [4] கலிபுருஷன். [2] வேலை பொரும்—கரையை மோதும். [3] ஒலியையுடைய சமுத்திரம்.

"ஈங்குவர வென்?"என் றிமையவர்தம் கோன்[1]வினவத்
தீங்கு தருகலியும் செப்பினான்:—"நீங்கள்
விருப்பான வீமன் திருமடந்தை யோடும்
இருப்பான்[2] வருகின்றேன் யான்."

[1] இமையவர்தங்கோன்—தேவராசன். இந்திரன். [2] (கூடி) இருக்கும் பொருட்டு.

"மன்னவரில் வை[1]வேல் நளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்.—உன்னுடைய
உள்ளக் கருத்தை ஒழித்தே குதி"என்றான்
வெள்ளைத் தனியானை வேந்து[2]. [1] கூர்மை.

[2] ஒப்பற்ற வெள்ளையானையையுடைய இந்திரன். வெள்ளையானையாவது ஐராவதம்.

"விண்ணரசர் நிற்க வெறுத்தே மணமாலை
மண்ணரசற் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன்; மற்றவள்தன் கேள்வனுக்கும் கீழ்மை
கொடுக்கின்றேன்" என்றான் கொதித்து.

வாய்மையும் செங்கோல் வளனும் மனத்தின்கண்
தூய்மையும் மற்றவன்றன் தோள்வலியும்—பூமான்[1]
நெடுங்கற்பும் மற்றவற்கு நின்றுரைத்துப் போனான்,
அடுங்கொற்ற வச்சிரத்தான் ஆங்கு.

[1] தாமரைப்பூவில் இருக்கும் இலக்குமி.

"செருக்கதிர்வேற் கண்ணியுடன் தேர்வேந்தன் கூடி
இருக்கத் தரியேன். இவரைப்—பிரிக்க
உடனாக[1]" என்றான், உடனே பிறந்த
விடநாகம் அன்னான் வெகுண்டு. [1] உடன்படவேண்டும்.

[மறுநாள் மணஞ்செய்து, நளனும் தமயந்தியும் சிலநாள் மகிழ்ச்சியடைந் திருந்தனர். அப்பால் தமயந்தியை அழைத்துக்கொண்டு நளன் மாவிந்தநகரம் செல்லலுற்று]

சூதக் கனி[1]யூறல் ஏற்ற சுருள்வாழை
கோதில் நற[2]வேற்கும் குப்பி[3]யென—மாதரார்
ஐயுற்று நோக்கும் அகன்பொழில்சென் றெய்தினான்,
வையுற்ற வேல்தானை மன். [1] மாம்பழம். [2] மது. [3] புட்டி.

"வான்தோய[1] நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்தோன்றும் மற்றித் தடம்பதிதான்,—வான்தோன்றி
வில்[2]விளக்கே பூக்கும் விதர்ப்பநா டாளுடையான்
நல்விளக்கே! எங்கள் நகர்."

[1] அளாவ. [2] பிரகாசம்.

பொய்கையும் வாசப் பொழிலும் எழிலருவிச்
செய்குன்றும் ஆறும் திரிந்தாடித்—தையலுடன்
ஆறிரண் டாண்டெல்லை கழித்தான், அடையலரைக்[1]
கூறிரண்டாக் கொல்யானைக் கோ.

[1] பகைவர்.

[இந்தப் பன்னிரண்டு வருஷ காலத்தில் தமயந்தி ஓராணும் ஒரு பெண்ணுமாக இரண்டு குழந்தைகளைப் பெற்றாள்.]

ஆண்டிரண்டா றெல்லை அளவும் திரிந்தேயும்
காண்டகைய வெங்கலியும் காண்கிலான்,—நீண்டபுகழ்ச்
செந்நெறியால் பார்காத்த செங்கோல் நிலவேந்தன்
தன்னெறியால் வேறோர் தவறு.

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி—சிந்தையெல்லாம்
தன்வயமே ஆக்கித் தமய[1] னுடனிருந்தான்,
பொன்னசல[2] மார்பன் புகைந்து.

[1] தமயன்—புட்கரன். [2] பொன் அசலம்—பொன்மலை—மேரு.

நாராய ணாய நமவென் றவனடியில்
சேராரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்—பாராளும்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி.

**நளன் சூதாடி நாடிழத்தல்.**

"நன்னெறியில் சூதால் நளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்.—மன்னவனே[1]!
போதுவாய் என்னுடனே" என்றான், புலைநரகுக்
கேதுவாய் நின்றான் எடுத்து.

[1] புட்கரனை விளித்தது.

[அதுகேட்டுப் புட்கரன் ஓர் இடபத்தின்மே லேறிக் கொடிபிடித்து நளனிடம் போயினன்.]

அடல்கதிர்வேல் மன்னன் அவன்ஏற்றின் முன்போய்
"எடுத்தகொடி என்னகொடி?" என்ன,—மிடற்[1]சூது
வெல்லும் கொடி"என்றான், வெங்கலியால் அங்கவன்மேல்
செல்லும் கொடியோன் தெரிந்து.

[1] மிடல்—வலி.

"என்றேனும் இதுவாயின் மெய்ம்மையே. எம்மோடு,"
வான்றோய் மடல்தெங்கின் வான்தேறல்—தான்தேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கும் நன்னாடன்,
"சூதாட" என்றான் துணிந்து.

[அப்போது மந்திரிமார்கள் உரைப்பாராயினர்.]

"அறத்தைவேர் கல்லும்: அருநரகில் சேர்க்கும்:
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்:—மறத்தையே
பூண்டுவிரோ தம்செய்யும்: பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ?" என்றார் தெரிந்து.

"உருவழிக்கும்: உண்மை உயர்வழிக்கும்: வண்மைத்
திருவழிக்கும்: மானம் சிதைக்கும்:—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும்: ஒன்றல்ல. சூது
பொருவரோ தக்கோர் புரிந்து?"

[மந்திரிமார் உரைத்த நீதியைக் கேட்டு]

"தீது வருக, நலம்வருக. சிந்தையால்
சூது பொரவிசைந்து சொல்லினோம்.—யாதும்
விலக்கலிர்நீர்" என்றான், வரால்ஏற மேதி
கலக்கலைநீர் நாடன் கனன்று.

[நளன் இரத்தினமாலையைப் பந்தயமாக வைத்தான். புட்கரன் தான் ஏறி வந்த ஏற்றை வைத்தான். கலிபுருஷன் புட்கரனோடு கூடிக்கொண்டு பாச்சிகை யாய்ப் புரண்டான்.]

"வைத்த மணியாரம் வென்றேன், மறுபலகைக்
கொத்த பணையம்[1] உரை"என்ன,—வைத்தநிதி
நூறா யிரத்திரட்டி நூறுநூ றாயிரமும்
வேறாகத் தோற்றான்அவ் வேந்து.

[1] பந்தயப் பொருள்.

பல்லா யிரம்பரியும் பத்துநூ றாயிரத்துச்
சொல்லார் மணித்தேரும் தோற்றதற்பின்—வில்லாட்கள்
முன்தோற்று வானின் முகில்தோற்கும் மால்யானை
பின்தோற்றுத் தோற்றான் பிடி.

[இங்ஙனம் நளன் எல்லாம் தோற்றபின் புட்கரன் கூறுவான்.]

"மனைக்குரியா ரன்றே வருந்துயரம் தீர்ப்பார்.
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனூல்—நனைக்கும்
குவளைப் பணைப்பைந்தாள் குண்டுநீர் நாடா!
இவளைப் பணையந்தா இன்று."

[புட்கரன் வார்த்தையைக் கேட்டு]

"இனிச்சூ தொழிந்தோம். இனவண்டு கிண்டிக்
கனிச்[1]சூத வார்பொழிலின் கண்ணே—பனிச்சூத[2]ப்
பூம்போ தவிழ்க்கும் புனலுடன் பொன்மகளே!
நாம்போதும்[3]" என்றான் நளன்.

[1] கனிச்சு—கனியச்செய்து. [2] சூதம்—மாமரம். [3] போவோம்.

**நளன் நகர்விட்டு நீங்குதல்.**

மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகம் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினான், அன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து.

[அப்போது நகரவாசிகள்]

"ஆருயிரின் தாயே! அறத்தின் பெருந்தவமே!
பேரருளின் கண்ணே! பெருமானே!—பாரிடத்தை
யார்காக்கப் போவதுநீ யாங்"கென்றார், தம்கண்ணின்
நீர்வார்த்துக் கால்கழுவா நின்று.

[நளன்]

"வேலை கரைஇழந்தால், வேதம் நெறிபிறழ்ந்தால்,
ஞால முழுதும் நடுவிழந்தால்,—சீலம்
ஒழிவரோ? செம்மை உரைதிறம்பாச் செய்கை
அழிவரோ? செங்கோ லவர்."

"வடியேறு கூரிலைவேல் மன்னாவோ! உன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கொடிநகரில்
இன்றிருந்து நாளை எழுந்தருள்க" என்றுரைத்தார்,
வென்றிருந்த தோளான்தாள் வீழ்ந்து.

[அதுகண்ட நளன்.]

மன்றல்இளங் கோதை முகநோக்கி, மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணில் நீர்நோக்கி,—"இன்றிங்
கிருந்துமோ[1]?" என்றான், இளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனத்தில் வைத்து.

[1] இருப்போமா.

[அந்தச் சமயத்தில், "நளனை இந்நகரில் யாரேனும் கொண்டாடினால் அவர்களைக் கொல்" என்று புட்கரன் ஒருவனுக்குக் கட்டளையிட்டு, அச்செய்தியை முரசறைவித்தான். அவ்வளவிலே நளன் நகரைவிட்டுச் சென்றான்.]

கொற்றவன்பால் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப,—முற்றும்
இழவுபடு மா[1]போல் இல்லங்க டோறும் [1] ஆறு-விகாரம்.
குழவிபால் உண்டிலவே கொண்டு.

[நளன் கொஞ்சத்தூரம் நடந்து செல்கையில்]

சந்தக் கழற்றா மரையும் சதங்கையணி
பைந்தளிரும் நோவப் பதைத்துருகி,—"எந்தாய்!
வடந்தோய் களிற்றாய்! வழியான தெல்லாம்
கடந்தோமோ?" என்றார் கலுழ்ந்து.

[அதுகேட்டு நளன் துக்கத்தினால் ஒன்றும் தோன்றாமல்
சித்திரம்போல் நின்றான். அப்பால்]

"காதல் இருவரையும் கொண்டு கடுஞ்சுரம்[1]போக்
கேதம்[2] உடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்!
வீமன் திருநகர்க்கே மீள்"என்றான், விண்ணவர்முன்
தாமம்[3] புனைவாளைத் தான். [3] மாலை.

[1] கடுவழி, பாலைநிலம். [2] ஏதம்-குற்றம்.

[நளனைவிட்டு நீங்க மனமில்லாத தமயந்தி]

"குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம். பெறலாமோ?—கொற்றவனே!
கோக்கா தலனைக் குலமகளுக்" கென்றுரைத்தாள்,
நோக்கால் மழைபொழியா நொந்து.

[அதற்கு நளன் சொல்வது:—]

"கைதவந்தான் நீக்கிக் கருத்தில் கறையகற்றிச்
செய்தவந்தான் எத்தனையும் செய்தாலும்—மைதீர்
மகப்பெறா மானிடர்கள் வானவர்தம் ஊர்க்குப்
புகப்பெறார் மாதராய்! போந்து."

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ?—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களைஇங் கில்லா தவர்."

"சொன்ன கலையின் துறையனைத்தும் தோய்ந்தாலும்,
என்ன பயனுடைத்தாம்? இன்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்கால் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி."

[அவ்வார்த்தையைக் கேட்டதும்]

"போற்றரிய செல்வம் புனனாட் டொடும்போகத்
தோற்றமையும் யாவர்க்கும் தோற்றாதே,—ஆற்றலாய்.
எம்பதிக்கே போந்தருளு" கென்றாள் எழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன்.

[அதற்கு நளன்:—]

"சினக்கதிர்வேற் கண்மடவாய்! செல்வர்பால் சென்றீ
எனக்கென்னும் இம்மாற்றம்[1] கண்டாய்,—தனக்குரிய
தானம் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானம் துடைப்பதோர் வாள்."

1 செல்வரிடம் சென்று "எனக்கு ஈ (கொடு)" என்று கேட்கும் இவ்வார்த்தை.

மக்களை வீமனிடம் அனுப்பல்.

[மன்னரா யிருந்தவர் பிற மன்னரை அடைந்து வாழ்வெய்தி உண்டிருப்பது பித்தர் செய்கை என்றான். அதன்மேல் தமயந்தி]

"செங்கோலாய் உன்றன் திருவுள்ளம் ஈதாயின்,
எங்கோன் விதர்ப்பன் எழில்நகர்க்கே—நங்கோலக்
காதல[1]ரைப் போக்கி யருள்" என்றாள், காதலருக்
கேதிலரைப் போல[2] எடுத்து. [2] பகைவர்போல் நின்று.

[1] பிள்ளைகள்.

[நளன் ஒரு பிராமணனைப் பார்த்து]

"பேதை பிரிய[1]ப் பிரியாத பேரன்பின் [1] பிரியவும்.
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்—தாதைக்குக்
காட்டுநீ" என்றான், கலங்காத உள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து.

[அம்மக்கள்]

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து[1] முகத்தை எதிர்நோக்கி—"எந்தம்மை [1] சந்திரன்.
வேறாகப் போக்குதிரோ?" என்றார், விழிவழியே
ஆறாகக் கண்ணீர் அழுது.

அஞ்சனந்[1]தோய் கண்ணில் அருவிநீர் ஆங்கவர்க்கு [1] மை.
மஞ்சனநீ ராக[2] வழிந்தோட—நெஞ்சுருகி,
வல்லி[3]விடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள்[4] புலர்ந்து.

[2] குளிக்கச்செய்கிற தண்ணீராக. [3] கொடியின்தன்மை. [4] தழுவிக்கொண்டாள்.

இருவ ருயிரும் ஒருகையால் வாங்கி
ஒருவன்கொண் டேகுவான் ஒத்து,—வருமறையோன்,
கோமைந்த[1] னோடிளைய கோதையைக்கொண் டேகினான்,
வீமன் நகர்க்கே விரைந்து.

[1] இராசகுமாரன்.

காத லவர்[1]மேலே கண்ணோட, விண்ணோடும்
ஊதை[2] எனநின் றுயிர்ப்[3]போட,—யாதும் [2] காற்று.
உரையாடா துள்ளம் ஒடுங்கினான், வண்டு
விரையாடும் தாரான் விரைந்து.

[1] பிள்ளைகள். [3] உயிர்ப்பு—மூச்சு.

சேலுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காலிற்போய்[1]த் தேவியொடும் கண்ணுற்றான்,—ஞாலஞ்சேர்
கள்ளிவே கத்தாவின் கண்மணிகள் தாம்பொடியாய்த்
துள்ளிவே கின்ற சுரம்.[2] [2] பாலைநிலம்.

[1] காலால் நடந்துபோய்.

கன்னிறத்த சிந்தைக் கலியும்அவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்,—நன்னெறிக்கே
அஞ்சிப்பார் ஈந்த அரசனையும் தேவியையும்
வஞ்சிப்பான்[1] வேண்டி வனத்து. [1] வஞ்சிப்பதற்கு.

தேன்பிடிக்கும் தண்டுழாய்ச் செங்கட் கருமுகி[1]லை
மான்பிடிக்கச் சொன்ன மயி[2]லேபோல்,—தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா என்றாள், புதுமழலைச்
சொற்கிள்ளை[3] வாயாள் தொழுது. [3] கிளி.

[1] இராமன். [2] சீதை.

பொற்புள் ளதனைப் பிடிப்பான் நளன்புகுதக்
கைக்குள் வருமாபோல்[1] கழன்றோடி—எய்க்கும்[2].
இளைக்குமா போல இருந்ததுகண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன்.

[1] அகப்படுவதுபோல் (வருமாறுபோல்). [2] மெலிந்திருக்கும், இளைத்திருக்கும்.

"கொற்றக் கயற்கட் கொடியே! இருவோரும்
ஒற்றைத் துகிலால் உடைபுனைந்து—மற்றிந்தப்
பொற்றுகி[1]லால் புள்வளைக்கப் போதுவோம்" என்றுரைத்தான்,
பற்றகலா உள்ளம் பரிந்து.

[1] பொன் துகில்—பீதாம்பரம், அழகிய வஸ்திரம்.

[அங்ஙனமே நளன் ஆடையால் புள்ளை வளைத்தான்.]

கூந்தல் இளங்குயிலும் கோமானும் கொண்டணைந்த
பூந்துகில்கொண் டந்தா[1]த்தே போய்நின்று,—"வேந்தனே!
நன்னாடு தோற்பித்தோன் நானேகாண்" என்றதே,
பொன்னாடு மானிறத்த புள்[2].

[1] ஆகாயம். [2] பொன்போல் விரும்பத்தக்க பெருமைபொருந்திய வர்ணத்தையுடைய பறவை.

காவி[1]போல் கண்ணிக்கும் கண்ணி[2]யந் தோள் காளைக்கும்
ஆவிபோல் ஆடையும்ஒன் றானதே,—பூவிரியக்
கள்வேட்டு[3] வண்டுழலும் கானத் திடைக்கனகப் [3] விரும்பி.
புள்வேட்டை ஆதரித்த போது.

[1] நீலோற்பலம். [2] மாலை.

"அறம்பிழைத்தார் பொய்த்தார் அருள்சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையில்
சென்றார் புகுநரகம் சேர்வாய்கொல்[1]" என்றழியா [1] அசை.
நின்றாள், விதியை நினைந்து.

[அப்பால் இருவரும் அவ்விடம்விட்டுச் சென்றனர்.
பொழுதுபோய் இருள் மூடிக்கொண்டது.]

எங்காம் புகலிடம்என் றெண்ணி இருள்வழிபோய்
வெங்கா னகம்திரியும் வேலைதனில்,—அங்கே ஓர்
பாழ்மண் டபம்கண்டான், பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபம்கண்டான்[1] வந்து.

[1] தனது குடையின் நிழலில் வந்து வாழப் பூமி தவஞ்செய்தவன்.

[உறங்கும்படி நளன் தமயந்தியை அம்மண்டபத்துக்கு
அழைத்துப்போனான்.]

"வைய முடையான் மகரயாழ் கேட்டருளும்
தெய்வச் செவிகொதுகின் சில்பாடல்—இவ்விரவில்
கேட்டவா[1]" என்றழுதாள், கெண்டையங்கண் நீர்சோரத்
தோட்ட[2]வார்[3] கோதையாள் சோர்ந்து. [3] நீண்ட.

[1] கேட்டவாறு—கேட்டவகை என்னே! [2] தோடுகளையுடைய, தோடு—பூவிதழ்.

"பண்டை வினைப்பயனைப் பாரிடத்தில் ஆர்கடப்பார்?
கொண்டல்[1] நிழலில் குழை[2]தடவும்—கெண்டை[3] [2] காதணி.
வழியல்நீர்[4]" என்றான்; "மனநடுங்கி வெய்துற்
றழியல்[5]நீ" என்றான் அரசு. [5] வருந்தாதே.

[1] கூந்தலாகிய மேகம். [3] கண்களாகிய கெண்டைமீன். [4] நீர் வழியவிடாதே.

தீய வனமும் துயின்று திசைதுயின்று
பேயும் துயின்றதால், பேர்யாமம்[1]—நீயுமினிக்
கண்மேல் துயில்கை கடன்"என்றான், கைகொடுத்து[2]
மண்மேல் திருமேனி வைத்து.

[1] பெரிய ராத்திரியில். [2] கையைத் தமயந்திக்குத் தலையணையாகக் கொடுத்து.

**நளன் பிரிந்துபோதல்.**

[இருவரும் ஒருவர் துன்பத்தைக் கண்டு ஒருவர் துக்கித்தனர். கொஞ்சநேரத்தில் தமயந்தி தூங்கிவிட்டாள். அப்போது கலிபுருஷன் நளனுடைய மனத்தில் ஒரு வேறுபாட்டை உண்டாக்கினான். அதனால் நளன்]

காரிகைதன் வெந்துயரம் காணாமல் நீத்தந்தக்
கூரிருளில் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கும் ஒருயிர்போல் எய்தியதோர் ஆடை
அரிதற் கவன்நினைந்தான் ஆங்கு.

[அதையறிந்த கலிபுருஷன் அவன் பக்கத்தில் அரிவாளாய் வந்திருந்தான்.]

ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றும் தன்னன்பை முதலோடும்—பற்றி
அரிந்தான். அரிந்திட் டவர்நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து.

போய்ஒருகால் மீளும்; புகுந்தொருகால் மீண்டேகும்:
ஆயர்[1] கொணர்ந்த அடுபாலின்—தோயல்[2] 1 இடையர். 2 தயிர்.
கடைவார்தம் கைபோலும் ஆயிற்றே, காலன்[3] 3 இயமன்.
வடிவாய வேலான் மனம்.

[அப்பால் கலியின் வலியால் நளன் மனம் வலித்தது.]

"தீக்கா னகத்துறையும் தெய்வங்காள்! வீமன்தன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்.—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளில் கைவிட்டின்
றேதிலன்[1]போல் போகின்றேன் யான்." 1 அயலான்.

[நளன் போய்விட்டபின் விழித்துக்கொண்டு]

நீலம் மெளவே நெகிழ[1] நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்[2]—"வேல்வேந்தே!
எங்குற்றாய்?" என்று இனவளை[3]க்கை நீட்டினாள்,
அங்குத்தான் காணா தயர்ந்து.

1 கண்களாகிய நீலோற்பலம் மெள்ள மலர.

2 வரிசையான (கண்ணீர்த் துளியாகிய) முத்துக்களையுடைய அழகிய பூங்கொடிபோன்ற இடையினையுடையவள். 3 இனம்வளை—ஒத்த வளைகள்,

வெய்ய தரையென்னும் மெல்லமளி[1] யைத்தடவிக் [1] படுக்கை.
கையரிக்கொண்[2] டெவ்விடத்துங் காணாமல்,—ஐயகோ!
என்னப்போய் வீழ்ந்தாள், இனமேதி மென்கரும்பைத்
தின்னப்போம் நாடன் திரு.

[2] தேடி.

தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாம்
கையால் வயிறலைத்து[1]க் காரிருள்வாய்—வெய்யோனை
"வாவு[2]பரித் தேரேறி வா"என் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்.

[1] வயிற்றில் அடித்துக்கொண்டு. [2] தாவுகின்ற.

வான நெடுவீதி செல்லும் மணித்தேரோன்
தான மடந்தைக்கு[1]த் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டினான் செங்கதிரை நின்று.

[1] தான் அ மடந்தைக்கு—தான அந்த மாதுக்கு.

"செய்தபிழை ஏ"தென்னும். "தேர்வேந்தே!" என்றழைக்
"எய்துதுய ரக்கரைகா ணேன்"என்னும்.—பையவே [கும்.
"என்னென்று[1] தென்[2]?"என்னும். "இக்கானின் விட்டேகும்
மன்!"என்று வாடும் அயர்ந்து.

[1] என் என்றது—என்னவென்று கேளாமை. [2] என்ன காரணம்.

அல்லி[1]யந்தார் மார்பன் அடி[2]த்தா மரைஅவள்தன்
நல்லுயிரும் ஆசையும்போல் நாறுத[3]லும்,—"மல்லுறுதோள்
வேந்தனே!" என்று விழுந்தாள், விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான்.

[1] அகவிதழ். [2] காலடி. காற்சுவடு. [3] தோன்றுதல்.

**பாம்பின் வாய்ப்பட்ட தமயந்தியை வேடன் மீட்டல்.**

வேட்ட[1]க் கரி[2]யை விழுங்கிப் பெரும்பசியால் [2] யானை.
மோட்டு[3] வயிற்றரவு முன்தோன்ற,—மீட்டதனை
ஓரா[4] தருகணைந்தாள், உண்தேன்[5] அறல்[6]கூந்தல் [5] வண்டு.
பேரார் விழியாள் புலர்ந்து.

[1] வேட்டம்—விருப்பம். [3] மோடு—உயர்ச்சி. [4] அறியாமல். [6] கருமணல் (போன்ற).

[அவ்வரவு அவளை மார்புவரையில் விழுங்கியது.]

"வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன், மன்னவ! நின்
தாளடைந்து வாழும் தமியேனைத்—தோளால்
விலக்காயோ?" என்றழுதாள், வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றாள் எடுத்து.

"மற்றொடுத்த[1] தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள்! பிரிந்தேகும்—கொற்றவனை
நீரேனும் காண்குதிரோ?" என்றழுதாள், நீள்குழற்குக்
காரேனும் ஒவ்வாள் கலுழ்ந்து.

[1] மல் தொடுத்த.

"அடையும் கடுங்கானில் ஆடரவின் வாய்ப்பட்
டுடையும்உயிர். நாயகனே! ஓகோ!—விடைஎனக்குத்
தந்தருள்வாய்" என்றுத்தன் தாமரைக்கை கூப்பினாள்,
செந்துவர்[1]வாய் மென்மொழியாள் தேர்ந்து. [1] துவர்—பவளம்.

உண்டோர் அழுகுரலென் றுற்றி[1] வருகின்ற
வெண்டோடன்[2] செம்பங்கி[3] வில்வேடன்—கண்டான்,
கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயில்
முழுகுவாள் தெய்வ முகம்.

[1] அடுத்துக்கேட்டு. [2] வெள்ளோலையாலாய காதணியுடையவன்
[3] சிவந்த தலைமயிர்.

"வெய்ய அரவின் விடவாயின் உட்பட்டேன்.
ஐயன்மீர்! உங்கட் கபயம்யான்.—உய்ய
அருளீரோ?" என்னு அரற்றினாள், அஞ்சி
இருளீரும் பூணாள் எடுத்து.

சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி [வெம்
வெங்கலிவாய் நின்றுலகை மீட்டாற்போல்—மங்கையை
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்[1]பின்வாய் வில்வேடன் கண்டு. [1] மூங்கில்.

"ஆருயிரும் நானும் அழியாமல் ஐயாஇப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்.—தேரில்
இதற்குண்டோ கைம்மா?" றெனவுரைத்தாள், வென்றி
விதர்ப்பன்றான் பெற்ற விளக்கு.

இந்து[1] நுதலி எழில்நோக்கி, ஏதோதன் [1] சந்திரன்.
சிந்தை கருதிச் சிலைவேடன்,—"பைந்தொடி! நீ
போதுவாய் என்னுடனே" என்றான், புலைநரகுக்
கேதுவாய் நின்றான் எடுத்து.

வேடன் அழைப்ப விழிபதைத்து வெய்துயிரா[1]
ஆடல் மயில்போல் அலமரா[2]—ஓடினாள், [2] சுழன்று.
தூ[3]றெலா மாகச் சுரிகுழல்[4],வேல் கண்ணினீர் [3] புதர்.
ஆறெலாம் ஆக அழுது.

[1] வெப்பமாக மூச்செறிந்து. [4] சுரிந்த கூந்தல்.

தீக்கட் புலிதொடரச் செல்லும் சிறுமான்போல்
ஆக்கை தளர அலமந்து[1]—போக்கற்றுச் [1] சுழன்று.
சீறா[2] விழித்தாள். சிலைவேடன் அவ்வளவில் [2] சீறி.
நீறாய் விழுந்தான் நிலத்து.

வண்டமிழ் வாணர்ப் பிழைத்த[1] வான்குடிபோல், தீத்தழல்மீ
மண்டு கொடுஞ்சுரத்தோர் மாடிருந்து,—பண்டை[2]யுள [2] முன்பு.
வாழ்வெல்லாம் தானினைந்து மற்றழுதாள், மன்[3]இழைத்த
தாழ்வெல்லாம் தன்தலைமேல் தந்து[4]. [4] தன் விதியின்மேல் வைத்து.

[1] தமிழ்க் கவிகளிடத்து அபசாரப்பட்ட. [3] அரசன்.

**தமயந்தி சேதிநகரம் சேர்தல்.**

அவ்வளவில் ஆதி[1]ப் பெருவழியில் ஆய்வணிகன்
இவ்வளவு தீவினையேன் என்பாள்தன்—மெய்வடிவைக்
கண்டான்: ஐயுற்றான்: கமலமயி[2]லே! என்றான்:
உண்டாய தெல்லாம் உணர்ந்து.

[1] முதன்மையான. [2] தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமி.

"எக்குலத்தாய்? யார்மடந்தை? யாதுன்னூர்? யாதுன்பேர்?
நெக்குருகி[1] நீஅழுதற் கென்நிமித்தம்?—மைக்குழலாய்!
கட்டுரைத்துக் காண்"என்றான், கார்வண்டு காந்தாரம்[2]
விட்டுரைக்கும் தார்வணிகர் வேந்து.

[1] தளர்ந்துருகி. [2] ஓர் இராகம்.

["என் கணவனுகிய அரசன் என்னை விதிவலியால் காட்டில்விட்டுப் போயி னன்: அவனைக் காணுமல் அழுகிறேன்" என்று தமயந்தி சொல்ல, அவள் அவளைச் சேதிநகரம் சென்றடையும்படி செய்து போய்விட்டாள்.]

"அற்ற துகிலும் அறுதொழுகு கண்ணீரும்
உற்ற துயரும் உடையளாய்—மற்றொருத்தி
நின்றுளைக் கண்டேம், நிலவேந்தன் பொற்றேவி!"
என்றார் மடவார் எடுத்து.

"போய்அகலா முன்னம், புனையிழையாய்! பூங்குயிலை,
ஆய மயிலை, அறிபவே—நீ ஏகிக்
கொண்டுவா" என்றாள்,தன் கொவ்வைக் கனி[1]திறந்து,
வண்டுவாழ் கூந்தல் மயில்.

[1] கொவ்வைப்பழம் போன்ற வாய்.

[தாதியர் அழைத்துவந்த தமயந்தியைக் கண்டு, சேதியரசி, 'உன் வரலாறெல் லாம் உரை' என்றாள். தமயந்தி 'எம்மரசன் என்னை வனத்தில் தனியாக விட்டுப் போயினன். அவனைக் காணுமல் வருந்துகிறேன்' என்றாள். 'உன் கணவனைத் தேடி உன்னிடம் சேர்க்கிறவரையில் நீ இங்கே இரு' என்று சேதியரசி தமயந்தியை நிறுத்திக்கொண்டாள். வீமராசன் தமயந்தியைத் தேடும்படி அனுப்பிய பிராம ணன் பல தேசங்களில் பிரயாணம்பண்ணிச் சேதிநகரத்தில் சென்று சேர்ந்தான்.]

தாமஞ்சேர் ஓதி[1]த் தமயந்தி நின்றுளை — [1] கூந்தல்.
ஆமென்[2] றறியா[3] அருமறையோன்,—வீமன் — [3] அறிந்து.
கொடிமேல் விழுந்தழுதான். கொம்பும்அவன் செம்பொன்
அடிமேல் விழுந்தாள் அழுது.

[2] தமயந்தியாமென்று.

மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ,
அங்கவன்தன் கண்ணீர் அவளுடல்மேல்—பொங்கக்,
கடல்போலும் காதலார்[1] கையற்றார்[2]: தங்கள்
உடல்போலும் ஒத்தார் உயிர்.

[1] அன்பினையுடையார். [2] செயலற்றனர், தளர்வுற்றனர்.

"மாரி பொருகூந்தல் மாதராய்! நீபயந்த
காரிகை[1]தான் பட்டதுயர் கண்டாயோ?—சோர்குழலும்
வேணி[2]யாய், வெண்டுகி[3]லும் பாதியாய், வெந்துயருக்
காணி[4]யாய் நின்றாள் அயர்ந்து."

[1] பெண். [2] சடை. [3] துகில்-வஸ்திரம். [4] உரையாணி. அச்சாணி எனினும் பொருந்தும்.

[என்று சேதியரசியிடம் பிராமணன் சொன்னபோது]

தன்மகள் ஆவ தறியா[1]த் தடுமாறு[2]ப் — [1] அறிந்து. [2] தடுமாறி.
பொன்வடிவின் மேல்[3]அழுது போய்வீழ்ந்தாள்,—மென்மலரைக்
கோதிப்போய் மேதி குரு[4]கெழுப்பும் தண்பணை[5]சூழ்
சேதிக்கோன் தேவி திகைத்து.

[3] ஸ்வர்ணவிக்ரஹம் போன்ற தமயந்தியின்மேல். [4] ஒரு பறவை. [5] நெல்வயல்.

தமயந்தி குண்டினபுரம் அடைதல்.

கந்த[1]னையும் கன்னியையும் கண்டா யினும்சிறிது — [1] மகன்.
தன்துயரம் தீர்ந்து தனியாறத்—தந்தை
பதியிலே போக்கினன் சேதியர்கோன், பண்டை
விதியிலே போந்தானை மீண்டு.

[தமயந்தி வீமன் பட்டணமான குண்டினபுரத்தை அடைந்தாள்.]

அழுவார் விழுவார் அயிர்ப்பார்[1] உயிர்ப்பார்
தொழுவார் தம[2]ரெங்கும் சூழ்வார்:—வழுவாத — [2] சுற்றத்தார்.
காமநீர் ஓதக் கடல்[3]கிளர்ந்தால் ஒத்ததே
நாமவேல்[4] வீமன் நகர். — [4] நாமம் (அச்சம் தருவதான) வேல்.

[1] (தமயந்தி தானோ என்று) சந்தேகிப்பர்.
[3] காம...கடல்—அன்பாகிய ஜலப்பிரவாகமுள்ள கடல்.

தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்கண் நீர்சொரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்—"தெந்தாய்[1]!யான்
பட்டதே[2]!" என்னப்போய் வீழ்ந்தாள், படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ.

[1] என் தந்தையே. [2] நான் பட்ட துன்பம் என்ன என்பேன்.

செவ்வண்ண வாயாளும் தேர்வேந் தனும்மகளை
அவ்வண்ணம் கண்டக்கால் ஆற்றுவரோ?—மெய்வண்ணம்
ஓய்ந்துநா நீர்போய் உலர்கின்ற தொத்த;தமர்[1] — [1] சுற்றத்தார்.
நீந்தினர் கண்ணீரில் நின்று.

"பனி[1]யிருளில் பாழ்மண்ட பத்திலே உன்னை — [1] பயங்கரமான
நினையாது நீத்தகன்ற போது—தனியேநின்
றென்நினைத்தாய்? என்செய்தாய்?" என்னாப் புலம்பினாள்,
பொன்[2]னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து.

[2] இலக்குமிபோன்ற தமயந்தி.

**நளன் வனத்தீயிலிருந்து கார்க்கோடகனை விடுவித்தல்.**

[தமயந்தி செய்தி இங்ஙனமாக]

"மன்னா! உனக்கபயம்[1]" என்னு வனத்தீயில்
பன்னக[2] வேந்தன் பதைத்துருகிச்—சொன்ன
மொழிவழியே சென்றான், முரண்[3]கலியின் வஞ்சப் [3] பகை.
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

[1] அபயம்—அடைக்கலம். [2] பன்னகம் (பன்னகம்)—சர்ப்பம்.

[சென்று, செந்தீயின் வாய்ப்பட் டெரியும் சர்ப்பராசனைக் கண்டான்.]

தீக்கடவுள் தந்த வரத்தைத் திருமனத்தின்
ஆக்கி[1], அருளால் அரவரசை—நோக்கி [1] கொண்டு.
அடைந்தான். அடைதலுமே ஆரழலோன்[2] அஞ்சி
உடைந்தான்[3]; போய்ப் புக்கான் உவந்து. [3] பிடுக்கற்றான்.

[2] அரிய அக்கினி.

[சர்ப்பராசன் "நான் ஒரு ரிஷிசாபத்தால் இந்தக் காட்டில் அக்கினியின் வாயில்பட்டு வருந்துகின்றேன். என்னை விடுவித்துக் காக்கவேண்டும்" என்றவுடனேயே நளன் சர்ப்பராசனை விடுவித்தான்.]

"மண்ணின்மீ தென்றனைநின் வன்றாளால் ஒன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடு[1]"கென்றான்—"நண்ணிப்போர்
மாவலான்[2] செய்த உதவிக்கு மாறாக [2] நளன்.
ஏவலால்[3] தீங்கிழைப்பேன்" என்று.

[1] தச என்று இடுக—தச என்று சொல்லிக் கீழே விட்டிடுக. தச என்பது பத்து என்றும் கடி என்றும் பொருள்படும். [3] அவனுடைய ஏவலாலேயே.

[நளன் அங்ஙனமே செய்தான். சர்ப்பராசன் நளனைக் கடித்தான்.]

வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம[1] நெடுந்தோள், வறியோருக்—கேமம்[2] [1] வாமம்—அழகு.
கொடாதார் அகம்போல் குறுகிற்றே, மெய்ம்மை
விடாதான் திருமேனி வெந்து. [2] பொன்—பொருள்

"ஆற்றல் அரவரசே! ஆங்கென் உருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சினவெயி[1]ற்றால்—மாற்றுதற்கின்
றென்கா ரணம்?"என்றான், ஏற்றமரில் கூற்[2]றழைக்கும்
மின்கால்[3] அயில்[4]முகவேல் வேந்து. [4] கூர்மை.

[1] எயிறு—பல். [2] யமன். [3] மின்னலைக் கக்குகின்ற.

[அதற்கு அந்த அரவரசன்]

"காயும் கடகளிற்றாய்! கார்க்கோ டகனென்பேர்;
நீஇங்கு வந்தது யான்நினைந்து,—காய[1]த்தை    [1] உடம்பு.
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல்[2] காரணமா
வேறாக்கிற்" றென்றான் விரைந்து.

[2] அஞ்ஞாதவாசம் செய்தல்.

[என்று சொல்லி இரண்டு ஆடை கொடுத்து]

"சாதி மணித்துகில்நீ சாத்தினால், தண்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்குநா நீட்டும் துறைநாடர் கோவே!
ஒளிக்குநாள் நீங்கும் உரு.

"வாகு[1] குறைந்தமையால் வாகுகனென் றுன்நாமம்    [1] கை.
ஆக, அயோத்தி நகரடைந்து,—மாகனச[2]த்    [2] கனகம்—பொன்.
தேர்த்தொழிற்கு மிக்கான்நீ ஆ"கென்றான், செம்மனத்தால்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து.

**நளன் அயோத்தியை அடைதல்.**

[நளன் விடைபெற்றுச் சென்று கானைக் கடந்து கடற்கரையை அடைந்தான். ஒரு குருகைப் பார்த்து]

கொம்பர் இளங்குருகே! கூறு திருத்தியால்,
அம்புயத்தின் போதை அறுகாலால்—தும்பி
திறக்கத்தேன் ஊறும் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று.

[ஒரு நண்டைப் பார்த்து]

காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ?—நாதம்[1]    [1] தொனி.
அளிக்கின்ற ஆழி[2]வாய் ஆங்கலவ[3]! ஓடி    [2] சமுத்திரம்.
ஒளிக்கின்ற தென்னோ? உரை.    [3] அலவன்—நண்டு.

[கடலைப் பார்த்து]

போவாய், வருவாய், புரண்டு விழுந்திரங்கி
நாவாய்[1] குழற, நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்றும் என்போல ஆர்கலியே! மாதை
இரவகற்றி வந்தாய்கொல் இன்று?

[1] கப்பலிலுள்ளார் (also நாவையுடைய வாய்)

[அப்பால் நளன் அயோத்தியை அடைந்து அரசனைக் கண்டான். "உன் பெயர் என்ன? நீ எத்தொழிலில் வல்லவன்?" என்று அரசன் கேட்ப, நளன் "நான் மடைத்தொழிலிலும் தேர்த்தொழிலிலும் வல்லவன்" என்று சொல்லி, அவ்வரசனிடம் அத்தொழிலில் அமர்ந்திருந்தான். குண்டினபுரத்தில் தமயந்தி வீமனுடைய புரோகிதனை அழைத்து]

**நளனைப் பெறும்படி தமயந்தி செய்த சூழ்ச்சி.**

"காரிருளில் பாழ்மண் டபத்தேதன் காதலியைச்
சோர்துயிலில் நீத்தல் துணிவன்றே—தேர்வேந்தற்
கென்றுரைந்தால் நேர்நின் றெதிர்மாற்றம்[1] தந்தாரைச்
சென்றறிந்து வா"என்றாள் தேர்ந்து.

[1] மறுமொழி.

[பல நாடுகளில் நாடி நளனைத் தேடி அந்தப் புரோகிதன்
அயோத்தியை அடைந்து]

"கானகத்துக் காதலியைக் காரிருளில் கைவிட்டுப்
போனதுவும் வேந்தற்குப் போதுமோ—தான்?"என்று
சாற்றினான். அந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான்; வந்தான் எதிர்.

[எதிரில் வந்து நளன்]

"ஒண்டொடி தன்னை உறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டா[1]ப் [1] தாமம்-முத்து.
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறல் நீ."

[அந்த வார்த்தையைக் கேட்டுத் தமயந்தியிடம் திரும்பிப்போய்]

"வாக்கினால் மன்னவனை ஒப்பான். மறித்தொருகால்
ஆக்கையே நோக்கின் அவனல்லன்.—பூக்கமழும்
கூந்தலாய்! மற்றக் குலப்பாகன்" என்றுரைத்தான்,
ஏந்துநூல் மார்பன் எடுத்து.

"மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தண!நீ போய்உரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற் கித்தூரம் தேர்க்கோலம் கொள்வான்
படைவேந்தன்" என்றாள் பரிந்து.

"எங்கோன் மகளுக் கிரண்டாம் சுயம்வரம்"என்
றங்கோர் முரசம் அறைவித்தான்.—"செங்கோலாய்!
அந்நாளும் நாளை அள"வென்றான், அந்தணன்போய்த்
தென்[1]ஆளும் தாரானைச் சேர்ந்து. [1] அழகு.

[“தமயந்தி மீண்டும் சுயம்வரத்தை விரும்பினாள்' என்று பார்ப்பான் சொன்னானே. இதற்கு என்ன செய்வேன்?” என்று அரசன் கவல்வதைக் கண்டு நளன் சொன்னான்:—]

“குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்
இறவாத வேந்திழையாள் இன்று—பறி[1]மீறி
நெல்லில் பருவரால் ஓடும நெடுநாடா!
சொல்லப் படுமோஇச் சொல்?”

1 மீன் போடும் பை, பனையோலையாற் செய்தது.

“என்மேல் எறிகின்ற மாலை எழில்நளன்தன்
முன்னே விழுந்ததுகாண் முன்னாளில்.—அன்னதற்குக்
காரணந்தான் ஏதென்றோ?” என்றான், கடாஞ்சொரியும்
வாரணந்தான் அன்னான் மதித்து.

[நளன்]

“முன்னை வினையால் முடிந்ததோ? மொய்குழலாள்
என்னைத்தான் காண இசைந்ததோ?—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை உலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ இது?

[“காவலனுக் கேவற்கடன் பூண்டேன், மற்றவன்றன் ஏவல் முடிப்பேன் இனி” என்று எண்ணித் தேரில் குதிரைகளைக் கட்டிக்கொண்டுவந்து]

அயோத்தி யரசனுக்கு நளன் சாரத்தியம் செய்துவருதல்.

“ஒற்றைத் தனியாழித் தே[1]ரென்ன ஓடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்.—மற்றிதற்கே
போந்தேறு” கென்றுரைத்தான், பொம்மென் றளி[2]முரல்[3]த்
தீந்தேறல் வாக்குந்[4]தார்ச் சேய். 4 ஊற்றும்.

1 ஒப்பற்ற ஒரு சக்கரத்தையுடைய சூரியரதம்.
2 அளி—வண்டு. 3 ஒலிக்க.

[அயோத்தியரசன் தேரில் ஏறிச் செல்கையில்]

“மேலாடை வீழ்ந்த தெடு”என்றான். அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே,—தோலாமை
மேல்கொண்டான் ஏறிவா, வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

[அதுகண் டதிசயித்த அயோத்தியரசன்]

"இத்தாழ் பணையில் இருந்தான்றிக் காய்எண்ணின்
பத்தா யிரங்கோடி பார்"என்ன,—உய்த்ததன்பால்[1]
தேர்நிறுத்தி எண்ணினான், தேவர் சபைநடுவே
தார்நிறுத்தும் தோள்வேந்தன் தான்.

[1] அதன்பக்கலில் தேரைச் செலுத்தி.

ஏரடிப்பார் கோல்எடுப்ப இன்றேன் தொடைபீறிக்
காரடுத்த சோலைக் கடல்நாடன்[1]—"தேரடுத்த
மாத்தொழிலும் இத்தொழிலும் மாற்றுதியோ?" என்றுரைத்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து. [தான்

[1] அயோத்தியரசன்.

[தன் தொழிலின் மர்மத்தை அயோத்தியரசனுக்குக் கற்பித்து அவன் தொழிலின் மர்மத்தை நளன் கற்றுக்கொண்ட மாத்திரத்தில்]

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி.

[அப்பால் குண்டினபுரத்தை அடைந்து அயோத்தியரசன் வீமனைக் கண்டான் வீமன் "என்பால் வந்த செய்தி என்ன?" என்று கேட்க, அவன் "உங்களைக் காண வந்தேன்" என்றான். நளன் குதிரைகளை இளைப்பாற்றிச் சோறு சமைக்கும்படி மடைப்பள்ளியில் புகுந்தான்.]

ஆதி மறைநூல் அனைத்தும் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாமல் எல்லாம் நிரம்பியதே, பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை.

சாரதியை நளனென்று தமயந்தி அறிதல்.

[அப்போது தமயந்தி தாதியைப் பார்த்து "அந்தத் தேர்ப்பாகன் சமைக்கு முறைகளை அறிந்துவா. என் சிறுவர்களை அவனெதிரில் விளையாடவிட்டு, அதன் மேல் அவன் என்ன செய்கிறான் என்று கவனி" என்று சொல்லி அனுப்பினாள்.]

மக்களைமுன் காணா[1] மனநடுங்கா[2] வெய்துயிரா[3]ப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா,[4]—"மக்காள்! நீர்
என்மக்கள் போல்கின்றீர். யார்மக்கள்?" என்றுரைத்தான்
வன்மை[5]க் களியானை மன். [5] திராப்டமைமை.

[1] கண்டு. [2] நடுங்கி, [3] உயிர்த்து. [4] அணைத்து.

"மன்னன் நிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்.
அன்னைதனைக் கான்விட் டவனை—இந்நகர்க்கே
வாழ்கின்றோம். எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான்" என்றார் அழுது.

[அதுகேட்டு நளன் கண்ணீர் உகுத்து]

"உங்கள் அரசொருவன் ஆளநீர் ஓடிப்போந்
திங்கண் உறைதல் இழுக்கன்றோ?—செங்கை
வளவரசே!" என்றுரைத்தான், மாதவத்தால் பெற்ற
இளவரசை நோக்கி எடுத்து.

[அதன்மேல் இளவரசான சிறுவன்]

"நெஞ்சால்இம் மாற்றம்[1] நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்னர்? அடுமடையா!—எஞ்சாது[2]
தீமையே கொண்ட சிறுதொழிலாய்! எங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி."

[1] வார்த்தை. [2] குறையாமல்.

"மன்னர் பெருமை மடையர் அறிவரோ?
உன்னை அறியா துரைசெய்த—என்னை
முனிந்தருளல்" என்று முடிசாய்த்து நின்றான்,
கனிந்துருகி நீர்வாரக் கண்.

[மக்களைக் கண்டு நளன் பேசியிருந்ததைத் தாதி சொல்லக்கேட்டுத்
தமயந்தி அழுது விழுந்தாள். தாய் தந்தையரிடம்]

"மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேரும் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்காண் எங்கள்
கொடைத்தொழிலான்" என்றாள் குறித்து.

[வீமன் அதன்மேல் போய் நளனைப் பார்த்து இன்னானென் றறியாமல் திகைத்து, வாக்கினால் நளனாகவே இருத்தல்வேண்டுமென்று தெளிந்து, "உன்னை ஒளியாது உன் உருவைக் காட்டு" என்றான். உடனே நளன் சர்ப்பராசன் கொடுத்த வஸ்திரத்தில் ஒன்றை அரையில் உடுத்து ஒன்றை மேலே போர்த்துக்கொண்டான். அவ்வளவில்]

மிக்கோன்[1] உலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோர் அருவினைபோல் போயிற்றே,—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப்[2] பாகன் வடிவு.

[1] விஷ்ணு.

[2] மால்+நகம்+தேர்—பெரிய மலைபோன்ற தேர்.

[நளனுடைய சுவரூபத்தைக் கண்ட வளவில், பிள்ளையும் பெண்ணும் மனைவியும் கண்ணீருடன் காலில் விழுந்தனர். நளனுக்கும் கண்ணீர் பெருகியது. கலி புருஷன்]

“தேவியிவள் கற்புக்கும் செங்கோல் முறைமைக்கும்
பூவுலகில் ஒப்பாயார் போதுவார்?—காவலனே!
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்”என்றான்
முற்றன்பால் பாரளிப்பான் முன்.

“உன்சரிதம் செல்ல உலகாளும் காலத்து,
மின்சொரியும் வேலாய்! மிகவிரும்பி—என்சரிதம்
கேட்டாரை நீஅடையேல்” என்றான், கிளர்மணிப்பூண்
வாட்டானை[1] மன்னன் மதித்து. [1] வாள்தானை—வாள் ஏந்திய சேனை.

“என்காலத் துன்சரிதம் கேட்டாரை யான்அடையேன்
மின்கால்[1] அயில்[2]வேலாய்! மெய்”என்று,—நன்காவி [1] கக்கும்.
மட்டி[4]றைக்கும் சோலை வளநாடன் முன்னின்று, [4] தேன்
கட்டுரைத்துப் போனான் கலி.

[2] கூர்மை. [3] நீலோற்பலம்.

வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கண்
கோதையையும் மக்களையும் கொண்டுபோய்—காது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து.

[அயோத்தியரசன் நளனைப் பார்த்து “உம்மை இன்னாரென்றறியாது உரைத்தவைகளைப் பொறுத்துக்கொள்க” என்று சொல்லிப் போய்விட்டான்]

**நளன் மறுசூதாடி நாடுபெறுதல்.**

விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேல் தேவியொடும் போயினான்,—முற்றும்பல்
தேனீர் அளித்தருகு செந்நெல் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மண்.

மன்றல்இளங் கோதையொடு மக்களும் தானும்ஒரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்—சென்றடைந்தான்
மாவிந்தம் என்னும் வளநகரம் சூழ்ந்ததொரு
பூவிந்தை[1] வாழும் பொழில். [1] இலக்குமி

[நளன் தூதனை அனுப்பிப் புட்கரனை அழைத்துக் கையாழியைப் பந்தயமாக வைத்து மறுசூதாடி, முன் தோற்றதையெல்லாம் வென்றான். புட்கரன் தன் ஊருக்குத் திரும்பினான்.]

ஏனை முடிவேந்தர் எத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகரம் எய்தும் புரந்தரனைப் போல்பொலிந்து
நன்னகரம் புக்கான் நளன்.

கார்பெற்ற தோகையோ, கண்பெற்ற வாண்முகமோ,
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ,—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ உரைப்பன் எதிர்?



# பாரதம்.

தமிழில் இரண்டு பாரதம் உள; ஒன்று வெண்பாவால் இயற்றப் பட்டது; மற்றது விருத்தத்தாற் செய்யப்பட்டது. முன்னது சங்ககாலத் திற் பெருந்தேவனார் என்பவரால் இடையிடையே உரையும் ஆசிரியப் பாவும் விரவிவர வெண்பாவால் பாடப்பட்டது. இது பன்னீராயிரம் பாடலுடைய தென்ப. இந்நூல் முழுதும் இப்போது கிடைக்கவில்லை; உத்தியோகபருவந் தொடங்கித் துரோணபருவம் வரையில் எண்ணூறு பாடல்களே கிடைக்கின்றன. பின்னது பாடியவர் வில்லிபுத்தூரார்.

வில்லிபுத்தூரார் நடுநாடென்னப்படும் திருமுனைப்பாடி நாட்டிலே சனியூரிலே பிராமண குலத்திலே பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் வீரராகவர். இவர் தமிழிலே சிறந்த புலமையடைந்து திருமாலின்மேல் பல கவிகள் பாடி, சேரசோழபாண்டியர் என்னும் அரசர் மூவராலும் சிறப்புப் பெற்று வாழ்ந்திருந்தார். அக்காலத்தில் மேற் சொன்ன திருமுனைப்பாடி நாட்டிலே ஆட்கொண்டான் என்றொரு கொங்கர்குலத் தலைவன் இருந்தான். இவன் அக்காலத்திருந்த சோழனுக்குக்கீழ்ச் சிற்றரசனாய் அவனது படைத்தலைவனாயிருந்தவன். இவன் வில்லிபுத்தூரரது தமிழ்ப் புலமையைக் கண்டு வியந்து அவரைக்கொண்டு ஒரு தமிழ்க்காவிய மியற்றுவிக்கவேண்டு மென்று விருப்புற்று அவரைப் பாரதக்கதையைத் தமிழில் விருத்தத்தாற் பாடும்படி கேட்டான். அவரும் அவன் கேள்விக்கு இயைந்து பாரதத்தை நாலாயிரத்து முந்நூற்றுச்சொச்சப் பாடல்களாற் பாடினார். இவ்வரலாறு வில்லிபுத்தூரர் குமாரராகிய வரந்தருவார் சொல்லிய சிறப்புப்பாயிரத்திற் கூறப்பட்டது.

வில்லிபுத்தூரர் கொங்கர்குல வரபதியான ஆட்கொண்டானால் நன்கு மதித்து ஆதரிக்கப்பட்டவரென்பது நூலின் இடையிடையே அவர் "சொன்மழை பொழிந்து நாடொறுந் தனது தோள்வலி துதிக்கு நாவலர்க்குப், பொன்மழை பொழியுங் கொங்கர் பூபதிதன் பொற்பதம் பொருந்தலர் போல" (காண்டவதகனம்-50) என்றும், "கொடிமதிற் பாகைவேந்தன் கொங்கர்கோன் புரவிக் காலால், வடதிசையரசர் தங்கண் மாமணி மகுடம்போல" (நிரைமீட்சி-103) என்றும், "நாகையாப்புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்கு நாடன், வாகையாற் பொலிதிண் டோளான் யாகதக் கொங்கர் கோமான், பாகையாட்கொண்டான் செங்கைப் பரிசு பெற்றவர்கள்போல" (பதினாலும் போர்-90) என்றும், "கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை

வேந்தன், பாவலர் மானங்காத்தான் பங்கயச் செங்கையென்ன" (பதினேழாம்போர்—33) என்றும் ஆட்கொண்டானது வீரத்தையும் கொடையையும் புகழ்தலால் விளங்கும்.

வில்லிபுத்தூராரியற்றிய பாரதம் சமஸ்கிருதத்திலுள்ள வியாசபாரதத்தின் மொழிபெயர்ப்பன்று; அது வடநூற் கதையை மாத்திரம் எடுத்துக்கொண்டு, வேண்டிய இடத்தில் அக்கதையை மாற்றியும், கிளைக்கதைகளையும் பிற்கதைகளையும் அறவே ஒழித்தும், கதாநாயகர்களின் பிறப்பு வளர்ப்பு மணம்புணர்வு முதலியவற்றைக் கூறி மரணமாதியவற்றைக் கூறாது, தமிழிற்கூறும் பெருங்காப்பியத்தின் இலக்கணத்துக்கியையப், பாண்டவர்கள் போர்வென்று பொன்முடி சூட்டுவதோடு முடிவது.

வில்லிபுத்தூராருடைய பாட்டுச் சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் முதலிய அழகுகள் அமைந்து, பலவிதச் சந்தங்கள் பயின்று, இனிய ஓசையுடையதாய் விளங்கும். அது சங்கத்தார்பாட்டுக் கம்பர்பாட்டுப் போலாது, வடமொழிகளும் வடமொழித்தொடர்களும் அதிகமாய்ப் பயின்றுவரும்; வடமொழி மிக்குவருதலாலும் பலவிதச் சந்தங்கள் அமைந்து வருதலாலும் அருணகிரிநாதர் பாட்டை ஒக்கும்.

வில்லிபுத்தூராரும் அருணகிரிநாதரும் ஒரேகாலத்திலிருந்தவராகக் கூறுவர். அருணகிரிநாதர் பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி (1477, A.D) யிலிருந்த பிரபுடதேவராயர் என்னும் விஜயநகரத்தரசர் காலத்தவர். ஆகவே வில்லிபுத்தூரர்காலம் இற்றைக்கு 440 வருஷங்களுக்கு முன்.

வில்லிபுத்தூராரின் பிறப்பிடமாகிய சனியூர் எதுவென்பது தெரியவில்லை. ஆட்கொண்டானுடைய ஊராகிய வக்கபாகை என்பதைத் திருவக்கரை என்பர். இஃது ஒரு சிவஸ்தலம்; தொண்டைநாட்டி லுள்ளது; கோவல்சூழ் பெண்ணை நாட்டைச் சேர்ந்த தன்று. ஆதலால் திருவக்கரையை வக்கபாகை என்பது பொருத்த முடையதாகக் காணவில்லை.

நல்லாப்பிள்ளை பாரத மென்று மற்றுமொரு பாரதமும் தமிழி லுண்டு. இது வில்லிபுத்தூரர் பாரதத்துக்கு முற்றும் வேறாகாது, அவராற் பாடாது விடப்பட்ட கிளைக்கதைகளையும் பிற்கதைகளையும் பாடி அவருடைய பாட்டோடு சேர்த்து ஒருநூ லாக்கப்பட்டது; பதினையாயிரம் பாடல் கொண்டது.

---

பாரதம் என்பது காரணப்பெயர்; பாரதருடைய சரித்திரத்தைக் கூறுவது என்பது பொருள். பாரதர் பரதனுடைய வமிசத்தவர். பரதன் சந்திரகுலத்தரசன்; துஷ்யந்தன் மகன். இவன் கல்வி கேள்வியாலும் வீரத்தாலும் மிகச்சிறந்து விளங்கினமையின் இவனால் இவன்குலம் பெயர் பெற்றது.

இந்தச் சந்திரகுலத்தில் சந்தனு வென்றோ ராசன் இருந்தான். அவனுக்குப் புதல்வர் மூவர். மூத்த புதல்வன் தனது தந்தை மறுமணஞ் செய்யும்பொருட்டுத் தான் இன்பத்தையும் அரசையும் நீத்துத் துறவுபூண்டு வீடுமன் என்னும் பெயர் பெற்றான். இரண்டாங் குமாரனாகிய சித்திராங்கதன் முடிபுனைந்தவுடன் மணஞ்செய்யாதே இறந்தான். மூன்றாங் குமாரனான விசித்திரவீரியன் காசிராஜன் புதல்வியர்களான அம்பிகை அம்பாலிகை என்பவர்களை மணந்து சிலநாளில் இறந்தான். அவனுக்கு அம்பிகை வயிற்றில் திருதராட்டிரன் என்னும் புதல்வனும் அம்பாலிகை வயிற்றில் பாண்டு என்பவனும் தோன்றினர். திருதராட்டிரன் குருடன்; பாண்டு வெள்ளைநிறமுடையவன். திருதராட்டிரனுக்குத் துரியோதனன் முதலிய நூறு பிள்ளைகளும் பாண்டுவுக்குத் தருமன் முதலிய ஐந்து பிள்ளைகளும் உதித்தனர். தருமனும் தம்பிமாரும் நல்லகுணமும் நல்லொழுக்கமு முடையவர்; துரியோதனனும் அவன் தம்பியரும் கெட்ட குணமுடையவர். துரியோதனன் பாண்டவர்களுள் வீமன் பலத்தைக் கண்டு பொறாமைகொண்டு அவனைக் கொல்ல முயன்றான்; அதனால் இருதிறத்தாருக்கும் இடையில் பகை மூண்டது. இதனைக் கண்ட திருதராட்டிரன் இராச்சியத்தைப் பிரித்து ஒரு பகுதியைத் தருமனுக்குக் கொடுத்து அவனை வேறிருந்து அரசுசெய்யும்படி சொன்னான். அவன் தம்பிமாரோடும் காண்டவப்பிரத்தமென்னும் காட்டை யடைந்து அங்கே இந்திரப்பிரத்தமென்றொரு நகர் வகுத்து அரசுசெய்திருந்தான்.

பின்வரும் சபாபருவத்தில் தருமன் இந்திரப்பிரத்தத்தில் இராசசூயயாகஞ் செய்ததும் அதனைத் துரியோதனன் கண்டு பொறாமையுற்றுத் தருமனுடைய பெருஞ்செல்வத்தையும் இராச்சியத்தையும் சூதாடிக் கவர்ந்ததும் கூறப்படும். இவ்வாறு கவர்ந்த இராச்சியத்தைப் பாண்டவர்கள் பெறுவதற்காகச் செய்த யுத்தம் பாரதயுத்தம்.

# பாரதம

## சபாபருவம்.

### இராசசூயச்சருக்கம்.

#### கடவுள் வாழ்த்து.

1. பாண்டவர்கள்புரிந்ததவப்பயனாகி
   அவதரித்துப்,பகைத்துமேன்மேல்
மூண்டவினைமுழுவதுவுமுனைதோறும்
   முரண்முருக்கி,முகில்புகாமல்
காண்டவமுங்கனல்வயிற்றுக்கனறணிய
   நுகருவித்துக்,காக்குமாறே
பூண்டருளெம்பெருமானைப்போற்றுவார்
   எழுபிறப்புமாற்றுவாரே.

#### மயன் வருகை.

2. வியனும்பர்பலகணமுஞ்சுரபதியும்
   சென்றெழில்கொள்விசும்பின்மேவ,
நயனங்கண்முதலானவைம்புலனும்
   மனமும்போனகரியெய்திப்,
பயன்மிஞ்சுதொழிலினராய்ப்பாண்டவரும்
   திருமாலும்பயிலும்வேலை,
மயனென்பான்வாய்புதைத்துவளம்படவந
   தொருமாற்றம்விளம்பினனே.

3. "உம்மாலின்றருவினையேனுயிர்பிழைத்தேன்;
   நீர்தந்தவுயிர்க்குவேறோர்
கைம்மாறுவேறில்லை;குருகுலம்போல்
   எக்குலமுங்காக்குகிற்பீர்,

---

1. முரண்முருக்கி – வலியழித்து. எழுபிறப்பு – தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன நீர்வாழ்வன, தாவரம் என்பன.

2. ஐம்புலனும் மனமும் என்ற உவமையின் பொருத்தத்தை நோக்குக. மயன் காண்டவவனத்தில் எரியாது தப்பிய ஓர் அசுரத் தச்சன்.

தெம்மாறவுலகாளுஞ்செங்கோன்மைக்
குருபதிக்குச்,சிற்பம்வல்லோர்
அம்மாவென்றதிசயிப்ப,அரியமணி
மண்டபமொன்றமைக்கின்றேனே.

4. "மேனாளிவ்வுலகாண்டவிடபருவன்,
அசுரகுலவேந்தர்வேந்தன்,
தாளாண்மையுடன்பொருதுதரியலரைத்
திறைகொணர்ந்ததாராபந்தி
போனாளுமொளிவீசும்பலமணிகள்,
விந்துவெனும்பொய்கைதன்னில்,
ஆனாமற்கிடப்பனவுண்;டவையிதற்கே
உபகரணமாகும்"என்றான்.

5. என்பதன்முன்,முப்பதின்மேலிரட்டிகொளா
றாயிரவரெடுத்தபாரம்
வன்புடனேதரித்துவரையசைந்தாலும்
அசையாதவயிரத்தோளார்,
அன்புமிகும்விழிக்கருணையறன்புதல்வன்
ஏவலினாலசுரத்தச்சன்
தன்பணியீதெனப்பணிப்ப,ஒருநொடியில்
கொடுவந்தார்தளர்விலாதார்.

மயன் மண்டபம் கட்டல்.

6. மீதடுக்கிப்,பசும்பொன்னாற்சுவர்செய்து,
மரகதத்தூண்வீதிபோக்கி,
ஓதிடத்திற்சுருங்காமற்செழுந்துகிருத்
திரம்பரப்பி,உலகோரேழும்

3. தெம்மாற-தெவ்மாற; தெவ்—பகை; நன்னூல் 236-ம் சூத்திரம் பார்க்க.

4. தாராபந்தி—விண்மீன் வரிசை. ஆனாமல் – அளவுக்கமையாமல். உபகரணம்—உபாதானம், முதற்காரணப் பொருள்.

5. அறன்புதல்வன்—தருமபுத்திரன்.

6. மீது அடுக்கி – (மணிகளை) ஒன்றன்மேலொன்றாக அடுக்கி. வீதிபோக்கி - வரிசையாக நிறுத்தி. துகிர்—பவளம். மாதிடத்தான்-சிவன். சுதன்மை - இந்திரனுடைய ஓலக்க மண்டபம்.

"மாதிடத்தான்வைகுதற்குவாய்க்குமதோ
இது" என்ன, வரம்பில்கேள்விச்
சோதிடத்தோர்நாளுரைப்பச், சுதன்மையினும்
முதன்மைபெறத்தொடங்கினனே.

7. மனத்தாலுந்திருத்தகுநூல்வரம்பாலும்
உரம்பயிறேரூள்வலியினாலும்
இனத்தாலுந்தெரிந்துதனதெண்ணியவெண்
ணினுக்கேற்ப, எண்ணில்கோடி
தினத்தாலுஞ்செயற்கரியசெழுமணிமண்
டபமீரேழ்திங்கட்செய்தான்;
தனத்தான்மிஞ்சியதருமன்றம்பியர்க்குத்
தண்டுடன்வெண்சங்குமீந்தான்.

8. அத்தபதிதன்குறிப்பாலமைத்தபெரு
மண்டபத்தினளவுநீளம்
வித்தரமோடுயர்ச்சியெனும்வனப்பனைத்தும்
கண்டோர்கள்வியந்துகூறக்,
கொத்தலர்தார்மணிமுரசக்கொடியுயர்த்தோன்
கனற்பிறந்தகொடியுந்தானும்,
எத்தமருமனமகிழக்குடிபுகுந்தான்,
இறைஞ்சலருக்கிடியேறன்னான்.

நாரதர் வருகை.

9. தம்பியர்களுடல்வருடன்றண்டுழாய்
முடியோனுந்தானுமேனை
அம்புவிமன்னருமுனிவரனைவருஞ்சூழ்
தரவிருந்தவமையந்தன்னில்,
தும்புருநாரதரென்னுமிருவரினும்
நாரதனுந்தோன்றறேரூன்றப்,
பைம்பொன்மலர்தூயெதிர்போய்ப்பணிந்திறைஞ்சி
என்செய்தான்பாண்டுமைந்தன்?

7. வீமனுக்குத் தண்டும் அர்ச்சுனனுக்குத் தேவதத்தமென்னுஞ் சங்குங்கொடுத்தான். இனம்—மேற்கூறினவற்றோடணைந்தபிற.
8. வித்தரம் - அகலம். கனற்பிறந்தகொடி - திரௌபதி.
9. தண் துழாய்முடியோன் - கிருஷ்ணன்.

10. ஏற்றினுசனத்தில்;தனித்தனியே
உபசாரம்யாவுந்தந்து
மாற்றினன்வழியிளைப்பு;மலாயன்போல்
இருந்தோனைமகிழ்ச்சிகூர்ந்து
போற்றினன்;"நீவரயான்புரிதவம்யா"
தெனப்புகழ்ந்தான்,பொதியிற்றென்றல்
காற்றினலரும்புநறுஞ்சூதம்போல்
புளகரும்புங்காயத்தானே.

11. "யான்புரிந்ததவமுலகில்யார்புரிந்தார்
அவனிபரில்?இசையின்வீணைத்
தேன்புரிந்ததெள்ளமுதாலமுதுண்டோர்
செவியிரதந்தெவிட்டுவிப்பாய்,
மான்புரிந்ததிருக்கரத்துமதியிருந்த
நதிவேணிமங்கைபாகன்
தான்புரிந்ததிருக்கூத்துக்கிசையமகிழ்ந்
திசைபாடுந்தத்வஞானி."

12. எனத்தருமன்மகன்கூற,இளையோர்கள்
தனித்தனிநின்றிறைஞ்ச,நீல
கனத்தனையதிருமேனிக்கண்ணனுந்தன்
மனங்களிப்பக்,கண்ணினேக்கி
மனத்தினழுக்கனுகாதமாதவத்தோன்
உதிட்டிரற்"கிம்மாடகூடம்
தனத்தின்மிகுதுபோனெழிலளகையினும்
இல"தென்றுசாற்றினனே.

---

10. உபசாரம்—அர்க்கியம், பாத்தியம், மதுபர்க்கமளித்தல் முதலியன. போற்றினன் - வணங்கினன்.

11. தத்துவஞானி—உண்மை யுணர்ந்தவன், மெய்கண்டவன்.

12. கண்ணன் - கிருஷ்ணன்; கறுப்பன் என்பது பொருள். மாடகூடம் - சூளிகையுடையவீடு; சூளிகை - மேல் வீட்டின் முகப்பு. அடுத்த பாட்டில் மணிமகுடத்தணியரங்கு என்பது காண்க,

### நாரதர் இராசசூய யாகம் செய்யும்படி சொல்லல்.

13. " 'மண்மிசைநால்விரனிற்குமணிமகுடத்
தணியரங்கின்மண்ணாளோரும்
விண்மிசைவாணருநெருங்க,விராயவரு
மறைச்சடங்கினிராயசூயம்
கண்மிசைமாமணிநிகரென்கான்முளையைப்
புரிவி'எனக்,காலனூரில்",
பண்மிசைவீணையின்கிழவன்,"பாண்டுமொழிந்
தனன்"எனவும்பகர்வுற்றானே.

### சராசந்தன் வதை.

14. தந்தைமொழிதனயருக்குச்சாற்றிமுனி
அகன்றதற்பின்,தம்பியான
இந்திரனுந்தன்மனத்திலெண்ணமுமீண்
டாகுமெனவெண்ணிக்கூறும்:—
"அந்தநரமேதமகமியற்றுதற்கென்
றவனிபரையடையவாரிப்
பந்தமுறுபெருஞ்சிறையிற்படைகெழுவேற்
சராசந்தன்படுத்தினானே.

---

13. நால்விரல் நிற்றல் - எண்ணும்பொழுது ஒன்றைச்சொல்லி முதலில் சிறுவிரலை மடக்கிவிட்டு, அதற்குச் சமானமாகச்சொல்லி எண்ண வேறு பொருளில்லாமையால், அணிவிரன் முதலிய மற்றை நான்கும் மடக்கப்படாமல் நிற்றல். 'அதிரதர் தம்மை யெண்ணி னணிவிரன் முடக்க வொட்டா முதிர்சிலைமுனி' (நிரைமீட்சி - 91.) எனல் காண்க. தருமனுடைய மணிமகுடத்தணியரங்குக்கு உலகில் இணையில்லை என்றபடி. வாணர் - வாழ்நர்; வீரசோழியம் சந்திப்படலம் 18 - ம் காரிகை பார்க்க. இராசசூயயாகம்—அரசர்க்கரச னொருவனால் முடிசூட்டுக்காலத்துத் தான் உலகம் பொதுவறப் புரத்தற் கறிகுறியாகத் தனக்குத் திறைகொடுக்கும் அரசர் உதவியுடன் செய்யப்படும் ஒரு பெருவேள்வி. இராசசூயயாகம் செய்த அரசனுக்குச் சம்ராட்டு என்று பெயர். கான்முளை - புத்திரன்.

14. தம்பியான இந்திரன் — உபேந்திரன். திருமால் ஒரு பிறப்பில் இந்திரனுக்குத் தம்பியாய் உபேந்திரனாகப் பிறந்தமையின், திருமாலின் அவதாரமாகிய கிருஷ்ணனை உபேந்திரனென்றார் நரமேதம் — மனிதரைப் பலியிட்டுச்செய்யும் யாகம்.

15. "சதகோடிதனக்கொளித்துத்தடங்கடலிற்
புகுங்கிரிபோல்,தளர்ச்சிகூர்ந்து
சதகோடிமுடிவேந்தர்தங்களுயிர்
கொண்டொளித்தார்சமருக்காற்ருர்;
சதகோடிசுரும்பரற்றுந்தாராய்,அச்
சராசந்தன்றன்னையின்னே
சதகோடியிபமதுகைச்சதாகதிசேய்
தன்னையொழியச்சாதிப்பார்யார்?

16. "ஆரமணங்கமழசலமநேகமுள
ஆறுலும்,அலேயின்கூல
வாரிதியைமதிப்பதற்குவல்லதுமந்
தரமன்றிமற்றுமுண்டோ?
போர்விசயமவனுடன்முன்பொருதோரில்
யார்பெற்ருர்?போதும்,இப்போ
தாரணமாமுனிவராய்"எனப்புகன்ருன்.
அறன்மகனுமஃதேயென்ருன்.

17. அரிவிரசுந்துழாய்மகுடத்தரியுமிரண்
டரிகளருளாண்மையோரும்
எரிவிரசுநெடுங்கானமிருதினத்தில்
விரைந்தேகி,எண்ணில்காவற்
கிரிவிரசநகரெய்திக்,கிரித்தடநதோண்
மகதேசன்கிளருங்கோயிற்
கரிவிரசுங்கோபுரப்பொற்றிருவாயில்
புகுந்துரைத்தார்காவலோர்க்கே.

---

15. சதகோடி — முதலது வச்சிராயுதம் (நூறுநுதியுடையது); மற்றை மூன்றும் நூறுகோடி என்னும் எண்ணுப் பொருளன; இங்கே பன்மைகுறித்து நின்றன. சதா கதி - வாயு. சாதிதல் — கொல்லுதல்.

16. ஆரம் — சந்தனம். கூலம் — கரை. மதித்தல்—கடைதல். ஆரணமுநிவ ராய்ப் போதும் என இயைக்க. போதும்—போவோம்.

17. முதல் அரி வண்டு; இரண்டாவது திருமால் (கிருஷ்ணன்). இரண்டரி கள் வாயுவும் இந்திரனும். கரி விரசும் கோபுரம் — யானை கட்டிய வாயில்.

### வேறு.

18. "வந்தனர்முனிவர்மூவரென்றுரைமின்
மன்னவற்"கென,அவருரைப்பத்,
"தந்திடும்"எனலும்,புகுந்துநீடம்பொற்
றவிசிருந்தாசியுஞ்சாற்றக்,
கந்தடர்குவவுத்தோளில்விற்குறியுங்
காட்சியுங்கருத்துறநோக்கி,
"அந்தணரல்லீர்;யாவர்நீர்?"என்றான்.
அவ்வுரைக்கமலனுமுரைப்பான்:—

19. "யான்விதுகுலத்தில்யாதவன்;இவரோ
குருகுலத்தலைவனுக்கிளையோர்;
மான்மதமலர்த்தார்மன்ன,கேள்,ஒருவன்
வாயுவின்மதலை;மற்றொருவன்
வான்மதிலுடுத்தபொன்னகர்க்கிறைவன்
மதலை;நின்வளநகர்காண்பான்,
கான்மதக்களிற்றாய்,முனிவராய்வந்தோம்,
காவலர்க்கணுகொணுமையினால்".

20. என்றுகொண்டுண்மையாதவனுரைப்ப,
இருபுயவலியினெண்டிசையும்
சென்றுகொண்டடர்த்துத்தெவ்வர்தம்முயிரும்
திறைகளுமுறைமுறைகவர்ந்து
வென்றுகொண்டணிந்தவாகையோன்,"தினவு
மிக்கன,எமதிணைமேருக்
குன்றுகொண்டமைந்ததோள்கள்;எம்முடனீர்
குறித்தமர்புரியும்"என்றுரையா,

21. "நீயெனிலாண்டோரொன்பதிற்றிரட்டி
நெடுஞ்சிறைக்கலுழன்முன்னெறிக்கொள்
ஈயெனவோடி,மதுரைவிட்டாழி
எயிற்றுவாரகைப்பதிபுகுந்தாய்;

---

18. கந்து—தூண். காட்சி—தோற்றம்.

19. விது - சந்திரன். யாதவன்—யதுவமிசத்தவன். கான்மதம்—வாசனை பொருந்தியமதம்; காறுகின்றமதம் என்றுமாம்.

நோயெனவசுரர்க்குடைந்துபொற்காவில்
நுழைதருநூறுமாமகத்தோன்
சேயெனினிளையன்;வீமனைவிசும்பிற்
சேர்த்துவன்"எனவிழிசிவவா,

22. மந்திரச்சுற்றத்தவர்களையழைத்து,
மதலையைமகிதலந்தனக்கோர்
இந்திரனெனவேமணிமுடிபுனைந்,தன்
றியாவருந்தேவரும்வியப்ப,
மந்தரகிரியும்விந்தமுந்தம்மின்
மலைவபோன்,மல்லமர்மலைவான்
சந்தணிதடந்தோள்கொட்டியார்த்தெழுந்தான்,
தழலுமிழ்விழிச்சராசந்தன்.

23. யாளிவெம்பதாகைவீமனுமவனும்,
யாளியும்யாளியுமெனவே,
தாளினுஞ்சமரமண்டலங்களினும்
தாழ்விரற்றடக்கைமுட்டியினும்
தோளினுஞ்சென்னித்தலத்தினுமற்போர்
சொன்னபோர்விதமெலாந்தொடங்கி,
நாளினுந்திங்களொன்றினிற்பாதி
நள்ளிரவினுஞ்சமர்நடத்தி,

24. பூதலநடுங்க,எழுகிரிநடுங்கப்,
போதகத்தொடுதிசைநடுங்க,
மீதலநடுங்கக்,கண்டகண்டவர்தம்
மெய்களுமெய்புறநடுங்கப்,
பாதலநடுங்க,இருவர்மாமனமும்
பறையறைந்தயர்வுடனடுங்கச்,
சாதலங்கொழிந்தவிடரெலாமுழந்து
தங்களிற்றனித்தனிதளர்ந்தார்.

---

21. நோயென — நோய்க்கு அஞ்சுவதுபோல.

22. மதலையை — மகனான சகதேவனை. இந்திரன் - அரசன்.

23. சமரமண்டலம் — மற்போருக்குரியதானம். முட்டி — முஷ்டி. மற்போர் சொன்ன — மற்போருக்குச்சொன்ன. திங்கள் ஒன்றினில் பாதி — பதினைந்துநாள். நாளினும் நள்ளிரவினும் — பகலுமிரவும்.

24. போதகம்—யானை. சாதல் ஒழிந்த இடர் — உயிர் நீங்குதல் ஒன்று ஒழிந்த மற்றெல்லாத் துயரமும்.

25. கொல்லவென்றெண்ணுமிருவருமொருவர்
ஒருவரைக்கொல்லொணாமையினான்
மல்லமர்வலியுமிருபுயவலியும்
இழந்துமாமகிதலத்துறலும்,
கல்லடர்செம்பொன்வரையின்முக்குவடு
காலுடன்பறித்தகால்கண்டு,
நல்லதன்மைந்தற்குணர்வுமீண்டெய்த
நலத்துடனல்கியதன்றே.

26. மீளவுமிருகதுவசனுற்றெழுந்து,
விதலையின்விழுந்தமேவலனைத்
தாளொடுதாள்கள்வலியுறத்தன்பொற்
றடக்கையான்முடக்கறப்பிடித்து,
வாளுகிர்வாளாற்கனகனைப்பிளந்த
வண்டுழாய்மணங்கமழ்மௌலிக்
கோளரியெனவே,பிளந்தெறிந்,தண்ட
கோளமும்பிளக்கநின்றார்த்தான்.

27. பிளந்தெறிபிளவுமீளவும்பொருந்திப்
பிளிறுமாமதகரிநிகர்ப்பக்
கிளர்ந்துவெஞ்சமரந்தொடங்கலும்,தனது
கேதனக்கேசரியனையான்,
வளர்ந்ததிண்புயத்தின்வலியினான்முன்னை
மல்லமரெழுமடங்காக
உலைந்திடமலைந்து,வீழுமாறுதைத்தான்;
ஓரிரண்டானதாலுடலம்.

28. சிறியக்குரிசில்கீண்டபேருடலைச்
சென்னிதாள்செவ்வையினிடாமல்
மாறியிட்டிடுகென்றாருயிர்த்துணையாய்
வந்தமாமரகதவடிவோன்

---

25. காலுடன் பறித்த கால் — அடியோடு பிடுங்கிய காற்று.

26. மிருகதுவசன் — சிங்கக்கொடியையுடைய வீமன். விதலை — நடுக்கம். கனகன் — இரணியன்.

27. கேதனக்கேசரி — கொடியிலுள்ள சிங்கம்,

கூறியிட்டிடாமற்குறிப்பினுலுரைப்பக்,
குறிப்பையக்குறிப்பினுற்குறித்து,
வேறிடப்புவியின்மிசையெறிந்தனனுல்.
வீமன்வல்லபத்தையார்வியப்பார்!

### வேறு.

#### சராசந்தன் பூர்வசரிதம்.

29. சந்தச்சிகரச்சந்தணியும்
தடந்தோளாண்மைச்சராசந்தன்
முந்தப்பொருதமல்லமரின்
முரணேடழிந்துமுடிந்ததறபின்,
இந்தப்புதுமைதனைவியவா,
ஏத்தா,இறைஞ்சா,யதுகுலமா
மைந்தற்கொருவாசகமுரைப்பான்,
மணித்தார்ப்புயவாசவன்மைந்தன்:—

30. "இன்றுரமரினிவன்கையால்
இறந்தோனுடலமொன்றியதும்
ஒன்றுதிரண்டுபட்டதும்யாம்
உணரும்படிநீயுரைத்தருள்வாய்,
குன்றலன்றுமழைதடுத்த
கொற்றக்கவிகைக்கோபாலா,"
என்றன்;என்றபொழுதவனும்
இறந்தோன்சரிதமினிதுரைப்பான்.

31. "வானேர்பகைவர்களிலொருவன்
மகதகுலத்துமாரதப்பேர்
ஆனேன்வயிற்றிலவதரித்தான்;
அவன்காணிந்தவடல்வேந்தன்.

---

28. குறிப்பை யக்குறிப்பினுற் குறித்து — கிருஷ்ணனுடைய கருத்தை அவன் செய்த குறிப்பினுலறிந்து. வல்லபம் என்பது வடசொல்; காதல் என்னும் பொருளது. இங்கே தமிழ்ச்சொல்லாகிய வன்மை என்னும் பண்படியாக வந்ததாகக் கொண்டு வலிமை என்ற பொருளில் பிரயோகிக்கப்பட்டுளது.

29. சந்து - சந்தனம். புதுமை — முன்பு ஒருபோதும் நிகழாத நிகழ்ச்சி.

31. மா ரதப் பேர் ஆனேன் - பிருகத்ரதன்.

மீனோதிசூழ்மேதினியின்
வேந்தர்குலத்தைவேரோடும்
தானோராழிதனிநடத்தித்
தடிந்தானணிந்தசமர்தோறும்.

32. "எண்ணற்கரியமுடிவேந்தர்
எண்ணாயிரவர்பசுவாக,
மண்ணித்தனையுந்தன்குடைக்கீழ்
வைகும்படி,மாமகம்புரிவான்
கண்ணிச்,சிறையினிடைவைத்தான்.
கண்ணாயிரத்தோன்முதலாக
விண்ணிற்பயிலுந்தேவர்களும்
இவன்பேர்சொல்லவெருவுவரால்!

33. "இவனைப்பயந்தோன்மகவொன்றும்
இன்றிச்,சண்டகௌசிகப்பேர்த்
தவனைப்பணிந்துவரம்வேண்டத்,
தவனுந்தான்வாழ்தடஞ்சூதத்
தவனிக்கரியதீங்கனியொன்
றளித்தான்;அளித்தவக்கனியை
நவநித்திலவாணகையிருவர்
இல்வாழ்பவர்க்குநல்கினனால்.

34. "காசித்தலைவன்கன்னியர்தங்
கண்போல்வடுமுற்றியகனியை
ஆசிற்பிளந்துதங்கொழுநன்
அருளாலமுதொத்தினிதருந்த;
மாசற்றிலங்குமகவிருவர்
வயினும்பகிர்ந்துவளர்ந்ததற்பின்,
பாசத்துடனேயோரொருவர்
பயந்தார்வடிவிற்பப்பாதி.

---

32. பசு – யாகபசு. புரிவான் வினையெச்சம். கண்ணி – கருதி.

33. சூதத்துத் தீங்கனி – மாங்கனி.

34. வடு – மாம்பிஞ்சு. ஆசில் – விரைவாக. வயின்–வயிறு. பாசம்–அன்பு. பப்பாதி–பாதிபாதி.

35. "ஒருவனிருவருதரத்தும்
உடனுற்பவித்தவுற்பாதம்
வெருவி,மகதகுலவேந்தன்
வியன்மாநகரின்புறத்தெறியப்,
புரிசைவாயிற்கண்டவற்றைப்
புசிப்பாளெடுத்துப்பொருத்தினளால்,
தருமமுணராமனத்தியொரு
தசைவாயரக்கிசரையென்பாள்.

36. "தன்னாலொன்றுபடுதலுமத்
தனயன்றன்னைச்'சராசந்தன்
என்னுவழைத்தி'எனமகதத்
திறைவற்களித்தங்கேகினளால்;
அந்நாண்முதலப்பெயர்படைத்தான்;
அதனுலிவ்வாறுன"தெனச்
சொன்னான்.அதுகேட்டுளமகிழ்ந்தார்
சுரர்கோமகனுந்துணைவனுமே.

37. வினைமுற்றியபின்மூவருநல்
வினையேபுரிவோர்,மன்னவரை
இனைதற்சிறைவிட்,டிகன்மல்லால்
இறந்தோன்மகனையெழின்மகுடம்
புனைவித்,தந்தநகரீசன்
பொற்றாள்வணங்க,அவனேறும்
துனைபொற்றடந்தேரூர்ந்தறத்தின்
சுதன்வந்தெதிர்கொண்டிடமீண்டார்.

### திக்கு விஜயம்.

38. கருதற்கரியநிதியனைத்தும்
கவர்ந்தோர்காட்டக்,கண்டுவந்த
முரசக்கொடியோன்முன்,வேதம்
மொழிந்தோன்முதலாமுனிவாரும்

---

35. உற்பாதம் — துர்நிமித்தம்.

37. வினை—போர். நல்வினை—நற்செய்கை. துனை—விரைவு.

38. வேதமொழிந்தோன் — வியாசன.

அரசக்குழாமுமீண்டியபே
ரவையில்,கடவுளரசீன்ற
வரிவிற்குமரன்மாதிரங்கள்
வெல்வானேகும்வகையுரைத்தான்.

39. "சுருதிப்படியேவரராச
சூயப்பெயர்மாமகந்தொடங்கக்
கருதிக்,குணபாலெம்முன்னும்,
வடபால்யானும்,காற்றிசைக்கும்
நிருதித்திசைக்குநடுவெம்பி
இவனும்,சிலைவேணிரைமணித்தேர்
வருதிக்கினிலிவ்விளையோனும்
மலைவானெழுக,வருக"என.

40. எண்ணுஞ்சேனையுடன்விரைவின்
எழுந்தாரிவரீரிருவோரும்;
விண்ணுங்கடவுளாலயமும்
முதலாவுள்ளமேலுலகும்
மண்ணும்புயங்கதலமுதலா
மற்றெவ்வுலகுமாதிரமும்
துண்ணென்றிட்டவைந்துவகைப்
பெரும்பேரியத்தின்றுவனியினால்

41. நானங்கமழுஞ்செங்கழுநீர்
நறுந்தார்வேந்தர்நால்வரையும்
மானம்பெறுதிண்சேனையுடன்
வளர்மாதிரத்துவகுத்தேவி,
மீனங்கமடமேனநர
வரியாய்நராய்மெய்ஞ்ஞான
ஆனந்தமுமாகியநாதன்
அன்றேதுவாராபதியடைந்தான்.

---

39. கால் திசை — வாயுதிசை; வடமேற்கு. நிருதி திசை—தென்மேற்கு. வடமேற்கிற்கும் தென்மேற்கிற்கும் நடு—மேற்கு. வேள்தேர் — மன்மதன் தேர்; தென்றல். தென்றல் வரு திக்கு—தெற்கு.

40. புயங்கதலம் — நாகலோகம். ஐந்துவகை இயம் — தோற்கருவி, துளைக் கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன.

41. மெய்ஞ் ஞான ஆனந்தம்—சத் சித் ஆனந்தம் (சச்சிதானந்தம்); உண்மை அறிவு, ஆனந்தம்.

## வேறு.

### வீமன் கிழக்குத்திசையை வென்றது.

42. வான்மருச்சுதனும்,ஈரிரண்டுகடல்
வயவரூதினியின்வர்க்கமும்,
நான்மருப்பொருகைமும்மதத்துவய
நாகமேவிவளர்திசையின்வாழ்
கோன்மதிக்க,நெடுவங்கமுந்திகழ்
கலிங்கமுந்தெறுகுலிங்கமுந்
தான்மலைத்து,முனைமுரண்மிகுத்துவரு
தரியலாரைமுனைதள்ளியே,

43. மற்றுமற்றுமவண்மருவுபாடைகளின்
மன்குலத்தொடுதடிந்து,மேல்
உற்றவுற்றவரையானம்யாவையும்
ஒடிந்திடிந்துபொடியுண்ணவே,
இற்றவிற்றபலதலைகளால்,அலை
எறிந்துமோதிவருகுருதியால்,
முற்றமுற்றவரையினமும்வார்குருதி
நதியுமாயெழமுருக்கியே,

44. அந்தவந்தவவனிபரெலாமபயம்
அபயமென்றடிவணங்கவே
வந்தவந்தநிதியாவையுஞ்சிகர
வடமகீதரமெனக்குவித்,
தெந்தவெந்தநரபாலர்பாரினிகர்
என்னவென்ன,அவரிறையெனத்
தந்ததந்தவிததந்திமீதுகொடு
தங்கண்மாநகரிசாரவே,

---

42. மருச்சுதன் — மருத் சுதன்; வீமன்.

43. மற்று பாடைகளின் மன் — வேறுபாஷை பேசு மரசர். யானம் — ஊர்தி; வாகனம். தலைகளால் வரையினமும் குருதியால் நதியும் எழ.

44. வடமகீதரம் — வடமலை, மேருமலை. இறை—திறை.

### அருச்சுனன் வடக்குத்திசையை வென்றது.

45. விசையவெம்பகழிவிசயன்,வெவ்விசையொ
டிருநிதிக்கிழவன்மேவிவாழ்
திசையடைந்து,கதிரிரவியென்னும்வகை
சீறி,மாறுபொருதெவ்வராம்
நிசையழிந்துவெளியாக,நால்வகை
நெருங்குசேனையொடுநிலனுநின்
றசைய,வன்பினுடனேகினனெழு
பராகமெண்டிசையடைக்கவே.

46. பாரதப்பெயர்கொள்வருடமாதி,பல
பாரினுள்ளநரபாலரைப்
பேரறக்குலமும்வேரறப்பொருது,
பிஞ்ஞகன்கிரியுமிமயமும்
சேரமொத்தி,அவணுள்ளகந்தருவர்
கின்னரேசர்பலர்திறையிடப்
போரடர்த்துகமுடிந்தகாலையெழு
புணரியென்னநனிபொங்கியே,

47. விந்தமால்வரையுமேமகூடமுடன்
நிடதநாமநெடுவெற்பும்மா
மந்தராசலம்விசாலமாலிய
மணித்தடஞ்சிகரமலையுடன்
கந்தமாதனமும்நீலசைலமும்
எனப்புகன்றபலகிரியில்வாழ்
அந்தராதிபர்நடுங்கமேருகிரி
அப்புறத்தும்நனியணுகியே,

48. அத்திசைக்கணரசானவுத்தர
குருக்கண்மேன்மையையடக்கி,மேல்
எத்திசைக்குமிவனன்றிவீரரிலர்
என்றுதேவருமியம்பவே,

45. நிசை — இரா. பராகம் — தூளி.
46. பாரதப் பெயர்கொள் வருடம் — பாரதவருஷம். பிஞ்ஞகன்கிரி—கைலை.
47 மாலியமலை — மாலியவான் என்னும் மலை.
48. உத்தரகுரு அறுவகைப் போகபூமியிலொன்று; மற்றை ஐந்தும் ஆதியரி வஞ்சம், கல்வரிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுரு என்பன. மெத்து இசை—மிக்ககீர்த்தி.

மெத்திசைப்பனிநிலாவெழுச்சமர்
விசயகம்பமுநிறுத்தினன்,
முத்திசைக்குமதிவெண்குடைக்கடவுண்
முதல்வனனவரிபுதல்வனே.

49. கரிகள்கோடியிரதங்கள்கோடிபவ
னத்தினுங்கடுகுகவனவெம்
பரிகள்கோடிநவகோடிமாமணிகள்
பல்வகைப்படுபசும்பொனின்
கிரிகள்கோடியெனவேகவர்ந்தெழு
கிரிப்புறந்தெறுகிரீடிவந்
தரிகள்கோடிகிளர்சோலைசூழ்தமது
செல்வமாநகரியணுகினன்.

**நகுலன் மேற்குத்திசையை வென்றது.**

50. வடாதுசென்றவரிசிலைமகீபனினும்
எழுமடங்குமிகுவலியுடன்
குடாதுசென்றிளையவீரமாநகுலன்
நகுலனென்றுகுலைகுலையவே,
அடாதமன்னரையடர்த்தடுத்தவரை
அஞ்சலென்றமருடற்றினன்;
இடாதவன்றனமெனக்கரந்தனர்கள்
ஏனைமன்னவர்கள்யாருமே.

51. மாளவத்தினொடுகர்ப்படம்பொர
வகுத்தெதிர்ந்ததிரிகர்த்தமும்
தூளவன்புடையிருட்பிழம்பெழ
அருக்கனிற்பெரிதுசுடரெழுத்
தாளவண்கதியுடைத்துரங்கரத
கசபதாதியொடுதெகுசினம்
மூளவந்தெதிர்மலைந்தமன்னவரை
முதுகுகண்டமர்முருக்கியே,

---

49. பவனம் – காற்று. கவனம் – வேகம். தெறுதல்– அடர்த்தல். அரிகள்– வண்டு.

51. கர்ப்படம்–கர்ப்படவர் என்னும் ஜாதியார் வசித்திருந்த நாடு. தூள வன்பு உடை இருட்பிழம்பு – புழுதிமயமாகிய வலிய இருட்பிழம்பு. தாள வண் கதி– சிறந்த கால்வேகம்.

52. கூற்றிசைக்குமெனவுடன்வருங்கடிய
கொடியசேனையொடு,குமரனும்
காற்றிசைக்குமெனவருணனுந்தனி
கருக்குலைந்துளம்வெருக்கொளத்,
தோற்றிசைக்கும்வசைகொண்டுமற்றவர்கள்
சொரிதருந்திறைகள்வாரி,அம்
மேற்றிசைக்குமொருமேருவுண்டென
உயர்த்திணனிகரில்வீரனே.

53. அளவிலாததிறையோடுமெத்திசை
உதித்ததோரிரவியாமெனத்
துளபமாலைகமழ்மௌலிநாதனுறை
துவரையெய்தி,உயர்சுருதியின்
கிளவியான்முனிவர்தொழுபதந்தொழுது,
கேசரித்துவசவீரனுக்
கிளவல்,மீளவுமரிப்பிரத்தநகர்
எய்தி,மன்னனையிறைஞ்சினன்.

**சகதேவன் தெற்குத்திக்கை வென்றது.**

54. குன்றிசைத்தகசரததுரங்கம
பதாதிசூழவிறைகொள்ளவும்
நின்றிசைத்துவருபலபணைக்குலம்
இரைக்கவுங்கொடிநிரைக்கவும்
துன்றிசைப்பனிநிலாவெழக்கவிகை
எண்ணிலாதனதுலங்கவும்
தென்றிசைப்படர்தன்மேயினன்,நகுல
நிருபனுக்கிளையசெம்மலே.

55. அத்திசைக்கணிருகடலினுக்குநடு
ஆனமண்டலமனைத்தினும்
மத்திகைப்புரவிமண்டலேசரும்
வயங்குமாமகுடமகிபரும்

---

52. கூற்று இசைக்கும்—யமனை ஒக்கும். குமரன்—முருகக்கடவுள். கால் திசைக்கும் — கால்கள் திகைக்கும், தள்ளாடும். கருக்குலைந்து — கர்ப்பம் கலங்கி. இசைக்கும் வசை—சொல்லப்படும் வசை. மற்று—அசை.

53. அரிப்பிரத்தம் — இந்திரப்பிரஸ்தம்.

54. இறைகொள்ளல் — தங்குதல். பணைக்குலம் — வாத்தியக்கூட்டம்.

55. மத்திகை - குதிரைச்சம்மட்டி. புத்தி கைக்க — மனம் வெறுக்க. வாரி - பொழிந்த திறைகளை வாரி. பித்திகை — சிறுசண்பகம்.

புத்திகைக்கவமர்பொருதழிந்துதிறை
பொழிய,வாரி,வளர்புயகிரிப்
பித்திகைத்தொடையனீலனென்னுநர
பதிபெரும்பதிபுகுந்தபின்,

56. அந்தமாநகரிகாவலானசுடர்
அங்கிசீறியெதிர்பொங்கி,மேல்
வந்தவீரன்மிகுசேனையாவையும்
மயங்கவெம்புகையியங்கவே,
கந்துசீறுகளியானைமன்னனது
கண்டு,வெங்கனலவிப்பதோர்
இந்துமாமுகசரங்களேழுநெடு
நாவினானழியவேவினான்.

57. அஞ்சியந்தவழலோனுமப்பொழுதொர்
அந்தணாளன்வடிவாகியே
வஞ்சியந்தொடையன்மன்னன்முன்புவர,
வந்தமாமுனியைமன்னன்"நீ
எஞ்சிநின்றுசுடுகின்றகாரணமி
தென்னை?"என்னலும்;இயம்பினான்
மஞ்சிவர்ந்தபுகைவானவன்றனது
வரவுநீலன்வழிபாடுமே.

58. நீலனிட்டதிறையானகோலமணி
நீலமாதிநவநிதியமும்
சாலமிக்கதபனியமும்வெளவி,உயர்
சாரல்விந்தசயிலப்புறத்
தேலநெட்டடவிமுறியமோதி,வெளி
யாக,ஏழ்கடலையுங்கடைக்
காலமுற்றியெழுகாலெனும்படி
கலக்கினானெழுகலிங்கமும்.

---

56. இயங்க—இயக்க (விகாரம்); செலுத்த. இந்து மா முக சரம்—பிறைமுகக் கணை. ஏழுநாவினான்—அக்கினி.

57. வஞ்சி அம் தொடையல்—வஞ்சிமாலை; பகைமேற்சென்று அணிவது. எஞ்சி—குறைந்து; நீ நின்நிலைமை குறைந்து நீலன்பால் நின்று நமது படையைச் சுடுகின்ற காரணம் யாதென்றுகேட்க.

58. நவநிதியம்—நவரத்தினம். தபனியம்—பொன். ஏல்—பொருந்திய. வெளியாகச்செய்து என்று ஒருவினை வருவிக்க. வெளியாக முறியமோதி என்றியைப்பினுமமையும்.

59. சென்னிநாடுகுடகொங்கநாடு
திறைகொண்டு,தென்னனுறைசெந்தமிழ்க்
கன்னிநாடுறவுடன்புகுந்து,மணி
நித்திலக்குவைகள்கைக்கொளா
மன்னி,நாடுகடல்கொண்டகைம்முனிவன்
வைகுமாமலயநண்ணினான்,
மின்னிநாடுறவிளங்குவெஞ்சமர
வீரவாகைபெறுவேலினான்.

60. செகத்தியங்குதனியாழியைவரினும்
இளையகாளையொடுசேனையந்
நகத்தியைந்தபொழு,தவனிபவ்வமுறு
நவ்வெனத்தலைநடுங்கவே,
மிகத்தியங்கிநெடுமேருவெற்பின்மிசை
மேவுவானவர்கண்மீளவும்
அகத்தியன்றனைவடக்கிருத்தும்வகை
உன்னினார்கள்சமமாகவே.

61. கன்னிலங்கொலெனவலியமெய்பெறு
கடோற்கசன்றனையழைத்து,"நீ
தென்னிலங்கைதிறைகொண்டுமீள்க"என
இளையதாதையுரைசெய்யவே,
மின்னிலங்கணியெயிற்றரக்கர்குல
வீரனாகியவிபீடணன்
தன்னிலங்கொதிகொளப்புகுந்தொரு
சழக்கறச்சமருழக்கினான்.

62. "யாரையோ?உரைசெய்நீ"எனத்திறல்
நிசாசராதிபனியம்பலும்,
"பாரையேழினையுமுழுதுடைக்குரு
குலத்துமேன்மைபெறுபாண்டுவின்

---

59. சென்னிநாடு—சோழனாடு. கன்னிநாடு—பாண்டிநாடு. உறவுடன்புகுந்து—தனது தமையனான அருச்சனனது மாமன் வீடென்று முறவோடு போர்புரியாது சென்று. மின்னி நாடும்படி விளங்குகின்ற வேலினான் என்க.

60. நகம்—மலை. பவ்வம் உறு நவ்—கடலிலகப்பட்ட மரக்கலம். அகத்தியனைப் பொதியமலையி லிருத்திய கதையைக் கந்தபுராணம் திருக்கல்யாணப் படலத்திற் காண்க.

பேரன்யான்;விறலிடிம்பன்மாமருகன்"
என,அரக்கர்பெருமான்மனத்
தூருமாதரவினேடழைத்தவனை
உவகையோடுமிகவுறவுரு,

63. "நீயிலங்கையிடைவந்ததென்கொல்"என,
"நீதியாலுயருதிட்டிரன்
ராயசூயமெனுநாமமாமகமியற்றுவான்
விறலொடெண்ணினன்.
நேயமானவிளையோர்களால்வரும்
நெடுந்திசாமுகமடங்கவென்
றேயமாநிதிதிரட்டலுற்றனர்கள்;
யானுநின்னகரியெய்தினேன்.

64. "அற்பனைத்துலகுமெண்ணவேயறன்
அளித்தமன்னனழல்வேள்வியின்
கற்பனைக்குதவிதரு"கெனப்பழைய
கால்விழுத்தநெடுவேலைவீழ்
வெற்பனைப்புகல,அந்தவீடணன்
அளித்தநீடியர்வியன்றலைப்
பொற்பனைத்தருவொரேழுமேழுமுட
னேகவர்ந்துகழல்போற்றியே,

65. மீளவந்திளையதாதைபாதமுடி
மீதுவைத்தொளிவிளங்குபொற்
பாளையம்பனைகள்பற்பராகமுத
லானபன்மணிபரப்பினன்.
நாளிரண்டிலிமையோரொடொத்த
பெருஞானபண்டிதனுநல்லறன்
காளைபைங்கழல்வணங்கினன்,
தனதுபதிபுகுந்துநனிகடுகியே.

---

64. அற்பு — அன்பு; (விகாரம்). கற்பனை — செய்தல்.

65. பற்பராகம் — பத்மராகம். ஞானபண்டிதன்—சகதேவன்,

வேறு.

66. ஆல்வரும்புரவித்திண்டேரறன்மகன்,அநுசரான
நால்வருஞ்சென்றுதிக்கோர்நாலிரண்டினுந்தன்செய்ய
கோல்வரும்படியேயாக்கிக்கொணர்ந்தனதிறைகள்கண்டான்.
மேல்வருமிராசசூயவேள்விநாம்விளம்பக்கேண்மோ.

தருமன் அரசர்களுக்கும் முனிவர்களுக்கும் தூதனுப்பினது.

67. "இரணியனிரணியாக்கனென்றதானவரைவென்றுங்
காரணியவிலங்கைகழுதூரரக்கனையநுசனோடு
மரணமுற்றிடமுன்சீறிமாமனைமலைந்துமற்றை
முரணியபகையுந்தீர்ப்பான்மூர்த்தியாய்ப்பிறந்துளோனை,

68. "விரைவினிற்கொணர்தி" என்றுவீணைநாரதனைப்போக்கித்,
தரணிபர்க்கெல்லாமோலைதனித்தனிதூதிற்போக்கி,
வரனுடைச்சுருதிநான்கும்வகுத்தவனாதியான
இருபிறப்பாளர்யார்க்குமோலைகளையேவினானே.

69. தானவர்தச்சன்வந்துசமைத்ததோர்சிற்பந்தன்னை
வானவர்தச்சன்கண்டுமகிழுமண்டபத்தின்வேந்தர்
ஆனவரெவருமீண்டி, அந்தணரெவருமீண்டி,
மானவரெவருமீண்டி,வரம்பறநெருங்கினாரே.

70. வரவர,வந்தவந்தமுனிவரைவணங்கி,ஆசி
திரமுறப்பெற்று,வேந்தர்சிறப்பெலாந்திருக்கணோக்கி,
நரபதிதானுமற்றைநால்வரும்,நீலமேனி
இரவியையனையான்றன்னையுவகையோடெதிர்கொண்டாரே.

71. கரகதக்களிறுபோலுங்கனிட்டரீரிருவர்,ஓடும்
துரகதத்தடந்தேர்விட்டுத்துழாய்மணங்கமழும்பொற்றோள்
மரகதக்கிரியன்னானைவணங்கினர்தழுவி,வெள்ளைத்
திருநிறத்தவன்றன்செம்பொற்றிருப்பதமிறைஞ்சினாரே.

---

66. ஆல் - ஆலல் (விகாரம்): களைத்தல். கோல் — செங்கோல்.

67. அரணிய - அரணுடைய. மாமன் — கஞ்சன். மூர்த்தியாய்ப் பிறந்துளோன்- உருவெடுத்து வந்தவன்.

69. சிற்பம் — கைத்தொழில். மானவர் — மக்கள்.

71. கரம் - துதிக்கை, கதம் — கோபம், வெள்ளைத்திருநிறத்தவன் - பலதேவன்.

### பாண்டவர் பவனிவருதல்.

72. இருபுடைமருங்குந்திக்கோரெட்டையும்வென்றோர்போத,
நிருபதிதேரிற்போத,நேமியான்களிற்றிற்போதச்,
சுரர்பெருந்தச்சன்செய்ததொன்னகர்வீதிபுக்கார்;
வருதிருப்பவனிகேட்டார்வளநகர்மாதரெல்லாம்.

73. ஈரடிகளினுஞ்செம்பஞ்செழுதுவாரெழுதுமுன்னர்
ஓரடியெழுதிமின்போலொல்கிவந்திறைஞ்சுவாரும்;
ஆரமுதனையகண்ணினஞ்சனமெழுதுகின்ற
சீரியகோலுங்கையுந்திருத்தகத்தோன்றுவாரும்;

74. விரிதுகில்வேறுடாமல்விரைகமழ்தூநீராடிச்
சுரிகுழன்மேகமாரிதுளித்திடவெதிர்கொள்வாரும்;
கரதலமலரிற்சங்குங்கலாபமுஞ்சிலம்புமார்ப்பத்
தெருவெலாந்தாமேயாகிச்சிறடிசிவப்பிப்பாரும்;

75. இவ்வகைகுழுக்கொண்டாங்கணெழுவகைப்பருவமாதர்,
செவ்வியுமழகுந்தேசுஞ்செய்யபூந்திருவோடொப்பார்,
மெய்வழிநின்றபோகமேகமேயனையான்றன்னை
மைவழிகண்ணினோக்கிமனனுறவணங்கினாரே.

### வேறு.

### பவனிகண்ட மாதர் நிலைமை.

76. மாடம்பயிலுமணித்தோரணவீதி
நீடஞ்சனக்கணெருங்கித்தடுமாற,
ஆடம்பரக்கொண்டலன்னானையாபாத
சூடங்கருதித்தொழுதார்சிலமாதர்.

---

72. பவனி – உலாப்போதல். சுரர்பெருந்தச்சன் – விஸ்வகர்மன்.

74. சங்கு – வளை. கலாபம் - மேகலை.

75. எழுவகைப்பருவம் – பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன. முறையே இவற்றின் ஆண்டாவன, எ, கக, கரு, கக, உ0, ருக, சO.

76. ஆடம்பரம் - முழக்கம்; கொண்டலுக்கு அடை. ஆபாதசூடம் - கால் முதல் தலைவரையும்.

77. தங்கள்குலமுன்றில்,தலையாயமும்மதத்து
வெங்கண்மதமாமிசைவருவோன்மெய்ந்நோக்கி
அங்கண்மிளிர,அரும்புருவமின்முரியத்,
திங்கணுதல்வேர்வோட,நின்றார்சிலமாதர்.

78. காலமுகிலுமலர்க்காயாவுமன்னதிருக்
கோலமுடையோன்குலவுமணிப்பூண்மார்பின்
மாலைநறுந்துளபமன்றலுக்கு,வாணயனம்
நீலவரிவண்டாகி,நின்றார்சிலமாதர்.

இங்ஙனம் மகளிர் காணுநிற்க, கிருஷ்ணன் குந்திதேவியின் கோயிலிற் புகுந்தான்.

### கிருஷ்ணன் பாண்டவர்கள் திக்குவிஜயம் செய்து கொணர்ந்த செல்வம் காணல்.

### வேறு.

79. கொற்றவரைவர்தம்மைக்குருகுலம்விளங்குமாறு
பெற்றவள்பாதம்போற்றிப்,பிறப்பிறப்பறுக்கவல்லோன்
மற்றவள்வாழ்த்தவாழ்த்தமனமகிழ்ந்,தழலின்வந்த
பொற்றொடிபணிவுமேனைப்பூவையர்பணிவுங்கொண்டான்.

80. அரசவைக்கணிசெய்சிங்கவாசனத்திருத்தி,வெற்றி
முரசுடைத்துவசவேந்தன்முகமலர்ந்திருந்தகாலை,
விரைசெயப்புரவித்திண்டேர்வீமனைமுதலோரெங்கும்
உரைசெலக்கவர்ந்தசெல்வங்காட்டிநின்றுரைசெய்தாரே.

### இராசசூயயாகத்துக்கு அரசர்வருகை.

81. முன்னரமேதஞ்செய்வான்,முடிச்சராசந்தனென்னும்
இன்னரார்பாடுஞ்சீரான்,இளப்பருஞ்சிறையில்வைத்த
அந்நரபதிகளோடுமவன்மகன்மாகதேசன்
எந்நரபதிகளுக்குமிரவியேயென்னவந்தான்.

---

77. தங்கள் குல முன்றில் - தங்கள் வீட்டுமுற்றத்தில். மிளிர்தல் - பிறழ்தல்,
80. செயம் - வெற்றி. வீமனை — ஐ சாரியை.

82. அரும்பனைக்கொடியோனுதியாவுயர்ந்தவனீருகும்
பொரும்படைச்சேனைவெள்ளப்பூருவின்குலத்துளோர்கள்
கரும்பனைத்தடக்கைவெங்கட்கரிமுதற்சேனையோடும்
இரும்பினைக்குழைக்குநெஞ்சர்யாவருமீண்டிமொய்த்தார்.

83. இந்திரபுரிக்குமிந்தவிந்திரபுரிக்குந்தேவர்
அந்தாமறிவுறுமலதிசயித்துவகைகூரச்,
செந்திருமடந்தைக்குள்ளசெல்வங்களனைத்துஞ்சேர
வந்ததுபோலும்வேள்விமாநகர்த்தோற்றமம்மா.

84. தோரணவீதிதோறுந்தூரியமுழக்கந்தன்னின்
ஆரணமுழக்கமிஞ்ச,அந்தணராகியுள்ளோர்
காரணமுணர்ந்தோர்வேள்விக்கனன்முகமாகத்தேவர்
பாரணம்பண்ணவிட்டபைம்பொன்வேதிகையிற்சேர்ந்தார்.

யாகசாலை.

85. சுடுமனல்கலுழனுகச்சுருதியின்படியேகோட்டி,
நடுவுறத்திசைகளொன்குநான்குவெள்ளேறுகோட்டி,
வடுவறச்சமைத்தசாலைமண்டபந்தன்னைநோக்கின்
கடவுளர்க்கமைத்தயாகதலமெனக்கவினிற்றம்மா.

வேறு.

86. திருந்தமெய்ஞ்ஞானமுந்தெளிந்ததெய்வத
அருந்தவமுனிவர்பேரவையின்மேன்மையால்,
பெருந்தகைநாபியம்பெருமன்வாழ்வுபோன்
றிருந்ததுகுருபதியாகசாலையே.

87. யாதவகுலத்தினுக்கிறைவனுகிய
மாதவனிணையடிவணங்கிமற்றுள
பூதலத்தரசெலாம்பொருந்துபொற்பினுல்,
ஓதநீர்வண்ணன்வாழுலகுபோன்றதே.

---

82. பனைக்கொடியோன் - வீமன்.

84. தோரணவீதி—தோரணங்கள் நாட்டிய தெரு. கனன்முகமாக—அக்கினியை வாயாகக்கொண்டு. பாரணம்—உண்ணுதல். இட்ட—செய்த.

85. அனல்—அக்கினிகுண்டம். கலுழனுக—கருடவடிவாக. ஏறு—ரிஷபம்.

86. நாபியம்பெருமன் — நாபியங்கமலத்திற் பிறந்த பிரமன். வாழ்வு — வாழுமிடம்.

வியாசர் பாண்டவருக்குப் புத்திகூறல்.

88. விதியினுமுயர்ந்ததொல்வியாதன்,மேதினி
பதிகளாகியதிறற்பாண்டுமைந்தரை
மதியினிலொருபுடைவருகென்றன்பினால்
திதியுறச்சின்மொழிசெவியிற்செப்பினான்.

89. "இங்கிதத்திந்திரரென்பர்யாவரும்
சங்கரன்விதியினாற்றரணிபாலராய்
வெங்கனற்றோன்றியபின்னையைவரும்
மங்கலம்புவிமகள்வழக்கினெய்தினீர்.

90. "ஓரொருதலைவராயோரோராண்டுளம்
கூருவகையினொடுங்கொழுநராயினீர்.
ஆரழற்பிறந்தமான்அறத்தின்மைந்தற்குப்
போரழல்வளர்த்திடும்பெற்றிபெற்றனள்.

91. "மைந்தர்நீர்நால்வரும்;மகஞ்செய்வேந்தனே
தந்தையும்;தாயுமித்தருமவல்லியே,
இந்தவான்பிறப்பினுக்;கிற்றைநாண்முதல்
குந்தியும்பாண்டுவுமென்றுகொண்மினே."

வேள்விசெய்யக் கோலம் புனைதல்.

92. கனல்வருமின்னையுங்கணவன்றன்னையும்,
முனிவரன்மொழிந்திடமுகூர்த்தமானபின்,
புனைமுடிதிருக்குழற்புழுகுநானமும்
இனிமையிற்சாத்தினாரெண்ணின்மாதரே.

93. கதியொடுபிறைதவழ்கடுக்கைக்காட்டுநல்
நதிதருபுனல்கொடுநானமாட்டினார்,
விதிமுறையறிந்தவர்வேள்விக்கேற்பன
பதியுடனணிந்தனர்பாவைதன்னையும்.

---

88. திதி—நிலைபெறுதல்.

89. இங்கிதத்திந்திரர்—விருப்புடைய இந்திரர்: இந்திர சேனையைக்கண்டு மனம் விருப்புற்ற இந்திரர். புவிமகள் வழக்கின் மங்கலம் எய்தினீர்.

92. புனைமுடியினும் திருக்குழலினும்.

93. கடுக்கைக்காட்டு நல் நதி—(சிவபிரானது) கொன்றைமாலையணிந்த சடாடவியிலுள்ள கங்கை. பதியுடன் பாவையையும் அணிந்தனர் என்க.

### வேறு.

#### யாகசாலையில் அரசர்நுக்கிட்ட வேலை.

94. மாலைமுன்வணங்கிக்,கங்கைமைந்தனைவணங்கி,யாக
சாலையைநோக்கும்வேந்தன்,தம்பியைநோக்கி"முந்நீர்
வேலையின்மணலிற்சாலுமிருசனமருந்தத்,தேவர்
ஆலயத்தமுதமன்னவடிசினீயளித்தி"என்றான்.

95. நாவியின்மதமுஞ்சாந்துநறும்பனிநீருந்தாரும்
வாவியிற்காவிலுள்ளமலர்களுமற்றும்யாவும்
மேவியவரிவில்லாண்மைவிசயனைநல்குகென்றான்;
தூவிலைபளிதமேனைத்துணைவரைவழங்கச்சொன்னான்.

96. தானமுந்தியாகந்தானுந்தபனன்மாமதலையான
மானவன்கொடுக்கவென்றான்;வரம்பிலாநிதிகள்யாவும்
கானலங்கடல்சூழ்வையங்காவலன்காவலென்றான்;
ஏனையோர்பலரும்வேந்தனேவலின்முறைநின்றாரே.

#### யாகம் செய்தல்.

97. தழல்வளரோமகுண்டத்தலத்தினில்வலத்திலாதித்
தழல்வருபாவைவைகத்,தருமன்மாமதலையாங்கண்
தழல்புரைவேதவாணர்தாளிணைவணங்கித்தானும்
தழலெனவிருந்தான்,எல்லாவினைகளுந்தகனஞ்செய்வான்.

98. கடகரியுரிவைபோர்த்தகண்ணுதற்கடவுண்மாறி
இடம்வலமாகப்பாகத்திறைவியோடிருந்தவாபோல்,
உடல்கலையுறுப்புத்தோலினொளித்திடப்போர்த்து,வேள்விக்
கடனினுக்குரியவெல்லாங்கவினுறச்சாத்தினானே.

99. பொங்குறுமோமச்செந்தீப்புகையினைப்போர்த்ததென்னப்,
பைங்கடல்பருகுமேகம்பரிதியைமறைத்ததென்ன,
அங்குறுப்புடனேவெங்கோட்டரிணத்தொக்கருணமேனி
எங்கணும்புதைப்ப,வேள்வித்தொழிலிலேயிதயம்வைத்தான்.

---

95. இலை—வெற்றிலை. பளிதம்—கர்ப்பூரம். வழங்க—கொடுக்க.

96. தபனன்மாமதலை — கன்னன். கானல் — கழிக்கரைச்சோலை. வையங்காவலன்—துரியோதனன்.

98. கரியுரிவை—யானைத்தோல் கலை உறுப்புத்தோல்-மானினது உறுப்புக்களோடு கூடிய தோல்.

99. அரிணத்தொக்கு—மான்றோல். அருணம்—சிவப்பு.

100. தருமன்மாமதலையந்தச்சடங்குசொற்படியேதொட்டுப்,
புரிவுடைத்திசைகளுன்சூட்புறகளாற்காவல்செய்து,
விரிசுடர்த்தீகண்மூன்றும்விண்ணவர்முகங்களாகச்
சுருவையான்முகந்தநெய்யைச்சுருதியாலோமஞ்செய்தான்.

101. முழுதுணர்வரம்பில்கேள்விமுனிவரர்குழாமுமென்றும்
அழிவிலாமலரோனுதியமரர்தங்குழாமுஞ்சூழ,
எழுசுடர்முத்தீப்பொங்க,எழுபகலோமஞ்செய்தான்,
பழுதறுபாண்டுசெய்தமாதவம்பலித்ததொப்பான்.

வேறு.

102. இம்முறையிராசசூயமாமகத்துக்
கெழுதொகுநான்மறையுரைத்த
அம்முறை,இமையோரானவர்க்கெல்லாம்
அரும்பெறலவியுணவருளி,
மும்முறைவலம்வந்திருவருஞ்சுவாகை
முதல்வனைமுடியுறவணங்கித்,
தெம்முறையரசரிடுதிறையனைத்தும்
தானமுந்தியாகமுஞ்செய்தான்.

103. ஏழுநாளிவ்வாறிமையவரெவர்க்கும்
இமகிரிதனிலயன்வேட்ட
ஊழிமாமகம்போலியற்றி,எண்டிசையின்
உயர்புனல்யாவையுஞ்சொரிய,
ஆழிவாய்முகிலுமின்னுமேயென்ன
அரும்புனலாடியபின்னர்,
வாழிபாடினர்களாரதன்முதலோர்;
மங்கலம்பாடினர்புலவோர்.

104. பெயர்பெறுமுனிவரெவர்க்குமெண்ணிரண்டாம்
பேருபசாரமும்வழங்கி,
உயர்வறவுயர்ந்தவேள்வியினுயர்ந்தோன்
உயர்குலப்பாவையுந்தானும்

---

100. புல்—தருப்பை. தீமூன்று—காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி என்பன. முகம்—வாய். சுருவை—நெய்த்துடுப்பு.

101. பலித்தது—பயன்பட்டது.

102. சுவாகைமுதல்வன்—சுவாகாதேவி நாயகன், அக்கினிதேவன். பாத்திர மறிந்து கொடுக்குங்கொடை தானம்; ஏனைக்கொடை தியாகம்.

மயர்வறுஞானவடிவமாய்நின்ற
மாயனைமனனுறவணங்கி,
அயர்வறுகங்கைமகன்பதம்பணிவுற்,
றறன்மகன்வினவினனம்மா.

முற்பூசைக்குரியவர்.

105. "பரிதியுமதியும்வன்னியுமுதலாம்
பல்வகைக்குலத்துமுற்பவித்த
நரபதிகுழாத்தில்யாவரேபெறுவார்
நவிலுமுற்பூசைமற்?"றென்னக்,
கருதியவசுக்களெண்மரிலொருவன்
கங்கையின்றிருமகன்,தெய்வச்
சுருதிமாமகஞ்செய்புனிதனைநோக்கித்,
தொன்முனிவரரையுநோக்கி,

106. "ஆர்கொலோவக்ரபூசனைக்குரியார்
அரசரில்?அந்தணீர்,உரைமின்,
பாரெலாந்தத்தங்குடைநிழற்புரக்கும்
பார்த்திவர்யாரையுமுணர்வீர்,
தாருலாமார்பீர்,"என்றலும்,வியாதன்
தருமன்மாமதலையைநோக்கிக்
"காரின்மாமேனிக்கரியசெந்திகிரிக்
கண்ணனுக்குத"வெனக்கதித்தான்.

107. என்றபோதந்தவேத்தவையிருந்தோர்
யாவருமிருந்துழியிருந்து,
"நன்றுநான்மறையோர்சிகாமணியுரைத்த
நவிரறுநல்லுரை"என்றூர்.
சென்றபோர்தோறும்வென்றியேபுனையும்
சேதிபபதிசிசுபாலன்
கன்றினனிதயம்;கருகினன்வதனம்;
கனலெனச்சிவந்தனன்கண்ணும்.

---

106. அக்ரபூசனை—முற்பூசை, கதித்தான்—சொன்னான்.
107. சேதிபபதி—சேதிபர் தலைவன்.

வேறு.

சிசுபாலன் கிருஷ்ணனை இகழ்தல்.

108. "பூபாலரவையத்துமுற்பூசைபெறுவார்புறங்கானில்வாழ்
கோபாலரோ?"என்றுருத்தங்கதிர்த்துக்கொதித்தோதினன்,
காபாலிமுனியாதவெங்காமனிகரானகவினெய்தியேழ்
தீபாலடங்காதபுகழ்வீரகயமன்னசிசுபாலனே.

109. "சூரன்குலத்தோர்குபேரன்குலத்தோர்சுடர்ப்பாவகப்
பேரன்குலத்தோர்கண்முதலோரிருந்தார்கள்பெயர்பெற்றபேர்
வீரங்கொலோ?வாகுசாரங்கொலோ?செல்வமிச்சங்கொலோ?
பூரம்புராசிப்புவிக்கென்றுமுதுவோர்கள்பொதுவோர்கொலோ!

வேறு.

110. "பாராசரமுனிவன்மதலை,ஆம்படியே
பகர்ந்தனைபழுதிலாமாற்றம்.
இராசமண்டலத்தின்மரபினுல்வலியால்
ஏற்றமுந்தோற்றமுமுடையோன்,
சுராசுரர்வியக்குங்கஞ்சனைமலைவான்
சூரன்மாமகன்வயிற்றுதித்தான்;
தராதலமிசையேபிறந்திவன்கற்ற
தெத்தனையிந்திரசாலம்.

111. "சொற்றவாநன்று;சுகன்றிருத்தாதை,
சூதிகைத்தோன்றியபொழுதே
பெற்றதாய்தானும்பிதாவுமுன்வணங்கப்
பேசலாவுரையெலாம்பேசிக்,
கற்றமாயையினற்கன்னியங்கிருப்பக்
காரிருட்காளிந்திநீந்தி,
அற்றைநாளண்டரானவர்க்கெல்லாம்
அரசனுக்கருமகவானன்.

---

108. ஏழ்தீபால்—ஏழுதீவின்கண். மூன்றனுருபு ஏழன்பொருளில் வந்தது.

109. சூரன்—சூரியன். குபேரன்—சந்திரன். பாவகப்பேரன்—அக்கினி. வாகுசாரம்—தோள்வலி. பூர்—பூரம், நீர்ப்பெருக்கு.

110. மதலை—விளி. ஆம்படியே பகர்ந்தனை—தக்கவாறு சொன்னய், இது கற்கறிக்க நன்றாட்டலை என்பது போலுங் குறிப்பு. இந்திரசாலம்—ஜாலவித்தை.

111. சொற்றவா நன்று என்பதும் குறிப்புமொழி. சூதிகை—பிரசவித்த வீடு. அண்டர்—இடையர்.

112. "ஈன்றதாய்வடிவங்கொண்டுளமுருகி
இணைமுலைத்தடத்தணைத்தமுதம்
போன்றபால்கொடுப்பப்,பொழிமுலைப்பாலோ
பூதனையுயிர்கொலோநுகர்ந்தான்?
சான்றபேருரலாலுறிதொறுமெட்டாத்
தயிருடனறுநெய்பாலருந்தி,
ஆன்றதாய்கண்டுவடத்தினிற்பிணிப்ப,
அணியுரலுடனிருந்தழுதான்.

113. "பாடினுன்மறுகுபெருநகைவிளைப்பப்;
பாவையர்மனைதொறும்வெண்ணெய்க்
காடினுன்;அவர்கண்முகந்தொறுமெச்சில்
ஆக்கினுன்;அகன்றுமுன்னோட
ஓடினுன்;ஆவின்பேரிளங்கன்றை
உயிருடனொருதனிவிளவிற்
சாடினுன்;அரவின்முதுகையும்புள்ளின்
தாலுவோடலகையும்பிளந்தான்.

114. "பின்னியகுஞ்சிக்கோவலர்பயந்த
பேதையர்பலரையுங்களிந்த
கன்னியின்மருங்குமோரையின்மருங்கும்
கலையெலாநாணிடக்கவர்ந்தே,

* * * *

மூரிவிற்காமனுமானுன்;
அன்னியனல்லன்;மற்றிவன்பெருமை
அரசரிலாரறியாதார்?

வேறு.

115. "அண்டர்க்கெல்லாமரசானவாகண்டலனுக்கண்டரினி
துண்டற்கமைத்தபாலடிசிலுண்டானொருநாளொருதானே;
கொண்டற்கன்மாரியைமுன்னங்கோவர்த்தனமேகுடையாகச்
சண்டப்ரசண்டவேகமுடன்றடுத்தான்;ஏறுபடுத்தானே.

---

113 மறுகு—தெரு. அகன்று—நீங்கி, விலகி. பெண்கள் அகன்று ஓட அவர் பின் ஓடினுன்.

114. ஓரை—மகளிராடுங்களம். கலை—வஸ்திரம். இப்பாட்டுக்களில் குறித்த கதைகளைப் பாகவதத்திற் காண்க.

115. ஏறு—இடபம்.

116. "பம்பிப்பரந்தபுன்மேயும்பசுவின்கன்றுங்கோபாலர்
தம்புத்திரருமம்புயத்தோன்றன்மாயையினுலொளித்திடுநாள்,
எம்புத்திரருமெங்கோவினிளங்கன்றினமுமெனத்தெளிய
வம்பிற்புரிந்தமாயையிவனல்லாலியாவர்வல்லாரே?

117. "அதிரப்பொரும்போரஞ்சினனேவஞ்சாமைகொலோதெரியாது;
மதுரைப்பதியுந்தன்கிளேயும்வாழ்வுந்துறந்து,வாரிதிவாய்
எதிரொப்பில்லாத்துவாரகையென்றியற்பேர்படைத்தமாநகரின்
முதிரப்பொரும்போர்த்தம்முனுட னிருந்தான்பன்னுண்முரணறுத்தே.

வேறு.

118. "கஞ்சனெனுமாமனேடுகாளேயமர்செய்தான்;
வஞ்சனேயினுலமருமெத்தனேமலேந்தான்;
தஞ்சமெனவேமருவுதமரிலொருதானே
விஞ்சிவிரகாலுரியமேதினிபுரந்தான்.

வேறு.

119. "அன்னேயுந்தாதைதானுமருஞ்சிறையகத்துவைக,
முன்னிருமூவர்முன்னோர்தங்களேமுருக்குவித்தான்;
பின்னெருதமையன்றன்னேப்பெற்றதாயிருவரென்றென்
றிந்நிலஞ்சொல்லவைத்தான்;இவனேவேறியாவரொப்பார்?"

120. என்றுகொண்டெண்ணிநாவுக்கிசைந்தனவுரைகளெல்லாம்
ஒன்றினென்றுச்சமாகவுயர்ச்சியுந்தாழ்வுந்தோன்றக்
கன்றியமனத்தினேடுங்கட்டுரைசெய்தான்மன்றல்
தென்றலஞ்சோலேசூழுஞ்சேதிநாடுடையகோவே.

வேறு.

கிருஷ்ணன் தேரேறுதல்.

121. திண்ணியநெஞ்சினனுனசிசுபாலன்
தன்னெஞ்சிற்றீங்குதோன்ற
எண்ணியமன்பேரவையினியம்பியபுன்
சொற்களெலாமெண்ணியெண்ணிப்,

---

116. பம்பி—நெருங்கி.

117. மதுரைப்பதி—வடமதுரை (Muttra). தம்முன்—தமையன், பலதேவன்.

119. பின்னெருதமையன்—பலதேவன். தாயிருவர்—தேவகியும் உரோகிணியும்.

120. உச்சம்—அதிகம், கட்டுரைசெய்தான்—மிகவும் சொன்னுன்.

புண்ணியர்வந்தினிதிறைஞ்சும்பூங்கழலோன்
வேறொன்றும்புகலானாகிப்,
பண்ணியதன்புரவிநெடும்பருமணித்தேர்
மேற்கொண்டான்,பரிதிபோல்வான்.

**கிருஷ்ணன் சிசுபாலனைப் போருக்கழைத்தல்.**

122. "எங்நாட்டிலவனிபருமீண்டியவித்
தொல்லவையினிசைத்த,சேதி
நன்னாட்டுக்கதிபதியாநரபால,
நின்மாற்றநன்றுநன்று;
கன்னாட்டும்படியாகவிருவோரும்
பொருதறிதும்,கடிதே"கென்று
தன்னாட்டமிகச்சிவந்தான்,கரியவடி
வினிற்புனைந்ததண்டுழாயோன்.

123. சேதிகுலநரபதியுஞ்செருப்புரிதற்
கஞ்சுவனோ?தேரிலானான்.
மோதிவலம்புரியூத,முகிலினங்கண்
முழங்குவபோன்முரசமார்ப்ப,
வேதியரோடவையிருந்தவேந்தரெலாம்
அதிசயிப்ப,விமானந்தோறும்
சோதிமுடியமரர்வர,நகர்ப்புறத்தில்
அமர்புரியத்தொடங்கினாரே.

**கிருஷ்ணனுக்கும் சிசுபாலனுக்கும் யுத்தம்.**

124. ஆதிவருகதிப்பரியுமணிவயிரத்
திண்டேருமனிலமென்ன
மோதிவருகடகளிறுங்காலாளும்
பொருதுரகர்முடிகள்சோர,
யாதவனாநரபதியுமிருங்கிளையும்
பெருங்கிளையோடெதிரிலாத
சேதிகுலநரபதியுஞ்செய்தவமர்
சுராசுரரிற்செய்தாருண்டோ?

---

121. பண்ணிய—பூட்டிய.

122. இசைத்த நின்மாற்றம் என்றியையும். கல்நாட்டல்—போர்க்களத்துப் பொருது பட்டோனுடைய பெயரும் பீடுமெழுதி அவனது ஞாபகார்த்தமாகக் கல் நடுதல். தொல். பொருள். புறத்திணையியல், 5—ம் சூத்திரம் பார்க்க.

124. ஆதி—நேரோடல்.

### வேறு.

125. யானைமேல்வருநிருபரும்,திறல்யானைமேல்வருநிருபரும்,
சோனைமாமுகிலேழுமேநிகரென்னவம்புதொடுத்தலில்,
தானையாறுநிறைந்துபல்லணியாகி,மிஞ்சியசதுர்விதச்
சேனையாவையுமெய்சிவந்தன,சிந்தைமாமலர்கருகவே.

126. ஓரிரண்டுவரூதினிக்குளும்,உயர்தடங்கிரியொப்பவே,
ஈரிரண்டுவிதத்திணுலுமியம்பலுற்றனவெண்ணில்பஃ
றேரிரண்டணியுருளிஞேடுருள்சென்றுமுட்டின,தீயிடிக்
காரிரண்டெதிர்மலையுமாறென,அண்டபித்திகலங்கவே.

127. சிங்கமொன்றுடனொன்றுசீறுசெருக்கெனும்படி,சேனைவாய்
வங்கர்கொங்கணர்துளுவராரியர்மகதரொட்டியர்மாளவர்
கங்கர்கொங்கர்தெலுங்கர்சீனர்கலிங்கர்சிங்களர்கௌசலர்
அங்கர்சோனகரானவீரரதிர்ந்துதங்களினமர்செய்தார்.

128. வெருவரும்படிகம்புகொம்புவிதங்கொண்மாமுரசாதிய
இருவர்தம்படைகளினுமூழியெழுந்தகாலெனவதிர்தலான்,
மருவியெண்டிசைமுகமுநிற்பனமத்தவாரணகன்னமும்
திருவிரும்புபுயத்துவானவர்செவிகளுஞ்செவிடானவே.

129. புடைபடக்கிளையாகிவந்தெதிர்பூதுரந்தரர்யாவரும்
தொடைபடப்பரிவுறுமனத்தொடுதொந்தயுத்தமுடற்றினர்,
குடையெடுத்தனர்,இருவரும்பெறுகொடியெடுத்தனர்,கொற்றவெம்
படையெடுத்தனர்,மாமறைப்பசுபாலனுஞ்சிசுபாலனும்.

130. வேலினால்வடிவாளினால்வரிவில்லினாலுரைபெற்றவெங்
கோலினாலிருவருமுனைந்,திருகுன்றமொத்தனதேரினர்,
மாலினால்வருமத்தயானைகண்மலைவதொத்து,மதித்தபோர்
நூலினால்வழுவறமலைந்தனர்,நுண்மையாவினுநுண்ணியார்.

---

125. சோனை – விடாமழை. தானையாறு – அறுவகைப்படை; அவை மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை யென்பன.

126. ஈரிரண்டு விதத்தேர் – அதிரதம், மகாரதம், சமரதம், அர்த்தரதமென்பன. பித்தி–சுவர்.

127. சோனகர்–யவனர்.

128. கம்பு–சங்கு. ஊழி–உகமுடிவு. கன்னம்–காது.

129. துரந்தரர்–பாரஞ்சுமப்பவர். தொடைபட–தொடர்ச்சியாக. தொந்தம்–வெங்கோபம். பசுபாலன்–கோபாலன் (கிருஷ்ணன்).

130. கோல்–அம்பு.

## வேறு.

### சிசுபாலன் வதை.

131. வெஞ்சினமுடுகவொருவருக்கொருவர்
வெல்லலுந்தோற்றலுமின்றி
வஞ்சினமுரைசெய்துள்ளமுமெய்யும்
வாகுபூதரங்களும்பூரித்
தெஞ்சினர்தமைப்போலிளைத்தபின்,இனிவான்
ஏற்றுதல்கடனெனக்கருதிக்
கஞ்சனைமுனிந்தோனிவன்முடித்தலைமேற்
கதிர்மணித்திகிரியேவினனே.

132. ஏவியதிகிரி,வீரரைத்துறக்கம்
ஏறவிட்டிடுமிரவியைப்போல்,
மேவியபகையாமைத்துனன்முடியை
விளங்குகோளகையுறவீசி,
ஆவிகளனைத்துநிறைந்தொளிசிறந்த
அச்சுதனலைகொள்பாற்கடலில்
தீவியவமுதமமரருக்களித்தோன்
திருக்கரஞ்சென்றுசேர்ந்ததுவே.

133. சேதிமன்னவன்றன்முடியினைநெடியோன்
திகிரிசென்றரிந்திட,ஒருபொற்
சோதிமற்றவன்றனுடலினின்றெழுந்து
சுடரையும்பிளந்துபோய்,மீண்டு
மாதிரமனைத்துமொளியுறவிளக்கி,
மண்ணளந்தருள்பதமடைய,
வேதியர்முதலோர்யாவரும்வேள்விப்
பேரவைவேந்தருங்கண்டார்.

---

131. வஞ்சினம்—சபதம். பூதரம்—பூமியைத்தரிப்பது (மலை).

132. மைத்துனன்—சிசுபாலன். கோளகை—அண்டகோளகை. தீவியம்—திவ்வியம்; தெய்வத்தன்மையுள்ளது.

133. சுடர்—சூரியன்.

134. ஈதொருபுதுமையிருந்தவாவென்பார்,
இந்திரசாலமோவென்பார்;
மாதொருபாகனல்லதிக்கண்ணன்
மதிகுலத்தவனலனென்பார்;
கோதொருவடிவாம்புன்மொழிகிளைஞா
கூறினும்பொறுப்பரோவென்பார்;
காதொருகுழையோனிளவலைத்தேர்மேற்
கண்டுதங்கண்ணிணைகளிப்பார்.

135. அதிசயித்திவ்வாறிருந்துழியிருந்தோர்
அனைவருமாழியான்றன்னைத்
துதிசெயத்,தருமன்சுதன்முதலெவரும்
தொழுதெதிர்வந்துவந்திறைஞ்ச,
விதியெனப்பொருதவெங்களத்திடையவ்
வியாதமாமுனியெடுத்துரைப்ப,
மதியுடைக்கடவுள்வீடுமன்முதலாம்
மன்னவர்யாவருங்கேட்டார்.

சிசுபாலன் பூர்வசரிதம்.

136. "ஐவகைவடிவாயெங்குமாய்நின்ற
அச்சுதனமலனனந்தன்
செய்யொளிதிகழும்பங்கயக்கண்ணன்
திருமகள்கொழுநனைக்காணத்
துய்யசெய்தவத்துத்துருவாசமுனிவன்
சேறலும்,சுடர்கொள்வைகுண்ட
மெய்யுறுகோயிற்றுவாரபாலகரவ்
வேதபண்டிதன்றனைவிலக்க,

137. "விலங்கியவிருவர்தம்மையுமந்த
வெஞ்சினமுனிவரன்வெகுண்டு
'துலங்கியகோயிற்றுவாரம்விட்டவனி
தோன்றுமின்போய்'எனச்சபித்தான்.

134. கோது—குற்றம். காதொருகுழையோன் — ஓர்குண்டலன் (பலதேவன்).
135. கடவுள்வீடுமன்—தெய்வத்தன்மையுடைய வீடுமன்.
136. ஐவகை வடிவு—பரம் (பரவாசுதேவன்), வியூகம் (அநிருத்தன், பிரத்தியும்நன், சங்கரிடணன்), விபவம் (இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்கள்), அர்ச்சாவதாரம் (அர்ச்சனைக்காகிய விக்கிரக வடிவம்), அந்தர்யாமித்துவம் (ஆன்மாக்களினுள்ளேவசிப்பது) என்பன.
137. விலங்கிய—விலக்கிய; (விகாரம்).

அலங்கலந்துளபமெளலியானதுகேட்
டந்தணன்றனையெதிர்கொண்டு
'கலங்கியதுவாரபாலர்நின்சாபங்
கடப்பதெக்காலமோ?'என்றான்.

138. "என்றலுமுனிவன்பரிந்'திவரெழுகால்
இன்புறுமன்பராய்வருதல்,
அன்றிமும்மடங்குபகைவராய்வருதல்,
அல்லதிங்குன்பதமணுகார்,
மன்றலந்துளபமாலையாய்,'என்ன,
மலர்மகண்மகிழ்நனுமவரைக்
'கன்றியமறையோன்சாபநீர்கடக்குங்
கருத்துமற்றியாதுகொல்"என்றான்.

139. "மற்றவரிறைவன்மலரடிவணங்கி
'வான்பிறப்பேழுறமாட்டேம்;
உற்றுமுப்பவமுமுனக்குவெம்பகையாய்
உற்பவித்துன்பதமுறுவேம்,
வெற்றிகொண்முதிர்போர்நேமியாய்,'என்றார்.
விமலனுங்கொடியவெஞ்சாபம்
அற்றிடும்வகையவ்வாமவர்க்களித்தான்.
அசுரராயவரும்வந்துதித்தார்.

140. "இரணியனிரணியாக்கனென்றுரைக்கும்
இயற்பெயரிருவருமெய்தி
முரணியகொடுமைபுரிந்துமூவுலகும்
மொய்ம்புடன்கவர்ந்திடுநாளின்,
அரணியினழல்போனரவரியுருவாய்
அச்சுதன்றாணிலங்குரித்துத்
தரணியினுகிராற்பிளந்துமுன்னுகத்தில்
தன்பகைசெகுத்தனன்;பின்னும்,

141. "அரக்கர்தங்குலத்துக்கதிபதியாகி
ஆண்டுபோய்மீண்டுமங்குரித்துத்
தருக்குடனவர்களிருவருமுறையால்
தம்பியுந்தமையனுமானார்;

138. எழுகால்—எழுதரம். மும்மடங்கு—மூன்றுமுறை.
140. முன் உகம்—ஆதியுகம்,

சிரக்குவையுடனேபுயவரைநிரையும்
சிந்த, அச்சிந்துவினிடையே
சரக்குவைசொரிந்தானமலன், அவ்வுகத்துத்
தசரதன்றன்வயிற்றுதித்தே.

142. "இந்தநல்லுகத்திலிறைவனுக்கன்னோர்
இருவருங்கிளைஞராயெய்தி
வந்தனர்வஞ்சக்கஞ்சமாமனும்இம்
மைத்துனன்றானுமாய்மன்னோ
சிந்தையிலுணர்வீர்" என்றுகொண்டுரைத்தான்,
சித்தசித்துணர்ந்தருண்முனியும்.
அந்தமன்னவையினிருந்துளோரெல்லாம்
அமலனைத்துதித்ததிசயித்தார்.

143. வீடுமன்விதுரன்துரோணனேமுதலாம்
விரகிலாவுணர்வுடைவேந்தர்
நாடினர்மனத்தில்; புளகமுற்றுடலம்
நயனநீர்மல்கநாக்குழறிப்
பாடினர்; புகழ்ந்துபரவினர்; பரவிப்
பைந்துழாய்கமழ்மலர்ப்பாதம்
சூடினர்; சுருதிக்கெட்டொணாதொளிரும்
சுடர்மணித்துய்யசோதியையே.

**யாகம்முடிந்து தருமன் அரசரைப் பூசித்தல்.**

144. அப்பொழுதமலன், அருஞ்சினமொழிந்தாங்
கருளுடையறத்தின்மைந்தனைப்பார்த்
"திப்பொழுதரசரானவர்க்கெல்லாம்
இருஞ்சிறப்புதவு"கென்றிசைப்ப,
முப்பொழுதுணருமுனிவரன்பணியான்
முறைமுறைபூசனைபுரிந்தான்,
மைப்பொழுதொளிகூர்வெண்ணிலவுமிழும்
மதிகுலத்துதித்தருண்மன்னன்.

---

**142.** சித்து அசித்து—சேதனப்பொருளும் அசேதனப்பொருளும்.
**144.** மைப்பொழுது—இரவு.

### முநிவரும் அரசரும் விடைபெற்றேகல்.

145. அருமறைமுறையாலாசனைமுனிவர்
அனைவருமாசிசொற்றருளித்
தருநிறைபயிலுந்தத்தமவிபினம்
சார்ந்தனர்தகவுடன்.மீளக்
கருமுகிலனையமேனியங்கருணைக்
கண்ணனுங்கிளையுடன்றுவரைத்
திருநகரடைந்தான்சென்று,வன்றிறல்கூர்
சேதிபப்பெரும்பகைசெகுத்தே.

146. அராவவெங்கொடியோனாதியாவுள்ள
அரசருந்தந்நகரடைந்தார்;
விராடனும்யாகசேனனுமுதலாம்
வேந்தருந்தம்பதிபுகுந்தார்;
சராசனத்தடக்கைச்சல்லியன்முதலோர்
கிளையுடன்றம்புரஞ்சார்ந்தார்.
பாராவருமுதன்மைப்பாண்டவர்கடற்பார்
பண்புறத்திருத்தியாண்டிருந்தார்.

147. முன்குலத்தவர்க்குமுனிகுலத்தவர்க்கும்
மும்மதக்கைம்முகக்களிற்று
மன்குலத்தவர்க்கும்வான்குலத்தவர்க்கும்
வரம்பிலாவகைக்கலைதெரியும்
நன்குலத்தவர்க்கும்பொருளெலாநல்கி,
நாடொறும்புகழ்மிகவளர்வான்,
தன்குலக்கதிர்போற்றேய்ந்தொளிசிறந்தான்,
தண்ணளித்தருமராசனுமே.

---

145. நிறை—நிறைந்த. விபினம்—காடு, ஆசிரமம்.

146. அராவம்—அரவம், (விகாரம்.)

147. வான்குலத்தவர்—தேவர். கலைதெரியும் நன்குலத்தவர்—புலவர்,

## சூதுபோர்ச்சருக்கம்.

### கடவுள்வாழ்த்து.

1\. ஞானமாகியபரம்பரவமிழ்தமாய்நவிரறுமயக்காகி
வானமாயுடன்வாயுவாய்த்தேயுவாய்வனமுமாய்மண்ணுகித்
தானமாமறைமுறைமையிற்பற்பலசராசரங்களுமாகி
ஏனமாயிவையனைத்தையுமருப்பினலேந்தினனையாண்டோன்.

### வேறு.

2\. தாமரையனையசெங்கட்டாணிபணிராசசூய
மாமகமுற்றித்தங்கண்மாநகர்புகுந்தபின்னர்,
நாமருபனுவன்மாலைநாகவேறுயர்த்தசெல்வக்
கோமகனிளைஞரோடுங்குறித்ததுகூறலுற்றும்.

3\. கணைவரும்வரிவில்வாழ்க்கைக்கடுங்கனலனையதோற்றத்
துணைவருங்கானுங்கங்காசுதனுமற்றெவருஞ்சூழ,
இணைவருமாசரில்லாவிகலரியேறுபோல்வான்,
கிணைவருமோதைமூதூர்க்கிளர்நெடும்புரிசைபுக்கான்.

4\. சென்றுழியெவருந்தத்தஞ்செழுமனையெய்திவாசம்
துன்றியவமளிகங்குற்றுயில்புரிந்தெழுந்தபின்னை,
நின்றவெம்பரிதித்தோற்றந்தொழுது,தந்நியமமுற்றி,
வன்றிறலரசன்கோயின்மன்னவைவந்துசேர்ந்தார்.

### துரியோதனுதியர் ஆலோசனை.

5\. இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்தெதிர்ந்தவேந்தர்
நிறஞ்செறிகுருதிவேலானினைவிஞேடிருந்தபோதில்,
அறஞ்செறிதானம்வண்மையளவிலாதளித்துநாளும்
புறஞ்சுவர்கோலஞ்செய்வான்,பூபதிக்குரைக்கலுற்றுன்.

6\. "தாதவிழ்குவளைமாலைத்தருமன்மாமதலைபெற்ற
மேதகுவேள்விச்செல்வம்வேந்தரில்யாவர்பெற்றூர்?
ஏதளவவன்றன்வாழ்க்கை?யாரினியெதிருண்"டென்று
பாதகநினைவைத்தானும்பகர்ந்தனன்பரிவுகூர.

---

1\. நவிர்—புன்மை. வனம்—நீர். தானமாம்—தனக்கு இடமாகிய.
3\. கிணை—மருதநிலப்பறை.
5\. நிறம்—மார்பு. நினைவு—எண்ணம், விசாரம்.
புறஞ்சுவர்கோலம் செய்வான்—உள்ளழுக்கைச் சுத்தஞ்செய்யாமல் வெளிச் சுவரை அழகுசெய்பவன்; கன்னன். "புறஞ்சுவர் கோலஞ்செய்து" என்னுந் தொடர் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை 5—ம் பாசுரத்தில் வருவது.
6\. பாதகநினைவு—பாவத்துக்கேதுவான எண்ணம்.

7. விதரணவிநோதன்சொன்னவார்த்தையும்வேந்தர்வேந்தன்
இதயமுமொன்றாய்நின்றவியற்கையைச்சகுனிகண்டு,
"புதைநகமடங்கனாளும்புறஞ்செலாதொடுங்குமானான்
மதகரிவிடுமோ?"என்றான்,வசையிசையாகக்கொள்வான்.

8. சொல்லிடைநஞ்சுகக்குந்துன்மதியுடையதம்பி
வில்லிடைநின்றுதம்முன்வெம்மனங்களிக்கச்சொன்னான்,
"அல்லிடைநிறைந்ததேனுமமுதவெண்கிரணத்திங்கள்
எல்லிடையிரவிமுன்னரெவ்வுழிநிகர்க்கும்?"என்றே.

9. தமையனும்,தம்பிசொன்னதன்மையையுணர்ந்து,நீதி
அமைதருதந்தைகேட்ப,அவன்பெருந்தாதைகேட்பக்,
கமைபெறுவிதுரன்கேட்பக்,கார்முகக்கன்னன்கேட்ப,
இமையவன்றுரோணன்கேட்ப,யாவருங்கேட்பச்சொல்வான்.

10. "இந்திரன்முதலாவுள்ளவிமையவர்சிறப்புச்செய்யச்,
சுந்தரப்பொற்றோள்வேந்தர்தொழில்புரிந்தேவல்செய்ய,
மந்திரமுனிவர்வேள்விமறைநெறிமுறையிற்செய்யத்,
தந்திரவெள்ளச்சேனைத்தருமனேதலைவனானான்.

11. "இனியவன்சின்னாட்செல்லினெம்மனோர்வாழ்வுங்கொள்ளும்;
துணைவரும்புரவித்திண்டேர்த்துணைவருஞ்சூரரானார்;
முனைவருகூர்முள்வேலைமுளையிலேகளையினல்லால்
நனிவரவயிர்த்தபோதுநவியமுமடியுமன்றே.

12. "போதுறவிரைந்துமற்றப்புரவலன்செல்வம்யாவும்
பேதுறக்கவர்ந்திலேனேல்,பின்னையார்முடிக்கவல்லார்?
மோதுறப்பொருதேயாதல்,மொழியொணாவஞ்சமொன்று
தீதுறப்புரிந்தேயாதல்,கொள்வதேசிந்தை"என்றான்.

7. விதரண விநோதன்—கொடையைப் பொழுதுபோக்காக உடையவன்; கன்னன். வேந்தர் வேந்தன்—துரியோதனன். பின்னடி யிரண்டும் ஒட்டென்னு மணி.

8. தம்பி—துச்சாதனன். வில்லிடை—விற்கிடைதூரம். பின்னடி யிரண்டும் ஒட்டென்னுமணி.

9. கமை—பொறுமை. இமையவன்—பிராமணன்.

11. நனிவர — மிகுதியாக. வயிர்த்த—வயிரங்கொண்ட. பின்னிரண்டடியையும் "இளைதாக முண்மரங் கொல்க களையுநர்—கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்னும் குறளோ டொப்பிடுக.

12. போதுற—காலம்பெற. பேதுற—மயக்கமடைய.

13. என்னலும்,உரியதம்பி"எழுவதேகருமமின்றே.
செந்நெலின்வாளைபாயுஞ்செல்வநாடுடையகோமான்
றென்னலங்கெய்த,வீமனகைத்ததும்,நேயமான
கன்னலின்மொழியாண்மூரல்விளைத்ததுங்கண்டிலீரோ?.

14. "எத்தனைதரணிவேந்தர்யாகநல்விழாவில்வந்தார்?
அத்தனைபேரில்யாமுமொருவராயடங்கிநின்றேம்;
கொத்தனையுகளுநன்னீர்க்குருநிலக்கோமான்நந்த
முத்தனையன்றிப்பின்னையாரையேமுதன்மைசெய்தான்?

15. "நந்தகோமகனுக்கெல்லாநல்கியமுதன்மைகண்டு,
வந்தகோவெள்ளஞ்சேரவாய்திறவாமனிற்ப,
எந்துகோவிவனுக்கிந்தமுதன்மையென்றெதிர்ந்துமாற்றம்
தந்தகோமடியுமாறுசமரமும்விளைப்பித்திட்டான்.

16. "தன்புயவலியும்நான்குதம்பியர்வலியும்மாயன்
வன்புயவலியுங்கொண்டேமண்ணெலாங்கவரவெண்ணி,
இன்புயச்சிகரிமன்னர்யாரையுந்தன்கீழாக்கி,
மின்புபலனையான்மேன்மைவிளக்கவேவேள்விசெய்தான்.

17. "எல்லியல்பரிதியன்னயதுகுலமன்னன்றானும்
சல்லியமிகுபோர்செய்யச்சல்லியன்றன்மேற்சென்றான்;
சொல்லியகருமம்வாய்ப்பச்சூழ்வலைப்படுத்திக்கொண்ட
வல்லியமென்னச்சூழ்ந்துமலைவதேகருமம்"என்றான்.

18. வேந்தனுமொருப்பட்"டந்தவெண்ணெய்வாய்க்கள்வன்மீளப்
போந்திவர்தமக்குமின்றுபொருதுணையாகமாட்டான்.
சாந்தணிகுவவுத்தோளான்சல்லியன்வலியன்.இப்போ
தாந்தகவெண்ணில்,வல்லேயைவரையடர்க்கலாமே.

---

13. இராசசூயயாகஞ் செய்தவிடத்தில் பளிங்காலமைத்த தளத்தைக் கண்டு, அதனை நீர்நிலை என்றெண்ணித் துரியோதனன் தன் ஆடையைத் தூக்கினன்; பின்பு ஒரு தடாகத்தைக் கண்டு, பளிங்குத்தல மென்றெண்ணிச் சென்று அதனுள் விழுந்தான்; பளிங்கால் செய்த கதவால் மூடப்பட்டிருந்த வாயிலைத் திறந்திருக்கின்றதென்று சென்று முகத்தை முட்டிக்கொண்டான். இவைகளைக் கண்டு வீமன் முதலியோர் சிரித்தார்கள். வியாசபாரதம், சபாபர்வம், 77-ம் அத்தியாயம் பார்க்க.

14. கொத்தனை—ஒரு மீன்; கொத்து அனை என்று பிரித்து அனை என்னும் மீன்கூட்டம் என்றும் பொருள்கொள்ளலாம். நந்தமுத்தன் – நந்தகோபன் புத்திரன்.

15. எந்துகோ—எதற்கு; (திசைச்சொல்).

17. சல்லியம்—கலக்கம்.

19. "வஞ்சனைகொண்டேயாதல்,வாரணமணித்தேர்வாசி
நஞ்சனையவராலாதல்,நாளையேயழித்தல்வேண்டும்.
கஞ்சனைமலையவெண்ணிக்கரியபேய்முலைப்பாலுண்ட
நெஞ்சினனெய்தாமுன்னநீர்விரைந்தெழுமின்"என்றான்.

20. "வெஞ்சிலைகுனித்தோரம்பியான்விடின்,வெருண்டவேந்தர்
எஞ்சிவிண்புகுவரல்லால்யாவரேயெதிர்க்கவல்லார்?
வஞ்சனைகொண்டுவெல்லமதிப்பது,வாளால்வெல்ல
அஞ்சினமாயினன்றோ?"என்றனனங்கர்கோமான்.

21. யாவருமொழிந்தவார்த்தையின்புறக்கேட்டுப்,பின்னும்
தாவருபுரவித்திண்டேர்த்தானையான்சகுனிசொல்வான்:—
"மேவருகன்னனன்றி,விண்ணுளோரெதிர்ந்தபோதும்,
கோவருமுன்றிலானைக்கொடுஞ்சமர்வெல்லலாமோ?

22. "இடிம்பனைப்பகனைவேவிகற்சராசந்தன்றன்னை
நெடும்பணைப்புயத்தால்வென்றநிகரிலாவீமனிற்கக்,
கடும்படைப்பெருமையால்வெங்காணலாமென்பராயின்,
தொடும்படைத்தடக்கைவீரர்க்குத்தரஞ்சொல்லலாமோ?

23. "துப்புறழமுதச்செவ்வாய்த்திரௌபதிதுணைத்தோள்வேட்டுக்
கைப்படுசிலையினோடுங்காவலர்கலங்கிவீழ,
மெய்ப்படுமுனியாய்வந்துவிசயன்வில்லிறுத்தபோதும்,
இப்பொழுதிருந்தவீரர்யாவருமிருந்திலேமோ?

24. "இப்பிறப்பொழியவின்னுமேழெழுபிறப்பினானும்
மெய்ப்பிறப்பற்றநீதித்தருமனைவெல்லமாட்டோம்.
ஒப்பறப்பணைத்ததோளாய்,உபாயமெங்கேனுமொன்றால்
தப்பறச்சூதுகொண்டுசதிப்பதேகருமம்"என்றான்.

25. தன்பெருமாமன்சொல்லத்,தரணிபன்றம்பிதானும்
"வன்பெருஞ்சேனைகொண்டுமலைவதற்கவர்களஞ்சார்;
இன்பெருநேயமிக்கவிவன்மொழிப்படியேமாயப்
புன்பெருஞ்சூதுகொண்டுபொருவதேபுந்தி"என்றான்.

---

23. முனி—பிராமணன்.
24. சதித்தல்—அழித்தல்.

26. கோமகனெஞ்சுநாவுங்குளிர்ந்துபேருவகைகூர்ந்து,
மாமனைத்தவிசின்கண்ணேவருதியென்றிருத்திக்கொண்டு,
‘‘பாமருபனுவன்மாலைப்பாண்டவர்தம்மைநின்கைக்
காமருசூதால்வெல்லுங்கருத்தெனக்குரைத்தி’’என்றான்.

[அப்போது சகுனி]

27. ‘‘மன்ன,நின்செல்வக்கோயின்மண்டபமொன்று,தேவர்
பொன்னுலகினுக்குமில்லையென்பதோர்பொற்பிற்றாக,
பன்னுநூற்சிற்பங்குன்றாப்பஃறொழில்வினைஞர்தம்மால்
நன்னில்விரிவுண்டாக,நாளையேயியற்றுவிப்பாய்.

28. ‘‘‘மண்டபங்காணவெம்முன்வருக’என்றழைத்துவந்தால்,
கண்டுகண்களித்துமற்றக்காவலரிருந்தபோதில்,
‘புண்டரவிசாலநெற்றிப்புரவல,பொழுதுபோக
அண்டரும்விரும்பும்வன்சூதாடுதும்வருக’என்பேம்.

29. ‘‘அதிர்முரசுயர்த்தகோவுமையெனத்துணியும்.பின்னை
மதிமருளியற்கைத்தாகுமாயவெஞ்சூதுதன்னால்
விதியெனப்பொருது,வாழ்வுமேதகுமரசுந்தங்கள்
பதிமுதற்பலவுந்தோற்கும்படிசெகுத்திடுவல்’’என்றான்.

30. இன்னதேகருமமென்றென்றிளைஞரும்விழைந்துசொன்னார்.
அன்னதேகருமமாகவவர்வழியொழுகுநீரான்,
தன்னதேயாகுமிந்தத்தலமெனுங்கருத்தான்,மாமன்
சொன்னதேதுணிந்துமார்புந்தோள்களும்பூரித்திட்டான்.

31. வில்லினுயர்ந்தவென்றிவிதுரனைநோக்கிக்,கொற்ற
மல்லினுயர்ந்தபொற்றோள்வலம்புரிமாலைவேந்தன்,
வல்லினுபாயஞ்செய்யமாதுலனுரைத்ததெல்லாம்
சொல்லினன்.அவனுங்கேட்டுச்சொல்லெதிர்சொல்லலுற்றான்.

32. ‘‘வையமுமரசும்வாழ்வும்வாங்குகைகருத்தேயாயின்,
பொய்யடர்சூதுகொண்டுபுன்மையிற்கவரவேண்டா;
ஐயநின்றந்தையோலையைவருக்கெழுதிவிட்டால்,
மெய்யுறமறுத்துச்சொல்லார்;வேண்டினதருவரன்றே.

---

28. புண்டரம்—நெற்றியிலிடுங்குறி. 29. ஐயென—விரைவாக
31. வல்—சூதாடுகருவி; இங்கே சூதாடுதலை உணர்த்திற்று

33. “தந்தைதன்னேவலாலேதருமனுந்தம்பிமாரும்
இந்தமண்ணுடல்கைவிட்டெரிகெழுகானஞ்சேர்வார்;
முந்துறநமதேயாகுமுழுதும்வாழ்(வு).எழுதுஞ்செம்பூம்
பைந்தொடையரசர்கேட்டாற்பாவமும்பழியுமாகா.

34. “தீதினால்வரித்து,நெஞ்சந்தீயவாறடுமாயச்
சூதினால்வென்றுகொள்கைதோற்றமும்புகழுமன்று;
போதினான்முகனுமாலும்புரிசடையவனுங்கேள்வி
ஆதிநான்மறையுமுள்ளளவுமிவ்வசையறாதே.”

35. என்றவனுரைப்பக்கேட்டே,எரியெழுமனத்தனாகி,
“ஒன்றியகேண்மைத்தந்தைக்கொருபுடைவாரமுண்டோ?
வன்றிறன்மைந்தர்வாழ்வுவாங்கியின்றெமக்குத்தந்தால்,
புன்றொழில்வசையேயன்றிப்புகழ்கொலோபுகல்வதம்மா!

36. “நினக்கிதுதொழிலாலென்றும்;நேயமுமவர்கண்மேலே;
எனக்குயிர்த்தந்தைநீயென்றியானுனைமகிழ்ந்துகாண்பன்;
உனக்குமுன்கிளைக்குநாளுமுண்டியும்வாழ்வுமிங்கே;
மனக்கருத்தங்கே”என்றான்மாசுணத்துவசன்மாதோ.

37. மைந்தனங்குரைத்தமாற்றமனத்தினையீரப்,பின்னும்
வெந்திறல்விதுரனுற்றுவிளம்புவனென்பமாதோ:—
“புந்தியின்மறுவிலாதோய்,‘புதல்வரிலொருசாரன்பு
தந்தையர்க்கில்லை’என்றாய்;யானுமத்தந்தையன்றோ?

38. “நீங்களுமவருநேயநெறிமுறைதவறாதென்றும்
வாங்குநீருததியாடைமண்ணின்மேல்வாழ்தலுற்றால்,
பாங்கலாவரசரெல்லாம்பணிந்துநும்வாயினிற்பர்;
ஓங்கியபுகழும்வாழ்வுமொருப்படவளருமன்றே.

39. “உங்களினவருநீருமுளம்பிரிந்தெதிர்த்தீரானால்,
தங்களினெதிர்ந்தாரம்மாகுருகுலத்தலைவரென்னாப்,
பொங்களிநிகழுங்கஞ்சப்புரவலனொழிவுகண்ட
திங்களினுயர்ச்சிபோலத்,தெவ்வருந்திகழ்வரன்றே!

---

33. எழுதும்—(கீர்த்தி) எழுதப்படும்.

34. தோற்றம்—வலிமை. கேள்வி—எழுதாக்கேள்வி, சுருதி.

37. ஈர—அறுக்க. என்றாய்—என்று சொன்னாய்.

39. கஞ்சப்புரவலன்—சூரியன்.

40. "ஆதலாலுறுதிசொன்னேன்.ஆமுறைதெரிந்துகோடி.
ஏதிலார்போலயானுமினியுனக்கியாதுஞ்சொல்லேன்.
தீதலாதுணராவஞ்சச்சிந்தையார்பரிந்துகூறும்
கோதலாதுனக்கிங்கேலா"தெனச்சிலகூறினானே.

41. "நிறுத்தறம்வளர்ப்போனெஞ்சினீதியும்,குரவரேவல்
மறுத்தெதிருரைக்குமென்பால்வடுவும்,நீவரைந்துகண்டாய்.
செறுத்தவராவிகொள்வாய்,அடியனேன்செய்ததெல்லாம்
பொறுத்தருள்"என்னக்கையாற்போற்றினன்முறுவல்செய்தான்.

42. செழுந்திருவிரும்புமார்பன்செப்பியகொடுமைகேட்டு,
விழுந்திரண்மாலைத்திண்டோள்விதுரனும்வெகுண்டுமுன்னித்,
தொழுந்தகைமௌலிவேந்தன்சூழ்ச்சியிற்கிசைவுறாமல்
எழுந்துதன்கோயில்புக்கானிகலரியேறுபோல்வான்.

துரியோதனன் மண்டபங்கட்டல்.

43. புரிவிலாமொழிவிதுரன்போகலும்,புரிவிலொன்றும்
சரிவிலாவஞ்சமாயச்சகுனியுந்தம்பிமாரும்
விரிவிலாமனத்தோடெண்ணும்விசாரமேவிசாரமாக,
வரிவிலான்"விரைவினீண்டோர்மண்டபஞ்சமைக்க"என்றான்.

44. பெருந்தகையேவன்மாற்றம்பிற்பட,முற்பட்டோடி,
இருந்ததொல்வேந்தர்,தத்தமிருக்கையினியன்றவெல்லாம்,
அருந்திறன்மள்ளராலும்,அணிமணித்தேரினாலும்,
பொருந்தவேகொணர்வித்,தாங்கட்பொற்சுவரியற்றினாரே.

45. சங்கையில்சிற்பநுண்ணூற்றபதியர்,தகவுகூரச்,
செங்கையினமைத்தகோலச்சித்திரத்தூணநாட்டி,
அங்கையிலருணரத்நத்தணிகொளுத்திரமுமேற்றிக்,
கங்கையினுயர்ந்தமுத்தின்கற்றையான்முற்றும்வேய்ந்தார்.

46. ஓவியஞ்சிறக்கத்தீட்டி,ஒண்கொடிநிரைத்துச்,செஞ்சொற்
காவியமாக்கட்கெல்லாங்கருத்துறுகவினிற்றாகி,
வாவியபுரவித்திண்டேர்மன்னவனினைவுக்கேற்ப,
ஏவியவினைஞர்தம்மாவியல்புறச்சமைந்ததன்றே.

---

40. ஏதிலார்–அயலவர். கோது–உள்ளீடில்லாத (உறுதிபயவாத) வார்த்தை.

42. முன்னி–எண்ணி.

43. புரிவு–முன்னது மாறுபாடு பின்னது பிரியம்; பின்னது செய்கை என்றுமாம். விசாரம்–ஆராய்ச்சி.

45. தகவுகூர–அழகுமிக.

46. ஓவியம்–சித்திரம். காவியமாக்கள்–கவிகள், புலவர்.

47. மன்னவைக்கானபைம்பொன்மண்டபஞ்சமைந்ததென்று
தன்னவைக்குரியோர்சொல்லச்,சகுனியுந்தானுநோக்கிச்,
சொன்னவைக்கேற்றதென்று,தொழுதகுதாதைதன்பால்
மின்னைவைத்தொளிரும்வேலான்மேவினன்விளம்பலுற்றான்.

48. "அரும்பெறலைய,கேட்டி,அடியனேன்கருத்துமுற்றக்
கரும்புயறவழுஞ்சென்னிக்கதிர்மணிக்கூடமொன்று
பெரும்புகழ்நகரினீண்டுச்சமைத்தனன்;பெருமைகாண
வரும்படிதூதொன்றேவுன்மைந்தரை,விரைவின்"என்றான்.

49. மகன்மொழிநயந்துகேட்டு,வாழ்வுறுதந்தைதானும்
மிகநயந்துருகி,"நல்லவிரகினால்வெல்லலுற்றீர்;
அகநெடும்போர்செய்தாலுமைவரையடர்க்கொணாது.
சகுனியையன்றிவேறார்தரவல்லார்தரணி?"என்றான்.

திருதராட்டிரன் பாண்டவரை அழைத்துவர விதுரனை அனுப்பல்.

50. விழியிலாவென்றிவேந்தன்,விதுரனையழைத்து,"நீபோய்
மொழியில்,ஆருலகின்மற்றுன்மொழியினைமறுக்கவல்லார்?
பழியிலாவிசைகொணீதிப்பாண்டவர்வந்துன்மைந்தர்
வழியிலாயொழுகும்வண்ணமருட்டிநீகொணர்தி"என்றான்.

51. "தம்பியர்விழைவாற்கூடஞ்சமைத்தபேரழகுகாண
இம்பர்வந்தெமையுமெய்தியேகுகவிரைவின்"என்னப்
பைம்பொனின்ஞேலமீதுபண்புறவெழுதி,"இன்னே
எம்பியுமேகு"கென்றான்;ஏவலினவனும்போனான்.

விதுரன் இந்திரப்பிரஸ்த மடைதல்.

52. காரெனக்களிறுசுற்றக்,காற்றெனப்புரவியீண்டத்,
தேரினுக்கொருவன்றன்னைச்சிலம்பெனத்தேர்கள்சூழ,
வீரரிற்பலரும்போற்ற,விதுரனுமிரண்டுநாளாற்
பாரினுக்குயிரேபோலும்பாண்டவர்நகரிசேர்ந்தான்.

---

49. விரகு—உபாயம். அகம்—வருத்தம்.

வேறு.

53. புரியுமொண்கதிர்கவினுறுபொலிவினாற்
பொன்னுலகாமென்ன,
அரியபைம்பொனின்மணிகளினிறைந்தசீர்
அளகைமாநகரென்னத்,
தெரியுமன்புடனறங்குடியிருப்பதோர்
தெய்வவான்பதியென்ன,
விரியும்வெண்கொடிப்புரிசைசூழ்வளநகர்
விழிகளித்திடக்கண்டான்.

54. ஊடெலாநறும்பொய்கை;நீள்வாவியின்
உடம்பெலாமலர்;பூவின்
தோடெலாமெழுசுரும்பினம்;மதுகரச்
சொல்லெலாஞ்செழுங்கீதம்;
பாடெலாமிளஞ்சோலை;மென்பொங்கரின்
பணையெலாங்குயிலோசை;
நாடெலாநெடும்புனல்வயல்;கழனியின்
நடுவெலாம்விளைசெந்நெல்.

55. அருகெலாமணிமண்டபம்;அவிரொளி
அரங்கெலாஞ்சிலம்போசை;
குருகெலாம்வளர்பழனம்;அப்புள்ளெலாம்
கூடலின்புறவூடல்;
முருகெலாங்கமழ்துறையெலாந்தரளம்;வெண்
முத்தெலாநிலாவெள்ளம்;
பருகலாம்புனனதியெலாம்;நீரெலாம்
பங்கயப்பசுங்கானம்.

56. ஆனகம்பலமுழங்கவந்தெதிர்பணிந்
தாதுலர்க்கமுதன்ன
போனகம்பரிந்திடுநெடுஞ்சாலையே
புகுந்தமாமறுகெல்லாம்;

56. ஆனகம்—படகவாத்தியம். மறுகு—தெரு. ஞானகஞ்சுகன்—ஞானமாகிய சட்டையையுடையவன்; தருமன்.

வானகந்தனையமையுமென்றும்பரும்
மண்ணின்மேல்வரவெண்ணும்
ஞானகஞ்சுகனகரியையெங்ஙனே
நாம்வியப்பதுமன்றோ!

பாண்டவர் விதுரனை எதிர்கொள்ளல்.

57. வந்தனன்சிலைவிதுரனென்றோடிமுன்
வந்தவருரையாமுன்,
தந்தைதன்றனிவரவறிந்திளைஞரும்
தருமனுமெதிர்கொண்டார்.
சிந்தையன்புடன்றொழுதெழுமைந்தரைச்
செங்கையாற்றழீஇக்கொண்டே
அந்தணம்புலிகண்டபைங்கடலென
அவனுமெய்குளிர்ந்திட்டான்.

58. கொண்டுதந்தையைத்தாமும்வண்கொடிமதிற்
கோபுரநெடுவீதி
அண்டராலயமெனத்தகுகோயில்சென்
றடைந்தபின்,அடல்வேந்தர்
வண்டுதாமரைமலரெனச்சூழுமா
மலரடிபணிந்தேத்தக்,
கண்டுவாழ்வுடனவர்க்கருள்புரிந்துதன்
கருத்தினால்விடையீந்தான்.

விதுரன் தான்வந்த காரியம் கூறல்.

59. தானுமைந்தரோரைவருமொருபுடை
தனித்திருந்துழி,வண்டு
தேனுகர்ந்திசைமுரல்பசுந்தொடையலான்
திருத்தகமொழிகின்றான்:—
"கோனுவன்றுதன்றிருமுகமெழுதி,நீ
கொணர்கமைந்தரையென்ன,
யானும்வந்தனனேவலால்;அழைத்ததற்
கேதுவுமுளதன்றே.

57. அம் தண் அம்புலி—அழகிய குளிர்ந்த சந்திரன்.
58. வாழ்வு—வாழ்த்து.

60. "நீபுரிந்தநல்வேள்வியின்கடன்கழித்
தியாவருநெடுமாடக்
கோபுரந்திகழ்மூதெயில்வளநகர்க்
கோயில்புக்கனமாக,
நூபுரந்திகழிணையடியரம்பையர்
நோக்கருங்கவின்கொண்ட
மாபுரந்தரனிவனெனவிருந்தனன்
வலம்புரிமலர்த்தாரான்.

61. "தம்பிமாரொடுந்தகையிலாத்துன்மதிச்
சகுனிதன்னொடுமெண்ணிக்
கும்பமாமணிநெடுமுடி நிரைத்தவண்
கூடமொன்றமைக்கென்ன,
அம்புராசிசூழ்மண்டலத்தரசெலாம்
அடங்குபோரவைத்தாக
உம்பராலயநிகரெனச்சமைத்தனர்
ஒட்பநூலுணர்வுற்றோர்.

62. "பெற்றதந்தையோடுள்ளுறுமுணர்வெலாம்
பேசி,மண்டபந்தன்னில்
கொற்றவன்குடிபுகும்பொழுதுன்னையுங்
கூட்டி,மன்னவைமுன்னர்
மற்றமாதுலனெஞ்சமோவஞ்சமோ
மாயமோவகுத்தாங்குக்
கற்றசூதுநின்னுடன்பொருநினைவினன்;
கருத்தினித்தெரியாதே."

63. 'திருதராட்டிரன்றிருமுகமிது'எனச்,
சென்றிறைஞ்சினன்வாங்கி,
விரதமாக்கமென்றறிந்தறம்பேணுவான்
வினைஞர்கைக்கொடுத்திட்டான்.

---

60. புரந்தரன்—இந்திரன். வலம்புரி—நந்தியாவர்த்தம்.

61. கும்பமாமணிநெடுமுடி—கலசங்கள் வைத்த மணிகளாலாகிய நெடுமுடி. ஒட்பநூல்—சித்திரநூல். ஒட்பம்—அழகு.

63. விரதம் ஆக்கம்—தருமமே செல்வம். இரதமாற்றம்—இனிய சொல்.

இரதமாற்றமங்கெழுதியபடியினால்
இயம்பலும், அதுகேட்டு
"வரதனாற்பணிப்புறுதொழில்யாவர்நாம்
மறுக்க?"என்றுரைசெய்தான்.

64. மூத்ததாதைதன்னேலையுமிளையவன்
மொழியுமொத்தமைநோக்கி,
வார்த்தைவேறுமற்றொன்றையுமுரைத்திலன்,
மனுநெறிவழுவாதோன்,
"சேத்தநாகவெங்கொடியவன்கொடியவன்
சிந்தையினிலேதோன்றக்
கோத்தகோவைநன்றாயினும், தருவதோ
குருகுலந்தனக்"கென்றான்.

65. "அடியுமாண்மையும்வலிமையுஞ்சேனையும்
அழகும்வென்றியுந்தத்தம்
குடியுமானமுஞ்செல்வமும்பெருமையும்
குலமுமின்பமுந்தேசும்
படியுமாமறையொழுக்கமும்புகழுமுன்
பயின்றகல்வியுஞ்சேர
மடியுமால்;மதியுணர்ந்தவர்சூதின்மேல்
வைப்பரோமனம்?வையார்.

66. "மேதகத்தெரிஞானநூற்புலவரும்
வேத்துநூலறிந்தோரும்
பாதகத்திலொன்றென்னவேமுன்னமே
பலபடப்பழித்திட்டார்;
தீதகப்படுபுன்றொழிலிளைஞரிற்
சிந்தனைசிறிதின்றித்
தோதகத்துடனென்னையோசகுனிதன்
சூதினுக்கெதிர்?"என்றான்.

---

64. சேத்த—சேந்த, (விகாரம்.)

65. அடி—சந்ததி. படி—பூமி.

66. தோதகம்—வஞ்சகம். என்னையோ என்பதை எடுத்துரைக்க; எடுத்துரைத்தலால் தோன்றும் பொருளையும் நோக்குக.

67. தன்கருத்தினினிகழ்ந்தவாறிம்முறை
தருமன்மைந்தனுங்கூறி,
"என்கருத்தினாற்பெறுவதென்? விதியினை
யாவரேயெதிர்வெல்வார்?
மன்கருத்தையுமவன்றிருவுளநிகர்
மகன்கருத்தையுநோக்கி
நின்கருத்தைநீயுரை" என, விதுரனும்
நிகழ்ந்தனவுரைக்கின்றான்.

68. "இங்குநீயெனக்கியம்பியயாவையும்
யானுமன்னவர்கேட்ப
அங்குநீர்மையின்மொழிந்தனன். என்மொழி
ஆர்கொலோமதிக்கிற்பார்?
பொங்குநீருடைப்பூதலத்தலைவ, கேள்,
புனைந்தநின்னிதயத்துத்
தங்குநீர்மையிற்புரி"கெனப்புதல்வனைத்
தந்தையுந்தகச்சொன்னான்.

69. "அன்றுதாழ்புனற்றுறையினிற்கழுநிரைத்
தரியவஞ்சனைசெய்தான்;
குன்றுபோலுயர்வாழ்மனைக்கொடுந்தழல்
கொளுத்திவன்கொலைசூழ்ந்தான்;
வென்றுசூதினில்யாவையுங்கவரவே
விரகினாலழைத்திட்டான்;
என்றுதானமக்கன்புடைத்துணைவனாய்
இருந்ததவ்விகலோனே?

70. "முளையிலேயுயிர்கொல்வதோர்கடுவிடம்,
முற்றிவன்காழேறி
விளையில், எதுசெய்யாது? மற்றவருடன்
விழையுநண்பினிவேண்டா.

வளையிலேதமேபுரிந்துமேன்மலைந்திடும்
வன்படைகொடுமோதிக்
களையிலேநமக்கிருப்புள"தென்றனன்
காற்றருள்கூற்றனன்னான்.

[அப்பால் விசயன்]

71. "தேறலார்தமைத்தேறலும்,தேறினர்த்
தேறலாமையும்,என்றும்
மாறலாருடன்மலைதலும்,மாறுடன்
மருவிவாழ்தலும்,முன்னே
ஆறலாதனவரசருக்கென்றுகொண்
டாசநீதியிற்சொன்னார்.
கூறலாதனசொல்வதென்?செல்வதென்
கொடியவனரு"கென்றான்.

தருமன் அத்தினபுரம்போக நிச்சயித்தல்.

72. விசையனிவ்வகைமொழிந்ததும்,முந்துறு
வீமன்மாற்றமுங்கேட்டே,
இசைபெறும்பெயர்நகுலனுந்தம்பியும்
வகுதறகாதென்றார்;
"வசையறும்புகழ்த்துணைவரின்றுரைத்ததே
வார்த்தையாயினும்,பெற்ற
அசைவிலன்புடைத்தந்தைசொன்மறுப்பதோ?"
என்றனனறஞ்செய்வான்.

73. "ஆவியார்நிலைபெறுபவர்,நீதிகூர்
அரியவான்புகழன்றிப்?
பாவியானதங்கணுகுருதொழியினும்
பலித்திடுநினைவின்றி;

71. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்—குறள், 510.

72. வார்த்தை – கருமம். cf. மன்னுடனிகல்வது வார்த்தையன்று – நிரைமீட்சி–75.

73. முதலடிக்கு உலகத்திலே புகழன்றி உயிர் நிலைபெறுவதில்லை என்பது கருத்து. பாவி–வரம்பாலது.

மேவியாளுடையையன்வந்திருக்கவும்
வேரிவண்டெழுமன்றல்
காவியார்தொடைக்காவலனேவனும்
மறுப்பதுகடனன்றே.

74. "நாளையேகுதுமெந்தைவாழத்திரு
நகர்க்"கெனத்தருமன்றன்
காளையேவலின்முரசறைந்தெங்கணும்
காவலர்குழூஉக்கொண்டார்;
வேளையேறியவரும்படைத்தலைவரும்
மேல்வரும்புனலூடு
வாளையேறுதண்பழனநாட்டெறிபடை
மன்னரும்வந்துற்றார்.

75. மாதுரங்கமமணிநெடுந்தேர்மத
வாரணம்வயவீரர்
சாதுரங்கமுந்தந்திரத்தலைவரும்
தாணிமன்னருஞ்சூழ,
மீதுரங்கவின்கெழுபெருஞ்சேனைசூழ்
வேந்தன்மாநகருற்ற
போ,துரங்கமுநெளிந்தனபஃறலை
பொறுமையினிருநான்கும்.

## பாண்டவர் புறப்படல்.

76. ஐந்துபூதமேநிகரெனப்,புலன்களோ
ரைந்துமேயெதிரென்ன,
ஐந்துகாவுமேபொரும்வனப்,பணிமுடி
ஐந்துமேநேரென்ன,

---

74. தருமன்றன்காளை—தருமபுத்திரன். காவலர்—நகரிகாவலர். வேளை ஏறிய—முருகனிற் சிறந்த.

75. துரகம், துரங்கம், துரங்கமம்—குதிரை. உரகம், உரங்கம், உரங்கமம்—பாம்பு. இருநான்கு உரகமும்—அட்டநாகமும் பல்தலை பொறுமல்நெளிந்தன என்க. பல்தலை பஃறலை என்றாயிற்று. தமிழில் லகரத்துக்கும் தகரத்துக்கும் மயக்கமில்லை; லகரத்தின்முன் தகரம்வரின் றகரமாகும். இந்த விதிப்படி பல்தலை பற்றலை என்றாதல்வேண்டும் பற்றலை என்பது, பலதலை என்று பொருள்படாது, வேறுபொருள் படுதலின் பஃறலை என்று லகரம் ஆய்தமாகத் திரிந்தது; பஃறோர் என்பது மது.

76. ஐந்துகா—சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம் என்னும் ஐந்தருக்களின் சோலை. ஐந்துவாளி—புஷ்பபாண மைந்து; அவை தாமரை, சூதம், அசோகம், முல்லை, நீலம் என்பன. ஐந்து வேள்வி—கடவுள் பிரமம் பூத

ஐந்துவாளியேயுறழ்வென,வேள்வியோ
ரைந்துமேயொப்பென்ன,
ஐந்துவாசமேதாமென,வைவரும்
ஐந்துதேர்மேல்கொண்டார்.

77. விழியினெஞ்சின்வானெருப்பினீடுகதியின்
விதிபடைப்பினிற்றோன்றிப்
பொழியும்வெண்கதிரைவகைமதியுமப்
பொழுதுதித்தனவென்ன
மொழியுமைந்துபொற்றனிக்குடைநிழற்றின;
முழுமதிவடிவின்கண்
இழியும்வெண்சுடர்க்கற்றையிற்சாமரம்
இரட்டினவிருபாலும்.

யானைப்படை.

78. வன்றபோதனரினுமிகுபொறையன,
வலனுயர்வன,எண்கோ
என்றபோதகத்தானையின்பெருமையை
எங்ஙனம்புகல்கிற்பாம்!
நின்றபோதுடன்முகிலிடைமறைந்தது;
நிரைநிரைநெறிப்பட்டுச்
சென்றபோதுவெம்படைக்கடற்செய்ததோர்
சேதுபந்தனம்போலும்.

---

மானிடர் தென்புலத்தாரென்றைவகை வேள்வி. (பிங்கலம்) ஐந்துவாசம்-தக்கோல மேல மிலவங்கஞ் சாதிக்காய்—கர்ப்பூர மென்றிவை கமழ்பஞ்ச வாசம். (பிங்கலம்).

77. அத்திரிமுனிவருடைய கண்ணினும், விஷ்ணுவினுடைய இருதயத்தினும், அக்கினிதேவனுடைய முகத்தினும், திருப்பாற்கடலினும், பிரமிருட்டியினுஞ் சந்திரோற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது.

78. கோ—மலை. சேதுபந்தனம்—அணைக்கட்டு.

குதிரைப்படை.

79. சுற்றுநீளமுமுயாமுநிகர்ப்பன:
சுழியின்மிக்கன;தீமை
அற்றுமேதகுநிறத்தன;கவினுடை
அவயவத்தனவாகி,
எற்றுமாமணிமுரசமுஞ்சங்கமும்
எனுங்குரன்மிகுத்,திப்பார்
முற்றுமாதிரத்தளவுமைங்கதியினுன்
முடிப்பனவிமைப்போதில்;

80. ஆளினெஞ்சமும்வார்த்தையுஞ்செங்கையும்
ஆசனத்தொடுதாளும்
கோளிலின்புறக்குறிப்பன;எவற்றினும்
குறைகளற்றனவாகி
யாளிகுஞ்சரம்வானரமுதலிய
இயக்கினுல்விசும்பெங்குந்
தூளிகொண்டிடமிடைந்துவந்தன,நெடுந்
துரகதம்பலகோடி.

81. வடிவுடைச்சிலகுரகதம்மரகத
வண்ணமிக்கனவாகிப்,
படியினிற்சிறிதமைவுறமிதித்தில
பவனவெங்கதிபோல.
முடிவிலிப்படிமிசைவரக்கருதியே
முனிவரனுயிர்க்கெல்லாம்
அடிபடைத்தது:படைத்ததிங்கிவற்றினுக்
கவயவங்குறையாமல்.

---

79. ஐங்கதி—மல்லன், மயூரம், வானரம், வல்லியம், சரம். (சூ—நிக.) நச்சினார்க்கினியார் "விக்கிதம் வற்கிதம் வெல்லுமுப கண்டம்—மத்திமஞ் சாரியோடைந்து" என்பர்.

80. ஆள்—பாகன், வாதுவன். இயக்கு—செலவு.

81. குரகதம்—குதிரை. படி—பூமி. முனிவரன்—பிரமன்.

### தேர்ப்படையும் காலாட்படையும்.

82. நீடுமால்வரையடங்கலுநிலைபெற
நிற்குமால்வரை,மண்மேல்
ஓடுமால்வரையிவையெனத்தனித்தனி
யூர்ந்ததேர்பலகோடி.
நாடுமால்வரைகடல்வனமெனுநிலன்
நாலுமேயொன்றாகக்
கூடுமால்;வரையில்;எனப்பரந்தனர்
கொடியவெம்படைவீரர்.

83. அதிர்முழக்கினகருமுகிலேழுடை
அண்டர்கோனகல்வானுக்
கெதிர்முழக்கெனமுழங்கின,தனித்தனி
இன்னியமிடந்தோறும்.
முதிர்முழக்கிபமவற்றினுமும்மடி
முழங்கின.அவைதாமும்
பிதிர்முழக்கெனமுழங்கினவலம்புரி.
உரகரிற்பிழைத்தோர்யார்?

84. எடுத்தநீள்கொடியாடைவானகல்வெளி
எங்கணுநெருங்கிக்கீழ்ப்
படுத்தவானமேவானமாய்மறைந்தது
மீதுறப்பகிரண்டம்.
அடுத்தபூநதிவானதிக்கிலதென
அன்புடனுபகாரம்
கொடுத்தமீனெனக்கால்பொரப்பரந்துபோய்க்
குளித்தனகுளிர்தோயம்.

85. அழுந்தமேலிடுசேனையான்மிகவுநொந்
தமாருக்குரைசெய்யச்
செழுந்தராதலமடந்தைபொன்னுலகிடைச்
செல்லுகின்றதுபோன்,மேல்

---

82. நாடு, வரை, கடல், காடு என்னும் நாலும் ஒன்றாகக்கூடும்; அதற்களை வில்லை. ஆல் அசை.

83. இபம்—யானை. பிதிர்முழக்கு—சிதறினமுழக்கு.

84. கொடியாடைக்குக் கீழுள்ள வானமே வானமாக மேலுள்ள பகிரண்டம் மறைந்தது. பகிரண்டம்—புறவண்டம். தோயம்—நீர்.

எழுந்ததூளிகளிடைவிடாதெங்கணும்
எழுந்தெழுந்தெதிரோடி
விழுந்ததூளியுந்தடுத்தன,நிலனுற
விசும்புறும்படிநின்றே.

86. முன்னர்மாருதமதலையுஞ்சேனையும்
முடுகிவன்பொடுபோதப்,
பின்னர்வாசவன்மதலையுந்தானையும்
பெருந்தகவுடன்போத,
அந்நராதிபரிருவருமிருபுறத்
தரும்படையுடன்செல்ல,
மன்னராதிபன்றாரகாகணத்திடை
மதியெனப்புறப்பட்டான்.

87. அங்கண்மாநிலத்தரசர்தம்மகளிர்பே
ரரும்பிடிமிசைபோதச்,
செங்கண்மாமயில்யாகபத்தினியும்வண்
சிவிகையின்மிசைபோத,
வெங்கண்மாமணிமுரசுயர்த்தருளிய
மெய்தவாமொழிவேந்தன்,
தங்கண்மாநகர்கடந்துவண்சாயையுந்
தபனனுமெனச்சென்றான்.

வேறு.

சகுனநிகழ்ச்சி.

88. ஏவினபல்லியும்,இடத்திலேவாத்
தாவினகுக்கிலும்,தருமன்றன்னெதிர்
வாவினநெடுங்கலை,வாதநூல்வலோர்
ஓவினர்,உரைக்கவுமுணர்கலாமையால்.

மருதநிலம்.

89. மடந்தையராளகமுமாந்தர்மாலையும்
உடைந்துகுகடகரிமதமுமுன்னியே,
தடந்தொறுமுரலளி,தமரினண்புறத்
தொடர்ந்துடன்வரவரச்,சோலையெய்தினார்.

---

87. பிடி—பெண்யானை. சாயை—சூரியன் மனைவி.
88. குக்கில்—செம்போத்து. வாதநூல்—நன்மை பயக்குநூல், சகுனநூல்.

90. சம்பகம்பாடலந்தமாலநாண்மலர்
வம்பெழுமிலைச்சுவார்;வாவியாடுவார்;
செம்பலவாமிரங்கதலித்தீங்கனி
உம்பரினமிழ்தெனவுடனருந்துவார்.

91. பச்சிளங்கமுகின்மென்பாளைசூடுவார்;
அச்செழுங்காய்கனிகவர்ந்தருந்துவார்.
கொச்சையங்கடைசியர்குழுமிவாழ்த்தவே.
வச்சிரம்போல்பவர்மருதநீங்கினார்.

முல்லைநிலம்.

92. தடாநிறைவெண்ணெயுந்தயிருங்கொண்டிடி
ரடாமுடைநாறுதோளாயர்கைதொழப்,
படாமுதன்முல்லையின்பரிமளங்கொளாக்,
கடாமலைவயவர்தண்கானமெய்தினார்.

93. தேனினஞ்செறிதருதெரியல்வேலினான்
நானிரங்கருண்மிகுதருமனாதலால்,
கானிலங்குறைதருகலைகளோடிள
மானினம்பேர்கலாமருங்குவைகுமால்.

94. செருவிளங்காளையர்சேனையின்றிறம்
வெருவிளம்பொதுவியர்விழைந்துகாண்பபோல்,
மருவிளங்கிதழிநீள்வனமுமாமலர்க்
கருவிளங்கண்கொடுகலந்துகண்டவே.

95. புழைநெடுந்தடக்கைவெம்போதகங்களை
மழைமுகிலெனக்களிமயில்களாடின,
தழலெழுகானகந்தண்ணெனும்படி
செழுமதவருவியின்றிவலைவீசவே.

90. வம்பு—வாசனை. பலம்—பழம். ஆமிரம்—மா.

91. கொச்சை—திருந்தாமொழி. இவையிரண்டு பாட்டும் மருத நிலத்தைக் கூறின.

92. தடா—மிடா. முடை—ஓர்வகை நாற்றம். படாமுதல்—படாதவேர். கடாமலை—யானை.

94 இதழி—கொன்றை. கருவிளமலர்—காக்கணம்பூ.

95. இவை நான்கு பாட்டும் முல்லை நிலத்தைக் கூறின.

## குறிஞ்சிநிலம்.

96. வனநெறிகடந்துபோய்,மன்னவர்க்கெலாம்
தினகரனெனத்தகுசெய்யகோலினன்,
இனமுகிறவழ்தலினிரங்குபேரிசைத்
தனிதவண்கிரிநெடுஞ்சாரலெய்தினன்.

97. குன்றுறைகடகரிக்குழாங்கள்சேனையின்
ஒன்றியகளிறுகண்டுட்கியோடின;
துன்றியபிறவிபச்சுவடுகண்டுடன்
சென்றில,வெருண்டிவன்சேனையானையே.

98. வாளியின்வரும்பரிமாவின்வண்குரத்
தூளிகள்விசும்புறத்துன்றியோங்கலால்,
ஆளிகள்சிகரமென்றதிர்ந்துபாய்வன,
மீளியர்வேலின்வாய்வீழ்ந்துமாய்ந்தவே.

## நெய்தனிலம்.

99. வரைநிலங்கழிந்தெறிமகரவாரிதித்
திரைநிலம்புகுந்தனன்,சேனைசூழ்வரப்,
புரைநிலங்கடந்தறம்புரியுநீர்மையான்
உரைநிலங்கடந்தசீருரைகொள்பேரினன்.

100. ஒளிநலந்திகழ்வளையுறங்குநன்னிழல்
களிநறுஞ்சுரும்பிமிர்கண்டல்வேலிசூழ்
புளினமுங்கானலும்பொற்பநோக்கினன்,
நளினமும்புறந்தருநயனவேந்தனே.

---

96. தனிதம்—ஒலி.

98. சிகரம்—மலை. இவை மூன்று பாட்டும் குறிஞ்சி நிலத்தைக் கூறின.

99. புரை—குற்றம். உரைநிலம் — உம்மைத்தொகை; உரையையும் நிலத்தையும். புரைநிலம் என்பது போல உரைநிலம் உரையாகிய நிலம் என்றும் கொள்ளலாம். இந்திரப்பிரத்தமும் அத்தினபுரியும் உள்நாட்டிலுள்ளன; ஆகலான் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போகும் வழியில் நெய்தனிலம் வருவதாகக் கூறுதல் பொருத்தமின்று. நான்கு நிலத்தையும் வர்ணிக்கவேண்டுமென்னும் முறைப்படி வர்ணித்தார்போலும்.

100. கண்டல்—ஒருமரம்; தாழையுமாம். கானல்—கழிக்கரைச்சோலை.

101. பெருங்கடமலைக்குலம்பெயர்த்தும்வந்தன
மருங்கடர்பேரணைவகுக்கவேயென,
இருங்கடகளிறுதேரெண்ணில்சேனைகண்,
டருங்கடல்வாய்திறந்தலறியார்த்ததே.

102. நன்னெடுந்துறையெலாநாளிகேரமோ
டின்னெடும்பனங்கனியெடுத்தருந்தினார்;
புன்னையின்புதுமலர்புனைந்து, கைதையின்
மென்னிழல்வைகினார், விலாசவீரரே.

அத்தினபுரமடைதல்.

103. நாநலம்புனல்கெழுநாடுங்கானமும்
ஏனலம்புனக்கிரியிடமுநெய்தலங்
கானலுமிவ்வகைகடந்து, காவலன்
தூநலந்திகழ்பதிதோன்றவெய்தினார்.

104. அத்தினபுரிதனக்கருகு, வால்வளை
முத்தினநிலவெழுமுகைக்குந்தாமரைத்
தொத்தினபொய்கையும், சுரும்பருமலர்க்
கொத்தினசோலையுங்குறுகிவைகினார்.

பாசறை.

105. மொட்டினபருமணிமுடிகொடேர்ப்பரி
வெட்டின; பரிகளும்வெம்மைபாறின;
மட்டினபரிமளமரங்கள்யாவையும்
கட்டின, கழைபொருகவளயானையே.

106. தரித்தனர்வீரருந்தத்தமாதரும்;
சரித்தனசும்மைகடங்குபண்டியும்;
பரித்தனநன்னிறப்படங்குவீடுகள்
விரித்தனர்; இடந்தொறும்வேந்தரெய்தினார்.

---

101. கடம்—மலைப்பக்கம்.

102. நாளிகேரம்—தென்னை. விலாசம்—விளையாட்டு. இவை நான்கு பாட்டும் நெய்தல் நிலத்தைக் கூறின.

103. புனல்கெழுநாடு — மருதம். கானம்—முல்லை. ஏனலம் புனம் — தினைப்புனம்.

104. முகைக்கும்—கூம்பும். தொத்து—பூங்கொத்து.

105. மொட்டின—மொட்டுக்களையுடைய; மொட்டு—தேர்மொட்டு. வெட்டின—பூட்டுவிட்டன. மட்டு—தேன். கவளயானை மரங்களில் கட்டுண்டன.

106. சரித்தன — சரித்துக்கொட்டின.

107. கைவருதண்டுடைக்காளை,வெஞ்சிலை
தைவருசெங்கையான்,தாரைவெம்பரி
மெய்வருகுமரன்,வேல்விடலை,வேந்தனோ
டைவருமமர்ந்தனராண்மையேறனார்.

108 மறத்திருந்தானையான்வஞ்சமெண்ணினான்
அறத்திருந்திலனெனாவஞ்சி,அந்தவூர்
புறத்திருந்ததுவெனப்,புனிதன்பாசறை
திறத்திருந்தது;பிறதிகர்ப்பவில்லையே.

109. மீண்டவர்வரிசிலைவிதுரனேவலால்
பாண்டவர்வரவுமுன்பணிந்துகூறவே,
மாண்டவர்குறிப்புறுமாயவஞ்சகம்
பூண்டவர்களித்துமெய்புளகமேறினார்.

110. தேசறையிடங்களுந்தேங்கொள்கானமும்
மூசறைமதுகரமொய்த்தசோலையும்
வீசறல்வனநதிவிதமுமேல்கொளப்
பாசறையிருந்தவாபகலாகுமோ.

சூரியாஸ்தமனம்.

111. விருந்துறுசேனைவெவ்வீரரின்னமு
தருந்தினர்மெய்குளிர்ந்தசைவுதீர்தலும்.
'வருந்தினரிவர்;துயில்வதியவேண்டும்'என்
றிருந்தபனனுமிவர்க்கிரவுநல்கினான்.

சந்திரோதயம்.

112. மண்வளர்பெரும்புகழ்மன்னரைவரும்
பண்வளர்நல்லிசைப்பலமகீபரும்
கண்வளர்பாளையங்காணவெண்ணியே,
விண்வளர்குபேரனும்விழைந்துதோன்றினான்.

---

107. தாரை—நேரோடல்.
108. திறத்திருந்தது—விளங்கியிருந்தது. அதற்கு ஒப்பானவை பிறவில்லை.
109. மாண்டவர்—மாட்சிமையுடையவர். 110. அறை—சற்பாறை.
112. பாளையம்—பாசறை (பிங்கலம்).

113. கானிடைசிலசிலகடிகொடேனுமிழ்
தூநிறமுல்லைகண்மலர்ந்துதோன்றுமால்,
வானிடைமுறைமுறைவளருமாமதி
மேனியினமிழ்துமிழ்விந்துவென்னவே.

114. பொருவில்வெண்டுகில்கொடுபொதிந்ததென்னவே
பரிநெடுந்தேர்மிசைப்பானிலாவெழக்,
கிரணவெண்படைக்கெதிர்கெடாமனின்றபே
ரிருளெனவிளங்கினயானைவெள்ளமே.

115. பரியனகந்துகப்பரிந்துமாமதக்
கரிசிலபாகையுங்கைகடந்தன;
அரிவையர்பலர்துயிலனந்தலோடுதம்
சுரிகுழன்மேகலைசோரவோடினர்.

116. நீடுறுதருக்களினிரைத்தமா,அதன்
கோடிறவெறிந்துகைக்கொள்ளுமோதையான்,
மாடுறுபொங்கர்வாய்வதிந்தபுள்வெரீஇப்
பேடொடுசேவன்மெய்பிரிந்துநேடுமால்.

117. ஊதையின்மானசைவுறப்பொரு,வடம்
மோதுறுமுளையுடன்முடுகுவேட்டமாய்த்,
தீதறுபரிசிலசெல்வன்பாசறை
மாதிரமுறப்பலவாளிபோதுமால்.

### சூரியோதயம்.

118. பஞ்சவர்வாழ்வுறுபதம்பொருமையின்
வஞ்சகமியற்றுவான்மனங்கொலென்னவே,
மிஞ்சியகுளிர்மதிமேற்பொருதிகற்
செஞ்சுடரவன்குணதிசையிற்றோன்றினான்.

---

113. விந்து—துளி.

115. கந்து—தூண். பரிந்து—முரித்து. பாகு—பாகன். அனந்தல்—நித்திரை மயக்கம்.

116. பொங்கர்—இலை.

117. பொரு—பொருமல். வடம்—கயிறு. முளை—தறி. முடுகுவேட்டமாய்—விரைந்தோடுதலில் விருப்பமாய். வாளிபோதும்—மண்டலமாயோடும்.

வேறு

119. துயிலுணர்ந்துபைந்தொடையன்மார்பினன்
வெயிலெழுந்துதன்விரதமுற்றபின்,
பயில்பெருஞ்சனம்பாசறைப்படுத்
தெயில்வளைந்தமாநகரியெய்தினன்.

பாண்டவர் திருதராட்டிரனைக் காணல்.

120. இருமருங்கினுமிளைஞர்நால்வரும்
தருமவல்லியுந்தானுமாகவே
அருமடங்கலேறனையவாண்மையான்
குரவனின்புறுங்கோயிலணணினன்.

121. சிந்தையன்புறச்செல்வவாயிலோர்
வந்தமைந்தர்தம்வரவுகூறவே,
முந்தையேவலான்மொழியவுள்புகுந்
தந்தமீளிசேவடிவணங்கினர்.

122. தம்பிமைந்தரைத்தழுவி"நும்மையின்
றம்பிகாணநல்வினையியன்றிலான்;
உம்பிமாரொடுமொத்துவாழ்கநீர்
நம்பி"என்றுநன்னயம்விளம்பினன்.

123. பாவைதன்செழும்பணிவுகூறலும்,
மேவிவாழ்கெனமெய்களிக்கவே
தேவிதன்னுழைச்செல்கவென்றுகொண்
டேவி,மைந்தரோடிவைவிளம்பினன்.

124. "கருமநீதிசேர்கல்விமந்திரம்
பெருமையாண்மைதாள்பீடுநீடுபேர்
தருமம்யாவுநின்றன்மையாதலால்,
அருமையின்றியேயாசுசெல்லுமே.

119. விரதம் உற்றபின்—காலைக்கடன்களைச்செய்து முடித்ததன்பின்.
121. முந்தை—முன்றந்தை, திருதராட்டிரன். 125. நம்பி—விரும்பி.
123. (பாண்டவரோடு) கூடி வாழ்வாயாக என்று வாழ்த்தி.
124. தாள்—முயற்சி. பீடு—வலிமை. அருமையின்றி—எளிதாக.

25. "இகலெறிந்துநீராசசூயமா
மகமுழந்ததும்வண்மைசெய்ததும
திசையடங்கலுந்திறைகொணர்ந்ததும்
தொகுதிகொண்டநின்றுணைவர்கூறினார்.

126. "எண்டிசாமுகத்தெல்லையெங்கணும்
கொண்டதாகுமுன்குருகுலத்துளோர்
துண்டியாமனுந்துணைவர்தம்மொடும்
பண்டுபோலமண்பாவவைகுவீர்.

127. "சேணிருந்துநுஞ்சீர்செவிப்படுத்
தியாணரன்புகூரினிமையன்றியே
பூணலம்பெறும்பொற்பொடுங்களைக்
காணுமாறுசெங்கண்படைத்திலேன்."

128. நேயமுண்டுபோனெஞ்சொடின்னசொல்
தூயமைந்தரைச்சொல்லி,"நீவிர்போய்
யாரையும்பணிந்தெந்தைதாண்மலர்ச்
சேயபங்கயஞ்சேர்மின்"என்னவே,

**காந்தாரியைக் காணல்.**

129. இருந்தமைந்தருமேவலேகடுசென்
றருந்ததிக்குநேரன்னைதன்னையும்
பரிந்திறைஞ்சினார்;பயிலவாழ்த்தினாள்
திருந்துபூணினாள்சிறுவர்தம்மையே.

130. முந்தவந்துதாண்முளரிகைதொழும்
அந்தண்வல்லியுமைவர்மைந்தரும்
வந்துநிற்றலும்,மகிழ்வொடுன்னினாள்,
குந்திசெய்தவங்கூருமென்னவே.

**வீட்டுமனைக்காணல்.**

131. வேயைவென்றதோண்மின்னையங்குவைத்
தியாயையும்பணிந்தெழில்கொடேளினார்
போயகண்டமும்போற்றுகங்கையாள்
சேயையன்புடன்சென்றிறைஞ்சினார்.

---

126. துண்டியாமல்—வேறுபடாமல்.
127. யாணர்—புதுமை.
128. பயில—பலமுறையாக.
131. அகண்டமும்—எல்லாவுலகும்.

132. வேந்தழைத்ததும்விதுரனேவலிற்
போந்தழைத்ததும்புகலவந்ததும்
தாந்தழைக்கவேதந்தைதந்தைமுன்
தேந்தழைத்ததார்ச்செல்வர்கூறினார்.

133. புள்ளலங்கலார்புரிவுரைத்திடக்,
கொள்ளைவன்றிறற்குருகுலேசனும்,
"கள்ளவஞ்சர்வெங்கருவிசெய்யினும்
உள்ளதுண்"டெனாவுண்மைகூறினான்.

### துரோணன் முதலியவரைக் காணல்.

134. தாதைதாதையைத்தாமகன்று,பின்
கோதைவெஞ்சிலைக்குருவை,மைந்தனைக்.
கீதநான்மறைக்கிருபனைச்,செழும்
பாதநஞ்செய்தார்,பரிவொடேகியே.

135. சதுரமாமறைத்தலைவர்தங்களால்
எதிர்மொழிந்தபோராசியெய்தியே,
மதுரமன்றனாண்மாலைமன்னரும்
விதுரன்மந்திரமீளமன்னினார்.

### சூரியாஸ்தமனம்.

136. தமதின்மெய்புறத்தம்மதாகவே
அமிழ்தருந்தியங்கவரிருந்தபின்,
திமிரநாசனன்செய்யமேனியன்
கமலநாயகன்கடலின்மூழ்கினான்.

### மாலைக்காலம்.

137. தினகரன்காந்திகழ்கமண்டலம்,
பனிகொள்செக்கர்தம்படமதாகவே,
இனியவந்தனைக்கெறியும்வேலைசேர்
புனிதரொத்ததப்புன்கண்மாலையே.

---

133. புள்—வண்டு. புரிவு—செய்கை கொள்ளை—மிகுதி. கருவி—காரணம்.

134. பாதம் நம் செய்தார்—பாதத்தை வணங்கினார்கள்; நம்—வணக்கம்.

136. (விதுரன்வீடு) தமது வீடுபோல மெய்ம்மையாகப் பொருந்த அவனுடைய போசனத்தைத் தமது போசனம்போலவே அருந்தி. திமிரம்—இருள்.

138. காய்ந்தமெய்ச்செழுங்கதிரவன்கரம்
ஏய்ந்தவப்பதத்தெழிலெறித்தலால்
ஆய்ந்துபத்திகொண்டடர்பசும்பொனால்
வேய்ந்ததொக்குமால்வேந்தன்மாடமே.

### சந்திரோதயம்.

139. 'மன்குலத்துளோர்வஞ்சகஞ்செயார்
என்குலத்துளோரென்கொலீ'தெனத்
தன்குலத்துளோர்தமைவிலக்கவோ
நன்குலத்துளானுதயநண்ணினான்?

140. குருகுலாதிபன்கொடியநெஞ்சமே
இருணிறைந்ததென்றியாம்வெறுக்கவோ?
மாயிலாதியாமதியுமெண்ணினுட்
கரியனென்னுமாகாணலானதே!

141. உண்ணிலாவுபேரொளிமழுங்கினீள்
வெண்ணிலாவினால்வெளுத்தவெங்கணும்;
கண்ணிலான்மகன்கடுமையஞ்சியிம்
மண்ணிலார்வெளார்வடிவமெய்தினார்?

142. விந்தைவாழ்வுகூர்விறன்மிகுத்ததோள்
முந்தையோதைமாமுரசுயர்த்தவன்
சிந்தைகாமுறத்தெரிவைவந்திளந்
தந்தைகோயிலிற்றானுநண்ணினாள்.

### சூரியோதயம்.

143. மங்குல்சுற்றுமாமண்டபத்திடைக்
கங்குலிற்றடங்கண்டுயின்றபின்,
பொங்குலைப்படும்பொற்றசும்பெனச்
செங்குலக்கதிர்த்திகிரிதோன்றவே,

---

138. பதம்—சமயம். பத்தி—வரிசை.

141. மண்ணில் வடிவமெய்தினார் யார் வெளார் என்க.

142. முந்தை—முதன்மை. விந்தை—வீரலக்ஷ்மி. தெரிவை—திரௌபதி.

143. தசும்பு--குடம்.

144. பாயன்மன்னுகண்படையுணர்ந்துளம்
தூயவன்பொலஞ்சுடர்பணிந்தபின்,
சாயையன்னதன்றம்பிமாரொடும்
சீயமென்னவேதிகழவைகினான்.

145. முனிவரர்க்கெலாமுதன்மையாகவே
தனதனிற்பெருந்தானமுய்த்திடும்;
பனுவல்வித்தகப்பாவலர்க்கெலாம்
கனமெனத்தருங்கனகமாரியே.

146. கண்டுகண்டுதன்கழல்வணங்குமா
மண்டலேசருமாலைமன்னரும்
கொண்டுவாழ்வுறக்,குரகதங்குடை
தண்டுசாமரந்தந்திநல்குமே.

147. பூந்தண்மாமலர்ப்பூவைதன்னொடும்
ஏந்துதோளிணைவணிருந்துழிப்
பாந்தளங்கொடிப்பார்மகீபனைச்
சேர்ந்தமன்னர்தஞ்செயல்விளம்புவாம்.

வேறு.

பாண்டவர் மண்டபம் பார்க்கப் போதல்.

148. தானுமாமனுங்குறித்ததம்பிமாருமங்கர்தங்
கோனுமாசிறந்தைதந்தைகொடுமைக்கைவிதுரனும்
வானுலாவுபுகழ்படைத்தமைந்தனுந்துரோணனும்
ஏனையோரும்வந்துகூடியினிதிருந்தவெல்லையே,

149. "மண்டபத்தினழகுகாணமன்னரைவர்தம்மைநீ
கொண்டிமைப்பின்வருக"என்றுகொற்றவன்பணிக்கவே,
வண்டுசுற்றுமாலைமார்பன்வண்பிராதிகாமிவான்
அண்டர்கற்பமெனவிருந்தவரசர்தம்மையணுகினான்.

144. பாயல் – படுக்கை. கண்படை – நித்திரை.

145. தனதன் – குபேரன். பனுவல்—ஆராய்ச்சி. வித்தகம்—அறிவு. கனம்—மேகம்.

149. பிராதிகாமி--துரியோதனன்சாரதி. கற்பம்--கற்பகதரு; முனிவர்க்கும், பாவலர்க்கும், அரசர்க்கும் வேண்டியவற்றைக் கொடுத்துக்கொண்டிருத்தலிற் கற்பகதருவென்றார்.

150. சென்றுயாகபதிகழற்றிருப்பதம்பணிந்துநீள்
நின்றுவாய்புதைத்"தறங்கணிலைபெறுஞ்சொனீதியாய்,
வென்றிவீரன்மண்டபத்தின்விரிவுகாணவேண்டுநீ
என்றுகூறியேவினானிங்கென்னை" என்றியம்பினான்.

151. ராயசூயபன்னிதன்னை, "எந்தையில்லில்யாமொடும்
போயிருந்துவருக" என்று, புரையிலாமனத்தினான்,
சேயமன்னதுணைவரோடுசென்றுபுக்கு, நன்றியில்
பேயிருந்ததெனவிருந்தபீடிலானையெய்தினான்.

152. மன்னிருந்தபோவைக்கண்வந்து, முந்தைவரிசையான்
முன்னிருந்ததாதை, வமிசமுதல்வன், ஞானவிதுரனென்
றின்னிருந்ததலைவர்தாளிறைஞ்சி, முன்னரிட்டதோர்
மின்னிருந்தவாசனத்தின்மீதிருந்துவினவினான்.

**தருமன் மண்டபத்தைப் புகழ்தல்**

153. "இந்தமண்டபஞ்சமைந்தவினிமைதன்னையென்சொல்வேன்?
முந்தைமண்டபங்களுக்குமுதன்மையானதேவரூர்
அந்தமண்டபத்துமில்லை; அதனையன்றிமண்ணின்மேல்
எந்தமண்டபத்துமில்லை; இதனிலுள்ளவெழிலரோ."

154. எனவியந்துதருமராசனினிதியம்ப, பளிவெஞ்
சினவிலங்கலென்னுமாறுசேரவந்தவிளைஞரும்,
மனுவிளங்குமுறைமையான்வணங்கி, மன்னர்மன்னன்முன்
தனதனங்கிருப்பதன்னதவிசின்மீதுவைகினார்.

155. 'புரைகொள்பாவமேநிறைந்துபுண்ணியங்குறைந்துநீள்
நரகினூழிகாலம்வாழ்தி; நாகர்வாழ்வினுள்ளதும்
தரணிமீதுபெறுக' என்றுதந்ததொக்கும்வானுளோர்,
அரவவேறுயர்த்தவீரனன்றிருந்தபெருமையே.

---

150. நீள் நின்று – நீள நின்று
151. பன்னி – பத்தினி. புரை—குற்றம். பீடு – பெருமை.
152. வமிச முதல்வனென்றது வீட்டுமனை. இன்னிருந்த – இவ்வாறிருந்த.
153. தேவரூரிலுள்ள அந்தச் சுதன்மை என்னும் மண்டபம்.
154. மனு—மனுஸ்மிருதி.
155. நாகர் வாழ்வு—தேவருலகம். வானுளோர் தந்ததொக்கும்.

துரியோதனன் தருமனைச் சூதாட அழைத்தல்.

156. "மாயமொன்றுமெண்ணலாமனத்தின்மிக்கமாமனும்
நீயுமின்றுசூதுகொண்டுநிகழ்விலாசமயர்விரோ?
ஆயவென்றியையனில்லிலமுதமன்னபோனகம்
போயருந்துமளவுமிங்கிருந்துபோதுபோகவே."

தருமன் மறுத்தல்.

157. "மீதெடுத்தவஞ்சராகிவெகுளிசெய்தல்பிறர்பெருங்
கோதெடுத்துரைத்தனண்புகொண்டயிர்த்தல்கொடியவெஞ்
சூதெடுத்துவிழைதலுற்றசூள்பிழைத்தலின்னவே
தீதெடுத்தநூலின்முன்புதீயவென்றுசெப்பினர்.

158. "வாதுகொண்டுகாதல்கூருமாமனோடுவஞ்சனைச்
சூதுகொண்டுபொருதழிந்துதோல்வியெய்தவேண்டுமோ?
தாதுகொண்டுதேனிரங்குதாமமார்ப,நெஞ்சினீர்
ஏதுகொண்டதருமக்களிப்பனிம்பர்"என்னவே.

சகுனி பழித்துரைத்தல்.

159. ஒப்பிலாதவேள்விமன்னனுரையுணர்ந்து,சகுனியும்,
"தப்பிலாதகவறுருண்டதாயமெங்குமொக்குமால்;
வைப்பிலாண்மையன்றிவேறுவஞ்சமில்லை;உண்டெனச்
செப்பில்,ஆர்கொலிவணையாடவருகவென்றுசெப்புவார்?

160. "வேணுமாகில்வேணும்;அன்றிவிரகெனக்கழன்றுதான்
நாணுமாகில்,விடுதியேநடக்கவென்றுநவிலுவீர்.
பூணுமாகில்,இனிமையோடுபொருதுமற்றிருந்தநீர்
காணுமாறுநானுமின்றுகற்றவாறியற்றலாம்.

---

156. வென்றி ஐயன்இல்—விதுரன் வீடு.

157. கோது—குற்றம். தீது எடுத்த நூல்—குற்றங்களை எடுத்துச்சொல்லிய நீதி நூல். தீங்குகளை அகற்றுதற்குக் காரணமாகிய நூல் என்றுமாம்.

158 காதல்கூரும் மாமனோடு வாதுகொண்டு, வஞ்சனைச் சூதுகொண்டு என இயைக்க.

159. வைப்பில்—காய்களை வைப்பதில்.

160. விரகெனா—உபாயமுளதென்று. பூணுமாகில் – (நாம் சொல்வதை) மேற்கொள்ளுமாகில்.

161. "நீடுகின்றதருமநீதிநிருப,கேள்,விழைந்துநாம்
ஆடுகின்றசூதில்வெற்றியழிவுநம்மிலொக்குமால்;
வாடுகின்றமிடியர்போல,வஞ்சமென்றுரைத்துநீ
ஓடுகின்ற,தொட்டுகின்றவொண்பொருட்குலோபியோ?

162. "யானெறிந்தகவறுவெல்லினிசைவெனக்கிழத்தி;நீ
தானெறிந்தகவறுவெல்லினதினிரட்டிதருகுவன்;
தேனெறிந்துதேனுகர்ந்துதேனெடுக்குமாலையோய்,
ஆனெறிந்தகொலைஞர்போலவஞ்சல்;வருதியாடவே."

கன்னன் பழித்தல்.

163. என்றுமாமனுற்றுரைப்ப,விவைதமக்கவ்வவையில்வே
றென்றுமாறுரைத்திடாதுதிட்டிரன்னிருக்கவும்,
வென்றுமாறடர்க்கும்வாகைவிசயனும்வெகுண்டுளம்
கன்றுமாறுரைத்தனன்,கொல்கன்னனென்னுமன்னனே.

164. "போதுபோகுமாறிருந்துபொருதும்வருதியென்னவும்,
சூதுபோருமஞ்சியேதொலைந்துளைந்துளங்குவாய்,
மோதுபோரிலெங்ஙனுய்தி?இளைஞரோடுமுடுகுதேர்
மீதுபோயுன்னகரிதன்னின்விரைவினெய்து' கென்னவே.

அருச்சுனன் கோபித்தல்.

165. "இல்லெடுத்து,விரகினோடுமெமையழைத்து,மாயைகூர்
வல்லெடுத்துவருதலான்,மறுத்தனன்மகீபனும்;
சொல்லெடுத்துவைதவாய்துணிப்பன்"என்றுகன்னன்மேல்
வில்லெடுத்தனன்பொறாமல்வீரவாளிவிசயனே.

தருமன் சூதாட உடன்படல்.

166. ஏதிலாரின்"எம்பிநீயிருக்க"என்றிருத்தி"முன்
காதில்,ஆரென்னுடன்முனைந்துகண்விழிக்கவல்லபேர்?
ஓதிலாண்மைகுன்றும்"என்றுருத்தெழுந்து"மாயநின்
சூதிலாடல்புரிதும்"என்றுதருமனுந்தொடங்கினான்.

---

161. வெற்றி அழிவும்—வெல்வியும் தோல்வியும். ஒட்டுகின்ற—பந்தயமாக வைக்கின்ற. உலோபி—உலோபித்து; இச்சொல் "உண்கள் வார் கடைவாய் மள்ளர் களைகலா துலோபி நிற்பார் (நாட்டு—10): 'உள்ளமுவந்தது செய்வனென்றும் லோவேன்' (கைகேசி சூழ்வினை—7) என்று கம்பராமாயணத்தில் வருவது காண்க.

162. இசைவு—இசைந்தது; பந்தயம். தேன்—மணம், வண்டு, கள் என முறையே பொருள்கொள்க. ஆன்-பசு.

163. மாறு—முன்னது மறுமொழி; பின்னது பகை.

166. காதில்—பொருதால்,

167. "நின்னைவெல்லின்ஒட்டம்யாவுநீகொடுக்க;நீயிவன்
தன்னைவெல்லின்யான்விரைந்துதருவன்"என்று,தருமனைப்
பின்னைவெல்லொணாதெனப்பிணிப்புடன்மருட்டினான்,
மின்னைவெல்லும்வெய்யசோதிவேலிராசராசனே.

168. அவிர்பசும்பொன்மீளியாளியாசனத்திழிந்து,பூந்
தவிசிலொன்றிடப்புகுந்துதருமன்வைக,மாமனும்
நவிராறுந்திசைப்புறத்துநன்னிலங்குறித்து,நீள்
புவிபெறுங்கருத்தினோடிருந்தனன்பொருந்தவே.

சூதாட்டம்.

169. கவளயானைபணையில்யாளிகால்வகுத்தபலகையிற்
பவளமானநீலமானகருவிமுன்பரப்பினார்,
தவளமானகவறுகைதரித்து,மெய்தரித்ததார்
துவள,மானநிருபர்தம்மிலாடவேதொடங்கினார்.

170. ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்முத்
தாரம்வைத்து,"நீயுமாறழைக்க"என்ன,மாமன்மேல்
வாரம்வைத்தநெஞ்சினானும்"வருக"என்று,மாமணிச்
சாரம்வைத்தவலயமொன்றுதானுமுன்னர்வைக்கவே,

171. இருவருங்கவற்றினாலெறிந்தபோதெறிந்தவா
றொருவருங்குறிக்கலாவுபாயமாயிருத்தலான்,
மருவரும்புயத்தலங்கன்மாமன்வெல்ல,மன்னருள்
வெருவருங்களிற்றினானுமேல்விருப்பமிஞ்சினான்.

172. வைத்தவாரமவனெடுக்க,மாயவன்கொடுத்தநன்
மெய்த்தவாததேர்குறித்துமீளவும்பரப்பினான்;
மொய்த்தவாசமாலைமார்பின்முடிமகீபன்மகிழ்தரப்
பொய்த்தவாடல்வல்லமீளிபொருதுவென்றிபுனையவே,

167. ஒட்டம் — பந்தயம். பிணிப்புடன் — மனத்தைப் பிணிக்கும் வார்த்தைகளினால்.

168. நவிர்—நவிரம் என்பதன் விகாரம்; புன்மை, குற்றம் என்னும்பொருட்டு. நல்நிலம் குறித்து—வெற்றிதரும் திசையை எண்ணி.

169. பணை—கொம்பு, யானைப்பணை என்பது யானைபணை எனச் சந்தநோக்கி வலிமிகாது நின்றது. யாளிகால் வகுத்த—யாளிபோலச் செய்யப்பட்ட காலையுடைய. கருவி—காய். கவறு—பாச்சிகை.

170. மணிச்சாரம் வைத்த வலயம்—உயர்ந்த இரத்தினங்கள் பதித்த வாகுவலயம். சாரம்—உயர்ந்தது, சிறந்தது.

172. தேர்குறித்து—தேரைப் பந்தயமாகக் குறித்து.

173. தேர்கொடுத்தபின்னும்,மாறுசெப்பி,உள்ளதேர்மதக்
கார்கொடுத்தும்,எண்ணிலாதகவனமாக்கொடுத்தும்,அப்
பார்கொடுத்தும்,அரசுகூர்பதங்கொடுத்தும்,உரியதம்
ஊர்கொடுத்தும்,அதனினுள்ளமொழிவுறுமலோடவே,

174. வெங்கிராதவனமெரித்தவிசயனுக்குவிஞ்சையன்
அங்கிராமகிழ்ந்தளித்தவாடன்மாவுமளகநீள்
பொங்கிராமணஞ்சிறந்தபோகமாதர்பலருமன்
றிங்கிராநரேசனுற்றவிசைவினுலளிக்கவே,

தருமன் தோல்வி.

175. யாவையுங்கொடுத்திருப்ப,இளைஞரோடுமெய்த்தவக்
கோவையுங்குறிக்கவென்றுகுருகுலேசன்மொழியவே,
ஈவையுங்குறித்துவெற்றியெய்தவெய்த,இவர்கடம்
வீவையுங்குறித்துவென்றிமேன்மையான்விளம்புவான்.

176. "உன்னையுங்குறித்துவன்புரைத்ததம்பிமாரினம்
தன்னையுங்குறித்திசைந்துதருகவந்துபொரு"கெனப்,
பின்னையுங்குறிப்புறுதுபொருதுகைபிழைக்க"மேல்
என்னையுங்குறிப்"பெனாமுன்விரகினுலியம்பினுன்.

177. "மெய்வருந்திறத்தினும்மைவெல்லுமாறுவேறலால்,
ஐவருந்திருந்தவெங்களடிமையாளராயினீர்.
மைவருந்தடங்கண்வேள்விமாதுதன்னையொட்டிநீ
கைவருங்கவற்றினின்னமெறிக"என்றுகழறினுன்.

173. மாறு செப்பி – பந்தயங்கூறி. மதக்கார் – யானை. அரசுகூர்பதம்– ராஜபதவி.

174. கிராதவனம்–வேடர்வசிக்கும் காண்டவவனம். விஞ்சையன்–சித்திரரதன். அங்கு இரா–திரௌபதி கல்யாணத்துக்குச் சென்றவழியில் இரவில். பொங்கு இரா–மிகுந்த இரவில். இங்கு இரா–இங்கு இருந்த.

175. கொடுத்து–தோற்று. ஈவு–கொடுத்தல், பந்தயமாகக்கொடுத்தல். வீவு–அழிவு. தான் வெற்றி எய்த எய்த இவர்கள் அழிவதையுங் குறித்து.

176. குறிப்பு உறுது–எண்ணமின்றி. இனிமேல் உங்குறிப்பு என்னை என்று.

177. வெல்லுமாறு வேறலால்–வெல்லும் வழியில் வெல்லுதலால்.

### விதுரன் திருதராட்டிரனைக் குற்றங்கூறல்.

178. அன்னபோதிலருள்விதுரனந்தணைப்புகன்றெழா
"நின்னபோதமன்றிவேறுநிருபர்தாநினைப்பரோ?
இன்னபோதுமோ?நமக்கியற்கையன்றிதென்றுநீ
சொன்னபோது,நேயமைந்தர்சொன்னசொன்மறுப்பரோ?

179. "திருகுநெஞ்சின்வஞ்சராகியிளைஞர்தீமைசெய்தகால்
உருகுகின்றதாதைநீயுடன்படுத்திருப்பதோ?
மிருகமன்றுபறவையன்றிரக்கமின்றிமேவுநின்
அருகுவந்தணைந்ததெங்களறிவிலாமையாகுமே.

180. "பின்பிறந்ததம்பிமைந்தர்பீடழிந்திரங்கவே
முன்பிறந்ததமையன்மைந்தர்மொய்ம்பினாலடர்ப்பரோ?
அன்பிறந்ததேனுநீதியழியநீநடத்தினால்
என்பிறந்துமுடியுமண்ணிலெண்ணில்காலமின்னுமே.?

181. "மருமமிஞ்சவிவனைவென்றவஞ்சமன்றிமற்றிவன்
தருமவஞ்சிதனையிசைந்துபொருதுமென்கைதருமமோ?
கருமமன்றுனக்குநாசகாலம்வந்ததாகலின்,
பெரும,தஞ்சமின்றிநெஞ்சுபேரும்"என்றுபேசினான்.

182. விதுரனைந்துநீதிகூற,விழியிலாமையன்றியே
வெதிரெனுங்கொலென்னுமாறுவிழியிலானும்வைகினான்;
சதுர்புரிந்தசகுனிசொல்லையெதிர்புரிந்துதருமனும்
அதிரவஞ்சமுதிரவந்தவருளிலானொடாடினான்.

### தருமன் திரௌபதியைத் தோற்றல்.

183. காயமுற்றும்வஞ்சமேகலந்ததன்னகள்வன்மேல்
நேயமுற்றுநின்றுதானுநிகர்பிடித்ததென்னவே,
மாயமுற்றகவறுமந்தமாமன்வல்லபத்திலே
தாயமுற்றிடங்கொடாதுதருமனைச்சதித்ததே.

---

178. அந்தண்—குருடன்; திருதராட்டிரன். புகன்று—குறித்து. நின் அபோதம் அன்றி—நினது அறியாமையன்றி (அறியாத நீயன்றி). இன்னபோதுமோ--இவை தகுமோ.

179. திருகு நெஞ்சு—மாறுபட்ட மனம்.

180. பீடு—பெருமை. என் பிறந்துமுடியும்—என்ன அபகீர்த்தி சித்திக்கும்.

181. மருமம்—இரகசியம். தஞ்சம்—பற்றுக்கோடாகிய நீதி.

182. வெதிர்—செவிடு. சதுர்—சாதுரியம். அதிர—(கண்டோர்) நடுங்க.

183. நிகர்பிடித்தது—(அவனுக்கு வஞ்சகத்தினால்) சமானமானது.

184. இன்னதாயம்வேண்டுமென்றெறிந்தபோது,மற்றவன்
சொன்னதாயமேபுரண்டுசோர்விலாமல்வருதலில்,
தன்னதாயவரசுவாழ்வுதரணிமன்னனல்கினன்;
அன்னதாயபோதும்நெஞ்சசைந்திலானசஞ்சலன்.

வேறு.

அரசவை மனம் நோதல்.

185. முரசிணையுயர்த்தகோமான்மொழிந்தனமுழுதுந்தோற்றுப்
பரசுவதொன்றுமில்லாப்பான்மையோடிருந்தகாலை,
விரைசெறியலங்கல்சோரமெய்குலைந்துள்ளம்வெம்பி
அரசவையிருந்தோர்தம்மிலருளினாலழிந்துநொந்தார்.

186. குருமரபுடையவேந்தன்கொடியனேகொடியனென்பார்;
மருமகனுயிருக்கிந்தமாமனேமறலியென்பார்;
தருமனித்தனைநாட்செய்ததருமமும்பொய்யோவென்பார்;
உருமினுங்கொடியவீமனுருத்தினியெழுமோவென்பார்;

187. பாந்தளேறுயர்த்தவேந்தன்பார்த்திலனுறவுமென்பார்;
மாய்ந்தவேயறமுந்தேசுமனுநெறிவழக்குமென்பார்;
பூந்தழற்பிறந்தபாவைபுண்ணியம்பொய்யாதென்பார்;
சேந்தனவிருகண்,பாரீர்,தேவர்கோன்மதலையென்பார்;

188. பழியுடைத்தந்தையொன்றும்பகர்கலாதிருக்குமென்பார்;
விழியுடையவனையன்றேமேன்மையோர்வெறுப்பதென்பார்;
அழியுமேயிவனுன்மைந்தருரும்பெருஞ்செல்வமென்பார்;
வழிவழியாகநிற்கும்வசையிவன்புரிந்ததென்பார்;

189. இன்னனதரணிவேந்தரிருந்துழியிருந்துகூற,
மன்னனுந்தம்பிதானுமாமனுமாறுவண்மைக்
கன்னனுந்தம்பினெண்ணிக்,கங்கைமாமகனைநோக்கிப்,
பன்னகதுவசன்,கேட்டோர்பலருமெய்பனிக்கச்,சொல்வான்.

185. தம்மில்—தங்களில்.
187. தேசு—புகழ்.
189. பனிக்க—நடுங்க.

### துரியோதனன் மனம் களித்தல்.

190. "தண்ணியதருமன்செய்தபாவமோ?சகுனிசெய்த
புண்ணியநெறியோ?அந்தப்பொதுமகள்யாகசாலை
நண்ணியதவறோ?மற்றைநால்வருந்தகைமைகூர
எண்ணியமதியோ?எண்ணினிங்ஙனம்விளைந்த"தென்றான்.

191. தகாமொழிதலைவன்கூறத்,தவத்தினாலுயர்ந்தகோவும்
நகா,"மரபிற்கையன்றுநம்மினும்புன்மைகூறல்;
மிகாதினிநிகழ்ந்தசெற்றம்விடு"கெனச்,செவியிற்சற்றும்
புகாதுளம்வெகுளிகூரப்புரிந்தனன்போதமில்லான்.

### துரியோதனன் தருமன்தோற்ற பொருள்களைக் கவரும்படி சொல்லல்.

192. இரங்கிநின்றுருகுநெஞ்சினிளையதன்பிதாவைநோக்கி,
அரங்கடிசமரவேலானழல்பொழியுருமிற்சொல்வான்:—
"உரங்குடியிருந்ததோளானுரிமையினெமக்குத்தோற்ற
துரங்கமுங்களிறுந்தேருந்துறைதுறைகவரச்சொற்றி;

193. "தொல்லைமாநகருநாடுந்தோரணநாட்டச்சொற்றி;
எல்லையினிதிகளெல்லாமிம்பரேயெடுக்கச்சொற்றி;
நல்லெழின்மடவார்தம்மைநம்பதியெய்தச்சொற்றி;
சொல்லியவிளைஞர்தாமுந்தொண்டினராகச்சொற்றி;

### திரௌபதியை ராஜசபைக்குக் கொண்டுவரச் சொல்லல்.

194. "இவர்தமக்குரியளாகியாகபத்தினியுமான
துவரிதழ்த்தவளமூரற்சுரிகுழறன்னையின்னே
உவரலைப்புணரியாடையுலகுடைவேந்தர்காணக்
கவர்தரப்புகறி"என்றான்கண்ணருள்சிறிதுமில்லான்.

### விதுரன் அதுசெய்ய வேண்டாமென்றல்.

195. "அறந்தருமைந்தன்றன்னையறனலாதியற்றி,நம்பி,
திறந்தருசெல்வம்யாவுந்தீமையிற்கவர்தலுற்றாய்;
மறந்தருவலியுமன்று;மணந்தருவாழ்வுமன்று;
நிறந்தருபுகழுமன்று;நெறிதருமதியுமன்று.

---

190. தண்ணிய—தண்ணளியுடைய. பொதுமகள்—திரௌபதி; ஐவர்க்குரியளாதலின் அவ்வாறு கூறப்பட்டாள்.

191. தவத்தினாலுயர்ந்தகோ—வீட்டுமன். மரபு—குடிப்பிறந்தார்.

192. அரம் கடி—அரத்தால் அராவப்பட்ட.

193. இளைஞர்—தருமன் தம்பிமார். தொண்டினர்—அடிமைகள்.

195. திறந்தரு—பலவகைப்பட்ட. மணம்—புகழ். நிறம்—ஒளி. நெறி—நல்லொழுக்கம்.

196. "திருத்தகமொழிந்தவெல்லாஞ்செய்தனையெனினுஞ், செவ்வி
மருத்தகுதெரியன்மாலைமாசிலாமன்னர்முன்னர்
உருத்தகுகற்பினாளையுரையலாதுரைக்குமாற்றம்
கருத்தினினினையல்கண்டாய், கடவுளர்கற்பம்வாழ்வாய்.

197. "விண்ணிலங்குருகித்தோன்றுமேதகுவடமீனன்றி
மண்ணிலிங்குவமைசொல்லமடந்தையர்யாருமில்லாப்
பண்ணலங்கடந்தமென்சொற்பாவையைப்பழிக்கநீயின் [ன்
றெண்ணின், முன்கேட்டவார்த்தைக்கேற்றதன்னெண்ணம்" என்று

198. கேட்டசொல்வினவுநாககேதனன்கேட்ப, மீண்டும்
வாட்டமிலன்பினோடுமனங்கனிந்துருகிவீழ,
நாட்டமுநன்னீர்மல்க, நாவமிழ்தூறப், பின்னும்
கோட்டமில்சிந்தையானுங்குரிசிலுக்குரைக்கலுற்றான்.

199. "தானவராகியும்மைத்தனித்தனியிறந்தோர்யாரும்
மானவராகியிம்மைவந்தனரிம்பரென்றே,
தானவர்பொறைபொறாமல்தராதலமென்னுஞ்செங்கண்
மானவராகவேதமலர்முனிதனக்குச்சொன்னாள்.

200. "நான்முகன்றானுமேனைநாகருநாகர்கோனும்
பான்முகந்தெறியும்வேலைப்பாம்பணைப்பள்ளிகொள்ளும்
தேன்முகங்களிக்கும்பச்சைச்செவ்விவண்டுளபமாலை
மான்முகங்கண்டுகூற, வந்தவாமாலுங்கேட்டான்.

201. "மின்னிடைவிளங்குமேகமேனியான் அவனிமானை
'நின்னிடைவந்துதோன்றுநிருபரானவரையெல்லாம்
முன்னிடைகடையொன்றின்றிமுற்றும்வெம்முரண்கொல்காலன்
தன்னிடைவிடுதும்' என்றுசாற்றியேதளர்வுதீர்த்தான்.

---

196. திருத்தக—அழகாக, நன்றாக. உருத்தகு கற்பு—அஞ்சத்தக்க கற்பு.

197. முன்கேட்டவார்த்தை—199, 200, 201, 202—ம் கவிகளிற் சொல்லப் படுவது.

198. கேட்டசொல்—மண்ணுளார் சொல்லக் கேட்டசொல்லை.

199. அவர் பொறையைத் தான்பொறாமல் தராதலம் என்னும் செங்கண்மான் (பூமிதேவி) நவ (புதிய) ராக (சிவந்த) மலர் (தாமரைமலரிலிருக்கும்) வேதமுனி (பிரமன்).

201. மின் இடை விளங்கும் மேகம்—மின்னல் தன்னிடத்தில் விளங்குகின்ற மேகம்.

202. "அந்தவன்றிகிரியானும்நம்மிலோரரசனாகி
வந்தவதரித்தானென்றுமண்ணெலாம்வார்த்தையான(து).
எந்தவல்வினையாலெவ்வாறெய்துமென்றிதற்கேசால
நொந்துகண்டுயில்பெறாதேநோதகப்புரிந்தேன்மன்னோ.

203. "ஒருதிறத்தவனிமுற்றுமொருமையாற்புரக்குநீவிர்
இருதிறத்தவரும்நும்மிலிகலுறுமனத்திரானால்,
வருதிறத்தானைவேந்தர்வகைபடக்குழூஉக்கொண்டோடிப்
பொருதிறப்பதற்கேசற்றும்புரிவிலீர்புரிகின்றீரே."

துரியோதனன் திரௌபதியைக் கொணரும்படி பாகனை ஏவல்.

204. என்றவனுரைப்பத்தானுமெறிந்துகை,நகைகொண்டாடி,
அன்றவனிதயம்வெம்பவவமதிபலவுங்கூறி,
நின்றவனொருவன்றன்னை"நீநனிவிரைவினோடிச்
சென்றவணிருந்தகோலத்தெரிவையைக்கொணர்தி"என்றான்.

205. பெருந்தகையேவலோடும்பிராதிகாமியுமங்கேகி,
வருந்தியமனத்தனாகி,மாசறுமாபின்வல்லி
இருந்துழியெய்தாமல்,இடைவழிநின்று,மீள
விரைந்தனனோடிவந்து,வேந்தனுக்கேற்பச்சொன்னான்.

வேறு.

தேர்ப்பாகன் திரௌபதி சபைக்குச்செல்ல மறுத்தமை கூறல்.

206. "என்னைத்தோற்றுமனுநெறிகூர்
இசையோன்றன்னைத்தோற்றனனோ?
தன்னைத்தோற்றுத்தனதுமனத்
தளர்வாலென்னைத்தோற்றனனோ?
முன்னைத்தோற்றுத்தோற்றபொருண்
முற்றுங்கவருமுறையன்றிப்
பின்னைத்தோற்றபொருள்கவரப்
பெறுமோநினைக்கப்பெறா"தென்றாள்.

---

203. ஒருதிறம்—ஒருமைத் தன்மை, ஒற்றுமை. புரிவு—அன்பு.

206. முன்னைத்தோற்றுத் தோற்றபொருள் — தன்னைத் தோற்குமுன் ஆட்டத்தில் தோற்று இழந்த பொருள்.

துரியோதனன் துச்சாதனனை ஏவல்.

207. "செல்வப்பாவைதிருவுள்ளம்
இது"என்றந்தத்தேர்ப்பாகன்
சொல்லப்,பாவிதரியாமல்
துச்சாதனனைமுகநோக்கி,
"அல்லற்பான்மைபெற்றழிந்த
ஐவர்க்கொருத்தியாகியவம்
மல்லற்பானல்விழியாளை
மன்போரவையினழை"என்றான்.

208. நோன்றாள்வெங்கட்கடகளிற்று
நுழைவேலரசனுவறலுமே,
ஆன்றார்கேட்கிற்செவிபுதைக்கும்
அழல்கால்வெஞ்சொலறனில்லான்,
தோன்றுநயனத்துணைவனைப்போல்
துணைக்கண்டுகிலிற்சூழ்ந்திருந்த
ஈன்றாளில்லத்திருந்தாளை
இகலோடெய்தியிவைசொல்வான்:—

துச்சாதனன் திரௌபதியைக் கிட்டிக் கூறல்.

209. "தானேசூதுபொருதழிந்து
தலைவன்றனக்குன்பதியான
கோனேசொல்லியாவையுமுன்
கொடுத்தான்;கொடுத்தபின்னிசைவு
யானேயென்றும்,வீமன்முதல்
இளையோரென்றும்,என்வேள்வி
மானேயென்றுங்குறித்திழந்தான்;
வழக்கால்வென்றோம்;வருவாயே.

210. "பொன்னைச்சிரிக்கும்பூங்கோயில்,
புனல்வாவியில்,என்றெங்கள்குல
மன்னைச்சிரித்தசெங்கனிவாய்
மாறுதிரங்கியழுதரற்ற,

---

207. மல்லல்—வளப்பம்.
208. நோன்தாள்—வலியகால்.
209. தலைவன்—துரியோதனன்.
210. இது பொன்னைச் சிரிக்கும் பூங்கோயில் புனல்வாவியன்று என்று; இல் இங்கு அன்மைப் பொருளில் வந்தது. சளம்—எளிமை.

மின்னைச்சிரிக்குமநுண்ணிடையாய்,
வேந்தர்க்கெதிருன்மெய்க்கணவன்
தன்னைச்சிரிக்கவிருக்கின்ற
சளநீகாணிற்றறியாயே.

211. ''தலத்துக்கியையாதைவரையும்
தழுவித்தழுவித்தனித்தனியே
நலத்துப்பொய்யேமெய்போல
நடிக்குஞ்செவ்விநலனுடையாய்,
குலத்துப்பிறந்தாயாமாகில்
கூசாதென்பின்போது''கெனப்
பெலத்திற்செங்கைமலர்தீண்டிப்
பிடித்தான்;சூழ்ச்சிமுடித்தானே.

212. சிலைவாயங்கையவன்றீண்டச்
செல்லாளாகி,அல்லலுழந்
துலைவாயழல்போனெடிதுயிரா,
உள்ளந்தளரா,உடனடுங்காக்,
கொலைவாயெயினர்கொல்லுநிலங்
குறித்துச்செறித்தகொடியநெடு
வலைவாயொருதானைகப்பட்ட
மான்போல்,மாமிமருங்குற்றாள்.

213. பூவார்குழலிதளர்வொடுதன்
புறஞ்சேர்பொழுதுஞ்சிறிதிரங்காள்,
''நீவா''என்றேயருகிருத்தி
நெடுங்கண்பொழியுநீர்துடையாள்,
''மேவாரல்லர்,தமராழைத்தால்
மேலுன்கருத்துவிளம்பிவரப்
பாவாய்அஞ்சாதே''கென்றாள்
பலபாதகரைப்பயந்தாளே.

---

211. தலத்துக்கு இயையாது—உலகநடைக்கொவ்வாது. சூழ்ச்சி—எண்ணம்.
212. அங்கையால் அவன் தீண்ட.

**துச்சாதனன் திரௌபதியைக் குழலைப்பற்றி இழுத்துச்செல்லல்.**

214. *தண்டார்விடலைதாயுரைப்பத்*
*தாய்முன்னணுகித்தாமரைக்கைச்*
*செண்டாலவள்பைங்குழல்பற்றித்*
*தீண்டானுகிச்செல்கின்றான்;*
*வண்டார்குழலுமுடன்குலைய*
*மானங்குலையமனங்குலையக்*
*கொண்டாரிருப்பரென்றுநெறிக்*
*கொண்டாள், அந்தோ! கொடியாளே.*

215. *சூழுங்கனல்வாயுருமன்றித்*
*துளிவாய்முகிலுமகிதலத்து*
*வீழுங்கொல்லோ? உற்பாதம்*
*விரவிற்றென்றேவெரூஉக்கொள்ளத்,*
*தாழும்பெரியகரியகுழல்*
*தாரோடலையத், தழீஇக்கொண்டு*
*வாழுஞ்சுரும்புசுழன்றரற்ற,*
*மண்மேலிழுத்துவருகின்றான்.*

**கண்டோர் இரக்கம்.**

216. *தழலோவென்னுங்கற்புடைய*
*தனிநாயகிதன்றுமநறுங்*
*குழலோவுரகக்கொடிவேந்தன்*
*குலமோகுலைந்ததிவணென்பார்;*
*நிழலோபுவிக்குநெருப்பன்றோ*
*நெறியொன்றில்லாநீடுபொலங்*
*கழலோன்மதிவெண்குடையென்பார்;*
*கையாற்கண்டகண்புடைப்பார்.*

217. *காட்டுந்திறல்வெஞ்சிலைவிசயன்*
*கையால்வகிர்ந்துகடிகொண்மலர்*
*சூட்டும்பனிச்சையிவண்புழுதித்*
*துகளேறியதென்றழுதுநைவார்;*

214. செண்டு—ஒருவகை ஆயுதம். கொடியாள்—கொடிபோன்றவள்.
215. உரும்-இடி. உற்பாதம்-தீமை நிகழ்வதை அறிவிக்கும் குறி.
217. பனிச்சை-பின்னிமுடித்த கூந்தல். தடாமல்-தடுக்காமல்.

மீட்டுந்தடாமலேகென்று
விட்டாள்மைந்தரிட்டவினை
கேட்டுங்கொடியள்காந்தாரி;
கிளையோடின்றேகெடுமென்பார்.

218. இரும்போநெஞ்சிம்மாமனிதற்
கிசைந்தானொக்கவிருந்தென்பார்;
பெரும்போரரசர்பெண்ணுடனே
பிறந்துஞ்சிறப்பெறுரென்பார்;
பொரும்போர்வீமன்பொறுத்தாலும்,
பொற்றேர்விசயன்பொறுனென்பார்;
அரும்போரரசர்தகாதென்றால்,
வருமோவிந்தவழிவென்பார்.

219. என்னேகுடியிற்பிறந்தாருக்
கிருப்பன்றிவ்வூரினியென்பார்;
முன்னேபோடிமுறையிட்டால்
முனியுங்கொல்லோவெமையென்பார்;
பின்னேயிரங்கியழுதழுது
பேதுற்றின்னல்பெரிதுழப்பார்;
"அன்னே,துன்பங்களைந்தின்பம்
ஆவாய்"என்றேயருள்புரிவார்.

220. பறைவன்களிற்றுப்பல்புரவிப்
பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்க்
கிறைவன்பாவையாங்காண
இவையோபடுவதென்றுரைப்பார்;
பொறைவண்சிந்தைத்தருமனுக்குப்
பொய்ச்சூதறிந்தும்பொரவென்ன
குறைவந்தது?தன்விதிவலியால்
குறைந்தான்யாவுங்கொடுத்தென்பார்.

---

218. இம்மாமன் இதற்கிசைந்தான் ஒக்க இருந்து என்று கண்ணழிக்க, மாமன்-திருதராட்டிரன்.

219. பேதுற்று-மயங்கி. அன்னே-தாயே, விளி.

220. பறைவன்களிறு-பறையடிக்கச்செல்லும் வலியகளிறு.

### திரௌபதி ராஜசபையை அடைதல்.

221. நெடுமாநகரிற்சனமனைத்தும்
நேயம்பெறக்கண்டிவைகூற,
வடுமாமரபிற்குறத்தேடும்
மன்பேரவையின்முன்புக்காள்;
கொடுமாமலர்க்கண்புனல்சோரக்,
குலைந்தேகிடந்தகுழல்சோரத்,
தடுமாறுள்ளந்தனிசோரத்,
தலைநாளெரித்ததழல்போல்வாள்.

222. நாணேமுதலாநாற்குணனும்
நண்ணுங்கற்புநயந்தணிந்த
பூணேயனையாளழுதாற்றிப்
புன்பேரவையிற்புகுஞ்சோகம்
காணேமென்றுநிலநோக்கிக்
கதிர்வேனிருபரிருந்திரங்கக்,
கோணேநேர்பாடாயிருந்தான்,
குருடென்றுரைக்குங்கொடியோனே.

223. மேகங்குருதிபொழிந்தகல்வான்
மீனும்பகலேமிகவிளங்கிப்
பூகம்பமுமுற்றுற்பாதம்
போதியாவும்புரிந்தனவால்.
நாகம்புனைபொற்றுவசனுடன்
நவிலாநின்றநால்வருமே
சோகம்பிறவாதிருந்தார்;மற்
றெழிந்தார்யாருஞ்சோகித்தார்.

---

221. நேயம்பெற-அன்புபிறக்க. மாமரபிற்கு வடு உறத்தேடும்.

222. நாற்குணம்-நாண், மடம், அச்சம், பயிர்ப்பு, என்பன. புன்பேரவை - திரௌபதிக்கு நேர்ந்த அவமதியைத் தடுக்காததனாற் புன்பேரவை எனப்பட்டது.

223. போதயாவும்-பகற்பொழுதுமுழுதும். சோகம்-துன்பம்.

224. வீமன் கதைமேற் கைவைக்க,
விசயன் சிலைமேல் விழிவைக்கத்,
தாமம்புனைதோ ளிளையோரும்
தத்தங் கருத்திற் சினமூட்டத்,
தாமம்படுசெந் தழலவியச்
சோனைமேகஞ் சொரிவதுபோல்,
நாமந்தருமனெனத்தக்கோன்
இளையோராறநவிலுற்றான்.

225. "தேம்போதனைத்தும் மெய்சாயும்
சிலபோதலருஞ் சிலபோது.
வேம்போதங்குவாழ்வெல்லாம்
வெங்கானுடனே வேவாவோ?
ஆம்போதாகும்; அதுவன்றி
ஆயபொருள்களம் முறையே
போம்போதனைத்தும் போம்; முன்னம்
பொறுத்தீரின்னம் பொறும்" என்றான்.

226. வாருங்கண்ணீர் வனமார்பில்
வரைமேலருவியெனவீழத்,
தாருங்குழலுமின்னுடனே
தலஞ்சேர் கொண்டலெனவீழக்,
கூருந்துயரினுடன்வீழ்ந்து,
கோகோவென்றுகோச்சபையிற்
சோருங்கொடியை முகநோக்கித்
துச்சாதனன் மெய்சுடச்சொன்னான்.

**துச்சாதனன் திரௌபதியை இழித்துரைத்தல்.**

227. "மன்வந்திருந்தசங்கத்துன்
மாமனிருந்தான்; ஐவருமுன்
முன்வந்திருந்தார் முன்கொண்ட
முறையான் முயங்கு முடிவேந்தர்;

---

225. உலகத்தில் வாழும் மாந்தர்க்கு இன்பம் சிலகாலம் துன்பம் சிலகாலம்; ஒருவருக்குத் துன்பம் வந்தால் அவரை யடுத்துவாழ்பவரும் துன்பமுறுவர்; இன்பமும் துன்பமும் ஊழின்படி; ஆதலால் நமக்கு இப்போது நிகழ்ந்ததுன்பங் காரணமாகக் கோபங்கொள்ளவேண்டாம்; பொறுமையோடிருங்கள் என்றான்.

227. மன்வந்திருந்த சங்கம்—இராசசபை.

மின்வந்தனையநுண்ணிடையாய்,
விழிநீர்சொரிந்துமெலியவுனக்
கென்வந்ததுகொல்?பொதுமகளிர்க்
கரிதோவிழிநீர்?எளி"தென்றான்.

228. பொல்லாவசையேபுகழ்பூணாப்
புல்லன்புகல,இதற்கொன்றும்
சொல்லாதிருந்தபோரவையைத்
தொழுதாளழுதாள்சோர்வுற்றாள்:
"மல்லார்திண்டோண்மாமாவோ!
மந்தாகினியாண்மதலாயோ!
எல்லாநெறியுமுணர்ந்தவருக்
கிதுவோமண்ணிலியல்"பென்றாள்.

229. இன்னற்படுசொற்பாஞ்சாலி
இரக்கந்தனைக்கண்டிரக்கமுறா,
"மன்னற்கிளையோய்,தவறுரைத்தல்
வழக்கோவடமீனனையாளே?"
என்னக்கழறி,"நீயுரைத்த
எல்லாமரசர்க்கியம்"பென்றான்,
முன்னர்ப்புகலுங்குருகுலத்தோர்
முதலாம்வாய்மைமொழியோனே.

திரௌபதி சபைக்கு முறையிடல்.

230. "மன்றேற்றனன்வெஞ்சூதாகில்
வழக்காற்கொண்மின்;மன்னவைபின்
முன்றேற்றனனோஎன்னையுந்தான்?
முன்னேயிசைந்துதனைத்தோற்ற
பின்றேற்றனனோ?கரியாகப்
பெரியோருண்மைபேசு"கென,
மின்றேற்றனையநுண்ணிடையாள்
விழிநீர்வெள்ளமிசைவீழ்ந்தாள்.

---

228. புகழ்பூணாப் புல்லன் பொல்லாவசையே புகல.
230. கரி—சாட்சி.

231. மையோடரிக்கண்மழைபொழிய
வாடுங்கொடியின்மொழிக்காகார்,
வெய்யோனெண்ணந்தனக்காகார்,
விறல்வேல்வேந்தர்வெருஉக்கொண்டு,
பொய்யோவன்றுமெய்யாகப்
புனையோவியம்போலிருந்தார்! ஐ
ஐயோ! அந்தக்கொடுமையையாம்
உரைக்கும்பொழுதைக்கதிபாவம்.

விகர்ணன் கூறல்.

232. அல்லார்கூந்தல்விரித்தமயில்
அனையாளரற்ற, அதற்கொன்றும்
சொல்லாதூமர்கணம்போலத்
தொல்போர்வேந்தர்சூழ்ந்திருப்ப,
மல்லார்தடந்தோள்விகருணனும்
வாய்மைக்கடவுள் "வாள்வேந்தீர்,
பொல்லாநெறியிலனைவீரும்
போகாவண்ணம்புகலீரே.

233. "முறையோவென்றென்றவனிதலம்
முழுது முடையான்முடிக்தேவி
நிறையோடழிந்துவினவவுநீர்
நினைவுற்றிருந்தீர்! நினைவற்றோ?
இறையோன்முனியுமெனநினைந்தோ?
இருந்தாலுறுதியெடுத்தியம்பல்
குறையோ? கண்கண்டதுநாளுங்
குலத்துப்பிறந்தோர்கூறுரோ?

---

231. துரியோதனனுக்குப் பயந்து திரௌபதிக்காகப் பேசாதும் நீதிதவறுமென் றஞ்சித் துரியோதனனுக்காகப் பேசாதும் அரசர்வாளாவிருந்தார். ஓவியம் போலிருந்தார் ஐயையோ என்க.

233. நிறையோடு—ஒழுக்கத்தோடு. அழிந்து—மனமழிந்து. நினைவு உற்றிருந்தீர்—எண்ணம் மிக்கிருந்தீர். நினைவு அற்றோ—அறிவழிந்தோ?

234. "தன்னேரில்லாநெறித்தருமன்
தனவென்றுரைக்கத்தக்கவெல்லாம்
முன்னேதோற்றுத்தங்களையும்
முறையேதோற்றுமுடிவுற்றான்.
சொன்னேருரைக்கில்,தான்பிறர்க்குத்
தொண்டாய்விட்டுச்,சுரிகுழலைப்
பின்னேதோற்கவுரிமையினாற்
பெறுமோஎன்றுபேசீரோ?"

235. என்றுமன்னர்முகநோக்கி
எல்லாரிதயங்களுமகிழச்
சொன்னான்;எவருந்தக்கோனென்
றவனுக்கொருபேர்சூட்டியபின்,
நன்றுமனத்தோடழன்மூள,
நயனஞ்சிவக்க,நஞ்சின்வடி
வன்றானிளவன்முகநோக்கி
அருக்கன்குமாரனறைகின்றான்.

வேறு.

கன்னன் விகர்ணனைக் கடிந்துரைத்தல்.

236. "இருக்கின்றதாரணிபரினின்னறிவால்
உயர்ந்தனையோ?இராசநீதி
குருக்கொண்டுமுதிர்ந்தனையோ? நினையொழிந்தால்
வழக்கொருவர்குறிப்பாரற்றோ?
மருக்கொண்டதொடைமுடியாய்,மொழிகென
நின்னுடன்கேட்கவந்தாருண்டோ?
உரைக்கும்போதெவருடனுமுணர்ந்தன்றோ
உரைப்ப"தெனவுருத்தான்மன்னோ.

---

234. சொல் நேர் உரைக்கில் - சொல்லை நேராகச் சொல்லுமிடத்து; நீதி உரைக்குமிடத்து.

235. நல் நா மனத்தோடு—நல்ல நாவிலும் மனத்திலும். நஞ்சின் வடிவன்றான்—துரியோதனன்.

236. இன் அறிவு—நல்ல அறிவு. குருக்கொண்டு—நிறம்வைத்து.

237. "தான்படைத்தபொருளனைத்துந்தம்பியர்க
ளுடன்றோற்றுத்தனையுந்தோற்றான்:
மீன்படைத்தமதிமுகத்தாள்இவன்படைத்த
தனமன்றிவேறேகொல்லோ?
வான்படைத்தநெடும்புரிசைமாநகரும்
தனதில்லும்வழங்குமாயின்,
யான்படைத்தமொழியன்றே!எங்கணும்இல்
எனப்பட்டாள்இல்லாளன்றோ?

238. "மைக்கோதில்கலையுடையன்,மதியுடையன்,
பொறையுடையன்,வரிசையாகத்
தக்கோனென்றரசரெல்லாமுரைத்தபெயர்
இவன்றனக்கேதக்கதம்மா!
மிக்கோர்மற்றுங்களைப்போல்வேறுண்டோ?
மகிதலத்துவேந்தராகித்
தொக்கோர்,யானுவன்றமொழிக்கெதிர்மொழியுண்
டாமாகிற்சொல்லுவீரோ."

துரியோதனன் பாண்டவரையும் திரௌபதியையும்
துகிலுரியச் சொல்லல்.

239. என்னவெகுண்டிடுகின்றவெல்லைதனில்,
எழுவுறழ்தோளிராசராசன்,
தன்னனையகொடுங்கோபத்தம்பியை,"இன்
றும்பிதனைத்தக்கோனென்ற
மன்னவையினெதிரே,இம்மானமிலா
ஐவரையும்,வழக்குவார்த்தை
சொன்னகிளிமொழியினையும்,துகிலுரிதி"
எனவுருமிற்சொன்னான்மன்னோ.

237. மீன்படைத்தமதி–இல்பொருளுவமை.

238. மைக்கோதில் கலையுடையன்–கரியகுற்றமொன்று மில்லாத கலைஞான முள்ளவன்; அறியாமையும் ஐயந்திரிபு முதலிய குற்றங்களுமில்லாத கலைஞான முள்ளவனென்றுமாம்.

240. இத்தகவின்மொழிசெவியினெரிவாளி
எனமூழ்க,இருந்தவேந்தர்
தத்தமனமடிந்துருகத்,தருமன்முக
மதிநோக்கித்தம்பிநோக்கி
வித்தகவெங்கதைநோக்கவிறல்வீமன்,
விசயனுந்தன்வில்லைநோக்க,
ஒத்தமனனுடையிளையோருருப்பம்அடக்
கினனுண்மைக்குறுதிபோல்வான்.

துகிலுரிதல்.

241. தருகதுகிலெனவெழுந்துதங்களைவன்
பொடுதுச்சாதனன்சொலாமுன்,
வருகவெனவரைமார்பின்வாங்காத
உத்தரியம்வாங்கியீந்தார்.
அருகணுகிமடவாலையஞ்சாமல்
துகிலுரிவானடர்ந்தபோதில்,
இருகைநறுமலர்குவிய,எம்பெருமான்
இணையடிக்கேயிதயம்வைத்தாள்.

242. ஆறுகியிருதடங்கணஞ்சனவெம்
புனல்சோர,அளகஞ்சோர,
வேறானதுகிறகைந்தகைசோர,
மெய்சோர,வேறோர்சொல்லும்
கூறாமல்,கோவிந்தா!கோவிந்தா!
என்றரற்றிக்குளிர்ந்துநாவில்
ஊறாதவமிழ்தூற,உடல்புளகித்
துள்ளமெலாமுருகினளே.

243. அருமறைசொல்லியநாமமாயிரமும்
உரைத்தழைக்க,அமரர்போற்றும்
திருமலர்ச்செஞ்சேவடியோன்றிருச்செவியில்
இவண்மொழிசென்றிசைத்தகாலை,

240. தருமன் முகத்தை முதற்பார்த்துப் பின்ப தம்முள் ஒருவரை ஒருவர் பார்த்து, வீமன் கதையிற் கண்வைக்க, விசயன் வில்லைநோக்க என்க. உருப்பம்–கோபம்.

மருமலர்மென்குழன்மானின்மனநடுங்கா
வகைமனத்தேவந்துதோன்றிக்,
கரியமுகிலனையானும்,பிறரெவர்க்கும்
தெரியாமல்,கருணைசெய்தான்.

244. உடுத்ததுகிலுணர்வில்லானுரிந்திடவும்
மாளாமலொன்றுக்கொன்றாங்
கடுத்தநிறம்பற்பலபெற்றாயிரமா
யிரங்கோடியாடையாகக்
கொடுத்தருள,உரிந்தனபட்டிருந்தபெருந்
தனிக்கூடங்கொள்ளாதோடி.
எடுத்தனர்பற்பலவீரர்,உரிந்தோனும்
சலித்திருகையிளைத்துநின்றான்.

245. கங்கைமகன்முதலானகாவலர்
மெய்யுறநடுங்கிக்,கண்ணீர்சோரச்,
செங்கைமலர்குவித்திவளேகற்பினுக்கும்
மாயினுக்குந்தெய்வமென்றார்;
அங்கணகல்வானேருமானகமும்
வலம்புரியுமதிரத்தங்கள்
பைங்கனகதருவின்மலர்மழைபொழிந்து
கருணையினாற்பரிவுகூர்ந்தார்.

246. அழுதழுதுகொடும்புலிவாயகப்பட்ட
மான்பிணைபோலரற்றாநின்ற
எழுதரியமடப்பாவை,தங்கண்முகங்
களைநோக்கி,இரங்கிவீழ்ந்த
பொழுது,மனம்புகைமூளப்,பூந்தடங்கண்
அனன்மூளப்,போரின்மூளப்,
பழுதுபடாவடலாண்மைப்பவனகும
ரன்றடக்கைபடைமேல்வைத்தான்.

வீமன் நூற்றுவரைப் போருக்கழைத்தல்.

247. "அருளாருந்தருமபதியாகாதென்
றெமைப்பலகாலடக்க,யாமும்
இருளால்வெம்பரிதிவடிவொளிப்பதுபோல்
அமர்புரியாதிருக்கின்றேமால்;

246. ஆனகம்–படகவாத்தியம். போரில் மூள–போரில் (ஊக்கம்)மூள.

மருளான்மெய்ம்மயங்கியொருவலியுடையோர்
தமைப்போலமதத்தனீங்கள்
பொருளாகவிருந்தனமோ?நூற்றுவரும்
வருக,எதிர்பொருக"என்றான்.

248. "கொந்தளகமலர்சொரியக்கூப்பிடுவாள்
கொடுங்கற்பும்,கூறைமாளா
மந்திரமும்,அடல்வீமன்மானமிலா
துரைக்கின்றவலியுங்காணத்"
தந்தைவிழியிருள்போலத்தருமனத்தோ
னுந்துச்சாதனனைநோக்கிப்,
"பைந்தொடியைக்கொணர்ந்தினியென்மடியின்மிசை
இருத்து"கெனப்பணித்திட்டானே.

த்ரௌபதி சாபமிடல்.

249. என்றபொழுதருந்ததிக்குமெய்தாரு
கற்புடையாள்,இடியேறுண்ட
வன்றலைவெம்பணிபோல்நடுநடுங்கி,
மாயனையும்மறவாளாகிப்,
"புன்றொழிலோன்யானிருக்கக்காட்டியதன்
தொடைவழியேபுள்வாய்குத்தச்
சென்றிடுகவாருயிர்"என்றெவரும்வெரு
வுறச்சபித்தாள்,தெய்வமன்னாள்.

திரௌபதி சபதமிடல்.

250. "அரசவையிலெனையேற்றி,அஞ்சாமல்
துகிறீண்டி,அளகந்தீண்டி,
விரைசெயளியினம்படிதார்வேந்தரெதிர்
தகாதனவேவிளம்புவோரைப்,
பொருசமரின்முடிதுணித்துப்புலாலாறு
வெங்குருதிபொழியவெற்றி,
முரசறையும்பொழுதல்லால்விரித்தகுழல்
இனியெடுத்துமுடியேன்"என்றாள்.

248. கூறை—வஸ்திரம்.

### வீமன் சபதமிடல்.

251. "பாஞ்சாலிக்கரசவையிற்பழுதுரைத்தோன்
உடலெனதுபடையாமேழி
போஞ்சாலினிணஞ்சொரியத்துணைவரொடு
குலமாளப்பொருவேன்யானே,
நீஞ்சாலிவிளைபழனத்திருநாட்டீர்,
கேண்மின்" எனச்செந்தீமூள,
வேஞ்சாலினறுநெய்போல்,வெஞ்சினத்தான்
வஞ்சினமும்விளம்புவானே.

252. "வண்டாருங்குழல்பிடித்துத்துகிலுரிந்தோன்
உடற்குருதிவாரியள்ளி
உண்டாகங்குளிர்வதன்முன் இக்கரத்தாற்
புனலுண்ணேன்; ஒருகாலென்கைத்
தண்டால்வெம்புனலெற்றிமீதெழுந்து
விழுந்திவலைதண்ணீராகக்
கொண்டாவிபுரந்திடுவன்; இதுவிரதம்
எனக்" கெனவுங்கூறினானே.

### அருச்சுனன் முதலியோர் சபதம்.

253. "பகலவன்றன்மதலையுயிர்பகைப்புலத்துக்
கவர்வன்" எனப்பார்த்தன்சொன்னான்.
நகுலனுமற் "றென்கரத்தாற்சௌபலநா
யகனுயிர்க்குநாசம்" என்றான்;
"சகுனிதனையிமைப்பொழுதில்" சாதேவன்
"துணித்திடுவேன்சமரில்" என்றான்;
இகனிருபரிவர்மொழிகேட்டெளிதோவிக்
கொடும்பழியென்றேங்கினாரே.

251. மேழி போம் சாலில்—கலப்பை உழுகின்ற சாலின் வழி. வேம் சால்—வேகின்ற கடாரம்.

253. சௌபலன்—சுபலன் புத்திரன்; சகுனி. இங்கே நகுலனும் சாதேவனும் சகுனியையே கொல்வதாகச் சபதம் செய்கின்றனர். இது வியாசபாரதத்துக்குமாறு; அங்கே நகுலன் துரியோதனனும் துச்சாதனனுமொழிந்த தார்த்தராட்டிரரைக்கொல்வதாகச் சபதஞ்செய்கின்றனன்.

254. மேகங்கள்வழங்காமல்விண்ணதிர்ந்திட்
டூர்கோளும்வெயிலைச்சூழ்ந்து
பூகம்பம்பிறந்துடுவுமரும்பகலே
விழுந்துடனேபொய்கைவாடி
யாகஞ்செய்நெடுஞ்சாலையின்பாலுஞ்
செந்நீராயிருந்தவேந்தர்
ஆகங்களொளிமழுங்கிற்,,அவிதாவென்
றணங்கனையாளழுதபோதே.

திருதராட்டிரன் பொறுத்திகேட்டல்.

255. உற்பாதம்பெரிதெனநெஞ்சுகுவாரும்,
என்னுமிவ்வூறொன்றஞ்சி
நிற்பாரும்,போம்வழிமேனினைவாரும்
பலராகிநிகழ்ந்தகாலைக்,
கற்பான்மிக்குயர்வேள்விக்கடன்சுமந்த
மடமயிலைக்கண்ணிலாதோன்
பொற்பாதம்பணிந்தேத்தி"அபாரதம்
புரிந்தவெலாம்பொறுத்தி"என்றான்.

256. "உத்தமமாங்குலமயிலே,என்சிறுவர்
அறியாமலுனக்குநேரே
மைத்துனராமுறையாலிவ்வழக்கலா
தனசெய்தார்மதியிலாமல்;
எத்தனைதாழ்விவர்புரிந்தாரென்றாலும்,
அவையொன்றுமெண்ணாதின்னே
பித்தர்மொழியெனக்கருதிமறந்தருள்"என்
றொருகோடிபிதற்றினனே.

திருதராட்டிரன் செய்த சமாதானம்.

257. மைவரையுந்தடங்கண்ணாண்மனச்சோகம்
பலமுகத்தான்மாற்றி,மைந்தர்
ஐவரையுந்தனித்தனியேமுகங்கொண்டு
கொடுங்கோபமகற்றி,"நீங்கண்

254. வழங்காமல் – சஞ்சரியாமல். ஊர்கோள்–சூழ்ந்துகொள்ளல்; பரிவேடம். உடு–விண்மீன். அவிதா–'உதவிசெய்க' எனப்பொருள்படும் ஒருவடமொழி இடைச்சொல்.

257. முகங்கொண்டு–நன்முகம்பெற்று. (பாண்டவர்கள் ஐவரையும் தனித் தனியே பார்த்து அவர்களை இணங்கச் செய்து.) வற்போர்–சூதாட்டம்.

மெய்வரையும்பொருபுயத்தீர்,வற்போரில்
இழந்தவியனிலமுந்தேரும்
கைவரையும்பரிமாவுஞ்செல்வமும்யா
வையுமீண்டுங்கைக்கொள்வீரே.

258. "கோமன்றிலருந்ததியைக்கொண்டினிநீர்
நில்லாமற்குறுகவூரே
போம்"என்றுவரவழைத்துத்தழீஇக்கொண்
"டென்கண்மலரேபோல்வானெம்பி;
யாமென்றுமவனென்றுமிரண்டில்லை;
விளையாட்டென்றிருந்தேம்;இவ்வா
றாமென்பதெனக்கொருவருரைத்திலரால்;
யாமுமுதலறிந்திலேமே.

259. "என்மைந்தரிவர்,நீங்களவன்மைந்தர்
எனநினையேன்;இவரேயெம்பி
தன்மைந்தர்;உங்களையேயென்மைந்தர்
எனவளர்த்தேன்;சம்புநாட்டு
மன்மைந்தருங்களைப்போல்வேறுபடா
தித்தனைநாள்வளர்ந்தாருண்டோ?
வின்மைந்தர்நடக்க"எனவிடைகொடுத்தான்
விரகினுக்கோர்வீடுபோல்வான்.

சகுனி கூற்று.

260. "படைகொடுத்தான்;இவனிழந்தபார்கொடுத்தான்;
அரசாளப்பண்டுபோல்வெண்
குடைகொடுத்தான்;குருகுலத்தேகுலங்கொடுத்தான்;
ஐவருக்குங்குலத்தேகொண்ட
தடைகொடுத்தான்;அகப்பட்டுந்தலையழிக்க
நினையாமற்றானேயம்ம
விடைகொடுத்தான்.இனிவிடுமோ?வயப்புலியை
வாலுருவி விடுகின்றீரே!

259. சம்புநாடு—சம்புத்துவீபம், நாவலந்தீவு.

260 தடைகொடுத்தான்—தடையை விடுவித்தான், நீக்கினான். அடிமையானதாற் குலத்திற் சேருதற் குண்டாகிய தடை. தலையழித்தல் ஒருசொல், தலையளி என்பதுபோல; அழித்தல் என்னும் பொருட்டு. தலையை அழித்தல் என்றுமாம்.

வேறு.

261. "யாதொருகருமமேனுமெண்ணியேதுணிகவென்றும்
காதலிற்றுணிந்துசெய்தாலெண்ணுதல்கடனன்றென்றும்
ஓதுநூற்புலவர்சொன்னார்.உமக்குளவுணர்வற்றன்றோ.
பேதுறவடர்த்தும்பின்னையுருகிநீர்பிழைசெய்தீரே.

262. "தீயினாற்சுட்டசெம்புண்ணுறுமத்தீயிற்றீய
வாயினாற்சுட்டமாற்றமாறுமோ?வடுவேயன்றோ?
பேயினாற்புடையுண்டாரோ?மறப்பரோபெரியோர்?"என்றான்
வீயினாற்றொடுத்ததண்டார்வேந்தர்க்குவேந்தன்மாமன்.

263. சகுனிசொன்மருகன்கேட்டுத்,தம்பியுமங்கர்கோவும்
முகமுகநோக்கியெண்ணி,"எம்பிநீமொழிக"என்றான்.
துகிலினையுரிந்தவன்கைச்சூரனுந்தருமராசன்
மகனுடன்வெகுளிதோன்றவழக்குறமொழிதலுற்றான்.

துரியோதனன் மறுத்தல்.

264. "சாதமென்றுண்மையாகச்சபையினீயிசைந்துதோற்ற
இரதமுங்களிறுமாவும்பாவையுமீண்டுந்தாரோம்.
சூதமென்கொடியுநீருந்தொண்டொழிந்துரியீராமின்.
விரதமுன்னறத்துக்கென்றும்பொய்கொலோ?மெய்யேயன்றோ?

265. "தந்தைதனருளாற்பெற்றீருரிமையும்;தம்பிமாரும்
பைந்தொடிதானுநீயும்பதிபெயர்ந்துயர்ந்தவேயின்
வெந்தழலார்ந்தகானின்வெளிப்படாதுறைமின்;இன்றே
இந்தமாதரணிகைவிட்டேகுமின்எழுமின்"என்றான்.

266. என்றலுந்தந்தை,மைந்தனியம்பியவாய்மைகேட்டு
நின்றவாநில்லாவஞ்சநெஞ்சினனாகி,மீண்டும்
வென்றிகொளரசனோடும்வெஞ்சிலைவிதுரனோடும்
ஒன்றியவமைச்சரோடுமுறுவனவுசாவலுற்றான்.

267. "மேல்வருகருமமெண்ணாவெகுளியான்மிக்கவீரர்
நால்வருமெம்மனோர்கணவின்றனசிறிதுங்கேளார்;
சேல்வரும்பழனநாட,செயலறிந்தெண்ணிவேத
நூல்வருமுறைசொல்லென்றான்"நோன்சிலைநூலின்மிக்கோன்.

---

261. எண்ணித்துணிககருமந் துணிந்தபின்,எண்ணுவதென் பதிழுக்கு—என்னும் குறள் பார்க்க.

262. தீயினாற்சுட்டபுண்ணுள்ளாறு மாறாதே, நாவினாற்சுட்டவடு — என்னும் குறள் பார்க்க.

263. துகிலினையுரிந்த வன்கைச் சூரன்—குறிப்புமொழி.

266. தந்தை—திருதராட்டிரன். வென்றிகொளரசன்—வீட்டுமன்.

267. சிலைநூலின்மிக்கோன்—துரோணன்.

268. வின்மகனுரைக்கவேனையமைச்சரும்விதுரன்றானும்
"மன்முறைதவறினின்றேவசையும்வந்திசையும்"என்றார்.
கன்மனநெடுங்குன்றன்னான்கருதி, அக்கணத்தேமீளத்
தன்மனையாவர்நெஞ்சுஞ்சருகெனத்தழைக்கச்சொன்னான்.

269. "உன்னுணர்வுனக்கேயுள்ள(து)உன்பெருந்துணைவரான
கொன்னுனைவேலோர்வென்றுகொண்டனகொடுத்தலொல்லார்.
பின்னுறவுரிமையாவும்பெறுதி.நின்பெருமைக்கேற்ப
முன்னுளோர்பலருஞ்செய்தமுறைமையேமுன்னு" கென்றான்.

பாண்டவரை வனத்துக்கேவுதல்.

270. அரசன்மற்றுரைத்தமாற்றமந்தணனுணர்ந்து,செல்வ
முரசதிரயோத்திமூதூர்முன்னவன்கதையுங்கூறி,
"உரைசெய்தபடியேயுங்களுலகினையிழந்து,சின்னாள்
வரைசெறிகானில்வைகிவருவதேவழக்கும்"என்றான்.

271. "அரிவையோடகன்றுநீவிரைவருமடவியெய்திச்
சுரர்தினமீராறங்கட்டுன்னுதிர்;மன்னுநாட்டின்
ஒருவருமறியாவண்ணமொருதினமுறைதிர்;உங்கள்
பெருவிறலரசும்வாழ்வும்பின்னுறப்பெறுதிர்"என்றான்.

272. "மறைந்துறைநாளினும்மைமற்றுளோரீண்டுளாரென்
றறிந்திடின்மீண்டுமிவ்வாறாரணியமடைதிர்"என்றான்.
பிறந்தவிம்மாற்றங்கேட்டுப்,பிதாமகன்முதலாயுள்ளோர்
"சிறந்ததொன்றிதனினில்லை;இசைந்ததே;செய்மின்" என்றார்.

273. சுரிகுழல்குலைபநின்றதிரௌபதி,சுருதிமுந்நூல்
வரபதிமொழிந்தமாற்றங்கேட்டலும்,வணங்கி,"ஐவர்
அரசருமெனதுமைந்தரைவரும்யானுமீண்டும்
உரிமையின்றெய்தவெஞ்சூதாடுதலுறுதி"என்றாள்.

---

268. தன்மனை—தருமனுக்கு. சருகெனத்தழைக்க—சருகுபோல் வாட.

269. உன்னுணர்வுனக்கேயுள்ளது—நீ நல்ல அறிவுடையவன் என்றபடி. முன்னுக—எண்ணுக.

270 அந்தணன்—துரோணன். அயோத்திமூதூர்முன்னவன்—இராமன்.

271. சுரர்தினமீராறு – பன்னிரண்டுவருடம். பன்னிரண்டுவருடம் என்னும் பொருள் மறைந்திருக்கச் சுரர்தினமீராறு என்றான்.

272. இசைந்தது—தக்கது.

273. உரிமை இன்று எய்த—அடிமையினீங்கிச் சுவாதீனமடைய.

### தருமன் மறுசூதாடித் தமதடிமைத்தன்மை நீக்கல்.

274. தையலங்குரைத்தமாற்றந்தருமனுங்கேட்டு,"நாங்கள்
கையறுதொண்டராகிக்கான்புகல்வழக்குமன்றால்;
ஐயுறுதொருகாலின்னமாடுதுமருஞ்சூ"தென்றான்.
மெய்யுறவிருந்தவேந்தர்மீளவுங்காணலுற்றார்.

275. சத்தியவிரதன்றானுந்தன்பெருந்தேவிசொல்லப்
பத்தியால்வணங்கிமாயன்பன்னிருநாமமேத்தி
ஒத்தவெண்கவறுவாங்கச்,சகுனி"யாதொட்டம்?"என்றான்;
புத்தியாலவனும்"யான்செய்புண்ணியமனைத்தும்"என்றான்.

276. உருட்டியகவறுநேமியுடையவனருளினாலே
மருட்டியசகுனியெண்ணின்வழிப்படாதுருண்டகாலை,
இருட்டியவிழியான்மைந்தனிதயமுமிருண்டுசோரத்,
தெருட்டியவுணர்வின்மிக்கோன்செப்பியயாவும்வென்றான்.

### பாண்டவர் வனமேகல்.

277. வென்றுதன்னிளைஞரோடுமேதகுபுதல்வரோடும்
மன்றலந்தெரிவையோடுமற்றுளோர்தங்களோடும்
அன்றுதன்குரவர்பொற்றாளன்புடன்வணங்கிக்,கானம்
சென்றனனென்பமன்னோசெழுநிலமுடையகோமான்.

278. ஒழிவுசெய்கருணைநால்வருள்ளமுமொழிய,வனை
வழுவறுமன்னருள்ளமம்மரோடயர்ந்துவிம்மக்,
குழவிபானுகர்தலின்றிக்,கொற்றமாநகரிமாக்கள்
தழலெனவுயிர்த்துமாழ்கித்,தனித்தனிபுலம்பலுற்றார்.

279. நாட்டிடையெல்லைபொற்றாணறுமலர்சிவக்கவேகிக்
காட்டிடைபுகுந்தபோதுங்கலக்கமற்றுவகைகூர்ந்தான்,
கூட்டிடையின்பத்துன்பக்கொழும்பயன்றுய்த்துமாறி
வீட்டிடைபுகுதும்போதுமெய்ம்மகிழ்விபுதர்போல்வான்.

---

274. கையறுதொண்டர்—செயலற்ற அடிமைகள்.

276. தெருட்டிய உணர்வின்மிக்கோன்—தெருண்ட அறிவினையுடைய தருமன், தெருளல்—தெளிதல். தெருட்டு பிறவினை.

278. ஒழிவுசெய் கருணைநால்வர்—அருளை நீக்கிய துரியோதனன், துச்சாதனன். சகுனி, கன்னன் என்னும் நால்வர். ஒழிவு செய்கருணை நால்வர் என்ற சொற்றொடரை நோக்குக. இது "அகன்ற மெய்ம்மை யுடையாய்" (வாரணவதம்—45) என்பது போன்றது. மம்மர்—மயக்கம்.

279. நாட்டிடை எல்லை—நாட்டெல்லையிடை, நாட்டெல்லைக்குள். கூடு—உடல் விபுதர்—மெய்ஞ்ஞானிகள்.

# நைடதச் சுருக்கம்.



நைடதம் (நைஷதம்) வடமொழியில் பஞ்சகாவியங்களில் ஒன்று: ஸ்ரீ ஹர்ஷதேவன் என்னும் அரசன் இயற்றியது. நிஷததேசத்து ராசனான நளன் சரித்திரத்தைக் கூறுதலால் இஃது இப்பெயர் பெற்றது. இதனை இப்பெயரோடு தமிழில் மொழிபெயர்த்தவர் அதிவீரராம பாண்டியன் என்னு மரசர். இவர் கொற்கையில் அரசுசெய்தவர். "நைஷதம் புலவர்க் கௌஷதம்" என வடமொழியிலும் தமிழ்மொழியிலும் வழங்கும் பழமொழியால் இந்நூலின் பெருமை விளங்கும்.

இவர் இயற்றிய ஏனைநூல்கள் இலிங்கபுராணம் கூர்மபுராணம் காசிகண்டம் நறுந்தொகை என்பன. இவருடைய தமையனான வரதுங்க பாண்டியன் என்பவரும் சிறந்த தமிழ்ப்புலவர். பிரமோத்தர காண்டமும் கருவை யந்தாதிகளும் அவர் பாடியன. காலம் கி-பி. பதினைந்தாவது நூற்றாண்டென்று ஊகிக்கப்படுகின்றது. இவருடைய மதம் சைவம்.

அதிவீரராம பாண்டியனுடைய வாக்கு அதிக கடினமு மின்றி அதிக வெண்மையு மின்றிச் செம்பாகமானது. விசேடணமாகிய அடைமொழித் தொடர்களை அணியணியாக அடுக்குவது இவரியல்பு. சங்கநூல்களினின்றும் பிற்பட்ட காவியங்களினின்றும் நயமான தொடர்களைத் தம்முடைய பாடல்களில் அங்கங்கே அமைத்துக்கொள்வர். நைடதத்துக்குச் சிறப்புப்பாயிரம் கூறினவர் இவருடைய தேவி என்பர்.

---

## சிறப்புப்பாயிரம்.

நிலவுபொழி தனிக்கவிகை நிடதர்கோன் புகழ்ச்சரிதம்
நெடுநீர் வைப்பில்
புலவர்களி அமுதொழுகு புதுமொழிகூட் டுணைத்தமிழால்
புனைதல் செய்தான்
வலனுயர்த்த அண்ணலஞ்சேல் வான்றொடுபொற் கோட்டிமய
வரையிற் றீட்டி
அலர்தலைமா நிலப்புரக்கும் அதிவீர ராமன்இகல்
அரச ரேறே.



# நைடதச் சுருக்கம்.

—— ∘∘∘ ——

### நளன் தமயந்தியிடம் அன்னத்தைத் தூதுவிடுதல்

மத்தியவிந்தியாவில் நிடதம் என்றொரு வளநாடுண்டு. அந்நாட்டுக்கு மாவிந்தநகரம் ராஜதானி.

நளன் இயல்பு

வளமலி இந்நகர் மன்னர் மன்னவன்
தளை[1]யவிழ் நறுமலர்த் தண்ணந் தாரினன் — [1] சட்டு.
களைக[2]ணாய் உலகொரு மூன்றுங் காத்தருள்
நளனெனப் பெயரிய நாம வேலினன்;

[2] புகல், தஞ்சம், ஆதாரம்.

தளையவிழ்—கட்டவிழ்ந்த; மொக்காயிருக்கிற சட்டு அலர்ந்த. நாமவேள்—(பகைவருக்கு) அச்சம் (தரும்) வேல். இது முதல் நான்கு பாட்டும் ஒரு தொடர்.

ஒன்னலர்[1] மணிமுடி உரிஞ்சு[2] தாளினன்;
கன்னவில்[3] தோளினன்; கமலக் கண்ணினன்;
தன்னுயி ராமென உலகிற் றங்கிய
மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்;

[1] பகைவர். [2] தேய்க்கும். [3] கல்லென்று சொல்லத்தக்க.

ஒன்னலர்...தாளினன் = பகைவருடைய மணிமுடி தேய்க்கும் அடியை யுடையவன். தங்கள் மணிமுடி முட்டும்படி பகையரசர் விழுந்து வணங்கும் தாளையுடையவன்.

வெங்கலி[1] யிருள்கெட வெண்ணிலா வுமிழ்
திங்களங் கவிகை[2]யான்; திகிரி[3] ஒன்றினால்
அங்கண்மா நிலமுழு தளிக்கும் ஆற்றலான்;
மங்குலின்[4] எழுமடங் குதவும் வண்கையான்;

[1] வறுமை. [2] அம் திங்கள் கவிகை—அழகிய சந்திர வட்டக்குடை. கூரமமாகிய இருள் கெட க்ஷேமமாகிய சந்திரிகையை வீசும் குடை: உருவகம். [3] (ஆக்ஞா) சக்கரம். [4] (பிரதியுபகாரம் வேண்டாத) மேகம்போல்.

அருளின துறையுள்;[1]நல் அறத்தின் வேலி[2];சொல்
தெருளுறு கல்வியந் தெய்வ மாக்கடல்;[3]
குறைகடற் புவிபுகழ் குணக்குன்[4] றம்;சுடர்
எரிதவழ் அலங்கல்வேல் அரச ரேறனுன்.

[1] உறையுள்—உறைவிடம், வாசஸ்தானம். [2] அறமாகிய பயிருக்குவேலி. [3] கல்விக்கடல்—வித்யாசாகரம். [4] நற்குணமாகிய குன்று.

## தன் சோலையில் நளன் ஓர் அன்னத்தைப் பிடித்தல்.

இவன் ஒருநாள் தன் பூஞ்சோலையிற் சென்று அதன் வளங்களைக் கண்டு அச்சோலையின் இடையிலுள்ள ஒரு தடாகத்தை அடைந்தான். அத்தடாகத்தில் புஷ்பசயனத்தில் ஓர் அன்னம் உறங்கியிருப்பதைக் கண்டான்.

சூழ்வளி[1] யுடன்சுழல் சருகிற் றேன்றிய [1] சுழல்காற்று.
ஊழ்வழி மனஞ்செலல் உண்மை யன்றுகொல்?
தாழ்புலன் வழிமனம் சார, ஓதிமம்[2] [2] அன்னம்.
பாழி[3]யந் தோளினுன் கையிற் பற்றினுன். [3] வலிமை.

அன்றுகொல்—அன்றோ. தாழ்புலன்—விரும்புகின்ற புலன். அன்னத்தைக் கண்ணுற்று அதன்கட் டாழ்ந்த புலன்வழி மனமுஞ் செல்ல.

கைப்படு சிறையனம் கலங்கி வாய்வெரீஇத்
துப்[1]புறழ் தோலடி துடிப்பத் துன்பமுற்(று), [1] துப்பு—பவழம்.
எய்ப்[2]பொடு சிறையடித் தேக லாமையின் [2] எய்ப்பு—இளைப்பு.
மைப்புயல் அனையகை[3]ம் மலரிற் கொத்துமால்.

[3] கரிய மேகம் போன்ற கை—மேகம்போல வரையாது ஈயுங்கை. மை—மேகத்துக்கடை, கைக்கன்று.

இன்னபொன் நிறவனம் கண்டி லேன்எனும்
மன்னர்மன் னவன்மதி வதனம்[1] நோக்கியே, [1] முகம்.
அன்னவன் கரமலர் அமர்ந்த ஓதிமம்,
நன்னய மொழிசில நவிற[2] லுற்றதே:—

[2] (நவில்+தல்—நவிறல்)—சொல்லல்.

"சிறை யொளிர் பொன்னிறை செல்வம் நல்குமோ?
அறைகடல் பனியினில் நிறைவ தாங்கொலோ?
கறைகெழு[1] வேலினுய், கருத்தின் உள்ளுற [1] உதிரம் படிந்த.
நிறைதரு விழை[2]வினை நீத்தல்[3] வேண்டுமால்.

[2] ஆசை. [3] ஒழித்தல்.

"கோறல்[1]செய் தால்உயிர்க் கொலையொன் றேயலால்
தேறினர்ப் பிழைத்த[2]வன் பழியும் சேருமால்.
தாறுபாய் கவுண்மதத் தறுகண் யானையாய்,
மாறுகொள் பகைஞர்க்கும் இதும னங்கொளார்.

1 (கொல்+தல்—கோறல்) கொல்லல். 2 நம்பினவர்க்குத் தீங்கு செய்த.

"பெருகிய மூப்பினில் தளர்ந்து பேதுறும்[1]
இருமுது குரவ[2]ரும் என்செய் கிற்பரோ!
கருவுயிர்த்[3] தயாவுறு[4] காதற் பேடையுள்
உருகுமே!" என்னநெட் டுயிர்ப்பு[5] வீங்கிற்றே.

1 மதிமயங்கியிருக்கும். 2 தாய்தந்தையர். 3 கர்ப்பத்தை ஈன்ற. 4 வருந்
5 பெருமூச்சு.

"அன்னமேப் பழிதா ஆர்கொல் ஆற்றுவார்?
மன்னனெற் படுத்தலும் வெருவி[1] வாவியில் — 1 அஞ்சி.
துன்னியாங் கிருந்தபுள் சொற்ற[2] போழ்தினில் — 2 சொல்லிய.
இன்னலங் கடலுளாழ்ந் திறக்கு மேகொலாம்?

"வீழு[1]மெற் படுத்தஇக் கொடுஞ்சொல் மென்னிறத்
தாழ்சிறை மடப்பெடை செவியிற் சார்தலும்,
ஆழ்துயர்க் கடலிடை ஆழ்ந்து, யானிலாப்
பாழ்படு[2] திசையெலாம் மருண்டு பார்க்குமே.

1 (தன்னால்) விரும்பப்பட்ட. 2 பாழடைந்த.

"பிரிவெனும் அழல்சுடப் பெடையி றக்குமே.
அரிதினில் பெற்றஎம் பார்ப்[1]பெ லாம்அயர்ந் — 1 குஞ்சு.
துரைபெறுக் குடம்பை[2]யுள் அரற்றி[3] எய்திய — 2 கூடு. 3 அழுது.
பரிவினிற் சாமெனப் பதைத்துச் சோர்ந்ததே.

அளி[1]க்கொரு கடலனான் அதனைக் கண்டுகண் — 1 அருள்.
துளித்திடு தண்புனல் துவலை[2] வீழ்தலின் — 2 துளி.
தளிர்த்தமென் சிறையனம் தளர்வு நீங்கி,உட்
களித்தது காவலன் கருணை நோக்கியே.

ஆகுல[1]த் துடன்மட வனத்தை நோக்கி,"நின்
சேகுறு[2] பொன்னிறச் சிறகர் நோக்குறு
மோகமே[3] பிடித்தனன்: முழுதும் நோக்கினன்.
ஏகுழி ஏ[4]"கென இறை[5]வி டுத்தனன்.

1 ஆகுலம்—வ்யாகூலம்—துன்பம். 2 சேகுஉறு—மாற்றுயர்ந்த. 3 ஆசையாலேயே.
4 ஏகு உழி ஏகு—செல்லும் இடத்துக்குச் செல். 5 அரசன்.

பொன்னிறத் தூவி[1]ப் பவளவாய்ச் செங்கால் [1] இறகு.
பொற்புறு[2] பசியகூட்[3] டரச [2] அழகுமிகுந்த.
அன்னமெய் உதறிச் சிறையுளர்ந்[4]தயல்சூழ் [4] கோதி.
அனக்குழா[5]த் திடைவதி தரலும்,[6] [6] தங்கலும்.
கன்னவில் திரடோள் இறைகரத் தழுந்தும்
சிறையினைக் காண்டலும் வெருவி,
முன்னைய தன்றென் றிருந்தபுட் குலங்கள்
முளரி[7]யந் தட[8]த்தகன் றனவே. [7] தாமரை.

[3] உச்சிக்கொண்டை. [5] அன்னக்கூட்டம். [8] தடம்—தடாகம்.

**அன்னத்தின் வார்த்தை**

புள்ளினம் இரிய[1]மதுக்குடம் விரிந்தாற்
போலு[2]மென் மலர்நறும் பொகு[3]ட்டின்
உள்ளுறை அன்னம், கொலைத்தொழில் சிறிதும்
உஞற்றலன்[4] இறையெனத் தேறிக்,
கள்[5]ளவிழ் கமல மலரென அகன்ற
கரத்தினில் மீட்டும் வந்தெய்தி,
அள்[6]ளிலை நெடுவேல் அண்ணல்தன் உளத்தில்
அதிசயம் மிகவிளைத் துரைக்கும்.

[1] ஓட. [2] தேன்குடம் வாய்மலர்ந்தாற்போலும். [3] கொட்டை. [4] செய்யான். [5] தேன். [6] கூர்மை.

"மல்லலம் புவனம் பொதுவற[1]ப் புரக்கும்
மன்னவர் மன்ன, நின் றனக்கோர்
புல்லிய பறவை இயற்றுகைம் மா[2]றென்
றிலதெனும் புணர்ப்[3]பறிந் தாலும்,
'ஒல்லை[4]யில் கைம்மா றியற்றுதி' என்னும்
அருத்தி[5]என் உளத்தின தாகி
அல்லலுற் றழுந்த ஈரு[6]மால்; அதனை
அடிகள்,[7]கேட் டருடி[8]"என் றறையு[9]ம்

[1] பலர்க்குப் பொதுவாகாது தனக்கே உரியதாக. [2] பிரதியுபகாரம். [3] நியாயம். [4] சீக்கிரம். [5] ஆர்த்தி—ஆசை. [6] அறுக்கின்றது. [7] சுவாமீ. [8] கேட்டருள்வாயாக. [9] அறையும்—சொல்லும்.

"பொன்னினிற் செய்த வள்ளம்[1] வா யமுதம்
பூவை[2]யைக் கிள்ளை[3]யை அருத்திக்
கன்ன[4]லின் அமிழ்தின் கனிந்தமென் சொற்கள்
பயிற்றியும் கேட்டுளங் களிப்பார்.
மன்னவர் மன்ன, நின்னுளத் தேறு
மடமொழி யாயினும், ஈதோர்
அன்னமென் சொல்லென் றதிசயம் சிறப்ப
அகமலர்ந் தினிதுகேட் டருளாய்.

[1] வள்ளம்—கிண்ணம். [2] நாகணவாய்ப்பறவை. [3] கிளி. [4] சர்க்கரை.

"விதர்ப்பநாட்டரசன் வீமன் என்பவன் தமனமுனிவருடைய வரத்தால் ஒரு கன்னிகையைப் பெற்றிருக்கிறான். அவளுக்குத் தமயந்தியென்று பெயர். திரிலோகத்திலும் உள்ள பெண்களில் அவளுக்கு உவமை காட்டத் தக்கவர் ஒருவரும் இல்லை. அவள் வனப்பே வடிவெடுத்தாற் போன்றவள். நான் தேவலோகத்திலிருந்து பூலோகம் வந்தபோது, தங்கியிருப்பதற்கேற்ற பூம்பொய்கையை நாடித் தேயமெல்லாம் சுற்றிவருகையில், அவளை வீமனுடைய ராஜதானியான குண்டினபுரத்தில் கண்டேன்.

"காண்டலும் அவட்கு நிகர்அர மகளிர்[1] [1] தெய்வமங்கையர்.
தம்மிலும் கண்டிலேன். கதிர்கொள்
பூண்டயங் கிளையாள் இவ்வனப் பினுக்குப்
பொருந்துறும் இளைஞன்யா ரென்றுத்
தேண்டினன்:[2] மும்மை உலகிலும் காணேன். [2] தேடினேன்.
திருந்தலர்[3]க் கசனியே[4] றன்ன [3] பகைவர். [4] இடியேறு.
ஆண்டகாய்[5], நின்னைக் காண்டலும் நினைந்தேன்
அவ்வளைத் தோளணங்[6] கினையே.

[5] ஆண்டகை (புருஷோத்தமன்) என்பதன் விளி. [6] அணங்கு—தெய்வப்பெண் போல்பவள்.

"அவளை மனைவியாகப் பெறுவது உனக்கு அரிது. அமரர்களும் அவளை விரும்பியிருக்கின்றனர். அவள் அவரிடம் ஆர்வம் அடையாதவாறு நான் அவளிடம் உன் அழகை விரித்துரைத்து, அவளுக்கு உன்னிடம் விருப்பமுண்டாகும்படி செய்வேன்.

"செய்தொழில் பயனால் உரைப்பரே யன்றித்
தெளிகுநர்[1] உரையினால் உரையார். [1] விவேகிகள்.
ஐயமுற் றுடன்பா டெய்துவான் முன்னர்
அறைந்தனன்" எனமட வன்னம்

பெய்தசொல் அமுதம் உள்ளெலாம் பரந்து
பெருகிமேல் வழிதல்போல் நகையாக்
கையினுல் பசும்பொன் சிறகர்தை வந்து[2] [2] தடவி..
காதல்கூர் மொழிசில புகன்முன்.

**நளன் தமயந்தியிடம் அன்னத்தைத் தூதுவிடுதல்.**

"பொலன்சிறைப் பவளக் கடிகை[1]வாய் அனம்! நின்
பொற்பினுக் குவமைவே றின்று.
நலங்கெழு குணனும் உரைப்பதற் கரிது.
நல்லெழில் பகருமுன் னூலோர்
இலங்கெழி லளவு குணமெனு உரைப்பர்.
இதற்குமேற் கோ[2]ளென நின்னைத்
துலங்குறக் கண்டேன். என்துயர் தீர்க்கும்
மருந்துநின் சொல்லின்வே றுளதோ?

[1] பவளக்கடிகை—பவழத்துண்டு. [2] உதாரணம்.

"காதலங் கடலின் கரைபெறற்[1] கயனு[2]ல்
காரண மின்றியே காட்டப்
போதரும் புணை[3]ய தாதி.[4]என் உள்ளம்
புலம்புகொண் டினைவது[5] தவிர்ப்பான்
தூதுநீ போய்முன் உரைத்தவா முடித்தல்
தோமறு[6] புகழ்நினக்" கென்ன
ஆதரம் பெருக நன்மொழி புகன்றவ்
அனத்தினை மடந்தைபால் விடுத்தான்.

[1] காதற்கடலைக் கடத்தற்கு. [2] பிரமன். [3] தெப்பம். [4] ஆதி—ஆவாய். [5] வருந்துதல். [6] தோம் அறு—குற்றம் அற்ற.

"போதரு நெறியில் நன்மைகள் பயக்க.[1] [1] உண்டாகுக.
பொருந்துறு கிளை[2]யொடும் புல்லி [2] சுற்றம்.
ஆதரம் பெருகும் அளியனை[3] மறவேல். [3] எளியேனை.
ஆயிழை அருண்முகம் பெற்றுத்
தீதற விரைவில் வருதி"என் றுரைத்துத்
திங்களின் அருஞ்சுதை[4] தீற்று [4] வெண்சாந்து.
தாதவிழ் தாம மாடமேல் தானும்
தனி[5]யுமாய் இருந்துடல் தளர்ந்தான். [5] ஏகாந்தம்.

கட்புலன் கதுவா[1] துயர்ந்து பின்னவரும்
காண்வர வெள்ளிடைப் பறந்து,
புட்செறி வாவி புகாதகல் விசும்பில்
பொன்னுரைத் தாலென[2]ப் போகி,
நுட்பமாய் குரக்கும் அதிசயம் பயப்ப
நொடிவரைப் புகுந்ததவ் அன்னம்,
வட்கி[3]வெண் மதியம் சவி[4]கெட ஒளிரும்
மாடமார் குண்டின புரமே.

[1] கதுவாது—பற்றப்படாமல். [2] பறத்தல் வேகத்தினாலே அதன் பொன்னொளி, தாரையாக விழுதல்பற்றி, 'பொன் உரைத்தாலெனப் போகி' என்றார். உரைத்தால். என—உரைத்ததுபோல. [3] நாணி. [4] ஒளி.

**அன்னம் தமயந்தியைக் கண்டு பேசுதல்.**

சோலை வாயிற் சுடரு நிலாமணி[1] — [1] சந்திரகாந்தம்.
ஆல வால[2]த் தவிர்மதி யாற்புனல் — [2] பாத்தி.
கால[3] வாய்ந்த கதிர்மணி முல்லையின் — [3] கக்க.
கோல நாண்மலர் கொய்வதற் கெய்தினள்.

குறிப்பு:—சந்திரகிரணம் மேலே படும்போது சந்திரகாந்தக்கல் நீர் கக்குவ தென்ப. சந்திரகாந்தங்கள் கக்கும் நீராலே பாத்திகளில் முல்லைக்கொடி நன்றாக வளர்ந்து புஷ்பிக்கும் புஷ்பங்களைக் கொய்ய வந்தாள் தமயந்தி.

மீதுலாயவெண் தாரகை நாப்பணில்[1] — [1] நட்சத்திரங்களின் நடுவில்.
சீத வொண்கதிர்த் திங்கள் கண்டாலென,
மாதர்நோக்கின் மடந்தையர் நாப்பணில்
காதல்கூர் தமயந்தியைக் கண்டதே.

வழிந்து தெள்ளமு தூற வளர்ந்தமா
சொழிந்த திங்களை ஊர்[1]வளைந் தாலெனச், — [1] பரிவேஷம்.
செழுந்தண் கோதை திருமுகம் உள்ளுறச்
சுழன்று[2] தாழ்ந்தது[3] தூச்சிறை அன்னமே. — [2] சுற்றிவந்து.
[3] இறங்கியது.

தெய்வத் தாமரைப் போதுறை செல்வி[1]யும், — [1] லக்ஷ்மி.
கொவ்வை[2]வாய் அயிராணி[3]யும், கூறுமிந் — [2] கோவைப்பழம்.
நவ்வி[4]நோக்கிக் கிணையென நாட்டுதல் — [4] மான்.
எவ்வமென்ன இகழ்ந்து வியந்ததே.
[3] இந்திராணி.

அன்னம் அவ்வளவு அருகில் அடைந்திருப்பதைக் கண்டபோது தமயந்தி.

அவிர்பூண ஒலியாமல அடக்கினளாயக
கவர்வான்[1] வால்கண்டும் அகன்றிலதாய்த் [1] கவர.
துவர்[2]வாய் மயில்தொட்டிட லாகுமெனும் [2] பவழம். [3] தமயந்தி.
நவைதீர்[4] அன[5]மெல்ல நடந்ததுவே.

[4] தொட்டிட...தீர் = அவள் பிடிக்கக்கூடுமென்கிற இகழ்ச்சி நீங்கிய. (அவள் கையில் அகப்படமாட்டேன் என்னும் எண்ணமுடைய.) [5] அன்னம்.

"புளின[1]த்தட மேவிய[2] போகுமனம் [1] மணல் மேடு. [2] மேவ, தங்க.
எளிதில் தனைகைம்மலர் எய்துறுமோ?
உளம்வைத்தமை என்?"என ஒண்ணுதலார்
நளின[3]க்கை புடைத்து நகைத்தனரால். [3] தாமரை.

"புனமே கலையீர்,கைபுடைத்து நகைத்
தனம் ஏகவியற்றுதல் அன்புகொலோ?
தனியேகுவன், நின்மின்"எனத் தகையா[1]த் [1] தடுத்து.
துனி[2]யோ டுரைசெய்து தொடர்ந்தனளே. [2] கோபம்

இவ்விதம் அன்னத்தின் நிழல்போல் தொடர்ந்து சென்று

செய்ப்பட்ட[1] செழுங்கமலத்தி லனம் [1] கழனியில் உண்டாகிய.
கைப்பட்டது பட்டதெனக் கருதா,
மைப்பட்ட[2] மலர்ப்பொழில் மாதவி[3]வாய்ப்
பொய்ப்பட்ட மருங்கினள்[4] புக்கனளே.

[2] மேகத்தை அளாவிய. [3] குருக்கத்தி. [4] இருந்தும் காணமுடியாதபடி சிறுத்திருத்தலால் இடையில்லை என்று சொல்லத்தக்கவள்.

தொடர்ந்தாள் கலுழ்[1]தூமுகம் வே[2]ரொழுக [1] கலங்குகின்ற.
நடந்தாயிழை எய்த்தனள்[3] என்னநயந் [3] இளைத்தாள்.
திடந்தேர்ந் தவள் இன்புறு நன்மொழிகள்
மடந்தாழ்[4] இளவன்னம் வழங்கியதே. [4] அழகுதங்கிய.

[2] வேர்வை.

"விண்ணின் இயங்கும் எனைமேவ[1]நீ [1] அடைதற்கு.
மண்ணின் நடந் தெவ்வணம் வெளவுதியால்?
எண்ணின்[2] இதுகண்டவர் யார் நகையார்? [2] ஆலோசிக்குமிடத்து.
பெண்ணின் னமுதே, வரல் பேதைமையே."

என்று சொல்லி "நாங்கள் பிரமதேவன் வாகனமான அன்னத்தின் சுற்ற மாவோம். அவனுடைய மானசவாவியில் வசிப்போம். நாங்கள் நிடத நாட்டில் நளனுடைய மாவிந்த நகரத்தில் பூஞ்சோலையில் உள்ள தடாகத் தைக் காணும்படி பூலோகத்துக்கு வருவோம். தெய்வத்தன்மை பொருந்

இய நளன் எங்களைப் பிடித்தால் பிடிக்கலாமன்றி மற்ற மானிடர் எங்களைப் பிடிப்பது முடியாது. ஒரு காரியத்தைச் செய்யும்படி இந்திரன் ஏவினாலும் நாங்கள் செய்வோமல்லோம்: பிரமனும் நளனும் ஏவியதை மாத்திரம் நன்கு செய்வோம். நளன் நல்ல சுந்தர புருஷன். அவன் பூமிதேவிபோலவும் ஆதிசேடன்போலவும் பொறுமையில் மிக்கவன். அவனுடைய தாதியாது நடையைக் கற்றுக்கொண்டுபோய் நான் அரம்பைக்குக் கற்பிப்ப துண்டு. மாவிந்த நகரத்தில் உள்ள பெண்கள் என்னிடம் தங்கள் இரகசியங்களைச் சொல்லிக்கொள்வது வழக்கம். நான் இரகசியங்களை வெளிவிடாதவன் என்பது அவர்களுக்குத் தெரியும். அம்மா, என்னென்னவோ பொருந்தாத வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருந்தேன். அது நிற்க, வீணாய் உன் கால் நோகும்படி குற்றம் செய்தேன். அதற்குப் பரிகாரமாய் என்ன வேண்டினாலும் செய்கிறேன். சொல்லுக" என்று சொல்லி, அவள் மனக்குறிப்பை அறியும்பொருட்டு அன்னம் சும்மா இருந்தது. அப்போது தமயந்தி

"பேதை நீர்மையின் பெட்புறின்[1] யாங்கணும்
ஏதம்[2] எய்துறும் என்பர், சரத[3]மே.
ஆதலால் நிற்றொடர்ந்[4] துயர்[5] எய்துறத்
தீதிழைத்தனன் யான் உன்திறத்திலே.[6]

[1] விரும்பினால். [2] குற்றம். [3] சத்தியம். [4] உன்னைத்தொடர்ந்து. [5] துன்பம். [6] உன்னிடத்தே.

"பளிங்[1]கிற் றுன்னிய[2] பல்பொருள் மற்றதில்
விளங்கித் தோன்றல்போல், யான்செய்த வெம்பிழை
களங்கம் அற்றவுன் உள்ளத்தில் கண்டுகொல்
துளங்க[3] யான்பிழைத் தேன்என்று சொற்ற[4]தே.

[1] கண்ணாடி. [2] நெருங்கிய. [3] நடுங்கும்படியாக. [4] சொல்லியது.

"வேண்டல் செய்வல்[1] என்றாய். விழைவால்[2] நினைக்
காண்டலன்றி என்வேண்டும்? கதிர்மதி
ஈண்டு நோக்குநர்[3] கண்களிப் பெய்துறச்
சேண்[4] தயங்குவதன்றி என்செய்யுமால்?

[1] செய்வேன். [2] ஆசையால். [3] பார்ப்பவர். [4] ஆகாயம்.

"விழையு மனத்தது[1] மனத்தைவிட் டகல்வ தெனினன்றோ
தழைய உரைதரு நாவால் சாற்றலாம் தகைமைத்தாம்?
எழுபுவிவாழ் கன்னியரில் இருவிசும்பில் தருவினறுங்
கொழுநனை நல்குதி[2]யென்று கூறுநரும் உள்கொல்லோ?"

[1] மனத்திலுள்ள பொருள். [2] தருவின்நறு கொழுநனை நல்குதி—கற்பகத் தருவினது வாசனைபொருந்திய செழிய அரும்பைக் (கொண்டுவந்து) கொடு என்றும், கற்பகத்தரு ஒத்த நற்குணம் பொருந்திய கொழுநனை (நாயகனைக்) கொடு என்றும் இரண்டு பொருள் தோன்றும்படி சிலேடையாகச் சொல்லினாள்.

தமயந்தி இங்ஙனம் நாணத்தோடு சொல்லிய வார்த்தையைக் கேட்டு ஐயுற்று அன்னமானது

"'தருவினறுங் கொழுநனையார் தருகவென உரைப்பள்'எனும்
அரியமறைப் பொரு[1]ளதனை யான்கேட்க லாகாதோ?
தெரியவரு மறைப்பொரு[2]ளைச் செவிப்புலத்தில் உறநான்காம்
வருணமுடை யவர்கேட்க லாகாத வாறேபோல்.

[1] இரகசியப்பொருள். [2] வேதப்பொருள்.

"என்றால் முடிக்கலாகாத பொருள் இல்லை இந்தலோகத்தில் உனக்கு விருப்பமானதைச் சொல்லுக. விரைவில் கொண்டுவந்து கொடுக்கிறேன்" என்றது. அப்போது தமயந்தி

"மருவுபுரி நரம்பிசைக்கு மாடக[1]நல் யாழிசைகேட்
டுருகினளென் பால்வேட்கை உற்றன[2]ளென் றறிகில்லாய்.
அரியபசும் பொன்னிறத்த ஆய்தூவி மடவனமே?
தெருமாலுற்றேன்;[3] விழைவுசெப்புமா[4] றெவன்?"என்றாள்.

[1] முறுக்காணி. [2] யாழிசை...உற்றனள் = யாழிசைபோலும் வார்த்தையைக் கேட்டு மனம் உருகினவளாய் ஆசையால் அச்சொல்லையே கேட்கவேண்டுமென் னும் விருப்ப மடைந்தாள் என்றும், யாழிசைபோலும் இனிய வார்த்தையைக் கேட்டு உளமுருகி நளனிடத்தே ஆசைமிகுந்தாள் என்றும் சிலேஷை. [3] மனச் சுழற்சி அடைந்தேன். [4] செப்புமாறு—(வெளிப்படையாகச்) சொல்லும் விதம்.

தமயந்தி தன் விருப்பத்தை நாணத்தால் மறைத்துக் குறிப்புரையாக உரைத்தவற்றின் பொருளை அறிந்த அன்னம்

"'தருவினறுங் கொழுநனையார் தருகென்பாள்' என்றதுவும்,
'மருவுபுரி நரம்பிசைக்கு மாடகநல் யாழிசைகேட்
டுருகின ளென்பால்வேட்கை உற்றன'ளென் றுரைத்ததும்,யான்
கருதினனல் பலகலையும் கற்றுணர்ந்த தெளிவினால்.

"கன்னியர் மனம் ஒருபொருளில் செறிந்தாலும் உடனே அதைவிட்டுப் பிரிவதுண்டு என்பார்களாகையால், உன் குறிப்புரைகளை அறிந்தும் அறியேன் போல் ஐயுற்றிருந்தேன். மேலும் மஹாராஜனுனவனுடைய திருவோலக்கத்தில் 'ஒரு கன்னிகை நாணத்தோடு ஒரு வார்த்தை சொன்னாள்' என்று சொல்வது நன்றாகுமா? அன்றியும், நான் அந்த மஹாராஜனுடைய சிந்தையை உன்னிடம் பொருந்தும்படி செய்த பிறகு உன் தந்தை உன்னைப் பிறனொருவனுக்குக் கொடுத்துவிட்டால் என் வாய்மை தவறாகுமே. உன் தந்தை உன்னை யார்க்குக் கொடுப்பானோ என்கிற ஐயம் எனக்கிருப்பதுபோலவே உனக்கும் இருப்பதால், இதை விட்டொழித்து வேறு கூறுக. வேறெதுவானாலும் முடித்துக்கொடுக்கிறேன்" என்றது. அது கேட்ட தமயந்தி வெளிப்படையாய்ப் பேசலுற்றாள்.

"விரையுயிர்க்கும் தாமரைக்கு வெய்யவனும், சேதாம்பல்[1]
மருவுயிர்க்கு நாண்மலர்க்கு மாமதியு மல்லாமல்,
உரைபெறுநற் றலைவர்பிறர் உளர்கொல்லோ? பொலன்சிறைய
அரசமட அனம்! எனையும் அன்னளாய் எண்ணுதியால்.

1 சேதாம்பல்—(செம்மை + ஆம்பல்)—செவ்வல்லி.

தாமரைமலர்க்குச் சூரியனும் அல்லிமலர்க்குச் சந்திரனும் நாயகராவதுபோல் எனக்கு நளன் நாயகன் என்றவாறு.

"ஐயமுறேல்; நளன்மார்பில் அணிய[1] லணிகுவ தன்றி, [1] மாலை.
மையல்புரி வேள்வரினும், மன்றலந்தார்[2] சூட்டுவனோ?
நெய்யொழுகு வேற்றுறைதை பிறற்களிப்ப நேர்குவனேல்
வெய்யதழல் புகுந்தாவி விட்டுனுரை நிறுத்துவ[3]னால்.

2 மணமாலை. 3 நிலைபெறுவிப்பேன்.

"உயிருதவிசெய்தவர்க்கொன் றுற்றக்கால் உணர்வுடையோர்
செயிராறுதம் உயிரளித்துச் செய்நன்றிக் கடன்கழிப்பார்.
மயர்வறஎன் உயிரினும்சீர் வாய்ந்தநளன் றனையளிப்பின்,
அயர்[1]வறு மோதிமம், அதற்குக் கைம்மாறே தறிகிலன்யான்.

1 மனச்சோர்வு.

"கைம்மாறு நினக்காற்றல் அரிதெனினும், களிப்பினுளம்
செம்மாந்[1]துன் செயி[2]ரறுசீர் ஓவாது[3] செப்புவல்யான்.
எம்மாவி இறந்துபடா திருக்குங்கொல்? விரைவினிற்போய்த்
தெம்மாறு[4] சுடர்வேலான் திருவருள் பெற்றிடா யெனினே.

1 இறுமாந்து. 2 குற்றம். 3 ஒழியாது, இடைவிடாமல்.
4 தெவ் + மாறு: தெம்மாறு—பகையழிதற்குக் காரணமான(வேல்).

"வேற்றரசர் திறை[1]கொணரும் வேலை[2]யினும் சொல்லற்க.
மாற்றரசர் பால்வெகுளும் அமயத்தும் வகுத்துரையேல்.
தேற்றமுடை மதிவல்லோர் தேர்ச்சி[3]யிலும் தெரிந்துரையேல்.
சாற்றின் உரைத்தனவெல்லாம் தவறுதல் அறிதியே.

1 இறைப்பொருள். 2 சமயம். 3 தேற்ற...தேர்ச்சி—தெளிவையுடைய மந்திரிமாரோடு ஆலோசனை செய்யுங் காலம்.

"பொறிசெறித்த[1] மாண்பினராய்ப் பொருந்தலர்ச்செற் றிருநிதியம்
செறிதருமா றீட்டி அருவினைவாங்கு[2] செயலினரும்
உறுபிழையுட் சிறிதியற்றின் ஒறுத்திடுவர்[3] வயவேந்தர்;
அறுதிபெற[4] நீமொழியும் அமயமறிந் துரைத்தியால்.

1 ஐம்பொறிகளை அடக்கிய. 2 தழுவிய. 3 தண்டிப்பர். 4 அறுதிபெற அறிந்தென்று கூட்டுக—வரையறைப்பட அறிந்து.

"உளத்தன வாண்முகத்தனவாய் உதிக்குமவை குறிப்பினால்
தெளித்துரைத்தல் சீர்மைத்தே. தூதர்செயல் இற்றாகும்.
விளக்கமுற நீயலதி யாரறிவர் இவை? மெலியுமெனை
அளித்திடுதி[1] விரைவினிற்போய் ஆய்தூவி[2] மடவனமே."

[1] காப்பாற்று. [2] சூட்டுமயிர்.

தமயந்தி இங்ஙனம் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு அன்னம் "நீ மனந் தளர்ந்திடேல். உன்னை மணஞ்செய்யும் விருப்பங்கொண்டே நளன் என்னை உன்னிடம் தூதுவிடுத்தான். நீங்கள் இருவீரும் முன்பிறப்பில் செய்த தவப் பேற்றால் உங்கள் விருப்பம் முடிந்தது. நான் அவனிடம்போக விடை கொடு" என்றது. தமயந்தி சில முகமன்வார்த்தைகளைச் சொல்லினாள். அப்போது தாதியர் அவளுடைய அடிச்சுவட்டை நோக்கி அவளைத் தேடி வருவதைக் கண்டு, அன்னம் அவர்கள் ஏதாவது சந்தேகம் கொள்வரென் றஞ்சி விரைந்து சென்றது. தமயந்தியின் கண்களும் கருத்தும் அன்னத் தின்பின் சென்றன. தாதியர் "அம்மா, அனிச்சமலரினும் மென்மையான உன் அடிகள் கன்ற இங்ஙனம் அன்னத்தைத் தொடர்ந்துவருவது தகுமா?" என்று சொல்லி அவளை அழைத்துக்கொண்டுபோய்க் கன்னிமாடத்தில் சேர்த்தனர். அவள் புஷ்ப சயனத்திலே நளனை நினைவாகச் செயலற்றி ருந்தாள்.

அன்னம் மாவிந்தநகரஞ் சென்று, அங்கே பூஞ்சோலையிலுள்ள தடாகக் கரையிலே ஏங்கியிருந்த நளனை யடைந்து,

"திருந்தார் மௌலி[1] மணியுரிஞ்சித் — [1] கிரீடம்.
திகழும் கழற்கால் தேர்வேந்தே.
வருந்தேல் வருந்தேல்; நீவேண்டின்
வாராதனவும் உளகொல்லோ?
முருந்தேர் முறுவல்[2] முகம்பெற்று[3]
வந்தேன்" எனலும் மூர்ச்சைதெளிந்
தருந்தா வமுதம்[4] அருந்தினன்போல்
பலகால் கேட்கும் அகமகிழும்.

[2] முருந்து ஏர் முறுவல்—மயிலிறகின் முள்போலும் பற்களை யுடையவள் (தமயந்தி). [3] உடன்பாடு பெற்று. [4] முன்னுண்ணாத தேவாமிர்தம்.

தமயந்தி செயலற்று உருவமும் தோற்றமும் வேறுபட்டிருப்பதை அவளுடைய தாயான தாருகாசனி தாதியர்களால் அறிந்து, அச்செய்தியைத் தன் கணவனிடம் உரைப்பவள், 'தமயந்தி முதுக்குறைந்தாள்' என உணர்த்தினாள். வீமராஜன் சென்று தமயந்தியைப் பார்த்து அவளுக்கு மணப்பருவம் வந்தமை அறிந்து உடனே அரசர்களுக்கு மணவோலை அனுப்பினான்.

**தேவர்கள் தமயந்தியிடம் நளனைத் தூதுவிடுதல்.**

தமயந்திக்குச் சுயம்வரமென்று வீமன் மணவோலை போக்கிய செய்தியைத் திரிலோக சஞ்சாரியான நாரதமுனிவரால் உணர்ந்து, இந்திரன் யமதருமராஜனையும் அக்கினிதேவனையும் வருணபகவானையும் உடனழைத்துக் கொண்டு தேரேறிப் பூலோகத்தை அடைந்தான்.

மணவோலைகொண்டு தூதுவர் நளனை அடைந்தஅளவில்

முடங்கல்[1]இன் வரைந்தவுரை முற்றும் உணராமுன்
தடம்புயம் வளர்ந்தன வரை[2]க்குவமை சாலக்:
குடங்கை[3]யின் அகன்றவிழி கோநகரி[4] செல்வான்
மடங்கல்[5]அனையான் உள மகிழ்ச்சியொ டெழுந்தான்.

[1] ஓலைச்சுருள். [2] மலை. [3] உள்ளங்கை. [4] குண்டினபுரம். [5] ஆண்சிங்கம்.

குதிரைகளும் யானைகளும் வீரரும் புடைசூழ, வாத்தியங்கள் முழங்க, சந்திரவட்டக்குடை நிழல்செய்ய, மாதர்கள் சாமரை வீச, முடிமன்னர் வணங்க, நளன் தேரில் ஏறிக் குண்டினபுரம் நோக்கிச் சென்றான். செல்கின்றவனை வழியில் தேவர்கள் கண்டார்கள். அவனைக் கண்டவளவில்

பொற்றடந் தேர்மிசைப் பொலிந்து தோன்றிய
மற்றடந் தோளினன் வனப்பு நோக்கினர்.
உற்றதோர் வியப்பினுக் குள்ளமீந்து[1] தாம்
வெற்றுடம் பாயினர் விண்ணுளோ ரெலாம்.

[1] வியப்பினுக்கு உள்ளம் ஈந்து—ஆச்சரியத்துக்கு மனத்தைக் கொடுத்து, ஆச்சரியத்தின் வசப்பட்ட மனத்தராய்.

"மாயிரு ஞாலத்து வந்து மன்னர்கோன்
ஏயபே ரழகுகண் டிமைப்பில் நாட்ட[1]மோர் — [1] கண்.
ஆயிரம் பெற்றபே றடைந்துளேன்" எனச்
சேயுயர் விசும்பினுக் கிறைவன்[2] செப்பினான். — [2] இந்திரன்.

"மண்டமர் கடந்த[1]வேல் மன்னர் மன்னனைக்
கண்டு மற்றொருவர்தோள் காமுற் றீர்ந்தொடை[2]
தொண்டை[3]வாய் மடமயில் சூட்டுமோ?" எனாத்
தெண்டிரைக் கனைகடற் செல்வன்[4] கூறினான்.

[1] நெருங்கிய போரை வென்ற. [2] ஈரம் தொடை—குளிர்ந்த (மண) மாலை. [3] கோவைக்கனி. [4] வருணன்.

"பாந்தள்[1]மேல் கிடந்த பார் பரிக்கும்[2] திண்டிறல் — [2] தாங்கும்.
வேந்தனுக்கே தொடை வேய்ந்திலா ளெனில்,
ஏந்திழை யெழினலம்[3] என்கொலாம்?" எனக்
காந்து வெங்கதழெரிக் கடவுள்[4] சாற்றினான். — [4] அக்கினி.

[1] பாம்பு (ஆதிசேஷன்). [3] அழகின் நன்மை.

"கழை[1]சுளி புகர்[2]முகக் களிநல் யானையான் [1] மூங்கில். [2] புள்ளி.
இழைசுடர் எறிப்பவந் திறுத்த தேந்திழை
விழவினுக்காயின் யாம் மீண்டுபோதலே
அழகி"தென் றந்தகன்[3] அறைந்திட்டா னரோ. [3] யமன்.
போர்த்தொழில் வயிரவாள் பொருவி லண்ணல்[1] "செந்
தார்ப்பசுங் கிளியனாள் தார்பெறாது போய்க்
கார்க்குழ லரம்பையர் கமல வாண்முகம்
பார்ப்ப தெவ்வா" றெனப் பரி[2]விற் கூறினான்.
[1] இந்திரன். [2] துன்பம்.

அப்பால் இந்திரன் "அவுணர்களை அழித்து நமக்குச் செல்வமும் சிறப்பும் அளித்தவனான வீரசேனனை ஒத்திருப்பதால், இவன் நளனே" என்று கருதி, "ஓ நளமகாராஜனே! நல்லோரையில் புறப்பட்டதால் நாங்கள் உன்னை வழியில் எதிர்ப்பட்டோம். இவன் அக்கினி; இவன் கூற்றுவன்; உவன் வருணன்; நான் இந்திரன். உன்னால் எங்களுக்கு ஒரு காரியம் ஆகவேண்டும்" என்றான்.

நளன், தேவர்களுக்கு நமஸ்காரம் பண்ணி, "விண்ணுலகாள்பவர்க்கு அரிதான பொருள் மண்ணுலகாள்பவரிடம் கிடைக்குமோ? இவர்கள் உள்ளக் கருத்து யாதோ?

"குறிப்பறிந் தீதலே கொடை: மற்றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்கல்: ஆதலின்
பெறற்கருமாவியும் பெட்[1]பின் ஈகுவன். [1] அன்பு.
திறப்பட இவருளம் தெரிந்ததில்லையால்.

"ஒளிமுகம் இழப்பவந் துற்ற நாணமீக்
கிளர்தர[1] இல்லெனக் கிளக்கு[2] மூர்ச்சனை [1] மீக்கிளர்தர—அதிகப்பட.
தெளிதர முகத்தினில் தெளித்தற் கன்றுகொல்
நளிபுனல்[3] பொருளொடு நல்குகின்றதே.
[2] சொல்லும். [3] குளிர்ந்தநீர் (தாரைவார்க்கு நீர்).

"ஐந்தரு[1] நீழலின் அரசு வைகிய [1] பஞ்சதரு.
இந்திரன் முதலினோர் ஈகென்[2] றென்னுழை [2] ஈக என்று.
வந்துயர் பெரும்புகழ் வழங்கினார். இவர்
சிந்தனை மகிழ்வுற என்கொல் செய்வதே?

'உரவுநீர்[1]க் கருங்கடல் உடுத்த மாநிலத் [1] உலாவும்நீர்.
தருளுடன் இம்மையின் அளித்த வான்பொருள்
மருவிய மறுமையில் வழங்கு பான்மையால்,
இரவலர்[2] தம[3]ரினும் இனிய ராவரே. [2] யாசகர். [3] உறவினர்.

"உடைப் பெரும் பொருளினை உலகில் ஊதியம்
கிடைப்பதற் களித்தலின், கிளர் நிரப்பினால்
அடுத்துவந் தேற்குநர்க் கார்வம் மீதுறக்
கொடுக்கில், ஒன்றே பல கோடி யாகுமால்"

என்று இவ்விதம் ஆலோசித்து, இந்திரனைப் பார்த்து "வேண்டிய பொருளைக் கேட்க.

"என்னருந் தவத்தின் அன்: றெனது தொல்குல
முன்னையோர் அருந்தவம் முயன்ற பான்மையால்,
பொன்னகர்[1] துறந்துநீர் போத[2]ப் பெற்றனன். [1] அமராவதி. [2] வர.
சொன்னவை மறுக்கிலன்.[3] சொல்க" என்றனன்.

[3] மறுக்கமாட்டேன்.

இந்திரன்:—

"வெயில்விரி மணிமுடி வீமன் நல்கிய
மயிலியல் மதர்விழி வளைக்கை மங்கைபால்
செயிரறு தூதுநீ செல்ல வேண்டும்"என்
றுயிரிரப்போரினும் உளைய[1]க் கூறினான். [1] வருந்த.

இதைக் கேட்டு நளன் கருத்தழிந்து உயிர்கலங்கி உரைக்கலுற்றான்:—

"எப்பொரு ளாயினும் யாவ ருள்ளமும்
கைப்படு நெல்லியங் கனி[1]யிற் காணுநீர், [1] கரதலாமலகம்.
துப்பிதழ் மடந்தைபால் தூது போகெனச்
செப்பிய தெவன்கொல்என் சிந்தை ஓர்ந்து[2]மே? [2] தெரிந்தும்.

"வழங்கிய நும்முரை மறுது சென்றுயான்
மொழிந்தன ளாயினும், முன்னரே எனை
விழைந்த அத்தளிரியல் வெள்குறு துளம்
குழைந்து[1] நும்பால் மணம் பொருந்தல் கூடுமோ?" [1] கரைந்து.

என்ன வேந்துரைத்தலும், "இசைத்த சொல்மறு
நின்னை மெய்ப் பரதனை நிகரில் பார்த்தனை
முன்னினும் [1]நினைத்தவை அணைத்தும் முற்றுமால்.
அன்னநீ ஏகில் ஏதரியதாகுமே?"

[1] நினைத்தாலும்.

இனையன வாசவன்[1] இயம்பு மெல்லையில்,
வனைமலர்க் கோதைதன் வயத்த னாகியும்
தனியறன் இழுக்குறாத் தகைய[2] னாதலின்,
அனையதற் கிசைந்தனன் அலங்கல் வேலினான்.

[1] இந்திரன்.

[2] ஒப்பற்ற தருமம் தவறாத குணத்தன்.

அங்ஙனம் இசைந்தபின் "காவலுள்ள அந்நகரில் வாயிலோர் அறியாதபடி யான் போய்வருவது எப்படி?" என்று நளன் கேட்க, இந்திரன் இனிய வார்த்தைகள் சொல்லி, எண்ணினவரை எவர்க்கும் கட்புலனாகாதபடி செய்யும் மந்திரத்தை உபதேசித்தான். அவ்வளவிலே நளன் இந்திரனை நமஸ்கரித்துக் குண்டினபுரம் நோக்கிச் சென்றான். நகரை அடைந்ததும் நளன் தன் தேரைவிட் டிறங்கி வாயிலோர் கண்ணுக்குத் தெரியாது உள்ளே சென்று தமயந்தியின் கன்னிமாடத்தைத் தேடிக்கொண்டுபோய் அங்கே அவள் பெண்கள் நடுவில் வீற்றிருப்பதைக் கண்டான்.

"மண்டமர் கடந்தவேல் நளன்வந்தான்" எனத்
தொண்டைவாய் மடந்தையர் நாளும் சொல்வன
பண்டருமொழிக் கிளி பயின்று கூறலும்,
கண்டதோ இஃதெனக் காளை எண்ணினான்.

அப்பால் நளன் மந்திரவுச்சாரணத்தை நிறுத்தித் தன் உருவம் கட்புலனாகும்படி தமயந்தியெதிரில் நின்றான். உருவெளித் தோற்றத்தைக் கண்டிருந்தவளுக்கு நளனுடைய உருவமே எதிரில் தோன்றியபோது எப்படிப்பட்ட உவகை உண்டாயிருக்கும்! "வாயிலோரை யெல்லாம் கடந்துவந்த இவன் தேவனோ இயக்கனோ!" என்று தமயந்தியும் தாதியரும் அதிசயித்தனர்.

மாதுபால் விழைவின் ஏகும் மனத்தினை, அல்லசெய்தல்[1]
தூதினுக் கியல்பன் றென்னாத் தோன்றல்[2] பேரறிவின் மீட்பக்;
காதலின் அவன்பாற் செல்லும் கருத்தினைக், கமலத்தண்பூம்
போதுறை மடந்தை யன்னாட் பொருந்துநாண் தடுத்ததன்றே.

[1] போன காரியத்துக்கு விரோதமானவைகளைச் செய்தல். [2] நளன்.

"கால்நிலத்தில் பொருந்துதலால் இவன் தேவனல்லன். அன்னம் சொல்லிய அரசனோ?" என்றெண்ணிக் கன்னியர்கள் அவனை ஊர் பேர் வினவினார்கள். அவன் "யான் வானவர் விடுத்த தூதன்" என்று சொல்லி, வந்த காரியத்தை விவரித்தான். அது கேட்ட தோழியர் எதிர்மொழி சொல்லலுற்றனர்.

"ஆற்றல்சால் நளனே யன்றி ஆருயிர் பிறிதின் றென்னும்
வேற்றடங் கண்ணிளுள்தன் மெய்பதைத் தாவி சோரச்
சாற்றிய மாற்றந் தன்னால், தழலுமிழ் தறுகட் பேழ்வாய்க்
கூற்றுவன் தூத னென்று கூறிய தியற்கை யாமே.[1]

[1] உனக்குத் தகுதியேயாகும்.

"வையகம் ஒருகோ லோச்சி வான்புகழ் நிடதம் காக்கும்
ஐயனை மணப்ப தன்றி அரிமதர் நெடுங்கண் செவ்வாய்த்
தையல் வேறொருவர் நாமம் சாற்றினும் ஆற்ற ளாகி
வெய்ய செந்தழலின் மூழ்கி விளிவதற் கையமின்றே."

அதற்கு நளன் "அக்கினிப் பிரவேசமானல் அக்கினி தேவனைத் தழுவியதாகுமே. நீரில் விழுந்து உயிர்விட்டால் வருணனைத் தழுவியதாகுமே.

"அன்றியும் கனலிசான்ற யல்லது வதுவை[1]யாற்றற் [1] விவாகம்.
கொன்றுமோ? வருணன் ஒவ்வா துதக[2]மோ டளிக்கும் தூய
மன்றல்[3] எவ்வாறு முற்றும்? வானவர் அருளில்லாமல்
துன்றுநீர்ப் புவியில் யார்க்கும் சூழ்வினை[4] முடிக்க லாமோ?

[2] உதகம்—ஜலம். [3] விவாகம். [4] எண்ணியகருமம்.

"வெந்திறற் களிநல்யானை விதர்ப்பர்கோன் அளித்த மாதைத்
தந்துயிர் அளித்தி என்னத் தனியிரு விசும்பு காக்கும்
இந்திரன் கேட்ட போதில், எண்ணிய அனைத்தும் நல்கும்
ஐந்தரு வழங்கின், நும்மால் அன்றென மறுக்க லாமோ?"

என்றிவ்வாறு நளன் சொல்லியதைத் தமயந்தி கேட்டு மனம்பதைத்துப் பெருமூச்சுவிட்டுக் கண்ணீர் சொரிந்தாள். தோழியர்கள் "நாம் தூதுவிடுத்த அன்னம் தமயந்தியின் செய்தியைச் சொல்லியிருந்தால், நளன் அன்பில்லாமல் இவ்வாறு பேசுவானே?" என்றனர். அந்தச் சமயத்தில் ஆகாயத்திலிருந்து அன்னம் அங்கே இறங்கி, "தமயந்தியே! சந்தேகிக்கவேண்டா: நளன் இவனே, உன்மேல் விருப்பம் நீங்கி அவன் இங்ஙனம் உரைத்தவனல்லன். தேவர்க்கு வாக்குறுதி செய்தது பழுதாகாதபடி இங்ஙனம் பேசினன். நீ அழுது மனங்குழையவேண்டா" என்று சொல்லி, நளனைப் பார்த்து, "நீ உன் விருப்பத்தை மறைத்து இவ்விதமான வார்த்தைகளைச் சொன்னால் இவள் ஆற்றுவாளா? தேவர்கள் இவளுடைய மனக்கருத்தையும் உணராதவ ரல்லர். நீ உண்மையாகத் தூதுபேசியதையும் உணராதவ ரல்லர். இனிச் சொல்லத்தக்கது ஒன்று மில்லை. இங்கே நடந்தவைகளை நீ தேவரிடம் போய்ச் சொல்லிவிடுக" என்றது. நளன் மந்திரசக்தியால் எவர்க்கும் தெரியாமல் தேவரிடம் திரும்பிப்போய் நிகழ்ந்த செய்தியைத் தெரிவித்தான். அதைக் கேட்டுத் தேவர்கள் அதிக மகிழ்ச்சி அடைந்தார்கள்.

**சுயம்வரம்:** இப்பால் பூலோக வேந்தரும் நாகலோக வேந்தரும் தேவரும் குண்டினபுரத்தை அடைந்தனர். எள்ளிட இடமில்லாமல் சேனைக்கூட்டங்கள் பரந்தன.

சிற்பநூல் கழியக் கற்றோர் சித்திரித் தென்ன வாய்ந்த
பொற்புறு நெடிய வேற்கட் பூங்கொடி வதுவை வேட்டுப்
பற்பல தேய வேந்தர் தொகுதலின், பாடை தேர்வான்[1]
அற்புடன் எவரும் தேவ பாடை[2]யின் அறைவர் மாதோ.

[1] சொற்பொருள் தெரியும் பொருட்டு. [2] சமஸ்கிருதம்.

குருமணி யிமைக்கும் பைம்பொற் குடைநிழல் வெயிலையோட்ட
மருமலி நறிய மென்பூமாலை வாடாமையானும்
திருநகர்ச் செவ்வி நோக்கி இமைப்பிலர் திரிதலானும்
அரசரோ டமரர்தம்மை அறிவரி தாயதன்றே.

பொன்னகர் புரக்கும் வேந்தும், பொங்கழற் கிறையும், முந்நீர்
மன்னனும், தறுகட் பேழ்வாய் மறலியும், மடமா னேக்கின்
நன்னுதல் நளனுக்கன்றி நறுந்தொடை சூட்டாள் என்ன,
அன்னவன் உருவு தாங்கி, அணிநகர் மேயினாரே.

நளனும் வந்துசேர்ந்தான். வீமராஜன் எல்லாரையும் எதிர்கொண்டு அளவளாவி அவரவர் வரிசைக் கேற்றவாறு மரியாதை செய்தான். மறுநாள் உதயத்தில் வீமன் "இன்று தமந்தியின் மணநாள் ஆதலால் நகரை அலங்கரிக்க" என்று முரசறைவித்தான். ஜனங்கள் இராஜவீதியில் கமுகும் கரும்பும் கதலியும் நட்டனர். கொடிகள் கட்டினர், தோரணங்கள் நட்டனர், பூரணகும்பங்களை வரிசையாக வைத்தனர். மலர்மாலைகளைத் தொங்கவிட்டனர். தூண்களைத் தூசுநீக்கினர். முளைப்பாலிகைகள் வைத்தனர். சாந்தமும் சுண்ணமும் தூவினர். விளக்குகள் ஏற்றினர். ஆண்களும் பெண்களும் ஆடையும் அணியும் அணிந்தனர். சிலர் விருந்தெதிர்கொண்டனர். சிலர் இரவலர்க்கு இன்னமு தளித்தனர்.

வெள்ளியங் கிரியின் விஞ்சையர் தொகுவார்.
விண்ணவர் எண்ணிலர் புகுவார்.
அள்ளிலை நெடுவேல் அரசர்வந் திறுப்பார்.
அந்தணர் அளப்பிலர் திரிவார்.
ஒள்ளொளி விரிக்கும் பருமணிச் செஞ்சூட்
டுரகர்[1] வெள்ளிடை[2]யறச் செறிவார். [1]உரகர்-நாகர்.
பள்ளநீர்க் கடல்சூழ் எழுபெருந்தீவில்
உறைகுநர் பரி[3]வினில் தொகுவார். [3]அன்பு.

[2] வெற்றிடம்.

விண்ணகத் தமரர் அளப்பிலர் என்கோ[1]? [1] என்பேனே.
விஞ்சையர் அளப்பிலர் என்கோ?
மண்ணகத் தரசர் அளப்பிலர் என்கோ?
வனிதையர்[2] அளப்பிலர் என்கோ? [2] பெண்கள்.
பண்ணமை[3] களிறு கூந்தன்மான் தடந்தேர்
பதாதிமற் றளப்பில என்கோ?
எண்ணிமற் றுரைக்கின் இத்துணை யென்ன
எம்மனோர்க்[4] கியம்புமா றரிதே.

[3] அணியப்பட்ட. [4] எம்மைப் போன்றவர்க்கு.

விசாலமாய் மூகடு பொன் வேய்ந்து, மணிகள் இழைத்த நித்திலவிதானம் கட்டிய சுயம்வர மண்டபத்தில் வீமராஜன் வந்தடைந்து வருக என்ற வளவில் தேவரும் நாகரும் விஞ்சையரும் வேந்தரும் வந்துசேர்ந்தனர். இந்திரன் முதலிய நால்வரும் நளனுருக்கொண்டு வந்தனர். நளனும் வந்தடைந்தான்.

தெரியல்சூழ் குவவுத் திண்டோட் சிலைவலான் இனிதின் எய்த,
அரசவை யிருந்த செவ்வி[1] அரசிளங் குமரரெல்லாம், [1] அழகு.
குரைகடல் முகட்டிற் றோன்றும் குளிர்மதி காண்டலோடும்
விரிகதிர் மழுங்கும் வானின் மீனினம்[2] என்னலானார்.

[2] நட்சத்திரக்கூட்டம்.

குருமணி யிமைக்கும் *பைம்பொற் கோடியர் குடுமிக்குன்றம்
பொருவு மண்டபத்தி னூடு பூண்சுடர் தவழப் புக்க
செருமலி தானை வேந்தன் திருமுகம் திங்களாக,
அரசர் வாண்[1]முகங்களெல்லாம் அம்புயம்[2] போன்றவன்றே.

[1] வாள்—ஒளி. [2] தாமரை.

குறிப்பு.—சந்திரனைக் கண்டு தாமரை கூம்புவதுபோல் நளனைக் கண்டு அரசர் முகம் கூம்பின.

ஓவியர்[1] எழுதவொண்ணா உலம்[2]பொரு[3] வயிரத்திண்டோள்
வாவுமான் தடந்தே ரண்ணல் வனப்பினை நோராராகித்,
தேவரில் வையங்காக்கும் அரசரில் செவ்விவாய்ந்த
காவலர், திருந்த நோக்கார், கடைக்கணால் நோக்கினரால்.

[1] சித்திரகாரர். [2] திரண்டகல். [3] ஒத்த.

வீமராஜன் "தமயந்தியை அழைத்து வம்மின்" என்று சேடியரை ஏவினான். அவர்கள் போய் அச்செய்தியை அரசியிடம் உரைத்தனர். அப்பால் தமயந்தியை நீராட்டி அலங்கரித்துக் குலதெய்வத்தைப் போற்றி ஸ்வயம்வர

மாலையைக் கையில்கொண்டு தாதியர் அவளை மணமண்டபத்துக்கு அழைத்துவந்தனர். தமயந்தி தந்தையைத் தொழுதுநின்றாள். வீமராஜனும் அவளைக் கண்டு மகிழ்ச்சிகூர்ந்து, "இந்த மண்டபத்தில் வீற்றிருப்போரை இன்னாரின்னாரென்று இவளுக்கு எடுத்துரைப்பவர் எவர்?" என்று திருமாலைத் தியானித்தான். திருமால் "கலைமகளன்றி இது செய்யவல்லவர் இல்லை" யென்று பிரமனிடம் சொல்ல, பிரமன் கலைமகளை அனுப்பினான் கலைமகள் மணமண்டபத்தை அடைந்து தமயந்திக்கு வேந்தர் குலமுறையைச் சொல்லலுற்றாள். தேவரையும் விஞ்சையரையும் இயக்கரையும் நாகரையும் ஏனைத் தீவின் வேந்தரையும் விளக்கி, நாவலந்தீவின் வேந்தரை விளக்கி வருகையில், நளனுருக்கொண்டு வந்தவரையும் நளனையும் விளக்கலானாள்:—

கலைவளர் திங்க ளென்னக் கடிகமழ் கமலம் வாட்டும்
திலகவாள் முகத்தாய், ஈங்கு வைகிய சினவேற் காளை,
வலனுடை வயிர வாளான்[1] கற்பக மலிந்த தோளான்[2]
பலபகை வரைமுன் செற்ற[3] பகட்டெழில் மார்பினனே.

[1] வலனைக் கொன்ற வச்சிரப்படையை உடையவன் என்று இந்திரனுக்கும் வெற்றிபொருந்திய கூரிய வாளையுடையவன் என்று நளனுக்கும் சிலேடை.

[2] கற்பக மலர்மாலை மிக்குள்ள தோளையுடையவன் என்று இந்திரனுக்கும், மலையைப் பிளக்கும்படி வலிமைமிகுந்த தோளையுடையவன் என்று நளனுக்கும் சிலேடை.

[3] பகைகொண்ட பல மலைகளை முன் சிறகறுத்த என்று இந்திரனுக்கும், பல சத்துருக்களை முன்வென்ற என்று நளனுக்கும் சிலேடை.

"நகைமதி முகத்தாய், ஈங்கு வைகிய நாம வேலான்
புகலரும் வெகுளி உள்ளத் தொருவினன்,[1] பொங்கி ஆர்த்த
பகையிருட் பிழம்பு சீக்கும் பல்சுட ருமிழும் வாளான்,[2]
தகைமை சால் புலவ ரேத்தும் தாலமே ழுடைய கோ[3]வே.

[1] வெகுளி உள்ளத்து ஒருவினன்—கோபமான மனத்தையுடைய ஆட்டுக்கடா வாகனத்தையுடையவன் என்று அக்கினிக்கும், கோபத்தை மனத்தினின்றும் நீக்கினன் என்று நளனுக்கும் சிலேடை.

[2] பகை...வாளான்—பகையாகிய இருட்பிழம்பை ஓட்டுகின்ற பல கிரணங்களை உமிழ்கின்ற ஒளியையுடையவன் என்று அக்கினிக்கும், இருளையொத்த பகைவரது கூட்டத்தைக் கெடுக்கின்ற பல கிரணங்களைக் காலுகின்ற வாளையுடையவன் என்று நளனுக்கும் சிலேடை.

[3] அழகுமிகுந்த தேவரால் துதிக்கப்படும் ஏழுநாவுடைய பெரியோன் என்று அக்கினிக்கும், பெருமைமிக்க வித்துவான்களால் துதிக்கப்பட்ட சத்தபூமிகளையுடைய ராசன் என்று நளனுக்கும் சிலேடை.

"அஞ்சனம் எழுத லாற்று தம்மவோ என்று நையும்
வஞ்சிநுண் இடையாய், ஈங்கு வைகிய நாம வேலான்,
எஞ்சலில் தருமன்,[1] தெண்ணீ ரிருங்கடல் உலக மெல்லாம்
செஞ்செவே ஓசை[2] போய தீதறு செங்கோல்[3] வேந்தே.

[1] தருமன் என்ற பெயரையுடைய யமன் (தருமத்தை அனுசரிப்பவன்),
[2] புகழ். [3] செவ்விய காலதண்டம் (செம்மையாகிய கோல்).

"பாற்றிரை அமிர்த மூறும் படரொளிப் பவளச் செவ்வாய்க்
கோற்றொடி மடந்தை, ஈங்கு வைகிய குவவுத் தோளான்,
மாற்றருஞ் சிறப்பின் மிக்க வளங்கெழு புவன வேந்தன்[1]
நாற்றிசைப் பரப்பும் சூழ்போம் நலங்கெழு நேமி வேந்தே[2].

[1] நீருக்கரசன் (பூமிக்கரசன்). [2] நான்கு திக்கும் சூழுகின்ற கடலரசனான வருணன் (எத்திசையும் செல்லும் ஆஞ்ஞையையுடைய அரசன்.)

"இவன் நிடதவேந்தன்" என்று கூறினாள். "இவர்களில் அன்னம் கூறிய மன்னன் யாரோ?" என்று தமயந்தி ஐயமுற்று மனம் நெக்குருகி நின்றவள்

எள்ளுற வனையோரை இரட்டுற மொழிதலானும்
வள்ளல்மார் பணிந்த தாரில் வண்டு வீழ்ந் தாற்றலானும்
உள்ளுறப் பிணித்த அன்பின் ஊழ்வினைத் தொடர்பினானும்
நள்ளிருள் பருகும் பைம்பூண் நளனையே நளனென் றோர்ந்தாள்.

அவ்வளவிலே தாதியர் தட்டில் ஏந்தியிருந்த மாலையைக் கையிற்கொண்டு தமயந்தி,

இன்னரிச் சிலம்பு செம்பொற் கிண்கிணி ஆர்ப்ப ஏகி,
மன்னவர் மனமும் கண்ணும் வண்டெனத் தொடர்ந்து வீழக்
கொன்னுனை வயிர வொள்வாள் நிடதர்கோன் குவவுத் தோண்மேல்
பொன்னரி மாலை சூட்டிப், பூங்கழல் வணங்கி நின்றாள்.

தாவருஞ் சீற்றத் துப்பின் தறுகண்மால் யானை யன்ன
மேவலர்க் கடந்த ஒள்வாள் வேந்தர்கோன் முழவுத் தோண்மேல்
மாவகிர் நெடுங்கண் சூட்டும் மாலையே மாலை யாக[1]க்
காவலர் முகங்க ளெல்லாம் கமலமொத் திருந்த மாதோ.

[1] மாலைப்பொழுதுபோ லாக.

குறிப்பு:—மாலைக்காலத்தில் தாமரை குவிவதுபோல், தமயந்தி நளனுக்கு மாலையிட்ட அளவில் அரசர் முகங்கள் குவிந்தன என்பதாம்.

இங்ஙனம் நளன் மணமாலையைப் பெற்றதைக் கண்டு இந்திரன் மனம் புழுங்கிக் கண்ணில் கோபாக்கினி பொங்க வேந்தரைப் பார்த்து

"விரிகதிர்ப் பரிதி முன்னர் வெண்மதி மழுங்கு மல்லால்
பரிதியும் மதியந் தோன்றின் படரொளி மழுங்கல் உண்டோ?
அரசர்காள். நீவிர் வெப்யோன் அருங்குல[1]த் துதித்தும் திங்கள்
மர[2]பின் மன்னவற்கு நுங்கள் மாணெழில்[3] மழுங்கினீரால்.

[1] சூரியகுலம். [2] சந்திரகுலம். [3] எழில்—அழகு.

"சூழிருஞ் சடைகள் தாங்கிச் சுடர்முடி துறந்து கான்போய்
வீழ்சரு[1] கருந்தி நீவிர் மெய்த்தவம் புரிதல் வேண்டும்.
தாழிருங் கூந்தலாளை நிடதர்கோன் தழீஇய போதே,
ஆழிசூழ் உலக மெல்லாம் அவனடி படிக்கு[2] மன்றே.

[1] சருகு—உலர்ந்த இலை. [2] அவனடியிலே பணிந்துகிடக்கும்.

"கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த
ஒண்டொடி மாலை வேய்ந்தோற் குரியளென் றெண்ண வேண்டா.
திண்டிறல் நிடதர்கோமான் செருவினில்[1] இரியல்போக[2]
மண்டமர் கடந்த ஒள்வேல் மன்னவற் குரியள்" என்றான்.

[1] போரில். [2] ஓடிப்போக.

இதைக் கேட்டு மற்ற அரசர்கள் யுத்தகோலங்கொண்டு யுத்தஞ்செய்யப் புறப்பட்டனர். யுத்தம் யாதாய் முடியுமோ என்று தமயந்தி அஞ்சிக் கண்ணீர் சொரிந்தாள். நளன் "நீ அஞ்சேல். க்ஷணநேரத்தில் இவர்களை வென்று வருகிறேன்" என்று சொல்லி அவளைத் தேற்றி வீமனுடைய காவலில் வைத்து, தான் போர்க்கோலங்கொண்டு சிங்கநாதம்பண்ணி வலம்புரியை முழக்கினான். அதைக் கண்ட இந்திரன் "இவன் கொண்டுள்ள வீரம் மன்னவர் அளவாக இல்லை. இது யாதாய் முடியுமோ? அந்தோ என் நினைந்து என் செய்தோம்" என்று நடுங்கினான். யுத்தம் அதிக உக்கிரமாக நடக்கையில்,

அருமருந்[1]தனையாள் சூட்டும் அலங்கலந் தோளினானைப்
பொருதிரை[2]ப் புணரி[3]சூழ்ந்த புவியினில் அரசரெல்லாம்,
நிரையுளை[4] அரிமானே[5]ற்றை நிழல்சுளி[6] தறுகட்சீற்ற
வரைபுரை[7] களிநல் யானை வளைந்தென,[8] வளைந்துகொண்டார்.

[1] தேவாமிர்தம். [2] மோதுகின்றன அலை. [3] கடல். [4] நிரை உளை—வரிசையுள்ள பிடர்மயிர். [5] சிங்கவேறு, ஆண்சிங்கம் (அரி—சிங்கம். அரிமான்—சிங்கமாகிய மிருகம்). [6] தன் நிழலை வேறு யானையோ என்று கோபிக்கும். [7] மலையொத்த. [8] வளைந்தால் என.

தெண்டிரைப் பரவையேழும் சேறுபட் டொழியத் தெண்ணீர்
மொண்டுகொண் டெழுந்தோர்குன்றில் முகிற்குழாம்[1] சொரிவ தொப்பப்,
புண்டலை வடிவேன் மன்னர் பொறியழற்[2] பகழிமாரி[3]
மண்டமர் கடந்த திண்டோள் மன்னன்மேல் பொழிந்திட்டாரே.

[1] மேகக்கூட்டங்கள். [2] நெருப்புப்பொறி. [3] பாணமழை, அம்புமாரி.

கொள்ளைகொண் டோரி[1] உண்ணக், குழாங்கொடு கவந்தம்[2] ஆட,
ஒள்ளழற்[3]றறுகட் கூற்றம் உயிருண்டு தெவிட்டிநிற்ப,
வெள்ளவெங் குருதிபோர்ப்ப, வியன்பணை[4] நிடதங்காக்கும்
வள்ளல்தன் புருவத்தோடும் வரிசிலை குனிந்ததன்றே.

[1] ஓரி—நரி. [2] உடற்குறைகள், தலையறுபட்ட உடல்கள். [3] அழல்+தறு கண். [4] பெரியவயல்.

குறிப்பு:—புருவத்தோடும் வரிசிலை குனிந்ததன்றே என்பது புணர் நிலை (உடனிகழ்ச்சி) யணி.

கூன்பிறை[1]க் கோட்டு வல்வில்[2] குழைத்ததும்[3], குழைத்துத் தெவ்வ[4]
ரூன்சுவைத் துண்ணும் வாளி[5] விடுத்ததும், ஒன்னலார்தம்
கான்படு தெரியல் மார்பம் போழ்ந்ததும், தெரியக்காணார்,
வான்படு பிணக்குன் றோங்கி வயின்வயின் கிளங்கக் கண்டார்.

[1] வளைந்த பிறை. [2] வளைவாகிய வலிய வில் [3] வளைத்ததும். [4] பகைவர். [5] பகைவர் ஊனை விரும்பி உண்ணும் அம்பு.

குறிப்பு:—இச்செய்யுள் "எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்" (இராமாயணம்) என்பது போன்ற அதிசயவணி. அவனுடைய அஸ்தலா கவத்தை விளக்குகின்றது.

அதுகண்ட கலிங்கராஜனும் அப்பால் மகதமன்னனும் நளனுடன் எதிர்த் திறந்தனர்.

அமைப்பரும் தறுகண் சீற்றத் தாளரியேறு போல்வான்
சமர்த்தலை இகலின் ஏற்ற தரியலர்[1] சென்னி[2] வீழத்
துமித்திடும்[3] குருதி ஒள்வாள் சுடரெழ விதிர்ப்ப, நோக்கி
இமைத்தலும், வளவர்கோ[4]னை "வெருவல்[5]நீ வருகு"கென்றான்.

[1] பகைவர். [2] தலை. [3] தறிக்கும். [4] சோழன். இது பாண்டியர்க்கும் சோழருக்கும் அக்காலத்திருந்த பகைமையைக் குறிக்கின்றது. [5] அஞ்சாதே.

குறிப்பு:—"விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின் ஓட்டன்றோ வன்க ணவர்க்கு" என்னும் குறளின கருத்தை இங்கே தழுவி யிருக்கிறார்.

அப்பால் சேரமானும் புட்கரத்தீவினரசனும் எதிர்த்துத் தோற்றோடினர். சாவகத்தீவின் அரசனும் காம்பிலி தேயத்தரசனும் எதிர்த்திறந்தனர்.

இங்ஙனம் நளன் பொருவதைக் கண்டு இந்திரன் "போரை இனி விலக்காவிட்டால் உலகெல்லாம் இன்று முடிவுபெறும்" என்றெண்ணினான். அதன்மேல் தேவர்கள் தத்தம் உருவைக் கொண்டனர்.

மழகளி றன்னவன்[1] மானுரு நீங்கி
விழைவொடு தம்முரு மேவிய விண்ணோர்,
அழகுறு காளையர் அவ்வுரு விட்டோர்
கிழவுரு[2] வெய்திய கேண்மை[3]ய ரொத்தார்.

[1] நளன். [2] ஒரு கிழவடிவம். [3] தன்மையுடையவர்.

அதன்மேல் அவர்கள் நளனை அணுகி, "உண்மையிலும் புஜபலத்திலும் உலகில் உனக்கு ஒப்பானவர் இலர். இனி நீ போரை நிறுத்தி, தமயந்தியை மணம்புரிந்து இனிதுவாழ்க" என்றனர். நளனும் உடனே தேரினின்றும் இழிந்து அவர்களுக்கு நமஸ்காரம்பண்ணினான்.

கருணையின் எய்திய காளையை நோக்கி,
"அருமகம் எவ்வழி ஆற்றினும் ஆங்கண்
உருவொடு வந்தவி உண்குவன்" என்னா
மருவரு நல்வரம் வாசவன்[1] ஈந்தான்.

[1] இந்திரன்.

மிடல் கெழும் மேழக[1] மேற்கொளு மேலோன்,[2]
உடைதிரை வேலையின் இன்னமு தொப்ப,
மடிதலில் வெங்கனல் இன்றியும், வாளா
அடிசில்[3] அடுந்தொழில் விஞ்சை யளித்தான்.

[1] ஆட்டுக்கடா. [2] அக்கினிதேவன். [3] சோறு.

அல்லல் உழந்தரு[1] எய்தினும் நெஞ்சில்
நல்லறம் எய்தவும், நண்ணிய ஞாட்[2]பில்
வெல்படை வேண்டுவ எய்தவும், வென்றிக்
கொல்சின வெம்பக டூர்தி[3] கொடுத்தான்.

[1] அரு—துன்பம். [2] யுத்தம். [3] எருமைக்கடா வாகனத்தை யுடையவன், யமன்.

தார் புலராது தயங்கவும், வேண்டின்
ஆர்கலி[1] வற்ற அமைக்கவும், அல்லால்,
நீரறு பாலையில் நெஞ்சில் நினைப்பின்
வார்புனல் எய்தவும், வருணன் அளித்தான்.

[1] சமுத்திரம்.

ஆண்டகைக் கின்ன அளித், தரிவைக்கு
மாண்டகு கற்பை வருத்துவம் என்றுத்
தீண்டின ராவி சிதைந்திடு மாறும்,
வேண்டுரு வெய்தவும், விண்ணவர் ஈந்தார்.

அப்பால் தேவர்கள் தேவலோகம் சென்றனர். அரசர்கள் தத்தம் தேயம் சென்றனர். நளன் தனது இருக்கையை அடைந்தான்.

## திருமணம்.

போர் முடிந்த பிறகு வீமராஜன் கல்யாண மண்டபத்தை அடைந்தான். கோதம முனிவராகிய புரோகிதர் கல்யாணத்துக்குரிய பொருள்களை உடன் கொண்டு சென்றார். முகூர்த்த நாழிகை ஸமீபிப்பதை ஒற்றர் சென்று நளனுக்கு அறிவித்தனர். நளன் நீராடி, அந்தணர்க்கு விருப்பமானவைகளைத் தானம்பண்ணி, ஆடையாபரணங்களைத் தரித்து, மன்னவர் குடை தாங்க, மங்கையர் கவரி வீச, முழவம் முழங்க, யானைமீதேறி, மணமண்டபத்தில் வந்து சேர்ந்தான். அந்தணர் ஆசி மொழிந்தனர்.

அதற்குள் தாதியர் தமயந்தியை அழைத்துவந்து மணமகனோடு மணத் தவிசில் ஏற்றினர்.

உதகம் நல்குநல் ஓரை[1] இதென
விதியின் நாடிக் கணிதர்[2] விளம்பலும்,
பதலை[3] ஆர்த்தெழப் பாவையை நல்கிய[4]
மதுமலர்த் தொடை மன் எழுந்தானரோ.

[2] சோதிடர்.
[3] வாத்தியம்.

[1] தாரைவார்த்துக் கொடுத்தற் கேற்ற நல்ல முகூர்த்தம். [4] நல்கும்படி (வினையெச்சம்.)

கமலமீது செங்காந்தள் அலர்ந்தெனக்,
குமரன் அங்கையில் கோல்வளை செங்கை வைத்(து),
"இமய மாது[1]ம் இறைவ[2]னும் போலவாழ்ந்
தமைதிர்" என்ன அரும்புனல் நல்கினான்.

[1] பார்வதி. [2] பரமசிவன்.

சாந்து[1] மூழ்கு தடம்புயன், ஆரழற்
கேய்ந்த யாவும்[2] இனிது முடித்தபின்,
ஆய்ந்த நான்மறையின்வழி ஆயிழை
காந்தள் மெல்விரல் கைப்பிடித்தா னரோ.

[1] சந்தனக்குழம்பு.

[2] அக்கினிகாரியத்துக்குப் பொருந்திய அனைத்தும்.

பொங்கு செந்தழல்[1] சூழ்வந்து,[2] பூம்பொரி
செங்கை ஆரச் சொரிந்து, திருமகள்[3]
பங்கயப் பதம் பைம்பொனின் அம்மிவைத்
தங்கண் வானத் தருந்ததி காட்டினான்.

[1] ஓமாக்கினி. [2] வலம்வந்து. [3] தமயந்தி.

ஏனை யுள்ளன யாவும் முடித்தபின்,
மானினோக்கி ஓர்வல்லியின் ஒல்கி[1]ப் போய்த் [1] அசைந்து.
தானை யங்கடல் தாதைபொற் றாளினில்
தேனவாங்குழற் றேமலர்[2] சூட்டினாள்.

[2] கூந்தலிலணிந்த வாசனைபொருந்திய மலர்.

குறிப்பு:—தமயந்தி வீமனடியில் முடியுறப் பணிந்தாள்.

சென்னி தாழ்த்து வணங்கிய தேமொழி
மின்னனாளை உவந்து விதர்ப்பர் கோன்,
"பொன்னந் தாமரைப் பூவை[1]யும் மா[2]லும்போல்,
மன்னர் கோனொடும் வாழ்"கென வாழ்த்தினான்.

[1] இலக்குமி. [2] திருமால், விஷ்ணு.

முருகு[1] வாய்மடுத் துண்டளி[2] மூசுபூந் [1] தேன். [2] வண்டுகள்.
தெரியல் மார்பினன்,[3] தேசிகர்[4] தாள்தொழு(து), [3] நளன்.
உருகும் அன்பின் உவந்து விதர்ப்பர்கோன்
வரைகொள் மார்பம் மகிழ்வுறப் புல்லினான்.[5] [5] தழுவினான்.

[4] ஆசிரியர்.

கோதின் நான்மறைக் கோதமன் ஆதியாம்
மாதவத்து முனிவரும் மன்னரும்,
காதல் வேலை கரையழிந் தோங்கிட
ஆதர[1]த்தொடும் ஆசி இயம்பினர். [1] அன்பு.

சில நாள் நளன் தமயந்தியோடு இன்புற்றிருந்து, அப்புறம் தனது நகருக்குப் போக நினைத்து, அதனை வீமராசனுக்கு அறிவித்தான். வீமராசனும் அவன் மனைவியும் வந்த அளவில், நளன் வீமனைத் தழுவிக் கொண்டான். தமயந்தி தந்தையடியிலும் தாயின் அடியிலும் வணங்கி யெழுந்தாள். தாய் தமயந்தியை உச்சிமோந்து தழுவிக்கொண்டாள். தந்தை மகளையும் மருமகனையுங் கண்டு மகிழ்ந்து,

பண்ணமை கலின[1]மான்றேர் ஆயிரம், இரட்டி பாய்மா[2],
அண்ணலங் களிநல்யானை ஆயிரத் தறுபத்தொன்பான்[3],
கண்ணகன் விசும்பு பூத்த கற்பகத் தருவினோடு
மண்ணிழிந் தனைய பேரூர் ஐம்பதும் வழங்கினானே.

[1] சடிவாளம். [2] குதிரை. [3] ஒன்பது.

குறிப்பு: — விசும்பானது தருவினோடு மண்ணின்மீது இழிந்தது போன்ற (விரும்பியவற்றை எல்லாம் கொடுக்கும்) பெரிய ஊர்.

பொழிசுதிர் மணிசெய் கட்டில், புனைமலர்ப் பாயல், பைம்பொன்
இழைபயில் வண்ணப் பேழை, இனிய சாந்தாற்றி[1]யோடு,
நிழறவழ் மணிக்கண்ணாடி, நித்தில முகடு வேய்ந்த
ஒழுகொளிக்கவரி[2], இன்ன உலப்பில[3] நல்கினானே.

[1] சிறிய ஆலவட்டம். [2] சாமரை. [3] அளவற்றவை.

தமயந்தியின் பிரிவை ஆற்றாமல் வனைத்தாயர் வருந்தினர்.

பெருந்துயர் உழந்துவாடும் பிணையனார் [1]தம்மை நோக்கி,
"விரிந்தபூந் துளவினோன்[2]பின் விரைமலர்க் கோதை[3] ஏக
வருந்திமுன் உயிர்த்ததெண்ணீர் மறிகடல் வருந்திற்றே?"என்
றருந்தவர்க் கிறைவனான சோதமன் ஆற்றினானே.

[1] மான்போன்றவர். [2] விஷ்ணு. [3] இலக்குமி.

குறிப்பு:—"வலம்புரி யீன்றமுத்தம் மண்மிசை யவர்கட் கல்லால் வலம்புரி பயத்தை யெய்தா தனையரே மகளிர்" எனச் சிந்தாமணியில் வருகின்றது.

அன்னையர் அம்மெலோதி[1]த் தோழியை அருளின் நோக்கி,
"உன்னினும் இவண்மேல் காதல் உளமென உரைக்கிலேமால்
என்னினும்[2] இன்றுதொட்டும்[3] இன்னுயிர்த் தோழியல்லை:
மின்னனாட் கன்னை நீயே வேண்டுவ புரிதி[4]"என்றார்.

[1] ஓதி—கூந்தல். [2] ஆனாலும். [3] இன்றுமுதலாக. [4] செய்.

அதன்மேல் நளன் மாமனிடம் விடைபெற்று, மந்திரிமார்களிடத்தில் "இன்று புறப்படுகிறோம்" என்றான். எல்லாம் சித்தமானதும் நளன் தேரில் ஏறினான். தமயந்தி சிவிகையில் ஏறினாள்.

கொடிகளும் குடைகளும் குழுமப், பல்லியம்[1] — [1] பலவாத்தியம்.
கடலுடைந்தாலெனக் கறங்கி[2] ஆர்த்தெழ, — [2] குமிறி.
வடிகெழு குருதிவேல் மன்னர் சூழ்வர,
நிடதநா டடைந்தனன் நேமி வேந்தனே.

அருமறை முனிவரும், அமைச்சர் வெள்ளமும்,
குரை[1]கடற் றனையும், குரவ[2] ரீட்டமும்,
முரசொலி அதிர்குரல் முகிலின் ஆர்த்தெழ,
இருநிலக் கிழவ[3]னை எதிர் கொண்டாரரோ.

[1] ஒலிக்கும். [2] பெரியோர். [3] பெரிய பூமிக்கு உரியவன், நளன்.

அகழியங் கடல்புடை அணிந்து நீனிற
முகில்தவழ் மூதெயில்[1] முற்றி,[2] இன்னகிற்
புகைகமழ் எரிமணிப் பொலன்[3]செய் மாடத்தின்
நகைநிலா மதிதவழ் நகரம் எய்தினான்.

[1] பழைய மதில். [2] சூழ்ந்து. [3] பொன்.

பொருவருங் கங்கைநீர் நிறைத்துப் பூசுரர்
எரிமணிப் பொற்றசும் பேந்தி முன்வர,
விரைகமழ் செழுந்தொடை வீமன் மாதொடும்
திருவளர் கோயிலில் செல்வன் எய்தினான்.

**கலி தொடர்தல்.**

சுயம்வர மண்டபத்திலிருந்து இந்திரன் முதலிய தேவர்கள் திரும்பிப் போகும்போது, கலிபுருஷன் எதிரில் வர, அவனை "எங்கே போகிறாய்?" என்று இந்திரன் கேட்டான். "தமயந்தியின் சுயம்வரத்துக்குப் போகிறேன்" என்று அவன் சொன்னான். இந்திரன் நகைத்து, "தமயந்தி நிடத ராஜனான நளனுக்கு மாலையிட்டாள்" என்று சொன்னான். அதுகேட்டுக் கலிபுருஷன் அதிக கோபங் கொண்டு "அவளுடைய எண்ணத்தைக் கெடுத்து அவர்களைப் பிரித்துவிடுகிறேன்" என்றான். இந்திரன்,

"அருந்ததிக் கற்பினல்லாள் அரசிளங் குமரன்தன்னைப்
பிரிந்திட இயற்றிப் பின்னர்ப் பெறுவது தீமையன்றோ?
விரிந்தநூற் கேள்வி என்னும்? பிறர்மனை விழைய உள்ளம்
பொருந்திய தெவன்கொல் கல்லாப் புல்லரின்[1]? புகழின் மிக்
[கோய்."

[1] புல்லரைப்போல்.

என்றான். தேவர்கள் சொல்லிய நல்ல வார்த்தையைக் கலிபுருஷன் கேட்க வில்லை அதன்மேல் தேவர்கள் தங்கள் உலகம் சென்றனர்: கலி நிடத நாட்டை நோக்கிச் சென்றான்.

மல்லலம் பழன[1]வேலி வளங்கெழு நிடதநாட்டின்
அல்லலுற் றரிதிற்செல்லும் கொடுங்கலி, அமரர் வேட்ப
எல்லையில் வேள்வி யாற்றி அருமறை பயில்வோர் எங்கும்
சொல்லிய பதங்கள்கேட்டுத் துணைப்பதம்[2] பெயர்க்கிலானே.

[1] வயல். [2] இரண்டு காலும்.

அருமறை முனிவர் யாரும் ஓர்கலத் தார்வமோடும்
பருகிய வாறு நோக்கித் தீவினை பயந்த தென்று
விரைவினிற் சேறலோடும், மறைமொழி கூறும் வேள்விக்
குரியது சோமபானம்[1] எனஉளம் உடைந்து போனான்.

[1] சோமலதையினின்றிறக்கிய மதுவாகிய பானம்.

நிழல்சுழி நளிநல்யானை நிடதர்கோன் மகிழ்ச்சி கூர்ந்து
பழமறைக் கிழவர் யாரும் பரிவொடு கவர்ந்துகொள்ள
விழுநிதி[1] பழனநாடு வேண்டுப வெறுப்ப நாளும்
பொழிதரு புனலை[2] நீந்திப் போக்கரி தென்ன நின்றான்.

[1] சிறந்த திரவியம். [2] தானம் பண்ணும்போது கையில் விடும் தாரையாகிய நீர்.

கடிமனை யிடங்க டோறும் கற்புடை மகளிர் ஈட்டம்;
கொடிநெடு வீதியெல்லாம் கடவுளர் விழவு; துன்று
நெடி[1]படு கானமுற்றும் துறந்துளோர் நெருக்கம்; யாண்டும்
அடியிடல் அரிதென் றெண்ணி அல்லலுற் றகன்றுபோனான்.

[1] சிள்வண்டு.

"இந்த நகரத்தின் எல்லைக்குள் யான் எங்கும் அடியிடுவது அரிது" என்றெண்ணி, நகரின் புறத்தில் ஒரு சோலையில் உயரமான ஒரு தான்றி மரத்தின்மேல் இருந்து, நளனிடம் ஏதாவது ஒரு குற்றம் நேரிடுமோ என்று காணும்படி காத்திருந்தான் சனிபகவான்.

இவ்வாறு சிலகாலம் செல்ல, தமயந்தி முன்னே ஓராண்பிள்ளையும் பின்னே ஒரு பெண்பிள்ளையும் பெற்றாள். நளன் அவர்களுடைய மழலை வார்த்தையைக் கேட்டு மகிழ்வுற்றிருந்தான்.

நிழலுமிழ்ந் துதிரங் காலும் வயிரவாள் நிடதர்கோமான்
எழுபுவி வேந்தர்யாரும் இடுதிறை கொணர்ந் தென்றொன்றும்
தொழுதனர் ஏத்திநிற்பத் தொடு[1]கட லுடுத்த ஞாலம்
முழுவதும் ஒருகோ லோச்சி முறைவழா தளித்தானன்றே.

[1] சகரர் தோண்டிய.

ஒருநாள் மாலையில் நளன் கால்கழுவாமல் செய்கடன் கழித்தலைக் கண்டு, பன்னிரண்டு வருஷமாகக் காத்திருந்த கலிபுருஷன் நளனிடம் சேர்ந்தான்.

"இனி யான் தமயந்தியை நளனிடத்தில் நின்றும் பிரிப்பதற்கு வழி தேடுவேன்" என்றெண்ணிக் கலிபுருஷன், நளனுக்குத் தம்பியான புட்கரனிடம் சென்று, "நளன் ராஜாதிராஜனாயிருக்க நீ இங்ஙனம் என் வருந்தியிருக்கிறாய்? நளனையும் தமயந்தியையும் காட்டில் புகுத்தி உனக்கு முடிசூட்டுகிறேன், வா" என்றான். அதுகேட்டு அதிக மகிழ்ச்சியடைந்த புட்கரன் "வீராதிவீரனான நளனை வெல்லுமாறு எப்படி?" என்று கேட்டான். கலி "என் செய்கையை விலக்க விண்ணவராலும் முடியாது. சூதாட்டத்தில் அவனைத் தோற்பிக்கிறேன். நான் கலிபுருஷன். புறப்படு" என்று சொல்லி, ஒரு காளையெருதாக உருக்கொண்டு நின்றான். புட்கரன் அக்காளையின் மேல் ஏறி, ஒரு கொடி பிடித்துக்கொண்டு, நளனிடம் எகினான். நளன் அவனோடு அளவளாவி, "இது என்ன கொடி?" என்று கேட்டான். "சூதாட எற்ற மன்னரை வெல்லுகின்ற கொடி" என்று புட்கரன் சொன்னான். "சூதில் நீ அவ்வளவு வல்லவனாயின், வா, நாமிருவரும் ஆடுவோம்" என்றான் நளன். அதுகண்ட அமைச்சர், அரசனை நோக்கி,

சீலநற்றரும மெய் சிதைக்கும்; தெண்டிரை
வேலைமுற்[1] றிருநிலக் கிழமை வீழ்த்திடும்; — [1] கடல்சூழ்ந்த.
மாலுறுத்திடும்; கவறாடல், மன்ன, கேள்,
கோலிழுக் கரசர்தங் கொள்கைத்[2] தென்பவே.

[2] கோல் (அரசு) கெடுகின்ற அரசராற் கைக்கொள்ளப்படுவது.

ஐய, நீ ஆடுதற் கமைந்த சூது, மற்
றெய்து நல்குர[1]வினுக் கியைந்த தூது; வெம் — [1] தரித்திரம்.
பொய்யினுக் கருந்துணை; புன்மைக் கீன்றதாய்;
மெய்யினுக் குறுபகை என்பர் மேலையோர்.

எள்ளுக சூதினை. இகலி[1] வென்றதூஉம், — [1] மாறுபட்டு.
கள்ள மேற்கொடு வலை கரந்து வேட்டுவர்
உள்ளுற அமைத்திடும் உணவை ஓர்கிலாப்
புள்ளினம் அருந்தின போலும் என்பவே.

வென்றதும் எழுவாய்; போலும் பயனிலை.

அமைச்சர் இங்ஙனம் கழறிய கட்டுரையைக் கேட்டு, நளன் "நான் சூதாடுவதாக உரைத்துவிட்டேன். இனி நீர் விலக்குவது ஒல்லாது" என்று சொல்லிப் புட்கரனை நோக்கி, "பந்தயம் என்ன?" என்று கேட்டான். புட்கரன் "நான் இந்தக் காளையை வைக்கிறேன். நீ பூமியை வைக்க" என்றான்.

சூழ்வினைப் புணர்ப்பினால் சொன்னவா றியைந்
தாழ்கடற் புவிதொழும் அரச னோட, வெங்
காழ்மனக் கொடுங்கலி கவ[1]ற்றின் வண்ணமாய்
வீழ்தலும் புட்கரன் வென்றிட்டா னரோ.

[1] கவறு—சூதாடுகருவி, தாயக்கட்டை.

இங்ஙனம் சேனைகளையும், சேடியரையும், சேமித்து வைத்திருந்த நிதிக்குவியலையும் நளன் தோற்றஅளவில்,

"அனைத்தையும் தோற்றனை, அருவி பாய்கவுள்
சினக்களி மால்களி றனைய சிற்றத்தோய்,
மனத்திடை நினைக்குவ தென்னை? வல்லை[1]நின் [1] சீக்கிரத்தில்.
புனக்கொடி[2]க் கியைந்தினிப் பொருதும்[3]யாம்" என்றான்.

[2] மனையாள் (புனத்தில் வளரும் கொடிபோன்றவள்). [3] ஆடுவோம்.

குறிப்பு:—இது "மைவருந் தடங்கண் வேள்வி மாது தன்னை ஒட்டி நீ, கைவருங் கவற்றினின்னம் எறிகவென்று கழறினான்" எனப் பாரதத்தில் சகுனி கூறியதை ஒக்கும்.

அந்த வார்த்தையைக் கேட்டதும் அரசன், கானகம் செல்லத் துணிந்தான்.

வாட்டிறன் மன்னவன் கமல வாண்முகம்,
ஈட்டரும் அரசியல் இழந்த போதினும்,
பாட்டளிக் கூந்தல்[1] வேந்தவையில் பைந்தொடை
சூட்டிய ஞான்[2]றினும் துலங்கு கின்றதே.

[1] பாட்டைப் பாடுகின்ற வண்டுகள் மொய்த்த கூந்தலையுடைய தமயந்தி. [2] முகமானது தமயந்தி பைந்தொடை சூட்டிய ஞான்றினும் சிறந்து துலங்குகின்றது.

குறிப்பு:—வனஞ்செல்வதென்று கைகேசி கூறிய வார்த்தையைக் கேட்டபோது "செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கில், ஒப்பதே முன்பு பின்பவ்வாசக முணரக்கேட்ட, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா" என்றார் கம்பநாடர்.

உடனே அரசன் அந்தப்புரம் செல்ல, சாமரை யிரட்டுவோரும் அடைப்பை தாங்குவோரும் வாளேந்திச் செல்வோரும் எவருமின்றி, "அரசன் தனியாக வருவதைக் கண்டு, தமயந்தி திடுக்கிட்டு எழுந்துவந்து வணங்கினாள். நடந்த செய்தியை நளன் கூறக்கேட்டுக் கண்ணீர் சொரிந்து மனம்வருந்தி, இது ஊழ்வலியே" என்று உள்ளந்தேறினாள். நளன்

"இந்திர சேனனென் றிசைக்கும் பேருடை
மைந்தனும் மழலைவாய்க் கொடியும் மாழ்குறு[1] [1] வருத்தமுறுத.
துய்ந்திடக் கொண்டு, பேரோசை போயநின்
தந்தைதன் வளநகர் சார்க" என்றனன்.

"உயிர்நிகர் மக்களோ" டுலங்கொள் தோளினன்
"செயிரறு தந்தைபால் செல்"கென் றோதலும்,
புயல்நறுங் கூந்தலாள், புண்ணி னூடெரி
அயினுழைந் தாலென[1] அலமந்[2] தேங்கினள். [2] சுழன்று.

[1] புண்ணினுள் எரியும்வேல் நுழைந்தது போல.

"நெடிபடு கானிடைத் தமியை[1] நீங்கிப் போய்ப் [1] நீ தனியாக.
படுபால் அமளி[2]மேல் பள்ளிகொள்ள, எம் [2] படுக்கை.
கடிநக ரடைந்துமெல் லணையில் கண்படின்,
அடியனேற் கிதனினும் அறனுண்டாங் கொலோ?"

என்றவள் உரைத்தலும், மடங்க லேறனான்,
"மென்றளிர் கவற்று[1]நின் மெல்லென் சீறடி[2]
கன்றவெம் பரல்படு கானின் வருதற்
கொன்றுமேல்[3] எனதுயிர் உய்யுமோ"என்றான்.

[1] கவலைச்செய்யும், வருந்தச்செய்யும். [2] சிறு அடி, [3] பொருந்துமாகில்.

"பொற்[1]பினுக் குறையு[2]ளாம் பொன்னனங் கொம்பனாய்,
அற்[3]பினில் பயந்தநம் மக்கள், ஆயிடை[4]
எற்பிரிக்[5] துறைகுந ரேனும், எங்ஙனம்
நிற்பிரிக்[6] தாற்றுவர்? நிகழ்த்துவாய்" என்றான்.

[1] அழகு. [2] இருப்பிடம். [3] அற்பு-அன்பு. [4] அ இடை-அவ்விடம்
[5] என் பிரிந்து-என்னைப்பிரிந்து. [6] நின் பிரிந்து-உன்னைப்பிரிந்து.

தமயந்தி:—

"கூற்றுறழ் குருதிவேற் குரிசில், மக்கடாம்
ஆற்றினும் ஆற்றலா தருரில் மூழ்கினும்,
மாற்றருங் கற்பினோர் மகிழ்நர்[1] கான்செல [1] கணவர்.
வேற்றுநா டுறைவது விழுமிதோ[2]?"என்றாள்.

[2] மேன்மையுடையதோ.

நளன்:—

விரிகட லமிர்தமும் வேலை ஞாலமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையும் எளிதின் எய்தலாம்:
அருமகப் பெறுதல்[1] மற்றரிய தென்பவே."

[1] பிள்ளைகளைப் பெறுதல்.

என்னலும் வண[1]ரிருங் கூந்தல் ஏந்திழை, [1] வண்டு.
"மன்னவ, மழலைவாய் மக்கள் தம்மொடு
மின்னகு பரிதிவேல் வீமன் மாநகர்
துன்னுதும்[2] யாம்" எனச் சொல்லினளரோ.

[2] செல்வோம்; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று-நன்-சூ. 332.

நளன்:—

"கோற்றொடி, செல்வர்பால் குறையிரந்துநின்
றேற்றயின்[1] றுயிர்சுமந் திருத்தல்,[2] ஈறிலா
ஆற்றலும் மானமும் அறிவும் கல்வியும்
மாற்றரும் சீர்த்தியும் மாற்றும் என்பவே."

[1] ஏற்று அயின்று—வாங்கியுண்டு. [2] உயிரைத் தாங்கியிருத்தல். சுமந்து என்பது இன்பமின்மை குறித்தது.

குறிப்பு.—உயிர் சுமந்திருத்தல் எழுவாய்; மாற்றும் பயனிலை.

"மிக்கவெஞ் சம[1]த்திடை வெருவி யோடினர், [1] சமம்-யுத்தம்.
ஒக்கல்[2] துன்புறத் தனி உலகில் வாழுநர், [2] சுற்றத்தார்.
புக்கு வேட்டக[3]த்தினில் உண்ணும் புன்மையோர்,
மக்களுட் பதடி[4]யென் றுரைக்கும் வையமே."

[3] மாமனார் வீடு. [4] பதர்.

என்றலும், "திருவுளம் இன்ன தாகுமேல்,
மன்றலந் தெரியலாய், மக்கள் தம்மைநம்
மின்றிகழ் மானவேல் விதர்ப்பன் மாநகர்
சென்றிடப் பணித்தருள்[1]" என்று செப்பினாள்.

[1] ஏவியருளுக-அருள் என்னுந் துணைவினை இழிந்தார் உயர்ந்தாரை வேண்டிக் கொள்ளுமிடத்து வருவது-Be pleased to order.

தண்டலில் பாகனை நோக்கித், தாதுசேர்
வண்டிமிர் தெரியலான் வருந்தி, "மக்களை
விண்டொடு புரிசை[1]சூழ் விதர்ப்பன் தன்னுழை [1] மதில்.
கொண்டனை போ" கெனக் கூறினனரோ.

மக்கள் இருவரும்.

தழுவிய தாதைதன் முகமும் தாயினன்[1] [1] தாயின் நல்.
முழுமதி[2] யனையவாள்[3]முகமும் நோக்குறு, [2] பூரணசந்திரன். [3] ஒளி.
விழிவழி நீருக விம்மிவிம்மிநின்
றழுதனர், கண்டுளோர் அலக்கண்[4] எய்தவே. [4] துன்பம்.

தமயந்தி மக்களைத் தழுவிக்கொண்டு கண்ணீர் பெருக்கினாள். பாகன் தாய்தந்தையருடைய துயரத்தை ஆற்றி உடலினின்றும் உயிரைக் கொண்டு போவதுபோல், மக்களைத் தேரில் ஏற்றிக்கொண்டு போனான்.

மிகைப்படு துன்பமும் விழையும் இன்பமும்
அகத்திடை நிகரென நோக்கும் ஐயனும்[1]
தகைப்பருந் துயரொடு தளர்ந்து சாம்புமேல்
மகப்பிரி வினும்துயர் வலிது யாவதே.

[1] "மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும், ஒத்திருக்கும் உள்ளத் துரவோன்" என்றபடி.

சிலதியர் பரப்பிய தேங்கொள் மெல்லிதழ்
மலர்மிசை மிதிப்பினும் வருந்து சீறடி
நிலமிசைப் படுபரல் உறைப்ப, நேரிழை
புலவு[1]வேற் காளைபின் தொடர்ந்து போயினாள்.

[1] புலால் நாற்றம்.

நளனைப் பிரியலாற்றாமல் நகரமாந்தரும் அமைச்சர் முதலாயினாரும் மிகவும் மனம் வருந்தினர். அதனைக் கண்ட புட்கரன் நளனிடத் தன்பு காட்டுவோரைக் கொல்வதாகப் பறையறைவித்தான்.

வசைபடு மன்னவன் வாய்மையா லறை
விசிமுழ வொலிசெவி வெதும்பக் கேட்டலும்,
இசைபடு மன்னவற் கிரங்கினோ ரெலாம்,
அசுண[1]மென் புள்ளென அலமந் தேங்கினார்.

[1] "பறைபட வாழா அசுணமா" என்பது நான்மணிக்கடிகை. "யாழ், நறை யடுத்த அசுண நன்மாச் செவிப், பறையடுத்தது போலு மென் பாவரோ" என்றார் கம்பர்.

நளன் காட்டில் புகுந்தான். கலிபுருஷன் ஜனங்களுக்கு வழி தெரியாத படி செய்தான். ஜனங்கள் அதனால் ஏங்கியழுது நகருக்கு மீண்டனர்.

பறவைகள் குடம்பை[1]யுள் பார்ப்[2]பருத்தில;
கறவைகள் புனிற்றிளங் கன்று[3]க் கூட்டில;
நறவுயிர்த்[4] தலர்கில மலர்கள்; நாமவேல்
இறைவ னேகினன் வனத் தென்ற பின்னரே.

[1] கூண்டு. [2] குஞ்சு. [3] ஈன்றணிமையான கன்று. [4] தேனைத் தந்து.

வான் மறந்தன துளி வழங்கல். இன்னிசைத்
தேன்[1] மறந்தன மடமகளிர் தீங்குழல்.
பால் மறந்தன பசுங்குழவி. பாய்கவுட்
கான்[2]மறந்தன மதக்களிறல் யானையே. [2] வாசனை.

[1] இனிய இசையைப்பாடும் வண்டுகள்.

அள்ளிலை வேற்கணார் அங்கை மீதுவைத்
தெள்ளரும் இன்மொழி பயிற்ற லின்மையால்,
வள்ள[1]வா யாரமு துண்ணும் வண்சிறைக்
கிள்ளையும் தேன்மொழி கிளக்க[2] லற்றவே.

[1] வள்ளம்-கிண்ணம். [2] பேசுதல்.

வாய்[1]பரியிழந்தன வாவும் ஐங்கதி[2].
எம்ப[3]லின் விழவணி இழந்த கோமறு[4](கு).
ஆம்பல்[5]வாய் இழந்தன முறுவல்[6]. ஆரகில்
தீம்புகை[7] இழந்தன செம்பொன் மாடமே.

[1] வாவும், தாவும்; நன்—சூ. 341. [2] ஐவகை நடை. [3] களிப்பு. [4] ராஜ வீதி. [5] செவ்வல்லி. [6] புன்சிரிப்பு. [7] கூந்தல் புலர்த்தும் புகை.

பாவலர் இழந்தனர் பரிசில்[1]. உண்பலி[2] [1] வெகுமதி. [2] அவிசு.
தேவரும் இழந்தனர். கலியின் தீமையால்
காவலன் நெடிபடு கானில் ஏகலால்
யாவரும் இழந்தனர் இன்பம் என்பவே.

அறந்தலை மயங்கின. பொய்ம்மை ஆர்ந்தன[1]. [1] நிறைந்தன.
மறந்[2]தலை யெடுத்தன. தீமை மல்கின. [2] பாவம்.
திறம்பின[3] மனுநெறி. தவங்கள் தீர்ந்தன. [3] தவறின.
நிறைந்தன வஞ்சனை நேமி[4]யெங்குமே. [4] உலகம்.

## கான்புகுந்த நளன் தமயந்தியைத் தனியேவிட்டுப் பிரிதல்.

களிமயில் குனித்திட[1]க் காலமன்றியும் [1] கூத்தாட.
துளிமுகில் பிலிற்றின[2]; துணர்த்த[3] பூங்கொடி;
முளரி[4]சினை தளிர்த்தன; முகைத்த[5] டைந்தரு;
நளிகடற் றுனையான் நடந்த கானமே.

[2] தூறின. [3] பூங்கொத்துக்களை விட்டன. [4] உலர்ந்த. [5] அரும்பின.

விள்ளரும் அதர்[1]இடை வெதும்பும் வெம்பரல் [1] வழி.
கள்ளவிழ் மலரெனக் குழைந்து[2] காட்டின, [2] மிருதுவாகி.
ஒள்ளழற் கதிர்சுட உலரும் வெஞ்சுரம்[3] [3] பாலைநிலம்.
வள்ளவாய் மலர்விரி மருதம்[4] போன்றதே. [4] மருதநிலம்.

ஊறுசெய் தூன்சுவைத் துடம்பு வீக்கிய
ஆறலை கள்வ[1]ரும் அளிய [2]ராயினர்.
வேறினி உரைப்பதென்? வெருவும் ஆனொடு
மாறுகொள் உழுவை[3]யும் மாற்றம்[4] தீர்ந்தவே.

[1] வழிபறிப்பவர். [2] அருளுடையவர். [3] புலி. [4] பகை.

காடு இங்ஙனம் தோன்றியதால், காட்டில் போவது நளனுக்கும் தமயந்திக்கும் பொழில் விளையாட்டுப் போன்றிருந்தது. வழியில் ஒரு தடாகக்கரையில் கலிபுருஷன் ஓரன்னம்போல் உருக்கொண்டிருந்தான். தமயந்தி அந்தப் பறவையைப் பிடித்துத்தரும்படி நளனை வேண்டினள். இருவரும் ஒரு வஸ்திரத்தை உடுத்து மற்றதைப் பறவையின்மேல் வீச, வஞ்சமாய் வந்திருந்த பறவை வஸ்திரத்தோடு அந்தரத்தில் எழுந்து பறந்துபோயிற்று.

கல்லதர்[1] நடந்து பூங்கமலம் வாட்டிய
மெல்லடி[2] சிவப்புறல் வீழி[3]வாய் மயிற்
கொல்லுமே எனமனம் உருகி, "உந்தையூர்
செல்லுநீள் நெறியிது" என்று செப்பினன்.

[1] கல்வழி, பரற்கற்கள் நிறைந்தவழி. [2] கமலம் வாட்டிய மெல்லடி—தன்னழகாலும் மென்மையாலும் தாமரையைக் கெடுத்த மென்மையான அடி: தாமரையைப் பார்க்கிலும் அழகும் மென்மையுமுள்ள பாதம். [3] வீழிப்பழம்.

ஆங்கது கேட்டலும், அழுதுமாழ்கி[1] நொந் [1] வருந்தி.
"தீங்குநின் அடியனேன் பிழைத்த தியாதுகொல்?
பூங்கழற்[2] குரிசில்நீ பொறி[3]யிலேன்றனை [2] வீரக்கழல். [3] அறிவு.
நீங்கவோ இவ்வுரை நிகழ்த்தினாய்?" என்றாள்.

"குரிசிலோய் பொறியிலேன்" என்றும் பாடம்.

"செயி[1]ரறு மதிமுகம் பசப்பச் சிந்தைநொந் [1] குற்றம்.
தயர்[2]வொடு கண்பனித்[3] தவலங்[4]கொள்ளலை
மயிலியற்பேதை, நிற்[5] பிரிந்து வாழ்வெனோ?
உயிர்பிரிந்தால் உடல் உய்யுமோ?" என்றான்.

[2] சோர்வு. [3] கண்ணீர்விட்டு. [4] துன்பம். [5] நின்-உன்னை.

முருகுயிர்த்[1] தளியினம் மூசு[2]பூங்குழல்
கருதரு பெருந்துயர் காண்கிலேன் எனாப்
பரிநெடுந் தேரொடும் பரிதிவானவன்[3]
உரவுநீர்[4]க் கருங்கடல் ஒளித்திட்டானரோ.

[1] தேனைச்சொரிந்த. [2] மொய்த்த [3] சூரிய தேவன். [4] உலாவு நீர்.

அப்பால் இருவருமாகப் போகும்போது கலியின் சூழ்ச்சியால் வழியில் ஒரு பாழ்மண்டபம் எதிர்ப்பட்டது. அதில் அற்றையிரவைக் கழிப்பதென்று படுத்தனர். "இப்படிப்பட்ட இடத்தில் படுக்க நேரிட்டதே.

"அனிச்ச[1] மென்புதுமலர் அமளி[2]மேயினும்
பனித்திடு மெய்யெனப் பதைத்து வாடுவேன்,
கனிப்படு கிளவி[3]வெம் பொடி[4]யிற் கண்படின்[5]
இனித் தமியேனுயிர் எங்ஙனுய்யுமே?"

[1] ஒருவகை மரம்: அதன் மலர் மிகவும் மிருதுவானது. [2] படுக்கை. [3] பழச் சுவைபோலும் வார்த்தை (யுடைய தமயந்தி.) [4] புழுதி. [5] தூங்கினால்.

என்று நளன் வருந்தினான். தமயந்தி

"வளைகடல் உலகினின் மன்னர் தாள்தொழ
உளைபரி[1]ப் பூந்தவி[2] சுறையும் எம்பிரான்,
முளரி[3]யால் எங்கணும் முற்று[4]மண்டபத்
தெளியர்போல் இருத்தி[5]கொல்?" என்று விம்மினாள்.

[1] பிடர்மயிரையுடைய சிங்கம். [2] ஆசனம். [3] முட்செடி. [4] நிறைந்த. [5] இருக்கிறாய்.

சிறிது நேரத்தில் தமயந்தி இளைப்பினால் தூங்கிவிட்டாள்.

அப்போது நளன், "இனி இவள் காட்டில் படுந் துயரத்தைக் கண்டு சகிப்பது என்னால் ஆகாது. இவள் தந்தையின் ஊர் அருகில் இருக்கின்றது. நான் இவளை விட்டு நீங்கினால், இவள் அங்கே அடைவாள். இருவரும் உடுத்திருக்கும் இந்த வஸ்திரத்தை முரட்டுத்தனமாய்க் கிழித்தால் இவள் விழித்துக்கொள்வாள். விழித்துக்கொண்டால் இவளைப் பிரிவது அரிது. என்ன செய்வது?" என்று ஆலோசிக்கும்போது, சனி ஒரு கத்தியாய் எதிரில் வந்துகிடந்தான். நளன் அதனை எடுத்து வஸ்திரத்தை நடுவில் அரிந்தான்; பின்னர் அவளை எங்ஙனம் தனியாக விட்டுப் பிரிவது என்று மிகுந்த துக்கம் அடைந்தான்.

எழு[1]ம்; அகன்ருல்இனி என்கொலாம் என [1] எழுந்திருப்பான்.
அழும்;உயிர் துறந்தென அவசம் மேற்கொளா[2]
விழும்;இவட் காக்[3]கென மெலிந்து தெய்வதம்
தொழும்;இனையனபல துன்பம் எய்துமால்.

[2] செயலற்று, மூர்ச்சித்து. அவசம் – சுவாதீனமில்லாமை; மேற்கொளா-அடைந்து. [3] இவளை ரக்ஷிக்க.

செல்லும்; வெந்துயரொடும் செல்லக் காலெழா
தொல்லை[1]யில் மீளும்; வெய்துயிர்க்கும்; ஒண்ணுதல்
கல்லதரிடைத் தனிவகின் பேய்க்கணம்
கொல்லுமென் ருருயிர் குழைந்து சாம்பு[2]மால். [2] வாடுவான்.

[1] சீக்கிரம்.

கடைசியாய்க் கலியின் வயத்தனாய்ப் பிரிந்து போய்விட்டான்.

அர்த்தராத்திரியில் நளன் அகன்றுபோய்க் கொஞ்சநேர மானதும் தமயந்தி விழித்துக்கொண்டாள். நளனைக் காணுமல் புலம்பினுள்:—

"நேரலார் போரேறே, நிடதத்தார் கோமானே,
ஆர[1]வரைமார்பா, அளியேன் உயிர்க்குயிரே, [1] ஆரம்-மாலை.
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றும்
சாரலை[2]யால் இன்னும். இதுவோநின் தண்ணளியே?

[2] சேர்ந்தாயில்லை.

"நெஞ்ச மெலிவேன் நினது தடந்தோளும்
கஞ்ச மலர்முகமும் காணுது கண்பனிப்ப[1],
மஞ்சுதவழ் வெற்பெறிந்த வச்சிரத்தோன்[2] அன்றளித்த
விஞ்சை[3]பயின்று விளையாட் டயருதியோ?

[1] கண்ணீர் விடும்படி. [2] மலைகளின் சிறகை வெட்டிய வச்சிராயுதத்தையுடைய இந்திரன். [3] வித்தை.

"ஞாலத்திருள் நடப்ப, நாட்கமலம் வாய்நெகிழ[1], [1] மலர.
வேலைத் திரைமுகட்டில் வெய்யோன்[2] எழுந்தனனுல். [2]சூரியன்.
மாலைக் கதிர்வடிவேல் மன்னர் பெருமானே,
காலைக் கடவ[3] கடன் கழிக்க வாராயோ? [3] செய்யவேண்டிய.

"வாவும் இளமான்காள், மயில்காள், மடப்பிடிகாள்,
கூவும் கரிய குயில்காள், மென்புள்ளினங்காள்,
ஆவி[1]யெனமேவி அகலேம் எனவகன்ற [1] உயிர்.
காவலன்[2]ருன் போன வழியெனக்குக் காட்டீரே." [2] அரசன்.

என்றிங்ஙனம் உருகிக் கண்ணீர் உகுத்துப் புலம்பிச் செல்பவள், அவன் காற்சுவடு கண்டு அலறியழுது உயிர் சோர்ந்தாள்.

அங்ஙனம் மூர்ச்சித்திருந்தபோது, ஒரு பாம்பு அவளை விழுங்கலுற்றது. அதன் வாயிற் பட்டபோது

''செய்த்தோ[1]ரின் மூழ்கி நிணம்பருகும் வை[2]வேலோய்,
பைத்[3]தோர் கொடுந்தழுகண் பாந்தள்[4] விழுங்கியதால்.
எய்த்தேன்[5] உயிர்காத்தற் கெய்தாய்'' என அழுதாள்,
மை[6]த்தோய் குவளை மதர்நெடுங்கண் வாணுதலே.

[1] செய்த்தோர்—இரத்தம். [2] கூர்மை. [3] பைத்த – (பை–படம்) – படத்தையுடைய. [4] பெரும்பாம்பு. [5] எய்த்தல்—இளைத்தல். [6] அஞ்சனம்.

அவள் அழுத குரலைக்கேட்டு ஒரு வேடன் வந்து அரவைக் கொன்று அவளை மீட்டான். மீட்டபின் அவளழகைக் கண்டு நெருங்கினான். அவள் கோபங்கொண்டு சீறினாள். அவனுடல் அவ்வளவில் சாம்பராயிற்று. அப்பால் அவள் போய் ஒரு முனிவர் ஆச்சிரமத்தை அடைந்தாள். முனிவர்கள் அவள் துன்பத்தின் காரணத்தை அறிந்து, ''சிலநாளில் கணவனைக் கண்டு முன்போல் சுகமாக வாழ்வாய்'' என்று அவளைத் தேற்றியனுப்பினார்.

அதன்மேல் சென்றவள் சேதிநகரத்தை அடைந்தாள். அவள் அலங்கோலமாய்ச் சென்றதைக் கண்ட சேதியரசன் தாய், அவளை அழைத்து ஊர் பேர் வினவ, அவள் ''நான் தமயந்தியின் தோழி; தமயந்தியைத் தேடித் திரிகிறேன்'' என்றாள். தமயந்தியைக் காணும்வரையும் அவளை அங்கிருக்குமாறு அரசன்தாய் சொன்னாள். அவளும் அதற்கிசைந்து அங்கிருந்தாள்.

நளன் தமயந்தியைவிட்டு நீங்கிப்போகையில், அழலின் நடுவே கிடந்த நாகம் ஒன்று ''ஓ அரசனே, என்னை அளிக்க'' என்றது. அரசனும் ''அஞ்சல்'' என்று சொல்லிப்போய், அக்கினியின் வரபலத்தால் அழலுள் சென்று நாகத்தை எடுத்துவந்து வெளியில் விட்டான். உடனே அந்நாகம் நளனைத் தீண்டியது. நளன் வேற்றுரு அடைந்தான்.

''கருணை செய்தெனைப் புரந்தநிற் கடித்தது[1] முன்னை
உருவு கண்ணுறில் ஒன்னலர் செகுப்பர்[2] என்பதனால்.
பொருவிலோய்[3], இனிவாகுகன் எனும்பெயர் புனையா[4]
இருதுபன்னன்வாழ் அயோத்திமாநகரின் ஏகுதியால்.

[1] நின் கடித்தது—உன்னைக் கடித்தது. [2] கொல்லுவர். [3] ஒப்பற்றவனே. [4] தரித்து.

"ஏந்தல்[1], ஏகி அம் மன்னவன் சூதனாய்[2] அமைந்து,
கூந்தன் மாவுளம் தெரிதரு விஞ்சைநீ கொடுக்கின்.
ஆய்ந்த சூதுவெல் விஞ்சைநின்பால் அவன் அளிக்கும்.[3]
சாந்த மார்பினள் தமயந்தி தன்னொடும் சார்வாய்.

[1] அரசனே. [2] தேர்ப்பாகன். [3] கொடுப்பான்.

"பின்னர் மன்ன,நின் பெருநிலக் கிழமை[1]யும் பெறுதி.
முன்னை மாணுரு[2] எளிதினிற் பெற்றிட முன்னின்,
இன்னபூந்துகில் புனைதி"என் றிருதுகில் அளித்துத்
தன்னுருக் கொடு போயது தழல்விழிப் பாந்தள்.

[1] அரசாட்சி. [2] மாட்சிமைப்பட்ட உருவம்.

அதன்மேல் நளன் அயோத்தியை அடைந்து இருதுபன்ன ராஜனிடம் தேர்ப்பாகனாய் அமர்ந்திருந்தான்.

## கலி நீங்குதல்.

தமயந்தியையும் நளனையும் தேடும்படி வீமராஜன் சில பிராமணர்களை அனுப்பினான். அவர்களில் சுவேதன் என்பவன், தமயந்தியை, அவள் முகத்திலுள்ள ஒரு மறுவின் குறிப்பால் தெரிந்துகொண்டு, சேதியரசன் தாயிடம் உணர்த்த, அதன்மேல் அவளும் தான் தமயந்திக்குச் சிற்றன்னையாவதை விளக்கினாள். அப்பால் தமயந்தி தன் மக்களைப் போய்ப் பார்க்கவேண்டுமென்று விடைகேட்க, அரசியும் அவளைச் சிவிகையிலேற்றிக் குண்டின புரத்துக்கு அனுப்பினாள். வீமன் சுவேதனுக்கு விருப்பமானவற்றைக் கொடுத்து மகிழ்ச்சியடைந்தான்.

மக்களைக் கண்டு தமயந்தி நெஞ்சநெக்குருகி வாடுதலைக் கண்ட நற்றாய், நளனைத் தேடுமாறு பின்னும் சில ஒற்றர்களை அனுப்புமாறு வீமனை வேண்டினாள். வீமன் அனுப்பிய ஒற்றரில் ஒருவன், "அயோத்தியில் மனைவியைப் போக்கிப் புலம்பும் ஒருவனைக் கண்டேன். அவன் இருதுபன்ன ராஜனிடம் தேர்ப்பாகனாயிருக்கிறான். நெருப்பில்லாமலே சோறு சமைக்கிறான். அவன் பேர் வாகுகன்" என்று தமயந்தியிடம் தெரிவித்தான். அதுகேட்ட தமயந்தி, பிராமணனைப் பார்த்து, "மறுபடியும் நீ இருதுபன்னனிடம் போய்

"நாட்ட மூன்றுடை நாயகன் வரத்தினால் நங்கை
மீட்டும் கன்னிகை ஆயினள்; சுயம்வரம் விழைந்தாள்;
கேட்டு மாநிலக் கிழவ[1]ரும் அவ்வுழி இறுத்தார்.[2]
பூட்டு வார்சிலை மன்ன,நீ போதியேல் போவாய்.

[1] மாநிலக்கிழவர்—அரசர். [2] வந்தடைந்தனர்.

'நாளை நன்மணம் புணர்வது. நிடதநா டளிக்கும்
காளை ஆருயிர் உளன்கொலோ? கழிந்தனன் கொல்லோ?
ஆளி மொய்ம்பினாய்',[1] என்றுநீ அறை"கென அறைந்தாள்,
வாளைவென் றரிபரந்து[2] மைதோய்ந்தகண் மடவாள்.

1 சிங்கம்போன்ற பலமுள்ளவனே. 2 அரிபரந்து—செவ்வரிபரந்து.

பிராமணன் போய் அங்ஙனமே உணர்த்த, இருதுபன்னன் வாகுகனை அழைத்து, "நாளைப்பொழுதில் தமயந்தி சுயம்வரம். நீ விரைவில் தேர் செலுத்தல் வேண்டும்" என்றான்.

கேட்ட வாகுகன் "கிளியென மிழற்று தீங்கிளவி,[1]
காட்டில் நீத்தது நினைந்தனளாயினும், கற்பு
நாட்டுகின்றவள் இத்திறம் புரியுமோ? நம்மைக்
கூட்டுதற்கிஃது இழைத்தனளாம்" எனக் குறித்தான்.

1 கிளிபோல் பேசும் மதுரமான சொற்களை (உடைய தமயந்தி).

வாகுகன் தேர்விடுகிற திறத்தைக் கண்டு.

"கூந்தல் மாவுளம் அறிதலின் சாலிகோத்திர[1]னோ?
ஆய்ந்த கேள்வியின் மாதலி[2]யோ? அன்றிநளனும்
ஏந்தல் வேற்றுரு எடுத்தனனோ?" என எண்ணி
வேந்தர் வேந்தனும் மணிமுடி துளக்கினன்[3] வியந்தான்.

1 சாலிகோத்திர முனிவன். 2 இந்திரன் சாரதி. 3 அசைத்தனனாய்.

முத்த வெண்குடை வேந்தர்கோன், முழவுறழ்[1] தடந்தோள்
உத்தரீயம் அந்நெறியிடை வீழ்தலும் உணர்ந்து,
"தத்துவாம்[2]பரி நிறு[3]வி அத்துகில் தரு" கென்னப்
"பத்துயோசனை[4] கடந்தது தே"ரெனப் பகர்ந்தான்.

1 முழவு உறழ்—மத்தளத்தை ஒத்த. 2 தாவியோடும். 3 நிறுத்தி. 4 யோசனைதூரம்.

அப்பால் சில காதம் நடந்தபிறகு வழியில் ஒரு தான்றிமரத்தைக் கண்டான் இருதுபன்னன்.

தான்றி மாமரம் தோன்றலும் தேரினைத் தகைத்துத்,
"தோன்றும் இம்மரத் திலைகளும் தொக்கமென் பழனும்
மூன்றுகோடியே முப்பதிற்றிரண்"டென மொழிய,
ஆன்ற கேள்வியோன் எண்ணி அற்று[1]மென வியந்தான்.

1 அற்று ஆம்—அத்தன்மைத்தாம்.

"இனைய விஞ்சை மற்றெனக்குநீ அளித்தனை யென்னில்,
துனை[1] வயப்பரி[2] உளமுணர் விஞ்சையான் சொல்வன்,
வனைபொலன் கழல் மணிமுடி மன்ன," என்றுரைப்ப,
அனைய விஞ்சையை வாகுகற் களித்தன னன்றே.

[1] வேகம். [2] வலியகுதிரை.

இருதுபன்ன னவ்விஞ்சையை வாகுகற்கீய,
மருவிநின்ற[1] வன்கலிதணந் தேகி[2] வாளரவம்
எரிசெய் வெவ்விடங் கான்றலின்[3] இதயநெக்குருகி
வெருவி வாய்விடா[4] விடத்தினை உமிழ்ந்தனனன்றே

[1] நளனை அடைந்திருந்த. [2] தணந்து ஏகி—விட்டு நீங்கிப்போய். [3] கக்கினமையால். [4] வாய்விட்டு.

தணந்த வெந்திறல் கலியனைச் சபிக்குவன் என்னாக்
கணங்கொள் வண்டிமிர் தாரினன் உளத்திடைக் கருதல்
உணர்ந்த வெங்கலி, "தமயந்தி உரைத்த சாபத்தால்
அணங்கரா[1]வுமிழ் விடத்தினால் இன்றளவயர்ந்தேன்.

[1] வருத்துகின்ற பாம்பு.

"இழைத்த தீவினை தணந்தனன்; இன்றுமுதாட் டுன்போர்
வழுத்தினோ[1]ரையும் மருவலன்[2], மன்ன," என் றோத்த,
அழற் கொடுஞ்சினம் தணிந்தனன் ஆடல்[3]வேலரசன்.
குழைத்த தான்றியில் ஏறினன் கொடிய வெங்கலியே.

[1] துதித்தவர். [2] சேரேன். [3] வெற்றி.

அப்பால் தேர் குண்டினபுரம் அடைந்தது. தேர் வருகின்ற ஓசையைக் கேட்டுத் தமயந்தி "இங்ஙனம் தேர்விட வல்லவன் நளனே" என்றெண்ணினாள். வந்து கண்ட இருதுபன்னனை வீமன் "வந்த செய்தி என்னை?" என்று கேட்க, "உன்னைக் காண்பதே" என்று சொல்லி இருதுபன்னன் தனக்குக் காட்டிய விடுதியில் இருந்தான்.

தமயந்தி தன்தோழியை அழைத்து, "இப்போது வந்த தேரின் சாரதி நளனோ என்றறிந்துவா" என்று பணித்தாள். அவள் போய் உசாவிவந்து "உருவளவில் வேறு; மற்றெல்லாம் நளனே போல்கிறான்" என்றாள். அதன்மேல் தமயந்தி மக்களை அவனிடம் அனுப்பினாள்.

அடைந்த மக்களைக் காண்டலும் அழலிடுமெழுகின்
உடைந்த[1] துள்ளம்;நீர் ஊற்றிருந்[2] தொழுகின நெடுங்கண்.
தொடர்ந்த மும்மலம்[3] முருக்கி[4] வெம்பவக்கடல்[5] தொலையக்
கடந்துளோர்களும்[6] கடப்பரோ[7] மக்கள்மேற் காதல்.

[1] நெகிழ்ந்தது. [2] சுரந்து. [3] ஆணவம், மாயை, கன்மம். [4] கெடுத்து. [5] பவம் கடல்—பிறவிக்கடல். [6] முனிவரும். [7] ஒழிப்பரோ.

இச்செய்தியைத் தோழியால் அறிந்த தமயந்தி, அவன் தன் கணவனே யென்று துணிந்து, தாய் தந்தையரிடம் அதனை அறிவித்தாள். வீமன் கட்டளையால் தோழி போய் வாகுகனை அழைத்துவர, தமயந்தி "காட்டில் மனைவியை நள்ளிருளில் விட்டுப் பிரிபவர் நளனல்லாமல் வேறொருவர் உளரோ?" என்றாள். வாகுகன் 'கலியின் வசத்தனாயிருக்கையில் நளன் உன்னைவிட்டுப் பிரிந்தான். கலி அவனைவிட்டு நீங்கியபின் உன்னை நண்ணி வந்தான். நீ இரண்டாம் சுயம்வரம் விரும்பியது என்ன?" என்றான். "நளன் அயோத்தியில் இருப்பதை யறிந்து, அவன் விரைவில் வரும்பொருட்டே இந்த உபாயத்தை அநுஸரித்தேன். இதனை வேறாக ஐயுறுதல் வேண்டா. உன்னுடைய முன்னையுருவத்தைக் காட்டுக" என்று வேண்டினாள். நளன் மகாநாகம் கொடுத்த வஸ்திரங்களைத் தரித்துப் பழைய உருவமடைந்து விளங்கினான். இதையெல்லாங்கேட்டு வீமராசன் வந்துபார்த்தான்.

அன்னகாலையில் அகலிரு விசும்பிலோர் வாணி[1]
"மன்ன,கேட்டி, இம்மடவரல் தன்னை மூவாண்டும்
இன்னலின்றியாம் அளித்தனம். சுயம்வரமென்று
உன்னை இவ்வழிக் கூட்டுதற் கொண்டொடி இழைத்தாள்.

[1] ஓர் அசரீரிவாக்கு. வாணி என்பது அடுத்த பாட்டில் வரும் 'நிகழ்ந்ததை' என்னும் பயனிலைகொண்டு முடியும்.

"வடபுலத்தினில் நோக்குநர் மாசற விளங்கும்
கடவுள் மீ[1]னினும் தொழுதகு கற்பினுக் கரசாம்[2]
கொடிமருங்கு[3]லை ஐயுறு தரு"வெனக் கூர்வேல்
நிடதர்கோமகன் மகிழ்வுற நிகழ்ந்த[4]தை யன்றே.

[1] அருந்ததி. [2] "கற்பினர்க்கரசாம்" என்றும் பாடம். [3] கொடிபோன்ற இடையையுடைய தமயந்தி. [4] உண்டாயிற்று.

தமரவேலையின்[1] அந்தர துந்துபி தழங்க[2],
அமரர் யாவரும் பூமழை பொழிந்துநின் றார்த்தார்.
உமிழ்செழுங்கதிர் மணிமுடி வீமனும் உவந்தான்.
குமரனன்னவன்[3] கோல்வளைத் தோளி[4]யை அடைந்தான்.

[1] பேரொலியுள்ள சமுத்திரம்போல. [2] சப்திக்க. [3] முருகனையொத்த நளன். [4] தோளையுடையவள் (தமயந்தி.)

மண்களித்தது. மாதிரம்[1] களித்தன. மலர்மேல் [1] திசைகள்.
பெண்[2]களித்தனள். பேரறம் களித்தன. கண்டோர் [2] இலக்குமி.
கண்களித்தன. களித்தன கலைவலோர் நெஞ்சம்.
விண்களித்தன. களித்தது வீமன் மாநகரம்.

நளன் வெளிப்பட்ட செய்தியை அறிந்து, இருதுபன்னன், "உன்னை அறியாமல் இழைத்த தவறுகளை மன்னித்தருள்க" என்று அடிதொழுதான். நளனும் அவனைத் தழுவிக்கொண்டு முகமலர்ச்சியோடு இன்சொல் சொல்லி விடைகொடுத் தனுப்பினன்.

அப்பால் நளன் ஒரு மாதகாலம் குண்டினபுரத்தில் தங்கியிருந்து, மாமனோடு ஆலோசனைபண்ணி, ஒரு சேனையைக் கூட்டிக்கொண்டு நிடதநாட்டுக்குச் சென்றான். சென்று, நகரின் புறத்தில் தங்கி, "போர் செய்வதாயின் செய்க. அதற்கஞ்சினால் சூதாட வருக" என்று புட்கரனிடம் தூதனுப்பினன். புட்கரன் சூதாட இசைந்து ஆடித் தோல்வியுற்றான். புட்கரனை அவனுடைய நகரத்திற்கு அனுப்பிவிட்டு, நளன் கணிதர் குறித்த நல்ல முகூர்த்தத்தில் நகரில் புகுந்தான். அப்பால் குண்டினபுரத்தில் நின்றும் தமயந்தியையும் மக்களையும் அழைப்பித்து முன்போலவே

ஆழி[1]சூழ்புவி முழுவதும் ஆழியொன்[2]றுருட்டி [1] சமுத்திரம்.
வாழிநல்லறம் புரிந் தருமகம்[3]பல ஆற்றிச் [3] அரிய யாகம்.
சூழிமால்வரை[4] பிடருறு சுமை[5]யொழித்தாறப்[6]
பாழி[7]யம்புயத் துலகெலாம் பரித்[8]தினி திருந்தான்.

[2] ஏகசக்ரம். [4] முகபடாம் அணிந்த பெரிய மலையொத்த யானைகள் (திக்கஜங்கள்.) [5] பிடரிற்றங்கிய மிக்க பூமிபாரம். [6] இளைப்பாறும்படி. [7] வலிமை. [8] தாங்கி.

———

# பரஞ்சோதி முனிவர்.



பரஞ்சோதி முனிவர் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள வேதாரணியத்தில் பிறந்தவர்; சைவவேளாண் மரபினர்; அபிஷிக்தர் குலத்தவர். இவர் தந்தையார் பெயர் மீனாக்ஷிசுந்தரதேசிகர் என்ப. முனிவர் என்னும் பெயருடைமையால் இவர் துறவியாயிருந்தமை விளங்கும். இவருடைய சரித்திரத்தில் வேறொன்றும் விளங்கவில்லை. இவரது பாடல் சொற்சுவை பொருட்சுவை செறிந்தது. பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய சங்க நூல்களின் சொற்களையும் பொருள்களையும் தமது பாடலில் பலவிடங்களில் அமைத்துப் பாடுவதனால், இவர் அந்நூல்களில் நன்கு பயின்றவராதல்வேண்டும். இவர் பாடிய நூல்கள் வேதாரணியத் தலபுராணமும் திருவிளையாடற் புராணமு மாம். இவர் காலம் இற்றைக்கு ஏறக்குறைய இருநூற்றெழுபது வருடங்களுக்கு முன் என்ப.

திருவிளையாடற் புராணம் என்பது மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுளுடைய அருள்விளையாட்டுக்களைக் கூறுவது. இவ்வருள்விளையாட்டுக்களைத் தொகுத்தும் விரித்தும் கூறும் நூல்கள் பல. அவை தொகுத்துக் கூறுவது கடம்பவன புராணம்; விரித்துக்கூறுவன பரஞ்சோதி முனிவரியற்றிய இந்தத் திருவிளையாடற் புராணமும், பெரும்பற்றப் புலியூர் நம்பி செய்த திருவிளையாடலும், அநதாரியப்பர் செய்த சுந்தரபாண்டியமு மாம். இவற்றுள் சுந்தரபாண்டியம் தவிர மற்றவை அச்சிடப்பட்டுள்ளன.



# திருவிளையாடற் புராணம்



## தருமிக்குப் பொற்கிழி அளித்தது.

மன்னவர் மன்னன், வங்கிய சூடா மணிமாறன்,
தென்னவ ராகித் திகிரி உருட்டுந் தென்கூடல்
முன்னவர் அன்னம் கண்டறி யாத முடிக்கேறப்
பன்மலர் நல்கும் நந்தனம் வைக்கும் பணிபூண்டான். 1.

மாதவி, பாதிரி, தாதகி, கூவிளம், மந்தாரம்,
தாதவிழ் மல்லிகை, முல்லை, இலஞ்சி, தடங்கோங்கம்,
வீதவழ் கொன்றை, கரந்தை, செழுங்கர வீரம்,தண்
போதவிழ் நந்தி, செருந்தி, குருந்தம், புன்னாகம், 2.

முண்டகம், மென்கடி நீலம் முதற்பல, முப்போதும்
எண்டிசை யுங்கம ழும்படி, நந்தன மெங்கும்தேன்
உண்டிசை வண்டு படிந்து முரன்றிட உண்டாக்கி,
வண்டுமிர் சண்பக நந்தன மும்தனி வைத்தானால். 3.

பொய்த்திடு நுண்ணிடை மங்கல மங்கையர், பொன்பூண்டார்
ஒத்தெழு சண்பகம் மொய்த்த அரும்பர் உடைந்தெங்கும்
வைத்திடு நந்தன வாசம் விழுங்கி, மணங்கான்று,
பைத்து மலர்ந்தன கண்டு மகிழ்ந்து, பரித்தேரான், 4.

---

1. வங்கிய சூடாமணி—வங்கிஷ சூடாமணி, வமிச சூடாமணி. தென்னவர்—சோமசுந்தர பாண்டியன். முன்னவர்—சிவபெருமான்.

2. மாதவி—குருக்கத்தி. தாதகி—ஆத்தி. இலஞ்சி—மகிழ். கரவீரம்-அலரி. இப்பூமரங்களையும் பின்வருவனவற்றையும் கண்ணுற் கண்டறிய முயல்க.

3. முப்போது—காலை, மாலை, உச்சி. வமிசசூடாமணி மாறன் நந்தனவனம் வைத்ததன்றிச் சண்பக வனமுமொன்று தனியாக வைத்தான்.

4. அரும்பர்—அரும்பு. பைத்து—பாம்பின் படம்போல் விரிந்து. பரித்தேரான் எனறது பாண்டியனை.

செருக்கிய வண்டு விழாமலர் கொய்து தெரிந்தாய்ந்து,
நெருக்கிய இண்டை, நிரைத்தொடை, தொங்கல், நெடுந்தாமம்,
மருக்கிளர் கண்ணி, தொடுத்தணி வித்து, வணங்காரூர்
கருக்கிய கண்ணுத லார்திரு மேனி கவின்செய்தான். 5.

அன்ன வியன்பொழின் மாமது ரேச ரடித்தாழ்வோன்,
பொன்னவிர் சண்பக மாலை புனைந்த புதுக்கோலம்
தன்னை வியந்திவர் சண்பக சுந்தரர் தாமென்று
முன்னர் இறைஞ்சினன், நிம்பம் அணிந்த முடித்தென்னன். 6.

அன்னதொர் நாமம் பெற்றனர் இன்றும் அணிக்கூடல்
முன்னவர்; அந்தத் தாமம் அவர்க்கு முடிக்கேற்றும்
இன்னதொர் நீரால் சண்பக மாறன் என்றேபேர்
மன்னி விளங்கினன் வங்கிய சூடா மணிதானும். 7.

[இங்ஙனம் சண்பகமாறன் சண்பகசுந்தரர்க்குத் திருப்பணி செய்யும் நாளில் இளவேனிற் காலம் வந்தது.]

வேறு.

மனிதர்வெங் கோடை தீர்க்கும் வசந்தமென் காலும் வேறு
துனிதவிர் இளங்கால் வேண்டும், சோலையுஞ் சோலைவேண்டும்,
புனிதநீர்த் தடமும் வேறு புதுமலர் ஓடை வேண்டும்,
பனிதரு மதியும் வேறு பான்மதி வேண்டும் காலம். 8.

சோலை வருணனை.

அண்டவான் தருமேற் சீறிச் சிவந்தெழுந் தாங்குத்,தேமாத்
தண்டளிர் ஈன்று,வானந் தைவர நிவந்த;காசு
கொண்டிடை அழுத்திச் செய்த குழையணி மகளிர் போல
வண்டிறை கொள்ளப் பூத்து மலர்ந்தன செருந்தி யெல்லாம். 9.

---

5. இண்டை, தொடை, தொங்கல், தாமம் என்பன மாலைவகை. கண்ணி—தலையிற் சூடும்மாலை. தொங்கல்—பரியமாலை.

6. நிம்பம்—வேம்பு. முடித்தென்னன், மதுரேசர் அடித்தாழ்வோன், வியந்து, என்று, இறைஞ்சினன் என்று முடிக்க.

8. அவ்விளவேனில், வேண்டும், வேண்டும், வேண்டும், வேண்டுங் காலமாயிருந்தது என்க. வேண்டும் என்பன நான்கும் பெயரெச்சம்; காலமென்பதைக் கொண்டு முடியும். கோடை—வெப்பம்.

9. அண்டவான்தரு—கற்பகதரு. தைவர—தடவ. காசு—இரத்தினம்; இங்கு நீலரத்தினம். குழை—காதணி. இறைகொள்ளல்—தங்குதல்.

செங்கதிர் மேனி யான்போல் அவிழ்ந்தன செழும்ப லாசம்;
மங்குலூர் செல்வன் போல மலர்ந்தன காஞ்சி;திங்கட்
புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவம்;செங்கை
அங்கதிர் ஆழி யான்போல் அலர்ந்தன விரிந்த காயா. 10.

விழைதரு காத லார்தாம் மெலிவுற மெலிந்து,நெஞ்சம்
குழைவுறக் குழைந்து நிற்குங் கோதிலாக் கற்பி னார்போல்.
மழையறுங் கோடை தீப்ப, மரந்தலை வாட வாடித்,
தழைவுறத் தழைத்து நின்ற,தழீஇயபைங்கொடிக ளெல்லாம். 11.

சேட்டிகைத் தென்கால் தள்ளத், தெண்மதுச் சிதறத்,தும்பி
நீட்டிசை முரலச்,சாயா நின்றுபூங் கொம்பர் ஆடல்
நாட்டியப் புலவன் ஆட்ட, நகைமுகம் வெயர்வை சிந்தப்,
பாட்டிசைத் தாடா நின்ற பாவைமார் போன்ற வன்றே. 12.

மலர்ந்தசெவ் வந்திப் போதும் வகுளமும், உதிர்ந்து வாடி
உலர்ந்தும்,மொய்த் தளிதேன் நக்கக் கிடப்பன; உள்ளம் மிக்க
குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினும் தம்பால் இல்லென்
றலந்தவர்க் குயிரை மாறி யாயினும் கொடுப்ப ரன்றே? 13.

நாறிய தண்ணந் தேமா நறுந்தளிர் கோதிக் கூவி
ஊறிய காதல் பேட்டை உருக்குவ குயின்மென் சேவல்.
வீறிய செங்கோல் வேந்தன் வெளிப்படத், தேயங் காவல்
மாறிய வேந்தன் போல, ஒடுங்கிய மயில்க ளெல்லாம். 14.

---

10. பலாசம்—புனமுருக்கு. புனமுருக்குச் சூரியனைப்போலச் சிவந்த மலர்களையும், காஞ்சி இந்திரனைப்போல் கரிய மலர்களையும், வெண்கடம்பு சந்திரனைப்போல் வெள்ளிய மலர்களையும், காயா விஷ்ணுவைப்போல நீல மலர்களையும் பூத்தன என்க. மரவம் வெண்கடம்பாதலை "மரவம் பாதிரி" என்னுஞ் சிலப்பதிகாரத்து வேட்டுவ வரிச் செய்யுளுரையா லறிக.

11. தங்காதலர் வருந்த வருந்தி, மகிழ மகிழுங் கற்புடை மகளிர்போல, கொடிகள் தாம்படர்ந்த மரங்கள் வாட வாடித், தழைக்கத் தழைத்தன.

12. சேண்—தூரம். திசை—திசை. தென்கால்—தென்றற்காற்று. சாயாநின்று—அசைந்து. நாட்டியப் புலவன்—ஆடலாசிரியன். பாட்டிசைத்து—பாட்டுப்பாடி.

13. வகுளம்—மகிழ், உள்ளம்........நல்லோர்—உள்ள மிகுதியுடைய நற்குடிப் பிறந்தோர். மாறியாயினும்—விற்றாயினும்.

14. தண்ணந்தேமா—தெள்ளம்புனல், மெல்லம்புலம்பன் என்பன போல்வதொரு பண்புத்தொகை. ஊறிய காதல்பேடு—அன்பு மிக்கபேடு. மாறிய—ஒழிந்த. வேந்தன்—குறுநிலமன்னன்.

பொங்கரின் நுழைந்து,வாவி புகுந்து,பங் கயந்து மூவிப்,
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்.
கொங்கலர் மணங்கூட் டுண்டு, குளிர்ந்து,மெல் லென்று,தென்றல்
அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போல் இயங்கு மன்றே. 15.

தாமரை களாஞ்சி தாங்கத், தண்குயின் முழவ மேங்க,
மாமரு தமருங் கிள்ளை மங்கலம் இயம்பத்,தும்பி
காமரம் இசைப்ப,முள்வாய்க் கைதைவா ளெடுப்ப,வேனிற்
கோமகன் மகுடஞ் சூடி இருப்பதக் குளிர்பூஞ் சோலை. 16.

பொழில் நுகர்வு.

மாத்தாண் மதமான் மருந்தின் மடங்க லெனச்செல் வாரும்.
பூத்தார் ஒலிவாம் பரிமேற் புகர்மா வெனப்போ வாரும்,
பாத்தார் பரிதி யெனவாம் பரித்தேர் உகைத்தூர் வாரும்,
தேத்தார் உளர்வண் டலம்பச் சிலம்பின் நடக்கின் றாரும். 17.

நீலப் பிடிமேற் பிடிபோல் நெறிக்கொள் வாரும், தாள
மாலைச் சிவிகை மிசைவெண் மலரா ளெனச்செல் வாரும்,
ஆலைக் கரும்பன் துணைபோல் அணிந்தார்ப் பரிஊர் வாரும்,
கோலத் தடக்கை பற்றிக் கொழுநருடன்போ வாரும், 18.

சுருப்புக் கமழ்தேங் கண்ணித் தொடுபைங் கழலா டவரும்,
கருப்புச் சிலைமன் னவன்நாற் கருவிப் படையன் னவரும்,
விருப்புற் றெறிநீர் வைகை வெள்ளைத் தரளத் தெள்ளிப்
பொருப்பிற் குவிக்கும் புளினம் புறஞ்சூழ் சோலை புகுவார். 19.

---

15. பொங்கர்—இளமரச்கா. கடி—வாசனை. மயிலை—இருவாட்சி. கொங்கு—தேன். தேனையுடைய மலரின் நறுமணத்தைக் கொள்ளைகொண் டுண்டு. அறிவன்—புலவன். தென்றல், நுழைந்து, புகுந்து, தாவி, கூட்டுண்டு, குளிர்ந்து, மெல்லென்று இயங்கும் என்க.

16. களாஞ்சி—காளாஞ்சி. முழவ மேங்க—முழ வொலிக்க. மங்கலம் இயம்ப—மங்கலம் பாட. காமரம்—இசைப்பாட்டு. வாள் எடுப்ப—வாள் ஏந்த.

17. இது முதன் மூன்றுபாட்டு ஒருதொடர். மா தாள்—பெரியகால். மதமான்—யானை. பூ—பொலிவு. தார்—கிங்கிணிமாலை. வாம்பரி—வாவும்பரி; நன். சூத். 341, பார்க்க. புகர்மா—யானை. பாத்தார்—பாதார் (விகாரம்); பாது—ஒளி. தேத்தார்—தேந்தார்; தேனையுடையமாலை. அலம்ப—ஒலிக்க.

18. வெண்மலராள்—வெண்டாமரையாசனியாகிய சரசுவதி. கரும்பன்துணை—கருப்பம் வில்லையுடைய மன்மதன் மனைவி; இரதி.

19. சுருப்புக் கண்ணி—சுரும்பு மொய்த்த கண்ணி; சுரும்பு—வண்டு. நாற்கருவிப்படை—கருவியையுடைய சதுரங்கசேனை; கருவி—ஆயுதம்.

கூந்தற் பிடியும் பரியும் ஊர்வார், கொழுநர் தடந்தோள்
ஏந்தச், சயமா தென்னத் தழுவா இழிந்து, பொழில்வாய்ப்,
பூந்தொத் தலர்பொற் கொடிதா துகுமா றென்னப், புனைந்த
சாந்தக் கலவை உகப்போய், வனமங் கையர்போற் சார்ந்தார். 20.

கோடும் பிறைவா ணுதலார் குழலைக் கருவிக் காரென்
றாடுந் தோகை, அவர்கண் ணேக்கிக் கணையென் றஞ்சி,
ஓடும்; கொடியி னன்னார் உருமாந் தளிரென் றயில்வான்
நாடுங் குயில்,அன் னவர்பண் இசைகேட்,டொதுங்கி நாணும். 21.

நீடுந் தரங்கம் இரங்கு நிறைநீர் நிலையே யன்றிப்,
பாடுஞ் சுரும்புண் கழுநீர், பைந்தாட் குமுதம், பதுமம்,
கோடும் பூத்த என்னக், கொடியே ரிடையார் குழையும்
தோடுங் கிடந்த வதனத் தொகையாற் பொலிவ சோலை. 22.

பிடிக ளென்ன நடந்தா ருடன்போய்க், கொழுநர், பெருந்தண்
கொடிகண் மிடைந்த இல்லில், இயக்கர் போலக் குறுகிக்,
கடிகொள் பனிநீர் தெளித்து வேடை தணித்தும், கன்றும்
அடிகள் பிடித்தும், சேடி யவர்கைக் குதவி யாவார். 23.

முத்தேர் நகையார் வளைப்ப, முகைவிண் டலர்பூங் கொம்பர்ப்
புத்தேள் வண்டும் பெடையும் புலம்பிக், குழலிற் புகுந்து,
தெத்தே எனப்பாண் செய்து, தீந்தேன் அருந்தும்;துணையோ
டொத்தே ழிசைபா டிக்க ளுண்ணும் பாண ரொத்தே. 24.

---

20. பாளையின்மேலும் குதிரையின்மேலும் ஏறிவந்த பெண்கள் தங்கள் கொழுநர் கைகொடுக்க இறங்கி, மெய்யிலணிந்த கலவைச்சாந்து உதிரப், பொழிலில் போய்ப்புக்கார்.

21. கருவி-தொகுதி; கருவிக்கார்—மின்னு முழக்கு முதலாயவற்றது தொகுதியையுடைய கார்: "கருவிமாமழை" என வருவது காண்க. ஆடுகின்ற தோகை அஞ்சி ஓடும்; நாடுகின்ற குயில் நாணி ஒதுங்கும் என்க. அயில்வான்—உண்ணும்படி.

22. மரக்கொம்பர் கழுநீரையும், ஆம்பலையும், தாமரையையும் பூத்தாற்போலப் பெண்களுடைய குழையையும் தோட்டையு மணிந்த முகங்கள் விளங்கின.

23. வேடை—வெப்பம். சேடியவர்—தோழிகள். தோழிகள் செய்யும் பணியைக் கொழுநர் செய்தனர்.

24. புத்தேள்-புதுமை. புலம்பி—அவசமாகி. தெத்தே – என்பது ஆளத்தி. பாண்செய்து—பாட்டுப்பாடி. கள்ளுண்ணும் பாணர் ஒத்து, வண்டும் பெடையும் தீந்தேன் அருந்தும் என்க.

வேறு.

இம்பர்வீ டளிக்குந் தெய்வம் மகளிரே என்பார் கூற்றம்
வம்பல, மெய்யே போலும்; வளைக்கையார் வளைப்பத், தாழ்ந்து,
கம்பமுற், றடிப்பூச் சிந்தி, மலர்முகங் கண்ணீர் சோரக்,
கொம்பரும் பணிந்த தென்றால், உலகியல் கூறற் பாற்றோ? 25.

நீராட்டு.

அன்ன மன்னவர் ஆடுங் கயந்தலை,
நன்னர் நீலம் நளினம் குமுதமென்
றின்ன அன்றி, எழின்முல்லை சண்பகம்
பொன்னங் கோங்கமும் பூத்தது போன்றதே. 26.

வேறு.

பண்ணெ னுஞ்சொலார் குடைதொறும், பன்மலர் வீழ்ந்த,
தண்ணெ னுந்திரை அலைதொறும், நிரைநிரை தாக்கல்,
கண்ணும் நீலமும், முகங்களும் கமலமும், வாயும்
வண்ண ஆம்பலும், தத்தமின் மலைவன அனைய. 27.

கரும்பு போன்மொழி யாள்ஒரு காரிகை வதனம்
சுரும்பு சூழ்கம லங்களுட் கமலமாய்த் தோன்ற,
விரும்பு காதலன் ஐயுற்று மெலிந்தனன், மெல்ல
அரும்பு முல்லைகண் டையத்தின் நீங்கிச்சென் றணைந்தான். 28.

---

25. வம்புஅல—பொய்யன்று. கம்பமுற்று—நடுங்கி. அடிப் பூச்சிந்தி—பாதத்தில் மலரைச் சொரிந்து. கண்ணீர் சோர—கள்ளாகிய நீர்சோர. உலகியல்—உலகத்தார் இயற்கை; இங்கே ஆடவரியற்கை.

26. கயந்தலை—குளம். நளினம்—தாமரை. பெண்கள் ஆடும் குளம் நீர்ப்பூவையன்றிக் கொடிப்பூவையும் கோட்டுப்பூவையும் பூத்தது போன்றது. முல்லை கொடிப்பூ; சண்பகமுங் கோங்கும் கோட்டுப்பூ; இவை பெண்களுடைய முறுவலையும், மேனியையும், தனத்தையும் குறித்தன.

27. பெண்கள் நீராடும்போது வீழ்ந்த பலமலர்கள் அலையடிக்குந் தோறும் அவருடலில் தாக்குதல் கண்ணும் நீலோற்பலமும், முகமும் தாமரையும், வாயும் ஆம்பலும் ஒன்றோடொன்று பொருவது போலும்.

28. மெல்ல அரும்பு முல்லை கண்டு—மெல்ல (அக்காரிகை வதனத்தில்) தோன்றிய புன்னகையைக் கண்டு.

களித்த காதலன் மொக்குள்வாய்த் தன்னிழல் கண்டு
தெளித்து வாணகை செய்ய,மாற் றுளென்று சீறித்
தளிர்க்கை நீட்டினள், கண்டிலள், தடவினள், சலத்துள்
ஒளித்தி யோவென உதைத்தனள், பேதைமா தொருத்தி. 29.

நாறு சுண்ணமென் கலவையும் நானமும் தம்மில்
மாறி வீசிநின் றூடுவார் மாலைதாழ் அகலத்
தூறு பாடற அந்தரத் தளிகவர்ந் துண்ப;
ஆறு செல்பவர் பொருள்வெளவும் அரட்டரே போல. 30.

கொய்யும் நீலமும் கமலமும் கொண்டுகொண் டாங்கண்
எய்யும் வாளியின் எறிவரால்; எறிந்திடும் மலரைக்
கையி னூற்புடைத், தெறிந்தவர் கதிர்முகம் படக்கண்,
டைது வாணகை செய்,தக மகிழ்ச்சியுள் ஆழ்வார். 31.

வாச மென்பனி நீரொடு சுண்ணமும் வாரி
வீசு வார், இளம் பிடியொடு வேழமா நிரைபோல்,
காசு லாந்தொடி வில்லிடக் கைகளா லள்ளிப்
பூசு சாந்தவை அழிந்திடப் புனிதநீர் இறைப்பார். 32.

மாசில் நானமும் சூடிய மாலையும் மெய்யில்
பூசு சாந்தமும் ஆரமும் பொய்கைக்குக் கொடுத்து,
வாச மெய்யினில் அம்புய வாசமும் மயங்க
ஆசை மைந்தரோ டிளையவர் அகன்கரை யடைவார். 33.

பட்டும் பன்னிறக் கலிங்கமும் பன்மணிக் கலனும்
கொட்டுஞ் சாந்தமும் நானமும் குங்குமச் சேறும்
கட்டுந் தாமமும் தமதுகட் டழகெலாம் கவர,
மட்டுண் கோதையர் ஆடவர் மனமெலாம் கவர்ந்தார். 34.

---

29. மொக்குள்—நீர்க்குமிழி. தெளித்து—தெளிந்து; விகாரம்.

30. கலவை—கலவைநீர்; பசுங்கூட்டும் பனிநீரும் கலந்தது; ஙிர். இலக்.170-ம் செய்யுள் பார்க்க. நானம் - புழுகில் நனைத்திடித்த சுண்ணம். ஊறு பாடு அற—ஊறுபடுதல் இல்லையாக. அரட்டர்—குறும்பர்.

31. கைபினூற் புடைத்து—கையினால் தகைந்து தாக்கி. ஐது—மெல்லிதாக.

32. தொடி—கைவளை. வில்லிட—ஒளிவீச.

33. நானம்—புழுகு. இளையவர்—பெண்கள்.

### களியாட்டு.

பொன்னினும் வெள்ளி யாலும் பளிங்கினும் புலவன் செய்த
நன்னிறக் கலத்திற் கூர்வாள் நட்டென வாக்கிச்,சேடி
மின்னனார் அளித்த தேறற் சிறுதுளி விரலிற் றெள்ளித்,
துன்னிவீழ் களிவண் டோச்சித். தொண்டையங் கனிவாய்
[வைப்பார். 35.

வள்ளத்து வாள்போல் வாக்கும் மதுக்குடம், தன்பாற் பெய்த
கொள்ளைத்தெண் மதுவைக் கொள்ளை கொளவந்த வள்ள மீதென்
றுள்ளத்து வெகுண்டு,வைவா ளூன்றி,மார் பிடப்ப தொத்த.
கள்ளைச்சூழ் காளைவண்டு செருச்செயல் காண்பவொத்த. 36.

தணியலுண் டுள்ளஞ் சோரும் ஒருமகள், தணியல் உண்பான்,
பிணியவிழ் கோதை யாள்ஓர் பெண்மகள் கலத்தில் வாக்கும்
துணிமதுத் தாரை தன்னை, வாளெனத் துணிந்து,"பேதாய்
திணிகதிர் வாளால் வள்ளம் சிதைத்தியோ?" என்று நக்காள். 37.

மலர்தொறும் சிறுதேன் நக்கித் திரிவண்டு, மடவார் தம்கைத்
தலனெடுத் தோச்ச,ஓடா, தழீஇத்தடஞ் சாடி மொய்ப்ப;
இலமெனப் பல்லோர் மாட்டும் இரந்திரந் தின்மை நீங்கா
தலமரும் வறியோர்,வைத்த நிதிகண்டால், அகல்வ ரேயோ? 38.

உண்டவள் ஒருத்தி கள்வாய் உதிக்கும்தன் முகமும் கண்ணும்
கண்டு,தா மரைகள் வேலை முளைத்த;தக் கள்ளை ஆர
மொண்டுணும் பேதைத் தும்பி, அம்மது முளரி வார்தேன்
றுண்டுளி செறிவ தென்று நொடித்துக்,கை புடைத்து,நக்காள். 39.

---

35. கலம்-கிண்ணம். வாக்கி-வார்த்து. சேடிமின்னனார்-மின்னன்ன சேடியர்; மின்னலைப்போன்ற தோழிகள். தேறல்-கள்ளு. தெள்ளி-தெறித்து.

36. வள்ளத்து மதுவை வாக்கும் குடம் வாளூன்றி மார்பு இடப்பது ஒத்தது; கள்ளைச் சூழ் வண்டு செருச்செயல் காண்ப ஒத்த என்க.

37. தணியல்-கள். துணி-துண்டு.

38. கைத்தலன்-கை. தழீஇ-தழுவி. அலமரும்-சுழலும்.

39. உதிக்கும்-தோன்றும். கள்வேலை-கள்ளாகிய கடல். அம்மது முளரி-அந்தக் கள் வேலையில் முளைத்த தாமரை. நொடித்து-சொல்லி.

ஒருத்திகள் ளுண்கின் றாள்தன் னுருவம்அந் நறவுள் தோன்ற
"ஒருத்திஎன் னுடன்வந் துண்பாள் காண்"என, உண்ட தோழி
ஒருத்திவந்தென்செய்வாள்?தன்னுருவமும்நோக்கிப்"பேதாய்,
ஒருத்தியோ? இருவர்"என்றாள்; எச்சில்என்றுகுத்துநக்காள். 40.

சாடியுள் நறவம் உண்டாள் தனதுரு வேறு பாட்டை
ஆடியுள் நோக்கி"நானோ? அல்லனோ?எனைத்தான் கைக்கொண்
டோடினர் பிறரும் உண்டோ? உயிரன்னான் வந்திங் கென்னைத்
தேடின்,என் செய்கேன்? என்னைத் தேடித்தா, சேடி"என்றாள். 41.

### சண்பகமாறன் பொற்கிழி தூக்கியது.

இவ்விள வேனிற் காலத் தின்உயிர்த் துணைவி யோடும்
செவ்விய செங்கோல் நேமிச் செண்பக மாறன்,ஓர்நாள்,
கைவினை வல்லோன் செய்த கதிர்விடு காந்தக் குன்றில்,
வெவ்விய வேடை நீப்பான் இருந்தனன், வேறு வைகி. 42.

மாந்தளிர் ஈன்று,கோங்கு வண்தள் வரும்பித்,தண்தேம்
காந்தள்செங் கமலம் ஆம்பல் சண்பகம் கழுநீர் பூத்துச்,
சாய்ந்தமென் கொடியும் தானும் தனியிடத் திருப்பான்நேரே,
ஆய்ந்ததோர் நாற்றம் தோன்ற, அசைந்தது வசந்தத்தென்றல். 43.

வெவ்விய வேலான் வீசும் வாசம்மோந்து "ஈது வேறு
திவ்விய வாச மாக இருந்தது; தென்றல் காவில்
வவ்விய வாசம் அன்று; காலுக்கும் வாசம் இல்லை;
எவ்வியல் வாச மேயோ இது?"என எண்ணங் கொண்டான். 44.

திரும்பித்தன் தேவி தன்னை நோக்கினான்; தேவி ஐம்பால்
இரும்பித்தை வாச மாகி இருந்தது கண்டு"இவ் வாசம்
சுரும்பிற்குந் தெரியாது"என்னாச் சூழ்ந்திறும் பூது கொண்"டீ
தரும்பித்தைக் கியல்போ? செய்கை யோ?"என ஐயங் கொண்
[டான். 45.

---

40. உண்டதோழி—கள்ளுண்டதோழி.

42. நேமி – ஆஞ்ஞாசக்கரம். காந்தக்குன்று—சந்திரகாந்தக் கல்லாற்செய்த செய்குன்று. வேடை—வெப்பம். நீப்பான்—நீக்கும்பொருட்டு, தணிக்க.

43. மா தளிர் ஈன்று. தளவு – செம்முல்லை. சாய்ந்த – நுணுகிய, இளைத்த. இருப்பான் நேர்—இருப்பவன்முன். ஆய்ந்தது—சிறந்தது. மாந்தளிர், கோங்கு முதலிய எல்லாம் சண்பகமாறன் மனைவியின் உறுப்புக்களைக் குறிக்கின்றன.

45. ஐம்பால் இரும் பித்தை—ஐந்து பகுதியாக முடிக்கப்படுகின்ற கரிய கூந்தல். இறும்பூது—ஆச்சரியம்.

How strangely similar this story is to that narrated in a unique papyrus covered with mysterious characters written by the Egyptian scribe Annana, and now preserved in the British

"ஐயுறு கருத்தை யாவ ராயினும் அறிந்து பாடல்
செய்யுநர் அவர்க்கே இன்ன ஆயிரம் செம்பொன்" என்று,
கையுறை வேலான் ஈந்த பொற்கிழி கைக்கொண் டேகி,
மெய்யுணர் புலவர் முன்னாத் தூக்கினார் வினைசெய் மாக்கள். 46.

வங்கத்தார் பொருள்போல் வேறு வகையமைகேள்விநோக்கிச்,
சங்கத்தா ரெல்லாம் தம்மில் தனித்தனி தேர்ந்து தேர்ந்து,
துங்கத்தார் வேம்பன் உள்ளம் சூழ்பொருள் துழாவி, உற்ற
பங்கத்தா ராகி, எய்த்துப், படர்உறு மனத்தர் ஆனார். 47.

தருமி.

அந்த வேலையில், ஆதி சைவரில்
வந்த மாணவன், மணஞ்செய் வேட்கையான்,
முந்தை ஆச்சிமம் முயலும் பெற்றியான்,
தந்தை தாயிலான், தருமி என்றுளான். 48.

---

Museum! It is "the oldest written story in the world which has come down to us in writing." Mention is made therein of a beautiful woman, the wife of a ploughman; a lock of her hair was carried to Egypt and was laid down " on the spot where were the washers of the house of Pharaoh; and the fragrance of the lock of hair imparted itself to the garments of Pharaoh. . . But the chief of Pharaoh's washers seized the lock of hair; and there was found therein an extraordinary sweet odour. Then he brought it unto Pharaoh; and the experienced scribes o Pharaoh were summoned. And they spake unto Pharaoh:—'This is the lock of the daughter of the sun-god and all divinity is in her.'" Editor.

46. செய்யுநர் அவர்க்கே – செய்யுநர்க்கே; அவர் பகுதிப்பொருள் விகுதி. பொற்கிழி—பொன்முடிப்பு.

47. வங்கம்—மரக்கலம். தார்வேம்பன் என்பதை வேப்பந்தாரன் என்றும் உற்றபங்கத்தார் என்பதைப் பங்கமுற்றார் என்றும் மொழிமாற்றுக.

48. ஆதிசைவர்—சிவப்பிராமணர்; மாயாவாதத்தையன்றிச் சைவ சமயத்தை ஆதி தொட்டு அநுசரிக்கும் பிராமணர். ஆச்சிமம் ஆச்சிரமம் என்பதன் சிதைவு. முதல் ஆச்சிரமம்—பிரமசரியம்.

ஒருவன், நான்முகத் தொருவன் மார்புறை
திருவன் நாடரும் தேவன், நால்உரு
அருவம் நால்அகன் றானைத், தன்கலி
வெருவ நாடி, முன் வீழ்ந்து, வேண்டுவான்? 49.

"தந்தை தாய்இலேன், தனியன் ஆகிய
மைந்த னேன், புது வதுவை வேட்கையேன்;
சிந்தை நோய்செயும் செல்லல் தீர்ப்பதற்,
கெந்தை யே, இது பதம்"என் றேத்தியே. 50.

"நெடிய வேதநூல் நிறைய ஆகமம்
முடிய ஓதிய முறையில் நிற்கெனும்,
வடிவில் இல்லற வாழ்க்கை இன்றி, நின்
அடிஅ ருச்சனைக் கருகன் ஆவனோ? 51.

"ஐய, யாவையும் அறிதி யேகொலாம்;
வையை நாடவன் மனக்க ருத்துணர்ந்,
துய்ய, ஓர்கவி உரைத்தெ னக்கருள்
செய்ய வேண்டும்"என் றிரந்து செப்பினான். 52.

---

49. மார்புறை திருவன் — திருவுறை மார்பன், விட்டுணு. நால் உரு, அருவம் நாலு—மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்னும் உருவம் நான்கும், சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் அருவம் நான்கும்.

"சிவம்சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னொன்றி னொன்றாய்ப்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய்
நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர்"—சிவஞானசித்தி.

இப்பாட்டில் சதாசிவனென்றது அருவுருவம். கலி—வறுமை.

50. செல்லல்—வறுமைத்துன்பம். பதம்.—சமயம்.

51. நிற்செனும்—நிற்கு எனும், நிற்பேன் ஆயினும். வேதாகமங்கள் கூறிய நெறியில் நிற்பேனாயினும், கிருகஸ்தனாகாவிடில் உம்மை அருச்சனைசெய்வதற் காக மாட்டேனே என்பது பொருள்.

*. உய்ய—நான் வறுமைத் துன்பத்தினின்றும் நீங்க.

தென்ன வன்குல தெய்வம் ஆகிய
மன்னர், 'கொங்குதேர் வாழ்க்கை' இன்தமிழ்,
சொல்ந லம்பெறச் சொல்லி, நல்கினார்;
இன்னல் தீர்ந்தவன் இறைஞ்சி வாங்கினான். 53.

பொற்ற ளிர்ச்சடைப் புவன நாயகன்
சொற்ற பாடலைக் கொண்டு, தொல்நிதி
பெற்றெ டுத்தவன் போல்வு, பீடுறக்
கற்ற நாவலர் கழகம் நண்ணினான். 54.

கல்வி யாளர்தங் கையில் நீட்டினான்;
வல்லை யாவரும் வாங்கி வாசியாச்,
சொல்லின் செல்வமும் பொருளும் தூக்கியே,
"நல்ல நல்ல"என் றுவகை நண்ணினார். 55.

அளக்கில் கேள்வியார், அரசன் முன்புபோய்,
விளக்கி அக்கவி விளம்பி னார்கள்; தன்
உளக்க ருத்துநேர் ஒத்த லால், சிரம்
துளக்கி, மீனவன் மகிழ்ச்சி தூங்கினான். 56.

"உணர்ந்த கேள்வியார் இவரொ டொல்லைபோய்ப்
புணர்ந்த ஆயிரம் பொன்னும் இன்தமிழ்
கொணர்ந்த வேதியன் கொள்க இன்"றென
மணந்த தாரினான் மகிழ்ந்து நல்கினான். 57.

---

53. இறையனார் பாடிக்கொடுத்த கவி வருமாறு:—

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி,
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறிஎயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோநீ அறியும் பூவே?—குறுந்தொகை.

சொல் நலம்—சொற்சுவை.

54. பீடு உற—பெருமை மிக. கழகம்—சங்கம்.

55. சொல்லின் செல்வம்—சொன்னயம். பொருள்—பொருணயம்.

56. அளக்க இல் கேள்வியர்—அளத்தற்கரிய கல்வியையுடையவர் மகிழ்ச்சி தூங்கினான்—மகிழ்ச்சியிற் செறிந்தான்.

57. இன்தமிழ் கொணர்ந்த வேதியன் உணர்ந்த கேள்வியாரோடுபோய்ப் புணர்ந்த பொன் கொள்க என்றான் என்க. புணர்ந்த பொன்—முடிந்துவைத்த பொன்.

நக்கீரர்.

வேந்தன் ஏவலால், விபுதர் தம்மொடும்
போந்து மீண்,டவைப் புறம்பு தூங்கிய
ஆய்ந்த பொற்கிழி அறுக்கும் நம்பியை,
நேர்ந்து கீரன், "நில்" எனவி லக்கினான். 58.

குற்றம் இக்கவிக் கென்று கூறலும்,
கற்றி லான்,நெடுங் காலம் வெம்பசி
உற்று வன்கலத் துண்ணும் எல்லைகைப்
பற்ற வாடினான் பண்பு பற்றினான். 59.

உலர்ந்த நெஞ்சுகொண் டொதுங்கி, நாயகன்
நலந்த ரும்கழல் நண்ணி னான், அவன்
மலர்ந்த பாடல்கொண் டறிஞர் வைகிடத்
தலர்ந்த சிந்தைகொண் டடைந்த மைந்தனே. 60.

செய்யுள் கொண்டுபோய்த் திருமுன் வைத்துளப்
பையுள் கொண்டஅப் பனவன் "என்னை?நீ,
மையுண் கண்ட,இவ் வழுவு பாடலைக்
கையுள் நல்கினாய் கதியி லேற்" கென, 61.

வேறு.

"வறுமைநோய் பிணிப்பப் பன்னாள்
வழிபடும் அடியேன் நின்பால்
பெறுபொருள் இழந்தேன் என்று
பேசிலேன்; யார்க்கும் மேலாம்
கறைகெழு மிடற்றோய், நின்தன்
கவிக்குற்றம் சில்வாழ் நாள்சிற்
றறிவுடைப் புலவர் சொன்னால்,
ஆர்உனை மதிக்க வல்லார்? 62.

---

58. விபுதர்—பேரறிஞர்; வி—விசேடம்; புதர்—அறிஞர். மீண்டுபோந்து. கீரன் நேர்ந்து

59. கற்றிலான் (தருமி) வாடினான் பண்பு பற்றினான் என்க.

60. மைந்தன் உலர்ந்த நெஞ்சுகொண்டு ஒதுங்கி நாயகன் கழல் நண்ணினான் என்க. உலர்ந்த—வாடிய.

61. உளபையுள்—மனத்துன்பம். பனவன்—பிராமணன். மையுண் கண்டம்—கரியகண்டம் மையுண் கண்ட, கதியிலேற்கு நீ இவ்வழுவு பாடலை நல்கினாய்; (இது) என்னை? என்க.

62 கறை—நஞ்சு.

"எந்தை,இவ் விகழ்ச்சி நின்ன
தல்லதை எனக்கியா" தென்னாச்
சிந்தைநோய் உழந்து சைவச்
சிறுவன்நின் றிரங்க, யார்க்கும்
பந்தமும் வீடும் வேதப்
பனுவலும் பயனும் ஆன
சுந்தர விடங்கன் அங்கோர்
புலவனாய்த் தோற்றஞ் செய்தான். 63.

கண்டிகை, மதாணி, ஆழி,
கதிர்முடி, வயிரம் வேய்ந்த
குண்டலம் குடிகொண் டாகத்
தழகெலாம் கொள்ளை கொள்ளத்,
தண்டமிழ் மூன்றும் வல்லோன்
தான்எனக் குறியிட் டாங்கே
புண்டரம் நுதலில் பூத்துப்
பொய்யிருள் கிழித்துத் தள்ள, 64.

விரிகதிர்ப் படாத்தில் போர்த்த
மெய்ப்பையுள் அடங்கிப், பக்கத்(து)
எரிமணிக் கடகத் திண்டோள்
இளையவர் அடைப்பை யோடும்
தருமணிக் களாஞ்சி, அம்பொற்
கோடிகம் தாங்க, முத்தால்
புரிமதிக் குடைக்கீழ்ப், பொற்கால்
கவரி,பால் புரண்டு, துள்ள. 65.

63. அல்லதை—அல்லது; ஐ சாரியை. பந்தம்—கட்டு. வீடு—மோக்ஷம். சுந்தர விடங்கன்—சோமசுந்தரக்கடவுள். விடங்கன் – சுயம்புமூர்த்தி. விடங்கன் – உளியால் செய்யப்படாதவன். டங்கம்-உளி.

64. கண்டிகை—கழுத்திலணியும் ஒற்றைச்சோவை மாலை. மதாணி—பதக்கம். ஆகம்—உடல். புண்டரம் – நெற்றியிலிடுங்குறி; இங்கே திரிபுண்டரமாகத் தரித்த திருநீறு. தமிழ் மூன்று—இயல், இசை, நாடகம் என்பன.

65. படாம்—சீலை. மெய்ப்பை—சட்டை. கடகம்—கங்கணம். அடைப்பை—வெற்றிலைப்பை; அடை – இலை. களாஞ்சி – காளாஞ்சி. கோடிகம் – பூந்தட்டு. பால் – பக்கம்.

சொல்வரம் பிகந்த பாதம
என்பது தோன்ற வேதம்
நல்லபா துகையாய்ச் சூட,
நவின்றன கற்றுப் பாட
வல்லவர் மறையின் ஆறும்
மனுமுதல் கலைபோல் பின்பு
செல்ல,நூல் ஆய்ந்தோர் வைகும்
திருந்தவைக் களத்தைச் சேர்ந்தான். 66.

ஆர்அவை குறுகி நேர்நின்
றங்கிருந் தவரை நோக்கி,
"யாரைநம் கவிக்குக் குற்றம்
இயம்பினர்?" என்று முன்னம்,
கீரன்அஞ் சாது "நானே
கிளத்தினேன்" என்றான். நின்ற
சீரணி புலவன் "குற்றம்
யா"தெனத், தேராக் கீரன், 67.

"சொற்குற்றம் இன்று; வேறு
பொருட்குற்றம்" என்றான். தூய
பொற்குற்ற வேணி அண்ணல்
"பொருட்குற்றம் என்னை?" என்றான்.
தற்குற்றம் வருவ தோரான்
"புனைமலர்ச் சார்பால் அன்றி,
அற்குற்ற குழற்கு நாற்றம்
இல்லையே" என்றான். ஐயன், 68.

---

66. வரம்பு—எல்லை. பாதுகை—மிதியடி. மறையின் ஆறு—வேதாங்கம் ஆறு; அவை நிருத்தம், வியாகரணம், கற்பம், கணிதம், பிரமம், சந்தம் என்பன. மனுமுதல்கலை—மநுஸ்மிருதி முதலிய நூல்கள். ஆறங்கங்களும் மநுமுதல் கலைகளும் சுற்றச்சொல்லிகளாய்ப் பின்செல்ல என்க. வல்லவர்போல் என இயைக்க.

67. ஆர் அவை—நிறைந்த சபை. யாரை—ஐ அசை. தேரா—இலக்கணமறியாத.

68. பொற்கு உற்ற வேணி—பொன் போன்ற சடை. தன்குற்றம்—தனக்குக்குற்றம். மலர்ச்சார்பு—மலரின் சேர்க்கை. அற்கு உற்ற குழல்—இருள்போன்ற (கரிய) கூந்தல்.

"பங்கய முகம் மென் செங்கைப்
பதுமினி குழலோ?" என்ன,
"அங்கதும் அனைத்தே" என்றான்.
ஆலவா யுடையான் "தெய்வ
மங்கையர் குழலோ?" என்ன,
"அன்னது மந்தா ரத்தின்
கொங்கலர் அளைந்து நாறும்
கொள்கையால் செய்கைத்" தென்றான் 69.

"பரவிநீ வழிபட் டேத்தும்
பரஞ்சுடர், திருக்கா ளத்தி
அரவுநீர்ச் சடையார் பாகத்
தமர்ந்தஞா னப்பூங் கோதை
இரவினீர்ங் குழலும் அற்றோ?"
என, "அஃதும் அற்றே" என்று,
வெருவிலான் சலமே முற்றச்
சாதித்தான் விளைவு நோக்கான். 70.

கற்றைவார் சடையான் நெற்றிக்
கண்ணினைச் சிறிதே காட்டப்,
பற்றுவான் இன்னும் அஞ்சான்
"உம்பரார் பதிபோல் ஆகம்
முற்றும்நீர் கண்ணா னாலும்,
மொழிந்தநும் பாடல் குற்றம்
குற்றமே" என்றான், தன்பால்
ஆகிய குற்றம் தேரான். 71.

---

69. பதுமினி—நால்வகைப் பெண்களுள் முதற்பெண். மந்தாரம்—தெய்வ லோகத்திலுள்ள பஞ்சதருக்களில் ஒன்று. கொங்கு—வாசனை.

70. அரவு நீர்ச் சடை—பாம்பையும் கங்கையையு மணிந்த சடை. இரவின் ஈர்ங்குழல்—இரவுபோலக் (கரிய) தண்ணிய கூந்தல். சலம்—வைரம்.

71. பற்றுவான்—நெற்றிக் கண்ணின் தீயால் பற்றப்படுபவன், உம்பர்பதி—இந்திரன்.

வேறு.

தேய்ந்த நாண்மதிக் கண்ணியான் நுதல்விழிச் செந்தீப்
பாய்ந்த வெம்மையிற் பொறுது,பொற் பங்கயத் தடத்துள்
ஆய்ந்த நாவலன் போய்விழுந் தாழ்ந்தனன்; அவனைக்
காய்ந்த நாவலன் இம்மெனத் தன்னுருக் கரந்தான். 72.

கீரனைக் கரையேற்றியது.

மார னைப்பொடி கண்டவன் அந்தண மைந்தனுக்
கார நற்கன கக்கிழி ஈந்த தறைந்தனம்;
வார்அ னத்திரள் சூழ்மலர் ஓடை இடத்தினும்
கீர னைக்கரை ஏற்றிய ஆறு கிளத்துவாம். 73.

தாழ்ந்த வேணியன் நெற்றி முளைத்த தழற்கணால்
போழ்ந்த நாவலன், ஆடக பங்கயப் பொய்கைவாய்
வீழ்ந் தரும்படர் வேலையில் வீழ்ந்தனன் விம்முறச்,
சூழ்ந்த நாவலர் கண்டு பொறுது துளங்குவார். 74.

ஏன்ற வேந்தன் இலாக்குடி ஈட்டமும், இன்கதிர்
கான்ற நாயக மாமணி போகிய கண்டியும்,
ஆன்ற ஞானம் இலாதவர் கல்வியும் ஆனதே,
சான்ற கீரன் இலாதவை கூடிய சங்கமே. 75.

"ஐய!சொற்பொருள் தன்வடி வானவர், ஆலவாய்
மைதழைத்த மிடற்றினர் தம்மொடும் வாதுதான்
செய்த இப்பிழை யோபெரி! தெப்படித் தீருமோ?
உய்வ தற்புத மே!"என யாவரும் உன்னினர். 76.

---

72. தேய்ந்த நாண்மதி—இளம்பிறை. பாய்ந்த வெம்மை—பாய்ந்ததனால் உண்டாகிய வெப்பம். பொற் பங்கயத் தடம்—பொற்றாமரை வாவி. இம்மென—அநுகரணவோசை; விரைவு குறித்தது.

73. ஆர—ஆசையடங்க, திருப்தியாக. அனத்திரள்—அன்னக்கூட்டம். மலரோடை இடத்தினும்—ஓடையினின்றும்; ஐந்தாம் வேற்றுமை. பின்னரும் "இயங்கு மாதவத் தேரினும்" (114) என்பர்.

74. ஆடக பங்கயப் பொய்கை—பொற்றாமரை வாவி. படர் வேலை—துன்பக் கடல். வீழ்ந்தனன்—வினையெச்சமுற்று.

75. ஏன்ற—பொருந்திய, தகுந்த. கண்டி—கண்டிகை. ஆன்ற—அகன்ற, விரிந்த. சான்ற—(கல்விகேள்விகளான்) அமைந்த.

76. ஐய—ஐ என்னும் வியப்புணர்த்தும் உரிச்சொல் ஐய என ஈறு திரிந்தது.

"எய்தி வெள்ளி மலைபெயர்த் தானும் இறுத்ததன்
கையில் வீணைதொட் டின்னிசை பாடக், கனிந்,தவன்
செய்த தீங்கு பொறுத்ததும் அன்றித்,திண் தேரொடும்
மொய்கொள் வாளும் கொடுத்தனன்,புண்ணியமூர்த்தியே. 77.

"யாவ ராலும் அகற்றரி திப்பிழை. யாவர்க்கும்
தேவ ராம்அவ ரேதிரு வுள்ளம் திரும்பினால்
போவ தே.இது வேதுணி" யென்று புகன்றுபோய்ப்
பாவ லோர்பரன் தாள்நிழ லில்பணிந் தேத்துவார். 78.

"திருத்த னேசர ணம்சர ணம்;மறைச் சென்னிமேல்
நிருத்த னேசர ணம்சர ணம்;நிறை வேதநூல்
அருத்த னேசர ணம்சர ணம்;திரு ஆலவாய்
ஒருத்த னேசர ணம்சர ணங்கள் உனக்குநாம். 79.

"பாயும் மால்விடை மேல்வரு வோய்,பல் உயிர்க்கெலாம்
தாயும் தந்தையும் ஆகும்,நின் தண்ணளி, தாமரைக்
கேயும் ஆதவன் போல்,நல்ல தீய இயற்றினோர்க்
காயும் இன்பமும் துன்பமும் ஆக்குவ தாதலால். 80.

"அத்த,கற்ற செருக்கின் அறிவழி கீரன்,நின்
வித்த கக்கவி யைப்பழு தென்ற விதண்டையால்
மத்த கக்கண் விழித்து, வெதுப்பின், மலர்ந்தபொன்
முத்த கக்கம லத்திடை வீழ, முருக்கினாய். 81.

---

77. வெள்ளிமலை பெயர்த்தவன்–இராவணன்.

78. பாவலோர்–சங்கப்புலவர்.

79. திருத்தன் – தீர்த்தன், சுத்தமானவன். நிருத்தன – நடனஞ்செய்பவன். வேதநூல் அருத்தன்–வேதநூற் பொருளா யுள்ளவன். ஒருத்தன்–ஒப்பற்றவன். சரணம்–அடைக்கலம்.

80. நின் தண்ணளி, இன்பமும் துன்பமும் ஆக்குவது; ஆதலால், உயிர்க்கெலாம் தாயும் தந்தையும் ஆகும் என்க.

81. வித்தகம் – சாதுரியம். விதண்டை – தன்பக்கத்தை நிலைபெறுத்தாத கதை. மத்தகக் கண் – நெற்றிக்கண். பொன் முத்தகக் கமலம் – பொற்றாமரை. முத்தகக் கமலம்–முத்துக்களை அகத்தே உள்ள தாமரை.

"இருள்நி றைந்த மிடற்றடி கேள்,இனி இப்பிழை
கருணை செய்து பொறுத்தருள்" என்று கபிலனும்
பரண னும்முத லாகிய பாவலர் யாவரும்
"சரணம்" என்று விழுந்திரந் தார்அடி சாரவே. 82.

வேறு.

அக்கீர வேலை ஆலம்
அயின்றவெங் கருணை வள்ளல்,
இக்கீர மழலைத் தீஞ்சொல்
இறைவியோ டெழுந்து போந்து,
நக்கீரன் கிடந்த செம்பொன்
நளினப்பூந் தடத்து ஞாங்கர்ப்
புக்,கீர மதுரத் தீஞ்சொல்
புலவர்தம் குழாத்துள் நின்றான். 83.

அனற்கணால் நோக்கி னான்பின்
அருட்கணால் நோக்க, ஆழ்ந்த
புனற்கணே கிடந்த கீரன்,
பொறிபுலன் கரணம் எல்லாம்
கனற்கணார் தமவே ஆகக்,
கருணைமா கடலில் ஆழ்ந்து
வினைக்கணே எடுத்த யாக்கை
வேறில்அன் புருவம் ஆனான். 84.

போதையார், உலகம் ஈன்ற
புனிதையார், பரஞா னப்பூங்
கோதையார் குழற்குத் தீங்கு
கூறிய கொடிய நாவின்

---

82. அடிகேள் என்பது விளி: அடிகள் என்பதன் ஈற்றயலகரம் ஏகாரமாயிற்று. நன். சூத். ௩௦அ. அடிசார விழுந்திரந்தார் என இயைக்க.

83. கீரவேலை—பாற்கடல். இக்கு ஈர் அம் மழலை—கரும்பை வென்ற அழகிய மழலை. செம்பொன் நளினப் பூந்தடம்—பொற்றாமரை வாவி. ஞாங்கர்—பக்கம். புக்கு ஈரமதுரத் தீஞ்சொல். ஈர மதுரம்—குளிர்ந்த இனிமை.

84. பொறி புலன் சரணம் எல்லாம் சிவனுடையனவாக; தற்போதம் கெட்டுச் சிவபோதம் மேலிட்டு, வினையால் வந்த உடல் வேறின்றி அன்பே உருவமாயினன்.

85. போதையார்—முற்றுமுணர்ந்தவர். ஞானப்பூங்கோதை — திருக்காளத்தியின்ன தேவியார் பெயர். காதை—ஐ அசை.

தீதையார் பொறுப்பார் ஏயோ
அவர் அன்றித்? திருக்கா ளத்திக்
காதைஆர் குழையி னாரைக்
காளத்தி கயிலை என்னு. 85.

எடுத்தசொல் மாறி மாறி
இசையநே ரிசைவெண் பாவால்
தொடுத்தஅந் தாதி சாத்தத்.
துணைச்செவி மடுத்து நேர்வந்
தடுத்,தவன் கையைப் பற்றி
அகன்கரை ஏற்றி னார்,தாள்
கொடுத்தெழு பிறவி வேலைக்
கொடுங்கரை ஏற்ற வல்லார். 86.

கைதந்து கரைஏ றிட்ட
கருணையங் கடலைத் தாழ்ந்து,
மைதந்த கயற்க ணாளை
வந்தித்துத், தீங்கு நன்கு
செய்தந்தோர்க் கிகலும் அன்பும்
செய்தமை பொருளாச், செய்யுள்
பெய்தந்து பாடு கின்றான்
பிரான்அருள் நாடு கின்றான். 87.

"அறன்இலான் இழைத்த வேள்வி
அழித்தபே ராண்மை போற்றி.
மறன்இலாச் சண்டிக் கீந்த
மாண்பெருங் கருணை போற்றி.

---

86. ஒருபாட்டில் கைலை என்றும் அடுத்தபாட்டில் காளத்தி என்றும் மாறி மாறிவர ஓரந்தாதிபாட; இவ்வந்தாதி கைலைபாதி காளத்திபாதி அந்தாதி எனப்படும். இதனைப் பதினொன்றாந் திருமுறையிற் காண்க.

87. தீமை செய்தவர்களுக்கு இகலும் நன்மை செய்தவர்களுக்கு அன்பும் காட்டியதை அமைத்துச், சிவபிரானுடைய அருளை நாடும் நக்கீரன் பாட்டுப் பாடினான் என்க இதனைப் பின்வரும் திருக்கவிகளிற் காண்க. இகல்-பகை.

88 அறன் இலான் என்றது தக்கனை. சிறுவனென்றது மார்க்கண்டனை. தக்கன் யாகமழித்ததையும் கூற்றையுதைத்து மார்க்கண்டற்கருளியதையும் கந்த புராணத்திற் காண்க. சண்டேசுரருக் கருளியதைப் பெரிய புராணத்திற் காண்க. இது முதல் ஆறுபாட்டில் ஓரடியில் தீமைசெய்தவருக் கிகல்காட்டியதும் மற்றையடியில் நன்மைசெய்தவருக் கன்புகாட்டியதும் மாறிமாறிவரக் கூறுதல் காண்க.

கறுவிவீழ் கூற்றைக் காய்ந்த
கழலகழற் கமலம் போற்றி.
சிறுவனுக் கழியா வாழ்நாள்
அளித்தருள் செய்தி போற்றி. 88.

"சலந்தரன் உடலம் கீண்ட
சக்கரப் படையாய் போற்றி.
வலம்தரும் மதலை மாயோன்
வழிபடக் கொடுத்தாய் போற்றி.
அலர்ந்தசெங் கமலப் புத்தேள்
நடுச்சிரம் அரிந்தாய் போற்றி.
சிலந்தியை மகுடம் சூட்டி
அரசருள் செல்வம் போற்றி. 89.

"திரிபுரம் பொரிய நக்க
சேவகம் போற்றி. மூவர்க்
கருளிய தலைமை போற்றி.
அநங்கனை ஆகம் தீய
எரியிடு நயனம் போற்றி.
இரதிவந் திரப்ப மீளக்
கரியவன் மகனுக் காவி
உதவிய கருணை போற்றி. 90.

"நகைத்திட வந்த அந்த
நகுசிரம் திருகி வாங்கிச்
சிகைத்திரு முடிமேல் வைத்த
திண்திறல் போற்றி. கோயில்

---

89. சலந்தரனுடலங் கீண்டதையும் அயனது நடுச்சிரம் அரிந்ததையும் கந்தபுராணம் ததீசியுத்தரபடலத்திற் காண்க. சிலந்தியை மகுடஞ்சூட்டியதைப் பெரியபுராணம் கோச்செங்கட் சோழநாயனார் புராணத்திற் காண்க.

90. திரிபுரத்தை எரித்ததையும் அங்கிருந்த மூன்றசுரர்க் கருளியதையும் சிவபுராணத்திற் காண்க. மன்மதனை எரித்ததையும் இரதி இரப்ப அவனுக்காவி உதவினதையும் கந்தபுராணத்திற் காண்க.

91. நகுசிரத்தை முடியிற் சூடினதைக் கந்தபுராணம் ததீசியுத்தரப் படலத்திற் காண்க. எலிக்கரசு கொடுத்ததை—"வெண்ணெயுண்ண வெண்ணுபுவந்து, நந்தாவிளக்கை நந்தபுபெயர்த்த, தாவுபுல்லெலிக்கு மூவுலகாள, கொய்தினிலளித்த கைவளம் போற்றி" என்னும் பட்டணத்துப் பிள்ளையார் திருவாக்காலுணர்க.

அகத்தவி சுடரைத் தூண்டும்
எலிக்கர சாள மூன்று
சகத்தையும் அளித்த தேவர்
தம்பிரான் சரணம் போற்றி. 91.

"பொருப்பகழ்ந் தெடுத்தோன் சென்னி
புயம்இற மிதித்தாய் போற்றி.
இருக்கிசைத் தவனை பாட,
இரங்கிவாள் கொடுத்தாய் போற்றி.
கருக்கொடும் இருவர் தேடத்
தழற்பிழம் பானாய் போற்றி.
செருக்குவிட் டவரே பூசை
செய்யநேர் நின்றாய் போற்றி. 92.

"சாலநான் இழைத்த தீங்குக்
கென்னையும் தண்டம் செய்த
கோலமே போற்றி. அஞ்சிக்
கொடியனேன் தொடுத்த புன்சொல்
மாலைகேட் டென்னை ஆண்ட
மலைமகள் மணாள போற்றி.
ஆலவாய் அடிகள் போற்றி.
அம்மைநின் அடிகள் போற்றி. 93.

வேறு.

"ஆ!அ லந்தனேன் அடியனேற் கருள்அருள்" என்னாக்
கோவ மும்பிர சாதமும் குறித்துரை பனுவல்
பாஅ லங்கலால் பரனையும் பங்கில்அம் கயற்கண்
பூவை தன்னையும் முறைமுறை போற்றிஎன் றேத்தா, 94.

---

92. இராவணன் கைலைமலையை எடுத்ததையும் பாடி வாள் பெற்றதையும் இராமாயணம் உத்தரகாண்டத்திற் காண்க. இருவர் தேடினதையும் பூசைசெய்ததையும் கந்தபுராணம் அடிமுடிதேடு படலத்திற் காண்க.

94, 95. அலந்தனேன் — வருந்தினேன். நக்கீரர் பாடிய கோபப்பிரசாதம், பெருந்தேவபாணி, எழுகூற்றிருக்கை என்னும் பிரபந்தங்களைப் பதினொன்றாந் திருமுறையிற் காண்க. கோபப்பிரசாதத்தில் தீமைசெய்தவரைக் கோபித்ததும் நன்மை

தேவ தேவனைப் பின்பெருந் தேவபா ணியொடும்
தாவில் எழிசை எழுகூற் றிருக்கையும் சாத்திப்
பூவர் சேவடி சென்னிமேல் பூப்ப வீழ்ந் தெழுந்தான்;
பாவ லோர்களும் தனித்தனி துதித்தனர் பணிந்தார். 95.

துதித்த கீரனுக் கின்அருள் சுரந்து "நீ முன்போல்
மதித்த நாவலர் குழாத்திடை வதி" என மறைநூல்
உதித்த நாவினுர் கருணைசெய் தருக்கரந் தயன்சேய்
விதித்த கோயில்புக் கமர்ந்தனர் விளங்கிழை யோடும். 96.

கற்ற கீரனும் கலைஞரும் கழகமண் டபத்தில்
உற்ற ஆடகக் கிழிஅறுத் தந்தணற் குதவிக்,
கொற்ற வேந்தனும் வரிசைகள் சிலசெயக் கொடுப்பித்,
தற்றம் நீங்கிய கல்வியின் செல்வராய் அமர்ந்தார். 97.

வேறு.

சம்பக மாறன் என்னும் தமிழ்நர்தம்பெருமான் கூடல்
அம்பக நுதலி னுனை அம்கயற் கண்ணி னுளை
வம்பகம் நிறைந்த செந்தா மரைஅடி வந்து தாழ்ந்து
நம்பகம் நிறைந்தஅன்பாற் பல்பணி நடாத்தி வைகும். 98.

---

செய்தவருக் கருளினதும் மாறிமாறிக் கூறப்படும். பூவரு சேவடி பூவர் சேவடி என விகாரமாயிற்று; வரு உவமச்சொல். கோபப்பிரசாதம்—கோபமும் பிரசாதமும்; மேலே (87) இகலும் அன்பும் என்றாற் போல. இது சிவபெருமான் தீமைசெய்தாரைத் தண்டித்ததையும் நன்மைசெய்தாருக் கருள்புரிந்ததையும் கூறுவது. பிரசாதம்—அநுக்கிரகம், அருள். தேவபாணி—தேவரை வாழ்த்தும் பாட்டு; பாணி—பாட்டு. எழுகூற்றிருக்கை — ஒரு சித்திரகவி; எழுவரி மூன்றறைமுதல் ஒன்றற் கொன்று இரண்டறை மேற்பட முறையாகக் கீறி, முறையே மக்கள் போக்கும் போந்து மீள்வுமாகும் பெற்றியின் வழுவாமல் ஒன்று முதலாகப் பாடுவது.

96. அயன் சேய்—பிரமனது புத்திரனாகிய விசுவகன்மன்.

97 ஆடகம்—பொன். அற்றம்—குற்றம்.

98. அம்பக நுதலினுன்—நெற்றிக்கண்ணையுடையவன். அம்பகம்—கண். வம்பு—வாசனை. நம்பகம்—நம்பிக்கை. நம்பு அகம் என்று பிரித்துப் பொருள் கொள்ளனு மொன்று; நம்புதல்—விரும்புதல்; அகம்—மனம்.

கொன்றையந் தெரியல் வேய்ந்த
 கூடல்எம் பெருமான், செம்பொன்
மன்றலங் கமலத் தாழ்ந்து
 வழிபடும் நாவ லோனை.
அன்றவன் கரையே றிட்ட
 அருள்உரை செய்தேம். இப்பால்
தென்றமிழ் அனையான் தேறத்
 தெருட்டிய திறனும் சொல்வாம். 99.

முன்புநான் மாடக் கூடல்
 முழுமுதல் ஆணை யால்போய்.
இன்புற அறிஞர் ஈட்டத்
 தெய்தி,ஆங் குறையும் கீரன்.
வன்புறு கோட்டம் தீர்ந்து,
 மதுரைஎம் பெருமான் தாளில்
அன்புறும் மனத்தன் ஆகி,
 ஆய்ந்துமற் றிதனைச் செய்வான். 100.

"கட்டவிழ் கடுக்கை அண்ணல்
 கண்ணினால் அவிந்த காமன்
மட்டவிழ் மலரோ னாலும்
 மாயவ னாலும் காக்கப்
பட்டவன் அல்லன்; அன்னான்
 நுதல்விழிப் படுதீ நம்மைச்
சுட்டபோ துருப்பம் தீர்த்துக்
 காத்ததிச் சுவண கஞ்சம். 101.

99. செம்பொன் கமலம்—பொற்றாமரை வாவி. தமிழ்—தமிழிலக்கணம்.

100. ஈட்டம்—கூட்டம். கோட்டம்—வளைவு, மனக்கோட்டம்.

101. காமன்—மன்மதன். உருப்பம்—வெப்பம். சுவணகஞ்சம்—பொற்றாமரை வாவி.

"இப்பெருந் தடமே எம்மை
எம்மையும் காப்ப" தென்னாக்,
கப்பிலா மனத்தான், மூன்று
காலமும் மூழ்கி மூழ்கி,
அப்பனை, ஆல வாய்எம்
அடிகளை, அடியார் சேம
வைப்பினை இறைஞ்சி, நித்தம்
வழிபடு நியமம் பூண்டான். 102.

மையறு மனத்தான் வந்து
வழிபடு நியமம் நோக்கிப்,
பையரா வாரம் பூண்ட
பாஞ்சுடர் மாடக் கூடல்
ஐயனும் அணியன் ஆகி,
அகமகிழ்ந், தவனுக் கொன்று
செய்ய நன்கருணை பூத்துத்,
திருவுளத் திதனைத் தேர்வான்:— 103.

"இலக்கணம் இவனுக் கின்னும்
தெளிகில; இதனால் ஆய்ந்த
நலத்தசொல் வழூஉச்சொல் என்ப
தறிகிலன். நவைதீர் கேள்விப்
புலத்தவர் யாரைக் கொண்டு
போதித்தும் இவனுக்?" கென்னா
மலைத்தனு வளைத்த முக்கண்
மன்னவன் உன்னும் எல்லை. 104.

---

102. எம்மையும் – எப்பிறப்பிலும். கப்பு—கவர், பிளப்பு. சப்பிலாமனத்தான்—சவர்த்த மன மில்லாதவன். சேம வைப்பு—சேமநிதி ரவியம். நியமம்—கடமை.

103. அணியன் ஆகி—கிட்டினவனாகி. தேர்வான்—ஆராய்வான்.

104. ஆய்ந்த நலத்தசொல்—இலக்கணச்சொல். வழூஉச்சொல்—இலக்கணத் தோடு பொருந்தாத சொல். மலைத் தனு—மேருமலையாகிய வில்.

பங்கயச் செங்கை கூப்பிப்
பாலின்நேர் மொழியாள் சொல்வாள்:-
"அங்கண, அங்கை நெல்லிக்
கனிஎன அனைத்தும் கண்ட
புங்கவ, நினது சங்கைக்
குத்தரம் புகல வல்லார்
எங்குளார்? ஏனும், என்னெஞ்
சுதிப்பதொன் றிசைப்பேன். ஐயா 105.

"பண்டொரு போது, வெள்ளிப்
பனிவரை யிடத்துன் பாங்கர்ப்,
புண்தவழ் குலிசக் கோமான்,
பூமகன், மாயப் புத்தேள்,
அண்டரும், சநகன் ஆதி
அருந்தவர் பிறரும் ஈண்டிக்
கொண்டனர் இருந்தார்; இந்தக்
குவலயம் பொருது மாதோ, 106.

"தாழ்ந்தது வடகீழ் எல்லை;
உயர்ந்தது தென்மேற் கெல்லை;
சூழ்ந்தது கண்டு வானோர்
தொழுதுனைப் பரவி 'ஐய,
ஊழ்ந்திடும் அரவம் பூண்டோய்,
ஒருவன்நின் ஒப்பான் அங்கே
வாழ்ந்திட விடுத்தால், இந்த
வையம்நேர் நிற்கும்' என்றார். 107.

---

105. அங்கணன்–அழகிய கண்ணோட்டமுடையன். அங்கை நெல்லிக்கனி–கரதலாமலகம். புங்கவன்–தேவன். சங்கை–ஆசங்கை.

106. பூமகன்–மலரோன், பிரமன். மாயப்புத்தேள்–திருமால்.

107. வானோர் அது கண்டு சூழ்ந்து என்க. ஊழ்ந்திடும்–(தோலைச்) சுழற்றும். "பெரும்பாம் பூழ்ந்து தோலுரிப்பன" சிந். கனக. ச.

"'பைத்தலை புரட்டும் முந்நீர்ப்
பௌவம்உண் டவனே எம்மை
ஒத்தவன்; அனையான் வாழ்க்கைக்
குரியளாகிய உலோபா
முத்திரை இமவான் பெற்ற
முகிழ்மலர்க் கொடிஒப் பாள்' என்
றத்திரு முனியை நோக்கி,
ஆயிடை விடுத்தாய் அன்றே. 108.

"விடைகொடு போவான் ஒன்றை
வேண்டினன்:— 'ஏதும் தேயம்
தொடைபெறு தமிழ்நா டென்று
சொல்லுப. அந்த நாட்டி
னிடையயில் மனிதர் எல்லாம்
இன்தமிழ் ஆய்ந்து கேள்வி
உடையவர் என்ப. கேட்டார்க்
குத்தரம் உரைத்தல் வேண்டும். 109.

"'சித்தமா சகல அந்தச்
செந்தமிழ் இயல்நூல் தன்னை
அத்தனே அருளிச் செய்தி'
என்றனன்; அனையான் தேற
வைத்தனை முதல்நூல் தன்னை;
மற்றது தெளிந்த பின்னும்
'நித்தனே, அடியேன் என்று
நின்அடி காண்பேன்?' என்றான். 110.

---

108. பைத்து — பொங்கி. 'பைத்தரவத்திரை' என்பர் சிந்தாமணியிலும் கனக. ௨௧௦. முந்நீர்ப் பௌவ முண்டவன் — அகத்தியன். நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுடைமையின் கடல் முந்நீர் எனப் பட்ட தென்ப.

109. தொடைபெறு — தொடை அமைந்த. தொடை — மோனை, எதுகை, முரண், இயைபு, என்பன. கேள்வி உடையவர்—கேள்வி நிரம்பியவர்.

110. செந்தமி ழியல்நூல்—தமிழிலக்கணம். அனையான் தேற வைத்தனை முதல் நூல் தன்னை—அவனுக்கு முதல்நூலை உபதேசித்தாய்.

"'கடம்பமா வனத்தில் எம்மைக்
கண்டனை இறைஞ்சி, உள்ளத்
திடம்பெற யாது வேட்டாய்?
அவைஎலாம் எம்பால் பெற்றுத்,
திடம்பெற மலயத் தெய்தி
இருக்'கென விடுத்தாய்; சென்று
குடம்பெறு முனியும் அங்கே
இருக்கின்றான் கொடியி னோடும். 111.

"இனையதுன் திருவுள் ளத்துக்
கியைந்ததேல், இவற்குக் கேள்வி
அனையமா தவனைக் கூவி
உணர்த்"தென அணங்கு கூற,
"இனையநாள் நிகழ்ச்சி எல்லாம்
மறந்திடா தின்று சொன்னாய்;
அனையதே செய்தும்" என்னா
அறிவனை நினைந்தான் ஐயன். 112.

வேறு.

உடைய நாயகன் திருவுளம் உணர்ந்தனன், முடிமேல்
அடைய அஞ்சலி முகிழ்த்தனன், அருந்தவ விமானத்
திடைபு குந்தனன், பன்னியோ டெழுந்தனன், அகல்வான்
நடைய னாகிவந் தடைந்தனன், நற்றமிழ் முனிவன். 113.

இயங்கு மாதவத் தேரினும் பன்னியோ டிழிந்து,
புயங்கன் ஆலயம் புகுந்து,நாற் புயப்புடை கிளைத்துத்
தயங்கு செம்பவ ளாசலம் தன்னையும் அதன்பால்
வயங்கும் இந்திர நீலமால் வரையையும் பணியா, 114.

---

111. கடம்பவனம் – கடம்பமரக்காடு; இது மதுரைக் கொருபெயர். மலயம் – பொதியமலை. குடம்பெறு முனி – குடத்தில் தோன்றிய முனிவர். கொடி-உலோபாமுத்திரை.

112. அறிவன்–முனிவன்; இங்கு அகத்தியன்.

113. பன்னி–பத்தினி. தவமாகிய விமானத்தில் பத்தினியோ டேறி ஆகாய மார்க்கமாக வந்தடைந்தனன்: தவவலிமையால் ஆகாயமார்க்கமாக வந்தனன என்பது.

114. தேரினும்–தேரினின்று; ஐந்தாம் வேற்றுமை. மேலே 73–ம் பாட்டின் குறிப்புப் பார்க்க. புயங்கன் – புஜங்கன்; சர்ப்பத்தை உடையவன். செம்பவளாசலம் – செந்நிறமுடைய சிவன். இந்திரநீல மால்வரை – நீலநிறமுடைய உமாதேவி.

பெருகும் அன்புளம் துளும்ப,மெய் ஆனந்தம் பெருக,
அருகி ருந்தனன். ஆவயின் கீரனும், அம்பொன்
முருக விழ்ந்ததா மரைபடிந் திறைவனை முன்போல்
உருகும் அன்பினால் இறைஞ்சுவான், ஒல்லைவந் தடைந்தான். 115.

இருந்த மாதவச் செல்வனை எதிர்வர நோக்கி
"அருந்த வா,இவற் கியற்றமிழ் அமைந்தில; எம்பால்
தெரிந்த நீஅதை அரிறபத் தெருட்"டெனப், பிணியும்
மருந்தும் ஆகிய பெருந்தகை செய்யவாய் மலர்ந்தான். 116.

வெள்ளை மாமதிப் பிளவணி வேணியங் கருணை
வள்ள லார்பணி சிரத்தினும் மனத்தினும் தாங்கிப்,
பள்ளம் ஏழையும் பருகினோன், பணியுமக் கீரன்
உள்ள மாசற, வியாகர ணத்தினை உணர்த்தும். 117.

இருவ கைப்புற வுரைதழீஇ, எழுமத மொடுநாற்
பொருளொ டும்புணர்ந், தையிரு குற்றமும் போக்கி,
ஒருவில் ஐயிரண் டழகொடும் உத்திஎண் ணான்கும்
மருவும் ஆதிநூ லினைத்தொகை வகைவிரி முறையால், 118.

கருத்துக் கண்ணழி வாதிய காண்டிகை யானும்,
விருத்தி யானும்,நூற் கிடைப்பொருள் துளக்கற விளக்கித்,
தெரித்து ரைத்தனன். உரைத்திடு திறங்கண்டு நூலின்
அருத்த மேவடி வாகிய ஆதிஆ சிரியன், 119.

---

115. துளும்பல்—அசைதல். பொன்...தாமரை—பொற்றாமரை வாவி.

116. எதிர்வர — முன்னிலையில் வர. அரில் தப—குற்ற மற. பிணியும் மருந்தும்—துன்பமும் அத்துன்பத்தைத் தீர்க்கும் மருந்தும்.

117 பள்ளம் ஏழையும் பருகினோன்—கடல் ஏழையும் குடித்த அகத்திய முனிவர். உள்ளமாசு—சித்தமாசு, மனக்களங்கம்.

118. இருவகைப் புறவுரை — பொதுப்பாயிரம் சிறப்புப்பாயிரம் என்பன. எழுமதம்—உடன்படல், மறுத்தல் முதலிய; நன்—சூத்-௧௧, பார்க்க. நாற்பொருள்—அறம், பொருள், இன்பம், வீடு என்பன. ஐயிரு குற்றம் — குன்றக்கூறல், மிகைபடக்கூறல் முதலிய; நன். சூத். ௧௨, பார்க்க. ஐயிரண்டழகு—சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல் முதலிய; நன்—சூத்—௧௩, பார்க்க. உத்தி எண்ணான்கு — நுதலிப் புகுதல், ஓத்து முறைவைப்பு முதலிய; நன். சூத். ௧௪, பார்க்க.

119. கண்ணழிவு — பதங்களைப் பிரித்தல். காண்டிகை — காண்டிகைஉரை; விருத்தி—விருத்திஉரை; நன். சூத். ௨௨, ௨௩, பார்க்க. நூற்கிடைப்பொருள் — நூற்கருத்து. அருத்தம்—பொருள். ஆதி ஆசிரியன்—சிவபெருமான்.

தருக்கும் இன்பமும் கருணையும் ததைபமா தவனைத்
திருக்க ரங்களான் மகிழ்ச்சியுள் திளைத்திடத் தடவிப்,
பெருக்க வேண்டிய பேறெலாம் பீடுற நல்கி,
இருக்கை யில்செல விடுத்தனன், ஆலவாய் இறைவன். 120.

பொன்ன னுளொடும் குறுமுனி விடைகொடு போன
பின்னை, ஆருயிர்க் கிழத்தி, தன் பிரானைநேர் நோக்கி,
"என்னை? நீஇவற் குணர்த்திடா தித்தவப் பொதியின்
மன்ன னல்உணர்த் தியதென, மதுரைநா யகனும்:-- 121.

"தன்னை நித்தலும் வழிபடும் தகுதியோர், சாலப்
பொன்அ ளிப்பவர், தொடுத்தமற் சாம்இலாப் புனிதர்,
சொன்ன சொல்கட வாதவர், துகள்தவிர் நெஞ்சத்
தின்ன வர்க்குநூல் கொளுத்துவ தறன்"என உரைப்ப, 122.

"இவன்ன டுத்தமற் சாத்தினல் யாம்உணர்த் தாதத்
தவனை விட்டுணர்த் தினம்"எனச் சாற்றினன். கேட்டுக்
கவலை விட்டக மகிழ்ச்சிகொண் டிருந்தனள், கதிர்கால்
நவம ணிக்கலம் பூத்ததோர் கொடிபுரை நங்கை. 123.

கற்ற கீரனும், பின்பு, தான் முன்செய்த கவிகள்
முற்றும் ஆய்ந்து, சொல் வழுக்களும் வழாநிலை முடியும்
உற்று நோக்கினன், "அறிவின்றி, முழுதொருங் குணர்ந்தோன்
சொற்ற பாடலில் பொருள்வழுச் சொல்லினேன்" என்று, 124.

"மறையின் அந்தமும் தொடாததாள் நிலம்தொட வந்த
நிறைப ரஞ்சுடர் நிராமய நிருத்தற்குப் பிழைத்தேன்;
'சிறிய கேள்வியோர் கழியவும் செருக்குடை யோர்'என்
றறிஞர் கூறிய பழஞ்சொல் என் அளவிற்றே அம்ம! 125.

---

120. தருக்கு – களிப்பு. திளைத்திடல் – இடைவிடாது பயிறல். பெருக்க– அதிகமாக. பீடுற–சிறக்க.

121. பொன்னனுள்–உலோபாமுத்திரை. ஆருயிர்க்கிழத்தி–உமாதேவி.

122. மற்சரம்–பொறாமை. இதனோடு நன்னூற் சூத்திரம் ௩௭, ௩௬, இரண்டையும் ஒப்பிடுக.

125. மறையி னந்தம்–உபநிடதம். நிராமயம்–நோயின்மை. பிழைத்தேன்– பிழைசெய்தேன்.

"அட்ட மூர்த்திதன் திருவடிக் கடியனேன் பிழைக்கப்
பட்ட தீங்கினால் எனைஅவன் நுதல்விழிப் படுதீச்
சுட்ட தன்றி,என் நெஞ்சமும் சுடுவதே" என்றென்(று)
உட்ட தும்பிய விழுமநோய் உவரியுள் ஆழ்ந்தான். 126.

"மகவை ஈன்றதாய், கைத்திடு மருந்துவாய் மடுத்துப்,
பகைப டும்பிணி அகற்றிடும் பான்மைபோல், என்னை
இகல்இ ழைத்தறி வுறுத்தினாற் கேழையேன் செய்யத்
தகுவ தியா"தென வரம்பிலா மகிழ்ச்சியுள் தாழ்ந்தான். 127.

மாத வன்,தனக் காலவாய் மன்னவன் அருளால்,
போத கம்செய்த நூலினைப், புலவர்எ னோர்க்கும்
ஆத ரம்செயக் கொளுத்தியிட் டிருந்தனன், அமலன்
பாத பங்கயம் மூழ்கிய பத்திமைக் கீரன். 128.



126. அட்டமூர்த்தி – பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமானன். ததும்பல்–நிறைதல். விழுமம்–துன்பம்.

127. இகல் இழைத்து–பகைசெய்து. தாழ்ந்தான்–தங்கினான்.

# அரிச்சந்திர புராணம்.

## முன்னுரை.

வடமொழியிற் பல கவிஞர் வகுத்துரைத்த அரிச்சந்திர சரித்திரத்தையும் தமிழ்மொழியில் வழங்கியிருந்த அரிச்சந்திர வெண்பாவையும் முதனூல்களாகக்கொண்டு நல்லூர் வீரகவிராயர் விருத்தப்பாக்களால் அரிச்சந்திரபுராணம் என்கிற வழிநூலை இயற்றினர். இந்நூல் கி. பி. 1524-ம் வருஷத்தில் திருப்புல்லாணி என்கிற திருப்பதியில் திருமால் சந்நிதியிலே சக்கர தீர்த்தக் கரையிலுள்ள மண்டபத்தில் அரங்கேறியது.

விதியின்அர சிழந்தஅரிச் சந்தி ரன்தன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாம் கலியுகத்தில் வருச காப்தம்
ஆயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேல் மண்ட பத்துள்
கதிதருசீர் நல்லூர்வாழ் வீரன் ஆசு
கவிராசன் கவியரங்கம் ஏற்றி னனே.

# அரிச்சந்திர புராணம்.

## அரிச்சந்திரன் சந்திரமதியை மணத்தல்.

சூரிய வமிசத்தரசர்கள் இருந்து அரசியல் நடத்தியது கோசலநாடு. அந்நாட்டுக்கு ராஜதானி அயோத்திமாநகரம். அரிச்சந்திரன், பாலகுமாரனாய் அரசாட்சி செய்திருந்தபோது, ஒருநாள் கொலுமண்டபத்தில் சிங்காசனத்தில் வீற்றிருந்தான்.

இருந்த காலையில், யாவர்க்கும் விடைகொடுத் தருளித்
திருந்து மாமுடி மன்னவன் சிலருடன் இருப்பப்,
பொருந்து நன்னெறிப் புண்ணிய தீர்த்தங்கள் ஆடி
அருந்த வத்தினர் அநேகர்வந் தந்நகர் அடைந்தார்.

சடையும், முண்டமும்,[1] சிகையும்,[2] நுண்டாது[3]க்கல் தோய்ந்த [1]மொட்டைத்தலை.
உடையும், மாமர வுரிகளும், உடுத்தழ கிருந்த [2]குடுமி.
இடையும், தாழ்சிறு பண்டி[4]யும், எய்த்திளைத் தோய்ந்த [3]தாது—காவிக்கல்.
நடையும், வாழ்த்தலுஞ் சபித்தலு முந்துறு நாவும், [4]வயிறு.

நூலும், மார்பமும், நூலிடைத் திகழ்ந்துற நுடங்கும்
தோலு[1]ம் அங்குலித் தருப்பை[2]யும், துளங்கும்ஒண் செவியில் [1]மான்தோல்.
நாலும்[3] யாககுண் டல[4]ங்களும், நான்மறை நெறிமுக் [3]தொங்கும்.
கோ[5]லும், ஏந்திய குடைகளும், குண்டிகைக் கரமும், [5]திரிதண்டம்.

[2]விரல்களில் தர்ப்பைமோதிரம். [4]யாகதீக்ஷிதர் என்பதாகிய குண்டலங்கள்.

இன்ன கொண்டுள இருடிகள் யாவரும் எய்தி,
அன்ன சத்திரம் அணைந்துபுக் கனர்அயா வுயிர்த்து,[1] [1]ஆயாசம் தீர்ந்து.
முன்னம் வாரிதி[2] ஆர்ப்[3]பெடுத் தாலென முழங்கி [2]சமுத்திரம்.
மன்னர் மன்னவன் மாளிகை வாயிலில் வந்தார். [3]முழக்கம்.

அவர்களை எதிர்கொண்டு உபசரித்து ஆசனங்களில் இருக்கச் செய்து,

“எந்தத் தேயங்கள் கண்டனிர்? எத்திசை புகுந்தீர்?
எந்தத் தீர்த்தங்கள் ஆடினீர்? புதுமைஎன் கண்டீர்?
முந்தக் கூறுமின்” என்றரிச் சந்திரன் மொழிய,
அந்தக் காலையில் அரசனுக் கருந்தவர் உரைப்பார்:

"அங்கண் மாநிலத் தரியகன் னேசிநாட் டகத்துப்
பொங்கு கண்டகி என்பதோர் புண்ணிய தீர்த்தம்.
அங்கு யாம்புகுந் தாடி,நின் அருள்முகம் காண
இங்கு வந்தனம். இன்னமும் கேட்டி"என் றிசைப்பார்:—

"அந்த நாட்டினில் கன்னமா புரிநகர் ஆள்வோன்,
சந்தி ரன்வழிச் சந்திர தூயன்தவம் புரிந்து,
கந்த வார்சடைக் கடவுள்தன் வரத்தினல் பயந்த
சந்த[1]நன்முகத் தையல்,சந் திரமதி யென்பாள், [1]அழகு.

"மண்ம டந்தையர்[1]தம்முளும், வாசவன்[2] உறையும் [1]பெண்கள்.
விண்ம டந்தையர் தம்முளும், நிகரிலா விறல்[3]வேல் [2]இந்திரன்.
கண்ம டந்தை, தண் கருங்குழல் அருந்ததிக் கற்பின் [3]வெற்றி.
எண்ம டங்குகற் புடையள்;இந் திரை[4]யினும் எழிலாள். [4]லக்ஷ்மி.

"அன்னதன் மையளை, அமிர்தினில் பிறந்த அணங்கபி டேக[1]த்தை, அனந்த
மன்னர்தந் தமக்கு மணஞ்செயக் கருதி மணமொழிந் தவர்க்கெலாம் கொடாது,
'முன்னம்எம்பெருமான் மொழிந்தவற்கன்றி முடிக்கிலேன்கடிமணம்' என்னச்
சொன்னதோர் மொழியும் கேட்டனம். அவள்நின் தோள்களுக் கிசைந்தவள்",
[என்றார்.

[1]அமுதத்தில் தோன்றின லக்ஷ்மிக்குத் திருமுடி போல்பவள்.

அந்த வார்த்தையைக் கேட்டு அரிச்சந்திரனுக்குச் சந்திர மதியை மணஞ்செய்து கொள்ளவேண்டும் என்கிற விருப்பம் உண் டாயிற்று.

கரையழி காதல ஆற்றை அறிவெனும் கரைசெய் தாற்றி,
வரையன புய[1]த்து மன்னன், முனிவரை நோக்கி, "மாதர்க்
கரசியை அடிய னேனுக் கணிமணம் புணர்க்க நும்வாய்
உரையுள தாயின், என்மாட் டுயிருள தாகும்" என்றான்.

[1]மலைபோன்ற தோள்.

"அல்லி[1]யங் குழலாள் தன்னை அருமணம் அடியேன் சூட்டக் [1]அகவிதழ்.
கல்லியல் சுர[2]மும் காடும் கடந்துகால் வருந்த நீர்போய், [2]பாலைநிலம்.
வல்லியைப் பயந்தோற் கண்டு மணமொழிந், தந்த வேந்தன்
சொல்லிய நெறிகேட், டென்பால் வருக"என் றினிது சொன்னான்.

அவர்கள் அங்ஙனமே மீண்டும் கன்னேசிநாட்டை அடை ந்து மதிதயன் சபையில் புகுந்தனர். அவர்களைக் கண்ட மதி தயன்—

"வானம்நீர் பொழிந்து முத்தம் மணிகொழித் தருவி பாய்ந்த
கானம்நீர் பெருகும் தெய்வ கண்டகி என்னும் தீர்த்தத்
தானம்நீ ராடி, என்தன் தலைக்கடி முடிகள் சூட்டி[1]ப்
போனநீர், உடனே மீண்ட அருத்தி[2]யென்? புகலும்" என்றான்.

[1]என் சிரசுக்கு உங்களுடைய பாதங்களைக் கிரீடமாகச் சூட்டி: அதாவது, உங்கள் திருவடிகளில் நான் நமஸ்காரம்பண்ண. [2]விருப்பம்.

"மன்ன, கேள்—சென்ற யோத்தி மாநகர் புகுந்து, யாங்கள்,
அந்நகர்க் கரசன் நீதி அருள்அரிச் சந்த்ரன் என்பான்,
நின்னகர் வளமும் நின்றன் நெறியும்நின் மகள்தன் ஏரு[1]ம்
சொன்னபின், நின்பால் எய்தும்[2] உவகையே துணிந்து நின்றான்.

[1]அழகு. [2]உன்னிடம் வருவதான.

"அறநெறி மிக்கோர் தம்பால் அருந்ததிக் கற்பி னாளைப்
புறநெறி போகா வண்ணம் வருந்தியும் பொருந்தச் செய்தல்
மறநெறி[1]யன்று: மாயா மாதவந் தன்னில் மிக்க
திறநெறி; அதனால் நின்பால் சேர்ந்தனம் செல்வ" என்றார்.

[1]தீய செய்கை.

"புவனம்உள் ளளவும் யாங்கள் புக்கறிந் தனேக கோடி
நவநர பதிகள்[1] தம்மைக் கண்டனம். நறுந்தார் வேந்தே,
சிவன்நல்க நீப யந்த திருமகள் தனக்குக் கேள்வன்[2]
அவனல தில்லை" என்ன அருந்தவர் எடுத்து ரைத்தார்.

[1]புதிய அரசர்கள். [2]நாயகன்.

அதுகேட்டு மதிதயன்.—

"மூவரா யவரில் முன்னும் மூர்த்தியார்[1] அருளிச் செய்த
தேவரா சியம்[2]ஒன் றுண்டால். அன்னது தெரிய வல்லார்
யாவரா யினும்யான் பெற்ற இளங்கொடி தனக்குக் கேள்வர்
ஆவரால். அவன்இங் கெய்தின் அறியலாம், அழையும்" என்றான்.

[1]திரிமூர்த்திகளில் முதல்வரான சிவபெருமான். [2]தேவ ரஹஸ்யம்.

அதுகேட்டு முனிவர்கள் திரும்பினர்.

சந்திரமதியின் சுயம்வரம் இன்னும் ஏழுநாளில் என்று அரசருக் கறிவிக்குமாறு மதிதயன் தூதும் ஓலையும் அனுப்பினான். செய்தி தெரிந்தவளவில் அரசர் பலர் கன்னோசிநாட்டில் சென்று சேர்வாராயினர். அரிச்சந்திரனிடம் முனிவர்கள் வந்து தாங்கள் சென்ற செய்தியை அறிவித்தனர். தேர் கொண்டுவரும்படி ஏவி அரிச்சந்திரன் தேரில் ஏறினான். முனிவர்கள் வானில் ஏறினர். ஆறுகளையும் மலைகளையும் காடுகளையும் கடந்து அரிச்சந்திரன் கன்னோசிநாட்

டில் கன்னமாபுரியில் மதிதயனுடைய அரசிருக்கை மண்டபத்திலே புகுந்தான். முனிவர்களும் சென்றடைந்தனர். அரிச்சந்திரனைக் கண்டு சந்தோஷித்துச் சந்திரதயன் சிங்காதனத்தைவிட்டிறங்கிவந்து எதிர்கொண்டு தழுவி, உடன்வந்த முனிவருக்கும் அரசருக்கும் ஆசனங்கள் கொடுத்து உபசரித்தான். அரசரும் அமைச்சரும் அரிச்சந்திரனுடைய அழகைக் கண்டு அதிசயித்தார்கள். சந்திரதயன்—

"சிவன்நமக் கருளிச் செய்த திருவுளப் படியே, காண்ப[1]
திவன்றனக் கெய்து மாயின், ஏழை[2]யும் யானும் செய்த
தவமும்மா தவமாம். அல்லால், தவமும்என் தனையைப் பேறும்
அவம்[3]"என எண்ணி யெண்ணி அளவிலா தழுங்க லுற்றான்.[4]

[1]சந்திரமதியின் மங்கல்யத்தைக் காண்பது. [2]பெண். [3]வீண். [4]இலேசமடைந்தான்.

அடுத்தநாளில் மணப்பந்தலில் வந்துசேர்க என்று மதிதயன் அரசர்களை நோக்கிச் சொன்னான். அவ்வளவிலே அரசரெல்லாரும் தத்தம் விடுதிகளுக்குச் சென்றனர். மதிதயன் தன் மாளிகைக்குப் போனான்.

முன்னம் மன்னன் முகுர்த்தம்ஓ ரேழெனச்
சொன்ன நற்றினம் வந்து தொடங்கலும்,
மன்ன னும்மறை யோர்களும் மாத[1]ரும்
கன்ன[2] லம்திருக் காவண[3]த் தெய்தினர்.

[1]பெண்கள். [2]கரும்பு. [3]பந்தல் (கல்யாணப்பந்தல்)

வேந்தர் ஈண்டினர்; வேதியர் ஈண்டினர்;
மாந்தர் ஈண்டினர்; மங்கையர் ஈண்டினர்;
ஆய்ந்த நீதி அமைச்சரும் அவ்வவர்ச்
சேர்ந்த சேனையும் சேரவந் தீண்டின.

சந்திரமதியைக் கூட்டிக்கொண்டு தோழிமார் வந்து அவளுக்கு அரசருடைய ஊர் பேர் முதலானவைகளை முறையாக எடுத்துச் சொல்லிவந்தனர். இவன் சேரன், இவன் பாண்டியன், இவன் சோழன், இவன் குருநாடன், இவன் குகுரநாட்டரசன், இவன் மகதநாட்டரசன், இவன் கவுடவளநாடன், இவன் சிந்துநாடன் என்று சொல்லிச் செல்கையில், இவன் கோசலநாட்டரசன் என்றனர்.

மந்தரம்[1]அனையதோள் வள்ளல் பேர்சொலச், [1]மந்தரமலை.
சுந்தரத் தோகைமார் தோளைத் தாழ்த்தி,அச்
சந்திர மதிஅரிச் சந்தி ரன்றனைக்
கந்தரம்[2] நீட்டிஉட் கருத்து நோக்கினாள். [2]கழுத்து.

அங்கைவேல் மன்னனும் ஆசை மீக்கொள[1] [1]மேற்பட.
மங்கைதன் பங்கய வதனம்[2] நோக்கினான்; [2]தாமரைபோன்றமுகம்.
செங்கயற் கண்ணினாள் திருக்க ழுத்தினில்
மங்கல நாண்உறீஇ வயங்கக்[3] கண்டனன். [3]பொருந்திவிளங்க.

"கன்னியென் றெண்ணினம்; கன்னி யோஅலள்.
முன்னரே மங்கலம் பூண்ட மொய்குழல்
இன்னமும் ஒருவருக் கெய்து மோ?"என
மன்னவன் மாதுலற்[1] குரைவ ழங்கினான். [1]மாமன்.

"பொறுத்துமுன் மங்கலம் பூண்ட பேதையை
மறுத்திரண் டாவது மணம்மு டிப்பரோ?
சிறுத்தவர் செய்தொழில் திரைவ ளைப்[1]பதில் [1]கடல்சூழ்ந்த பூமி.
நிறுத்தினீர் நீர்"என நெடிது கூறினான்.

வள்ளல்ஈ துரைத்தலும், மதித யன்தன
துள்ளம்விட் டோங்கிய உவகை[1] யம்பெரு [1]சந்தோஷம்.
வெள்ளம்உள் ளடக்கியே "வேந்தர் காள்,இவன்
கள்ளமோ மெய்ம்மையோ கட்டு ரைத்த[2]தே? [2]சொன்னது.

"தையலாள் கழுத்தினில் தாலி உண்டெனில்
கையினால் கண்ணுறக் காட்டும் நீர்"எனச்,
செய்யகை யறைந்தணி மூக்கில் சேர்த்தி,"இவ்
ஐயனும் பொய்யன்"என் றரசர் கூறினார்.

"மண்டல வேந்தன்எம் மடந்தை மங்கலம்
கண்டதும் நீங்கள்தாம் கண்டி லாததும்
திண்டிற லீர்[1],ஒரு தேவ ரகசியம்
உண்"டென மதிதயன் உரைப்ப தாயினான்.

[1]மிகுந்த வலிமை உள்ளவர்களே.

"அண்டர்[1]நா யகன்வர மளித்த நாளையில், [1]தேவர்.
'வண்டணி குழலி[2]யோ டுதித்த மங்கலம்
கண்டவர் பதி[3]இவட்' கென்ற கட்டுரை [3]நாயகன்.
உண்(டு).அஃ தன்றிவே றுண்டு. கேட்டி[4]ரால். [4]கேளுங்கள்

[2]வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலை யுடையவள்.

"மஞ்சன[1]ச்சடையினுன் வரத்தில் வந்தநாள்,
கஞ்சனே[2]நீழலில் காண்ப தன்றியே,
அஞ்சன[3]க் கண்ணிக்கும் அங்கை[4]க் கெய்திடா(து).
எஞ்சலில்[5] யாவரும் யானும் கண்டிலேம்."

[1](கங்காஜல) அபிஷேகம். [2]கண்ணாடி. [3]மை. [4]அழகிய கை. [5]குறைவில்லாத.

என்றலும், வல்லிமுன் எண்ணிய நாமம்[1]
ஒன்றல துள்ளுற உன்னல ளாகிச்
'சென்றவன் மார்பிது சேர்'கென உன்னு
மன்றலர்[2] மாலையை வானில் எறிந்தாள்

[1]அரிச்சந்திரனுடைய பெயர். [2]மணம் விரிகின்ற.

வஞ்சி வழங்கிய மாலை அணிந்தோன்
செஞ்சுட ரின்முகம் நின்றொளி செய்ய,
வெஞ்சுடர்[1] முன்சசி[2] யாமென மிக்கோர் — [1]சூரியன். [2]சந்திரன்.
கஞ்ச[3]முகங்கள் கரிந்தன வன்றே. — [3]தாமரை.

மாதர்கள் ஆர்த்தனர்; வானவர் ஆர்த்தார்;
கீதர்கள்[1] ஆர்த்தனர்; கேளிரும் ஆர்த்தார்; — [1]கீதங்கள் பாடுவோர்.
சூதர்[2]கள் ஆர்த்தனர்; துறவரும் ஆர்த்தார்; — [2]பாடுவோர்.
வேதர்கள் ஆர்த்தனர் வேலை[3] யடங்க. — [3]கடல்.

நல்லியல் நூலறி நாவலர் பாடப்,
பல்இய மும்பல பாடலும் ஆர்ப்ப,
அல்லிம லர்த்தொடை மாலை அணிந்தே
வல்லியும் மன்னனும் மாளிகை புக்கார்.

சிலநாள் கழிந்தபிறகு அரிச்சந்திரன் சந்திரதயனிடம் விடைபெற்றுக்கொண்டு சந்திரமதியோடு அயோத்திக்குத் திரும்பினுன்.

சிறிதுகாலம் சென்றபிறகு சந்திரமதி ஓராண்பிள்ளையைப் பெற்ருள்.

பிள்ளை வந்து பிறந்தனன் என்றலும்,
வள்ளல் உள்ள மகிழ்ந்திர வோர்[1]க்கெலாம் — [1]யாசகர்.
"அள்ளி நீர்அறை[2] யைத்திறந் தேழுநாள் — [2]பொக்கிஷ அறை.
கொள்ளை கொண்மின்" எனக்கொடுத் தான்அரோ.

ஆவ லின்[1]அரிச் சந்திரன் மைந்தனை
மூவ ரன்ன[2]முனிவர்கள் வாழ்த்தியே,
யாவ ரும்நிக ரில்லவற் கேற்றிட[3]த்
தேவ தாசன் எனப்பெயர் செப்பினர்.

[1]'ஆவயின்' என்றும் பாடம் உண்டு. [2]மும்மூர்த்திகளை ஒத்த. [3]தகுதியாக.

தேவதாசனுக்கு ஏழுவயதாயிற்று.

## இந்திரன் சபையில் வசிஷ்ட விசுவாமித்திர முனிவர்களுடைய சபதம்.

தேவலோகத்தில் அமராவதிப் பட்டணத்தில் ஒருநாள் இந்திரன் தன் சபையில் சிங்காதனத்தில் வீற்றிருந்தான். தேவர்களும் அசுரர்களும் சித்தர் வித்தியாதரர் இயக்கர் கின்னரர் முதலானவர்களும் அவனைச் சூழ்ந்திருந்தனர். வசிஷ்டர் விசுவாமித்திரர் உள்ளிட்ட பலமுனிவர்களும் வந்து கூடியிருந்தார்கள். இந்திரன், அவர்களை ஆசனங்களில் வீற்றிருக்கச்செய்து, "ஓ முனிவர்களே, பூலோகத்தில் பழிபாவங்களுக் கிடங்கொடாமல் சாஸ்திரவிசாரணை செய்து சத்திய சீலர்களாய் விளங்கும் அரசர்களில் சிறந்தவர்கள் இன்னாரென்று சொல்லுங்கள்" என்று கேட்டான். அப்போது வசிஷ்டர்.

"பாருக் கொருவன், பரதார சகோத ரன்,[1]வெம்
போருக் கொருவன், புகழுக்கும் மறைப்பொ ருட்கும்
நேருக்கும் வீடா[2] மனுநூ னெறிக்கும் பொறைக்கும்
ஆருக்கு மிக்கான், அரிச்சந்திர னாகும்" என்றான்.

[1]அன்னியர் மனைவிகளுக்கு சகோதரனானவன். [2]கெடாத.

வசிஷ்டரிடம் பகைகொண்டுள்ள விசுவாமித்திரர், வசிஷ்டரை நோக்கி,

"வெய்யன், பதகன், பரதார விருப்பன், வீணன்,
பொய்யன், நிறையும் பொறையும் சிறிதுமில் புல்லன்,
கையன்[1], கபடன், கயவன்[2]றனை நல்லன் என்றிவ்
ஐயன் திருமுன் உரைத்தாய்.இ தென்னை?" என்றான்.

[1]வஞ்சகன். [2]புத்தியீனன்.

அதுகேட்டு வசிஷ்டர்

"தீவெந் தொழிலின்றி ஒப்பற்றமெய்ச் செவ்வி யோனைக்
காய்வெந் திறலால் இவைகூறிய கௌசி கா,நின்
வாய்வெந் திலை;நின் மனம்வெந்திலை; வம்பு சொன்ன
நீவெந் திலை.தெய்வ மும்நின்வயின் பொய்த்த" தென்றான்.

உடனே விசுவாமித்திரர்,

தெய்வந்தனை நொந்து வசிட்டன்இச் செய்தி செப்பக், [1]பழியை.
கைவந்த[1] கொடுந்தொழில் கௌசிகன் கன்றி[2] நோக்கிப் [2]கோபித்து.
"பொய்வந்த நின்வாய் புழுவாகுத லன்றிப் பொய்யா
மெய்வந்த என்வாய் மனம்வேவல" என்று சொன்னான்.

அவ்வளவில் வசிஷ்டர் கண்களிலே நெருப்புப்பொறி பறக்கக் காலருத்திரனைப்போல் கோபங்கொண்டெழுந்தார். விசுவாமித்திரரும் அங்ஙனமே கோபம்பொங்கியெழுந்தார். அதைக் கண்டு அஞ்சி,

ஆற்றா நெடுவெஞ்சினம் ஆற்றி யமர்த்தி, உள்ளம்
தேற்றா,[1] மகவான்[2]திருச் செம்மலர்க் கைய மைத்துக்,
"கூற்றால்[3] விளைவாவன கண்டிடில், கூறும் நீர்மை
தோற்றால், இழிதக்கது செய்வதென்? சொன்மின்" என்றான்

[1]தேற்றி. [2]இந்திரன். [3](உங்கள்) சொல்லால்.

அன்பால் கடலாய வசிட்டன் அழன்று, "மன்னன்
தன்பால் தவறுண்டெனக் கௌசிகன் சாய்க்கின்,[1] அன்றே
என்பால் தவம்விட்டிழி கள்[2]தலை யோட்டின் ஏந்தித்
தென்பால்[3] தனிச்செல்குவன் யான்.இது திண்ணம்" என்றான்.

[1]காட்டினால். [2]இழிவான கள். [3]யமலோகத்துக்கு.

"அரிச்சந்திரனுடைய மனதை அறியாமல் வசிஷ்டர் இப்படிப்பட்ட சபதத்தைச் சொல்லார். நீர் தெளிந்து உம்முடைய சபதத்தைச் சொல்லும்" என்று நாரதர் கூறக் கேட்டு,

"நன்றாகுக" என்றவன் நாரத னுக்கு ரைத்துப்
"பின்றா திவன்போல் பெரும்பாடை[1] பிதற்ற மாட்டேன்.
வென்றானெனின் யான்செய்த மெய்த்தவந் தன்னில் பாதி
குன்றாமல் ஈவேன்"எனக் கௌசிகன் கூறி னானால்.

[1]நெடுமொழி, சபதம்.

நாரதர் "இதுவே போதும் போதும். அரிச்சந்திரனிடம் நான் போய் இங்கே நடந்தவைகளைச் சொல்லாதபடி என்னை இங்கே தேவர்காவலில் வைத்து, நீர் போய் அரிச்சந்திரனுடைய நீதிக்கிரமத்தையும் தருமத்தினது நேர்மையையும் பரிசோதித் தறிந்து கொள்ளும். போம்" என்று விசுவாமித்திரர்க்குச் சொல்லி, தாம் சுவர்க்கலோகத்தில் இருந்தார்.

சபை கலைந்தது. முனிவர்கள் தங்களிடம் போயினர். விசுவாமித்திரர் இந்திரனை ஆசீர்வதித்து இமயமலையின் சாரலில் தாமிருக்கிற சோலைக்குப் போனார்.

### யாகத்துக்குப் பொருள்கொடுப்பதாக அரிச்சந்திரனிடம் விசுவாமித்திரர் வாக்குறுதி பெறுதல்.

இந்திரனுடைய சபையிலே தாம் சொல்லிய வார்த்தையை மெய்ப்பிக்கும் உபாயம் என்னவென்று விசுவாமித்திரர் ஆலோசித்திருந்தார். அவரைக் காணும்படி சில முனிவர்கள் வந்தனர். அவர் "நான் ஒரு சிறந்த யாகத்தைச் செய்துமுடிக்கவேண்டும். நீங்கள் அரிச்சந்திரனிடம் போய், நான் கேட்கிற பொருளைக் கொடுக்கும்படி சம்மதிக்கச்செய்து வாருங்கள்" என்றுசொல்லி அவர்களை அரிச்சந்திரனிடம் அனுப்பினார். அவர்கள் அங்ஙனமே சென்று அரிச்சந்திரனுடைய சம்மதம் பெற்றுவந்து, அச்செய்தியை விசுவாமித்திரருக்குத் தெரிவித்துப் போயினர்.

அப்பால் விசுவாமித்திரர் அரிச்சந்திரனிடம் சென்று, "யாகத்தின் பொருட்டாக நீ கொடுக்கும்படி சம்மதித்த பொருளைக் கொடு" என்றார். அரசன் "எவ்வளவு பொருள் வேண்டும்?" என்று கேட்டான். முனிவர் "ஒருவன் யானையின்மேலிருந்து எறிந்த கவண்கல் எவ்வளவு தூரம் போகுமோ அவ்வளவு பொருள் வேண்டும்" என்றார். அங்ஙனமே கொடுப்பதற்கு அரிச்சந்திரன் ஆயத்தப்படுகையில், முனிவர் "அப்பொருளனைத்தும் உன்னிடத்திலேதானே இருக்கட்டும். யாகம் செய்யும்போது பெற்றுக்கொள்வேன்" என்றுரைத்துத் திரும்பினார்.

### விசுவாமித்திரர் ஏவிய மாயப்பன்றியையும் மற்றை மிருகங்களையும் அரிச்சந்திரன் வதைத்தல்.

விசுவாமித்திரர், தமது தவப்பெருமையால் பல மிருகங்களையும் பக்ஷிகளையும் வருவித்து, "நீங்கள் போய் அரிச்சந்திரனுடைய நாட்டிலுள்ள ஜீவன்களையும் சோலைகளையும் பயிர்களையும் அழித்து வாருங்கள்" என்றேவினார். அவைகள் சென்று அவ்வாறு செய்கையில், அதனைக் குடிகளாலறிந்த அரசன், வேடர்களோடு சென்று வேட்டையாடி, அவைகளைக் கொன்றான்.

அதனைக் கேள்வியுற்ற விசுவாமித்திரர், தமது தவமகிமையால் ஒரு மாயப்பன்றியை உண்டாக்கி, "நீ அரிச்சந்திரனுடைய படைத்தலைவர் வேடர் முதலானவர்களைக் கொன்று அரிச்சந்திரனை இங்கே கொண்டுவந்து விடவேண்டும்" என்று சொன்னார். மாயப்பன்றி போய் அதிக சேதம் உண்டாக்கியது. அரசன் அப்பன்றியையும் வென்று தன் பரிவாரங்களுடன் வந்து ஒரு சோலையில் மிகவும் அலங்காரமான ஒரு தடாகக்கரையில் அமைத்த கூடாரத்தில் தங்கினான்.

### விசுவாமித்திரர் அனுப்பிய புலைச்சியரை அரிச்சந்திரன் வெறுத்தல்.

தோல்வியுற்ற மாயப்பன்றி வருத்தமுற்று விசுவாமித்திரரிடம் சென்று நடந்த செய்தியைச் சொல்லியது. அதைக் கேட்டவளவில் அவருக்கு அரசன்மீது மிகுந்த கோபம் உண்டாயிற்று. அக்கோபத்தில் அதிக அழகுள்ள இரண்டு பெண்கள் உதித்தனர். கோபத்திலிருந்து பிறந்தமையால் அவர்கள் புலைச்சியராயினர். அப்போது சில முனிவர்கள் வந்து, சமீபத்தில் உள்ள சோலையில் ஒருதடாகக்கரையில் அரசன் தங்கியிருப்பதைத் தெரிவித்தார்கள். உடனே விசுவாமித்திரர் அந்த இரண்டு பெண்களையும் பார்த்து, "நீங்கள் அரிச்சந்திரனிடம் சென்று, உங்கள் பாடலால் அவனை உருகும்படி செய்து, அவனுடைய வெற்றிக்குடையை வாங்கி வாருங்கள்; அது கூடாதாயின், அவனை விவாகஞ்செய்துகொண்டாயினும் வாருங்கள்" என்று கட்டளையிட்டனுப்பினார். அவர்கள் அரசனிடம் சென்று, வீணையைக் கையிலே கொண்டு, ஏழிசைகளையும் வகைவகையாகப் பாடினார்கள்.

காவி[1]யங் கண்ணும் மூடா; கவர்[2]இதழ் தானும் கோடா; — [1]நீலோற்பலம்.
வாவியங் கமலம் அன்ன வதனமும் நுதலும் ஏரு; — [2]இரண்டுபட்ட.
தூவியந் தோகை நல்லார், சுவரின்மேல் எழுதி வைத்த
ஓவியம் பாடிற் றென்னப் பாடினர் உருக யாரும்.

அட்ட[1]மா[2] அனைத்தும் புள்ளும்[3] ஆவிபெற் றேகும் என்பார்; — [1]கொன்ற.
சுட்டநீள் வனங்க ளெல்லாம் சோலையாத் தழைக்கும் என்பார்; — [2]மிருகம்.
பட்டவாள் வீர ரெல்லாம் உய்வகை பலிப்ப தென்பார்; — [3]பறவை.
வட்டமா மதியம்[4]அன்ன வதனத்தார் பாடல் கேட்டே. — [4]பூரணசந்திரன்.

நாடெலாம் அழிக்கக் கேட்டு நரபதி[1] வெருண்டு வேட்டை
யாடலால் வெருண்டு போய்த்தம் ஆருயிர் ஓம்பி[2]த் துன்றும்[3]
காடெலாம் கரந்த மாக்கள், கன்னியர் மதுர கீதப்
பாடலால் வெளிப்பட் டுற்ற; பறவையும் பறந்த வம்மா!

[1] அரசன். [2] காத்து. [3] நெருங்கிய.

அரசன் அந்தப் பெண்களின் பாடலைக் கேட்டு மனமகிழ்ந்து பல வித ஆபரணங்களை அவர்களுக்குப் பரிசாக அளிக்கப்போக, அவர்கள் அவைகளை வேண்டாவென மறுத்து, முனிவர் கூறியவாறு கேட்டனர். அதற்கு அரசன் உடன்படவில்லை.

"கொடுப்பன கொடுப்ப தல்லால் கொடாதன கொடுக்க மாட்டார்;
விடுப்பன விடுப்பர்; என்றும் விடாதன விடவு மாட்டார்;
தொடுப்பன தொடுத்து[1] நும்மால் சொல்வன சொல்லி, நுங்கட்
கடுப்பன கொண்மின்; அல்லால் அகன்மின்" என் றமைச்சன் சொன்னான்.

[1] கேட்டு.

"வள்ளலென் றடைந்தோம். உன்பால் வந்திரந் தோர்க்கொன் றீயாக்
கள்ளனென் றறிந்தால், இங்கு வருகலம் கண்டாய்" என்றார்.
உள்ளமும் கண்ணும் செந்தீ உருத்தெழச் சினந்து வேந்தன்
தள்ளுமென் றருளிச் செய்தான், விளைவது[1]தன்னை ஓரான்[2].

[1] இனி நடக்கப்போகிறது. [2] அறியான்.

அப்போது காவல்வீரர் கோபித்து நெருங்கிவருவதைக் கண்டு, அந்தப் பெண்கள் உடலும் கைகால்களும் நடுங்க, மார்பில் அணைத்திருந்த வீணையை அங்கே போகட்டு ஓடிப்போயினர்.

ஆறுகொண் டோடார், செல்லா அடவியில் சென்று, மேனி
மாறுகொண் டுதிரம் சிந்த, மஞ்சி[1]னைப் பழித்த கூந்தல்
தூறு[2]கொண் டீர்க்கச், சோர்ந்த துகில்கிழிந் தகலச், சாப
வீறு[3]கொண் டேவி விட்ட முனிவன்முன் வீழ்ந்தார் வந்து.

[1] மேகம். [2] thicket. [3] பெருமை.

அதைக்கண்டு கோபங்கொண்டு விசுவாமித்திரர் "இப்படி வந்த காரணம் என்ன?" என்று கேட்டார். அவர்கள் நிகழ்ந்ததைச் சொல்ல, முனிவர், கோபம் மிக்கு, இனி அரசனுக்குத் துன்பத்தைச் செய்வதே செய்யத்தக்க காரியமென்று ஆலோசித்துக் கொண்டு, தவமுனிக் கூட்டங்களுடனே ரௌத்ராகாரமாய்த் தடாகக்கரைக்கு வந்தார். அதைக் கண்டு,

"கடல்கள்என் படும்?நெடுந் திசைகள்என் படும்?அகன் ககனம்[1]என்னும்?
உடல்கள்என் படும்?அவற் றுயிர்கள்என் படும்?இடிந் துலகம்என்னும்?
விடலருந் தவமுடைப் பெருவலிக் கௌசிகன் வெகுளியால்" என்
றடல்[2]நெடுஞ் சிலையவன் கடிதெழுந் தெதிர்நடந் தடிபணிந்தான்.

[1] ஆகாசம். [2] வெற்றி.

"உருமி[1]டித் தனஎனச் சினமிகுத் திகல்[2]செயற் குறுவதற்குக்
கருமிடற் றவன்[3]அலேன், கடனிறத் தவன்[4]அலேன், கமலன்[5]அல்லேன்.
கிருமியிற் கடையனும் எளியனே வலன்?"எனக் கெழுமிவெகுற்
றிருமலர்க் கழல்[6]களைக் கரமுறத் தழீஇநிலத் திடைகிடந்தான்.

[1]உரும்—இடி. [2]சண்டை. [3]நீலகண்டனான சிவன். [4]கடல்வண்ணனான விஷ்ணு. [5]பிரமதேவன். [6]பாதம்.

கரமுறத் தழுவலும், கௌசிகப் பெயரினன் கால்பறித்தே,
சிரமிசைத் திருமுடிச் சுடர்மணித் தொகைகள்பஃ றிசை[1]தெறிக்க,
உரமி[2]சைப் பணி[3]தெறித் திடஉதைத் தனன்.உதைத் திடலும்"உன்தன்
மரு[4]மலர்க் கழல்சிவப் புறும்"எனக் கைகளால் வருட[5]லுற்றான்.

[1]பல்திசை—பலதிக்கு. [2]உரம்—மார்பு. [3]ஆபரணம். [4]வாசனை. [5]தடவுதல்.

"குடியின்றிற் பிடை[1]பிழைத் திலம்.உனக் கடிமையின் குறையுமில்லேம்.
இடிஇடித் தனவெனச் சினமிகுத் திடைவிடா தெனைஉதைத்த
அடிவடுப் படு[2]மெனக் கவலுகிற் பதையொழிந் தைய,என்தன்
முடிவடுப் படுமெனக் கவல்கிலேன். வெகுளிஎன்? மொழிதி"என்றான்.

[1]உமக்குக் குடியாய் நிற்றலில். [2]காயப்படும்.
["குடியினிற்பிழை யிழைத்திலம்" என்றும் பாடம்.]

"மாவினை[1]த் துணிசெய்தாய்; கேழலு[2]க் கிடர்செய்தாய்; வான்அளாவும்
காவினைப் பொடிசெய்தாய்; நீதியால் ஈன்றஎன் காதல்மக்கள்
பாவினைப் பழிசெய்தாய்; தீவினைக் குரியஓர் பாவிநீதான்
ஆ[3]வின்நற் றோல்பொதிந் தடுபுலி[4]த் தொழில்செய்தாய். அழகி"தென்றான்.

[1]மிருகங்களை [2]பன்றி. [3]பசு. [4]கொல்லும்புலி.

"நாடழித் திடினும்,நன் னகர்அழித் திடினும்,என் நறுமலர்ப்பூங்
காடழித் திடினும்,நீள் கால்[1]அறக் கிளை[2]யினைக் களையினும்,கொன்
றீ[3]டழித் திடினும்,நீ தான்விடுத் தனையெனு[4] யான்அறிந்தால்,
பாடழித் திடுவனோ?" என்றரிச் சந்திரன் பலமொழிந்தான்.

[1]சந்ததி. [2]சுற்றம். [3]ஈடு—பெருமை. [4]என்று.

"சிறியரா னவர்தமக் குரியவே யல்லவோ தீமை?நன்னூல்
அறிஞரா னவர்தமக் கல்லவோ பொறை?பிறர்க் காகுமோதான்?
நெறியிலா வினையினே னொருவனைப் பொருளதா நீமுனிந்தால்,
பொறையும்நின் னருளும்என் னளவிலோ இலவெனப் போன!"என்றான்.

மடித்தவா யினன்,மிகக் கொதித்தநெஞ் சினன்,"எதிர் மறுத்துநீதான்
படித்தவா சகமெலாம் எனக்குநீ பிதற்றிடற் பாலவோதான்?
வடித்தவ ழிசைநினக் கிசைக்கவே வந்தஎன் மக்கள்தம்மை
அடித்தகா ரணமெலாம் எனக்குநீ தக்கவா றறைதி"என்றான்.

"இக்க ருங்குழல் ஏழையர் தம்மைநின்
மக்க ளென்ப துணர்ந்திலன், மாதவ,
தக்க வாறுரை யாமையின் தள்ளினேன்.
புக்க தீது[1]; பொறுத்தருள் நீ"என்றான். [1]நடந்தசெய்தி இது.

"கழுத்த ரிந்திது கைபிழை வந்ததென்
றழுத்த மாக உரைத்தனை. ஆதலால்
பழுத்த நல்லறி வுற்றனைப் பற்றிய
ஒழுக்க மற்றுளம் உட்கிடக் கூறினாய்.

"இரப்ப வர்க்கொன் றிலையெனில், யாவையும்
கரப்ப வர்க்குறு கட்டுரை கூறுவர்.
புரப்ப வர்க்குப் பொறுத்தலல் லால்அடித்
துரப்ப லும்தகு மோ?"என் றுருத்தனன்.

"மைகு லாவுகண் மாதரை மோதிய
கைகு றைக்கினும், கண்ணிணைச் சூலினும்[1], [1]தோண்டினாலும்.
மெய்கு றைக்கினும், வேண்டிய வாறுநீ
செய்க" என்ன, மறைமுனி செப்புவான்.

புலைச்சியரை மணக்கும்படி முனிவர் அரசனை வலியுறுத்தல்.

"கொய்து[1] மாக்களைக் கொன்றதும், பன்றியை [1]அறுத்து.
எய்த தும்,இசை கேட்டடித் தீனமாய்
வைத தும்,என்றன் மக்களை நீமணஞ்
செய்தி டின்பொறுப் பேன்"என்று செப்பினான்.

"நிலத்தில் யாரும் நெறியல[1] செய்திடின் [1]நீதியல்லாதன.
விலக்கும் நீஇவை என்கண் விளம்பல்என்?
புலைக்கு லத்தொடும் மன்னர் பொருந்துதல்
நலத்த தோ?"என்று நாயகன் கூறினான்.

"முன்னே வசிஷ்டன் இட்ட சாபத்தாலே புலையனான திரிசங்குவினுடைய மகனான நீ இந்தப் பெண்களை மணஞ்செய்துகொள்வது முறைமையன்றோ?" என்றார் விசுவாமித்திரர். அரிச்சந்திரன்,

"அற்றை ஞான்[1]றெம தையன் வசிட்டனால் [1]அந்த நாளில்.
பெற்ற சாபப் பெரும்புலை[2] தீர்த்தனை. [2]நீசத்துவம்.
இற்றை ஞான்றிங் கெனைப்புலை யாக்கநீ
கற்ற தே"தெனக் கால்கரம் பூண்டனன்.

"முன்னம் உந்தை[1] முழுப்புலை நீக்கினம்: [1]உன்தந்தை.
இன்னம் நீக்க எமக்கரி தன்று.யாம்
சொன்ன வாசகம் கேட்டுச் சுடர்முடி
மன்னர் மன்ன,என் மக்களைச் சேர்"கென்றான்.

"அடினும், நின்விழி ஆரழ லால்எனைச்
சுடினும், என்னுடல் தன்னைத் துறந்துயிர்
விடினும், மேனியை வெட்டி யரிந்துகூ
றிடினும், இச்சொற் கிசைகிலேன் யான்"என்றான்.

இதைக் கேட்டு முனிவர் கோபங்கொண்டு "என் பெண்களான அவ்விருவரையும் நீ மணஞ்செய்துகொள்ளாவிட்டால் உன்னைச் சபித்துவிடுவேன்" என்றார்.

கூற்றம் உண்ணக் கொடுத்தெம தாருயிர்
[1]தோற்றல் நன்றுநன் றென்று துணிந்து,"நின் [1]இழத்தல்.
சீற்றம் மாற்றிடச் செப்பிடும் சாபம்யான்
[2]ஏற்றல் நன்(று).இடு" கென்ன[2] இயம்பினன்.

[1]"தோற்றல் நன்றிநின் என்று" என்றும் பாடம். [2]"ஏற்றனன் இடுகென்ன" என்றும் பாடம்.

அதன்மேல் விசுவாமித்திரர் "ஆஹா, இவனுடைய குண விசேஷமும் பொறுமையும் வேறெவரிடத்தும் நாம் கண்டதில்லை. நம்முடைய கோபத்தை இந்தச் சமயத்தில் முடித்தால், இந்திரனெதிரில் நாம் சொன்ன வார்த்தை தவறிப்போகும்" என்று நினைந்து,

"துடிம ருங்குல்[1]அத் தோகையர் தங்களைக் [1]உடுக்கை போன்ற இடை.
கடிம ணஞ்செயல் தீதென்ற கள்வனே,
குடிமை செய்யும் கொடும்புலை யற்குநீ
அடிமை யாவை; அறிதி"என் றோதினன்.

அரிச்சந்திரன்—

"வாரி காய்ந்து கொதித்திடின் மாற்றத்தண்
ணீரி[1] யார்தரு வார்கள்?அந் நீதியின்,
சீரி யாய்,எனை நீமிகச் சீறிடின்
யாரி யார்[2]அஞ்சல்[3] என்பவர்?" என்றனன்.

[1]தண்ணீரியார்—தண்ணீர் யார் (இகரம் சந்தியாக வந்த குற்றியலிகரம்). [2]யாரி யார்—யார் யார் (இங்கும் இகரம் குற்றியலிகரம்).
[3]பயப்படாதே. [நீரியாவர் தருவர் என்றும் பாடம்.]

"தாயும் தந்தையும் தஞ்சமும் தெய்வமும்
நீஉண் டென்று நினைத்திருந் தோம்"எனச்
சேயும்[1] வேந்தும் திரு[2]வும் அமைச்சனும்
போய்"உன் பாதம் புகல்" என்று பூண்டனர்.

[1]சேய்—பிள்ளை. [2](லக்ஷ்மிபோன்ற) மனைவி.

முனிவர்

"அன்னை என்பை அருந்துணை என்பை;உன்
முன்னை வாழ்வும் முதல்வனும் என்பை.மற்
றென்னை இப்படி வெல்பவன் இச்சமர்த்
துன்னை யல்லது கண்டிலன் உண்மையே"

அரசன்

"கண்ணை வேண்டினும் ஈகுவன். காக்கின்ற
மண்ணை வேண்டினும் வாழ்வுடன் ஈகுவன்.
பண்ணை வேண்டிய செஞ்சொல் பறைக்குலப்
பெண்ணை வேண்டிலன் யான்"என்று பேசினன்.

அரிச்சந்திரனுடைய அரசியலை முனிவர் ஏற்றல்.

மன்னர் மன்னன் உரைத்திட மாதவன்
"அன்ன தேநமக் காம்"என் றவாவுறீஇ[1]ச் [1]ஆசைகொண்டு.
"சொன்ன தேஅமை யும்.கடல் சூழ்புவி
என்ன தே"என் றெழுந்தெழுந் தாடினன்.

[அவாவறீஇ என்ற பாடத்துக்கு ஆசையற்று, அதாவது பூமியை ஆள்வதாகிய ஆசை அற்று என்பது பொருள்.]

"மருவும் நாடும் வளநக ரும்பெருந்
திருவும் ஈகுவன் என்றனை. செவ்வியோய்,
'தருவன்' என்ற மொழிதவ றுமல்உன்
அரச ளிக்கின் அமையும்" எனச்சொனன்.

அந்த ணாளனை நோக்கி,அவ் வண்ணலும்,
"உந்தம் மக்கள் உறுநலன் வேண்டிலேன்.
எந்தம் நாடும் இருநிதிக் குப்பை[1]யும்
தந்த னன்.மொழி தப்புவ தில்"என்றான்.

[1]மிக்க செல்வத்தின் குவியல்

"பாரை[1] வார்த்தையி னுல்தரற் பாலதோ?
தாரை வார்[2]"எனக் கௌசிகன் சாற்றிட,
நாரை வாய்க்கயல் பாயும் நறுந்தட[3]
நீரை வார்த்தனன் "நீள்புவி ஆள்"கெனு.

[1]பூமியை. [2]தாரைவார்த்துக்கொடு—தத்தம்பண்ணி நீர் விட்டுக்கொடு. தாரை—stream of water poured on the righthand of the receiver in making grants or donations. [3]தடம்—தடாகம்.

என்று மன்னன் இயம்பி இறைத்தநீர்
அன்று கௌசிகன் அங்கையில் ஏற்றபின்,
நின்ற மாதவர் தங்களை நேர்குறித்
"தின்று நீர்எழுந் தார்த்திடும்" என்றனன்.

கோசிகன் இன்னே கூறிய பின்,கூ கூவென்றே
ஆசிகள் சொன்னூர்; ஆடினர்; ஆர்த்தார்; அணியாடை
வீசினர்; நீயே மேன்மக னென்று மேன்மேலும்
பேசினர்; பேசி மாசனர்[1] நேசம் பெரிதுற்ருர். [1]மஹாஜனங்கள்.

மென்னடை அன்ன நன்னடை யாளை விறலானை
முன்அடை யாநின், றின்னவை பின்னும் முனிகூறும்:—
"என்னகர் நின்றே இவ்வுல கெல்லாம் யான்ஆள
நின்அடை யாளம்[1] தந்திடு மாரு நெறி[2]"என்ருன்.

[1]முத்திரை: முத்திரை மோதிரம்—ராஜமுத்திரைமோதிரம். [2]தவருத வழியால்.

"வாழிய[1] நாரேர் செல்வம் அமைச்சென் மாசேனை [2]முகபாடம்.
சூழி[2]நெடுங்கைப் போர்மத வேழம்[3] துரகம்[4]தேர் [3]யானை.
ஊழி[5]யின் மட்டும் ஆளுதி, தந்தேன் உன"வென்றே [4]குதிரை.
ஆழி[6]அளித்தான், பாருள மட்டும் அழியாதான். [6]மோதிரம்.

[1]வாழ்வையுடையதான. [5]ஊழிகாலம்—உலகமுடிவு.

அப்புறம் அரசன் "இனி நான் போகிறேன். விடைகொடும்" என்று நமஸ்கரித்தான்.

துணியும் தனிநெஞ் சுடையான், "நினது தோள்மாலை [1]கங்கணம்.
மணியும், வளை[1]யும், வலயங்[2] களும்,நின் வடிவாளும், [2]கேயூரம்.
அணியும், முடியும், சேயும் தாயும் அணியும்பொற் [3]பொன்னுபரணம்.
பணி[3]யும், கழலும்[4] தந்தே"கென்று பலசொன்னுன். [4]வீரக்கழல்.

உடனே அரசன் அவைகள் எல்லாவற்றையும் கழற்றிக்கொடுத்தனன்.

"உனையும் மடமா தினையும் அரசே, உன்மைந்தன்
றனையும் விடுதற் கணியும் பணிநீ தந்தாய்காண்.
வனையும்[1] கழலாய், மகனும் நீயும் மடவாளும் [1]தரித்திருக்கும்.
புனையும் கிரணக் கலை[2]தந் தகலப் போ"என்றான். [2]ஒளிபொருந்திய வஸ்திரம்.

"ஆரை இரப்போம் ஆடை யளித்தால்? அரனே!"என்
றாரை அளித்த காவலன் நின்றே உயிர்சோரும்
தாரை[1] நினைந்தே, கௌசிகன் ஆங்குத் தான்மூடும் [1]கண்ணீர்த்தாரை.
சீரை[2] கிழித்தே மூவகை யிட்டுச் செலவுய்த்தான். [2]மரவுரி.

"நாறல் பாழ்ந்துணி; சீலைப் பேன்ஒரு நாள்மாறாப்
பீறற் சீலை[1];இ தாருக்" கென்றுரை பேசாமே,
"மாறல் காலம்இ தாகின் செய்வதென் மற்"றென்னக்,
கூறற் காம்இசை[2]பூண்அக் கோன்அது கொண்டானே.

[1]கிழிந்த வஸ்திரம். [2]சொல்லுதற்குத்தக்க கீர்த்தி.

காசிச்சீரையை உடுத்து, களைந்த கூறையாடைகளை முனிவரெதிரில் வைத்து, "விடைதாரும்" என்று அரசன் கேட்டான்.

"தா"என் றான்."விடை தந்தேன். நீஒரு சார்பூடு[1] [1]ஒருபுறத்திலே.
போ"என் றான்."இது வேநலன்"என்னப் போவானை
"வா"என் றான்.அது கேளா[2] மீளவும் வந்தெய்தி [2]கேட்டு
"யா?என் றான்இனி ஈகுவ எந்தாய் யான்[3]"என்றான்.

[3]எந்தாய் இனி யான் ஈகுவ யா என்றான்—சுவாமி இனி யான் கொடுப்பன என்னதான் என்றான்.

அரசியலை ஏற்றபிறகு யாகத்துக்குரிய பொருளைக் கொடுவென்று வலியுறுத்தல்.

முனிவர்

"செந்தேன் ஓடும் தண்பணை[1]சூழும் திருநாடா, [1]வயல்.
வந்தே நானும் மாமுனி வோரும் வளர்வேள்விக்(கு)
உந்தேம்[2] நண்ணி இரந்த[3] பசும்பொன் உளவெல்லாம்
தந்தே போவாய்"என்றிறை யோனைத் தடைசெய்தான்.

[2]உம் தேம்—உம்முடைய தேசம். [3]யாசகக்கேட்ட.

அரசன்

"முன்னம் உனக்குச் சொன்ன திறத்தின் மொழிமாறி,
அன்னது கைக்கொண் டிந்நிதி தந்தே னல்லேன்யான்.
நன்னக ரோடு பொன்னுள முற்றும் நனி[1]தந்தேன். [1]மிகுதியாக.
இன்னம் உனக்குப் பொன்தர என்பால் இடமுண்டோ?

முனிவர்

"தாருட னேசெந் தாமரை யாள்[1]சேர் தட[2]மார்பா, [1]லக்ஷ்மி.
யாருட னேஇம் மோசம் உரைப்பாய்? அறிவில்லாய்! [2]விசாலமான.
ஊருட னேமுன் கூறிய பொன்னும் உடனென்றே[1] [1]கூடச் சேர்ந்தென்று.
நீருட னேநீ பேசி யளித்த நெறிஉண்டோ?

"சொன்னது மாறார் பானு[1] குலத்தில் தொல்[2]வேந்தர். [1]சூரியன்.
அன்னது காணேம் நின்னிடை" என்றான். அதுகேளா[3] [2]பழைய.
மன்னவன் உள்ளம் நொந்தற[4] நாணி, "மதிவல்லோய், [3]கேட்டு.
இன்னமும் ஒன்றுண்"டென்ன இரங்கே இவைகூறும்:— [4]மிகவும்.

"நித்த[1] னைப்பிர மனைஅனை யாய்,நினை வழிந்த
பித்த னைப்பொருள் வினயினை, எங்குயான் பெறுகோ[2]?
இத்த னைத்தினத் தீவதென் றியம்புவை யெனின்,யான்
அத்த னைக்குள்நின் பொருள்தர அவதி[3]ஈ[4]" கென்றான்.

[1]சிவன். [2]பெறுவேனோ. [3]அளவு (கால அளவு). [4]ஈக—கொடுப்பாயாக.

"ஊரும் நாடும்நீள் மலைகளும் கானமும் உழன்றே
யார்உ ளோடிமுப் புண்பவர்? அவதியார் இடுவார்?
சோரம் உள்ளநீ கூறும்அப் பொருள்தனைச் சொரிந்து
பேர்,அ டா,உனைத் தடுத்தனன்; பேர்கலே" என்றான்.

பக்கம் நோக்கிலன், பார்மிசை விழுந்தடி பூண்டு,
கக்கல் வந்திட மிடற்றினை ஒடுக்கும்அக் கதைபோல்,
விக்க லும்பொரு மலும்மிசை மிசையெழ, விரிநீர்
உக்க கண்ணன்,வா யூறுநீர் வற்றிட உரைப்பான்.

2nd line—ஒருவனுக்குக் கக்குதல் வந்தபோது மற்றொருவன் வந்து அவன் கழுத்தை நெருக்கிப்பிடித்த கதைபோல.

"'இழைத்த தீவினை பொறுத்தனன். அரசுதா' என்னத்
தழைத்த அன்பொடு தந்துயான் அகன்றிடு காலை
அழைத்த நீ,எனக் கவதியிட் டாள்விடின், ஐய,
பிழைத்த னன்.இதோர் பெரும்புகழ் பெறுதி"என் றிரந்தான்.

"சுற்றுண் டாகிய மலைகளில் வனங்களில் தொட்[1]டுன்
பற்று[2]ண் டாகிய பதிகளில் படுபொருள்[3] அல்லால்,
உற்றுண் டாகிய நிதியம்உன் திருவுளம் உணர
மற்றுண்டா மெனின் விளம்பிடு வழங்கிட" என்றான்.

[1]தொடர்தலாய். [2]உன்பற்று—உன் சம்பந்தம். [3]உண்டானபொருள்.

"ஆம்இ தேயெனின், அரச,கேள், அவதியான் உரைப்பன்.
ஏம கூடமும் காசியும் அன்றியில் இப்பால்
தாம மார்ப,நீ தந்தனன் ஞ(ு).இதற் கப்பால்
போம துண்டெனில், பொருளும்அப் பொருளலா தளியேல்.

"இந்த எல்லையில் இப்பொருள் ஈதலல் லாமல்
அந்த எல்லையில் பொருள்தர வல்லையே யானல்,
முந்து நீசொன்ன முறைமையால் அவதியான் ஈவேன்.
தந்திடா யெனின் சத்தியம் ஏ"தெனச் சாற்றும்.

அரசன்

"நிற்பி ழைத்திடின் நினக்குயான் அருநிதி யளிக்கும்
சொல்பி ழைத்திடின் சூளுற[1] வேதெனின், சொல்வல்[2].
கற்பி ழைத்தநற் சொல்பர தாரத்தைக் கருதி
இற்பி ழைத்தவன்[3] ஆவன்,நின் அருநிதி கொடேனேல்."

[1]சபதவார்த்தை. [2]சொல்வேன். [3]இல்லறம் வழுவநடந்தவன்.

"காசி நாட்டினில் சென்றஅந் நாளில்உன் கனகம்
ஆசில் மாதவ, அளிப்பன்அவ் வவதியில். அது நீ
பேசி டாய்"என, "இருபது நாளையின் பின்பு
மூசி[1] வண்டுறை தாரினேய், தரு"கென மொழிந்தான். [1]நெருங்கி.

அரசன்

"அங்குற் றெய்தநாள் அம்முறைக் கிருமடங் கடங்கா.
எங்குற் றீட்டுவ திப்பொருள்? ஐய,"என் றியம்ப,
"நம்குற் றம்இலை. நாற்பதிற் றெட்"டென நவின்றான்.
"உம்குற் றம்இதற் குள்கொடா தொழிந்திடில்" என்றான்.

"இப்புத் திக்கினி தொத்தனன், ஆள்விடு" கென்று
குப்புற்[1] றேகலும், கௌசிகன் மீளவும் கூவித் [1]குதித்து.
"தப்புத் தீர்தரத் தந்தஅப் பொருளெலாம் பதிவந்
தொப்புத் தந்துபின் போ"என மன்னனுக் குரைத்தான்.

### அரசியலை நேரில் ஒப்படைத்துப் போகும்படி அழைத்தல்.

"பார்அ ளித்தனை. புரக்கநின் பதியிடைச் சென்றால்,
'ஆர்அ ளித்தனர்?' என்பர்நின் அடியவ ரெல்லாம்.
ஊர்அ ளித்திட உடன்வரத் துணிதி.ஈ தொழியின்,
நீர்அ ளித்ததே எனக்கு;மண் நினக்"கென மொழிந்தான்.

4th line–தாரைவார்த்தது மாத்திரமே எனக்கு லாபம், உனக்குத்தான் பூமி என்று முடிவுபெறும்.

# முதலாயிரம்.

## திருமாலை.

இது தொண்டரடிப்பொடியாழ்வார் செய்தருளியது. இவர் அந்தணர். இவர் அவதரித்த தலம் திருமண்டங்குடி; இது சோழநாட்டிலுள்ளது. இவர்க்கு "விப்பிரநாராயணர்" என வேறொரு திருநாமமுண்டு. இவ்வாழ்வார் பிறவியி னிழிவை எடுத்துக்காட்டி, அதனைக் கடந்து ஈறிலின்பமெய்துதற்குச் சாதனமான திருமாலின் திருநாம வைபவத்தைத் தாமனுபவித்து, பிறரையும் அனுபவிப்பித்து, திருமாலை உவப்பிக்கிற செய்தி இதனுள் கூறப்பெறுகின்றது. இப்பாமாலை பூமாலைபோல்வதொன் றாதலின் "திருமாலை" எனப்பெற்றது.

---

1\. * வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவ ரேலும்
பாதியு முறங்கிப் போகும் நின்றதிற் பதினை யாண்டு
பேதைபா லகன தாகும் பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டே னரங்கமா நகரு ளானே!

* Compare the Psalms of David: 'The days of our years are three score years and ten and if by reason of strength they be four score years, yet is their strength labour and sorrow.'

பதினையாண்டு-ஐம்பது வருஷம். அது-யௌவனம்.

2\. வண்டின முரலும் சோலை மயிலின மாலும் சோலை
கொண்டல்மீ தணவும் சோலை குயிலினம் கூவும் சோலை
அண்டர்கோ னமரும் சோலை அணிதிரு வரங்க மென்னா
மிண்டர்பாய்ந் துண்ணும் சோற்றை விலக்கிநாய்க் கிடுமி னீரே.

முரலும்-ஊளத்தி வைக்கும். ஆலும்-நாட்டியம் செய்யும். அணவும்-படியும். மிண்டர்-மூர்க்கர்.

3\. மெய்யர்க்கே மெய்ய னாகும் விதியிலா வென்னைப் போலப்
பொய்யர்க்கே பொய்ய னாகும் புட்கொடி யுடைய கோமான்
உய்யப்போ முணர்வி னார்கட் கொருவனென் றுணர்ந்த பின்னை
ஐயப்பா டறுத்துத் தோன்று மழகனூ ரரங்க மன்றே.

விதி இலா-நல்லூழ் பெறாத. புட்கொடி-கருடத்வஜம். உய்யப்போம் உணர்வினார்-உஜ்ஜீவிக்கும் உபாயத்தைத் தேடவேண்டும் என்னும் அறிவு பிறந்தவர்.

4. விரும்பிநின் றேத்தமாட்டேன் விதியிலேன் மதியொன் றில்லை
இரும்புபோல் வலிய நெஞ்ச மிறையிறை யுருகும் வண்ணம்
சுரும்பமர் சோலை சூழ்ந்த வரங்கமா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டு கொண்டென் கண்ணிணை களிக்கு மாறே.

விதி—அஞ்சலிபந்தம் முதலியன செய்யும் நியதி. இறை இறை—கொஞ்சங் கொஞ்சமாய்.

5. குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட் டோடித்
தரங்கநீ ரடைக்க லுற்ற சலமிலா வணிலும் போலேன்
மரங்கள் போல் வலிய நெஞ்ச வஞ்சனேன் நெஞ்சு தன்னால்
அரங்கனார்க் காட்செய் யாதே அளியத்தே னயர்க்கின் றேனே.

நூக்க—தள்ளிக்கொண்டு வர. அடைக்கல்—தூர்த்தல். சலம்—குற்றம். அளியத்தேன்—ஆருமற்ற மனுஷ்யனான நான்.

6. ஊரிலேன் காணி யில்லை உறவுமற் றொருவ ரில்லை
பாரில்நின் பாத மூலம் பற்றிலேன் பரம மூர்த்தி!
காரொளி வண்ண னே! யென் கண்ணனே! கதறு கின்றேன்
ஆருளர்? களைக ணம்மா! அரங்கமா நகரு ளானே!

களைகண்—ஆதரவு.

7. மனத்திலோர் தூய்மை யில்லை வாயிலோ ரின்சொ லில்லை
சினத்தினாற் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன் வாளா
புனத்துழாய் மாலை யானே! பொன்னிசூழ் திருவ ரங்கா!
எனக்கினிக் கதியென்? சொல்லா யென்னையா ளுடைய கோவே!

செற்றம்—பகைமை. தீவிளி விளிவன்—மிகக் கொடுமையாக வார்த்தை சொல்லுவேன். வாளா—வீணாக. பொன்னி—காவேரி. கதி—போக்கடி.

8. வானுளா ரறிய லாகா வானவா என்ப ராகில்
தேனுலாந் துளப மாலைச் சென்னியாய் என்ப ராகில்
ஊனமா யினகள் செய்யு மூனகா ரகர்க ளேலும்
போனகம் செய்த சேடம் தருவரேல் புனித மன்றே

வானவா — பரமபதத்திலுள்ளவனே. ஊனமாயினகள் — கொலை முதலியன. ஊனகாரகர்கள்—பிறரால் கொல்விப்போர். போனகம் செய்த சேடம் — அமுது செய்து மிகுந்த ப்ரஸாதம்.

9. பழுதிலா வொழுக லாற்றுப் பலசதுப் பேதி மார்கள்!
இழிகுலத் தவர்க ளேலு மெம்மடி யார்க ளாகில்
தொழுமினீர் கொடுமின் கொண்மி னென்றுநின் னோடுமொக்க
வழிபட வருளி னாய்போன் மதிள்திரு வரங்கத் தானே.

சதுப்பேதிமார்—சதுர்வேதிகளாயிருப்பவர்களே! ஒழுகலாறு—வமிசபரம்பரை, அனுஷ்டானமுமாம்.

10. அமரவோ ரங்க மாறும் வேதமோர் நான்கு மோதித்
தமர்களில் தலைவ ராய சாதியந் தணர்க ளேலும்
நுமர்களைப் பழிப்ப ராகில் நொடிப்பதோ ரளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலு மரங்கமா நகரு ளானே!

அமர—ஸாவதானமாக. நமர்—தாஸபூதர், அடியார்.



# பெரிய திருமொழி.

— ⸻ —

"பெரிய திருமொழி" என்னும் இப்பிரிவு, நாலாயிரத்தில் இரண்டாமாயிரம். இது மற்றைப் பிரிவுகளினும் பெரியதாதலின் "பெரிய திருமொழி" எனப் பெயர்பெற்றது. இதனைப் பாடியருளினவர் திருமங்கையாழ்வார். இவர் அவதரித்த தலம் திருக்குறையலூர்; சோழநாட்டிலுள்ளது. இவர்க்குக் 'கலியன்', 'நாற்கவிப்பெருமாள்' முதலிய வேறு திருநாமங்களு முள.

## முதற்பத்து-3-ம் திருமொழி.

### முற்ற மூத்து.

உடலினது நிலையின்மையையும், சிற்றின்பத்தின் இழிவையும், பற்றப்படற்குரிய விஷயத்தின் உயர்வையும் இவ்வாழ்வார் எடுத்துரைத்து, 'இவ்வுடல் நசிப்பதன்முன், திருமால் எழுந்தருளியிருக்கிற திருவதரியை அடைந்து உய்வாயாக' என்று நெஞ்சை நோக்கி உபதேசிக்கிற விஷயம் சொல்லப்பெறுகின்றது.

1. முற்ற மூத்துக் கோல்துணையா முன்னடி நோக்கிவளைந்து
இற்ற கால்போல் தள்ளி மெள்ள விருந்தங் கிளையாமுன்
பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடு—உயிரை
வற்ற வாங்கி யுண்ட வாயான் வதரி வணங்குதுமே.

அங்கு—ஓரிடத்தில். பேய்ச்சி—பூதனை. வதரி—விஷ்ணுப்பிரயாகை என்பர்.

2. முதுகு பற்றிக் கைத்த லத்தால் முன்னொரு கோலூன்றி
விதிர்வி திர்த்துக் கண்சு ழன்று மேற்கிளை கொண்டிருமி
இதுவென் னப்பர் மூத்த வாறென் றிளையவ ரேசாமுன்
மதுவுண் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே.

மேல்கிளை கொண்டு—மேலான த்வனியைக்கொண்டு.

3. உறிகள் போல்மெய்ந் நரம்பெ ழுந்தூன் தளர்ந் துள்ளமெள்கி
நெறியை நோக்கிக் கண்சு ழன்று நின்று நடுங்காமுன்
அறிதி யாகில் நெஞ்ச மன்பா யாயிர நாமஞ்சொல்லி
வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே.

எள்கி—ஈடுபட்டு.

4. பீளை சோரக் கண்ணி டுங்கிப் பித்தெழ மூத்திருமித்
தாள்கள் நோவத் தம்மில் முட்டித் தள்ளி நடவாமுன்
காளை யாகிக் கன்று மேய்த்துக் குன்றெடுத் தன்றுநின்றான்
வாளை பாயும் தண்ட டஞ்சூழ் வதரி வணங்குதுமே.

பீளை—கண்ணழுக்கு. இடுங்கி—நெருங்கி. குன்று—கோவர்த்தனம்.

5. எய்த்த சொல்லோ டீளை யேங்கி யிருமி யிளைத்துடலம்
பித்தர் போலச் சித்தம் வேறாய்ப் பேசி யயராமுன்
அத்த னெந்தை யாதி மூர்த்தி யாழ்கட லைக்கடைந்த
மைத்த சோதி யெம்பெ ருமான் வதரி வணங்குதுமே.

எய்த்த—இளைத்த. ஈளை—கோழை. அயர்தல்—தளர்தல். மைத்த—கறுத்த.

6. ஈசி! போமி னீங்கி ரேன்மி னிருமி யிளைத்தீர்உளம்
கூசி யிட்டீ ரென்று பேசும் குவளையங் கண்ணியர்பால்
நாச மான பாசம் விட்டு நன்னெறி நோக்கலுறில்
வாச மல்கு தண்டு ழாயான் வதரி வணங்குதுமே.

ஈசி—சீசீ. கூசியிட்டீர்—கூசினீர்.

7. புலன்கள் நைய மெய்யில் மூத்துப் போந்திருந் துள்ளமெள்கிக்
கலங்க ஐக்கள் போத வுந்திக் கண்ட பிதற்றாமுன்
அலங்க லாய தண்டு ழாய்கொண் டாயிர நாமஞ்சொல்லி
வலங்கொள் தொண்டர் பாடி யாடும் வதரி வணங்குதுமே.

ஐக்கள் — கபம். போத உந்தி—மிகவும் தள்ளி. அலங்கல்—மாலை. வலங்கொள்—ப்ரதக்ஷிணம் பண்ணும்.

8. வண்டு தண்டே னுண்டு வாழும் வதரி நெடுமாலைக்
கண்டல் வேலி மங்கை வேந்தன் கலிய னொலிமாலை
கொண்டு தொண்டர் பாடி யாடக் கூடிடில் நீள்விசும்பில்
அண்ட மல்லால் மற்ற வர்க்கோ ராட்சி யறியோமே.

கண்டல்—தாழை.

---

## மூன்றும் பத்து-4-ம் திருமொழி.

### ஒருகுறளாய்.

'நீங்கள் ஸர்வேசுவரனை அடைதற்குச் செய்யும் சாதனங்களை அவன் உங்களைப் பெறுதற்காக அவதாரம் முதலியவற்றாலே செய்துகொண்டு, திருக்காழிச் சீராமவிண்ணகரத்தே வந்து நிற்கின்றான். அவனினும் அவனுவந்த ஊரை அடைவதே அமையும்; அங்கே போய் உய்வீராக' என்று இவ்வாழ்வார் உயிர்களுக்கு உபதேசிக்கின்ற விஷயம் இப்பதிகத்துட் கூறப்பெறுகின்றது.

1. ஒருகுறளா யிருநிலமூ வடிமண் வேண்டி
யுலகனைத்து மீரடியா லொடுக்கி யொன்றுந்
தருகவெனு மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் றாளணைவீர்! தக்க கீர்த்தி
யருமறையின் றிரள்நான்கும் வேள்வி யைந்தும்
அங்கங்க ளவையாறு மிசைக ளேழும்
தெருவில்மலி விழாவளமுஞ் சிறக்குங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

குறள்—வாமந வடிவம். இரு—பெரிய. ஒன்றும்—மற்றை ஓரடியும். மாவலி—மஹாபலி. தாடாளன்—மேன்மையுடையவன். காழி—சீகாழி.

2. நான்முகனுள் மிகைத்தருக்கை யிருக்கு வாய்மை
நலமிகுசீ ருரோமசனால் நவிற்றி நக்க
னூன்முகமார் தலையோட்டூ ணொழித்த வெந்தை
யொளிமலர்ச்சே வடியணைவீர்! உழுசேயோடச்
சூன்முகமார் வளையளைவா யுகுத்த முத்தைத்
தொல்குருகு சினையெனச்சூழ்ந் தியங்க—எங்கும்
தேன்முகமார் கமலவயல் சேல்பாய் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

இருக்கு வாய்மை — வேதத்தை உச்சரித்தல். உரோமசன் — திருக்கண்ண மங்கையில் இஷ்டஸித்தி யடைந்த ஓர் இருடி. நக்கன்—சிவன். (சரோருகாண்டம் விண்டால் ஒரு மயிர் சலிக்கும் செய்தகை உரோமசமுனிவர்.) உழுசேய்—உழும் எருதுகள்.

3. வையணைந்த நுதிக்கோட்டு வராக மொன்றாய்
மண்ணெல்லா மிடந்தெடுத்து மதங்கள் செய்து
நெய்யணைந்த திகிரியினால் வாணன் திண்டோள்
நேர்ந்தவன்தா ளணைகிற்பீர்! நெய்த லோடு
மையணைந்த குவளைகள்தங் கண்க ளென்றும்
மலர்க்குமுதம் வாயென்றுங் கடைசி மார்கள்
செய்யணைந்து களைகளையா தேறுங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

வை—கூர்மை. நுதி-முனை. இடந்து - பிளந்து. வாணன் - பாணாஸுரன். செய்—வயல்.

4. பஞ்சியமெல் லடிப்பின்னை திறத்து முன்னாள்
பாய்விடைக ளேழடர்த்துப் பொன்னன் பைம்பூண்
நெஞ்சிடந்து குருதியுக வுகிர்வே லாண்ட
நின்மலன்தா ளணைகிற்பீர்! நீல மாலைத்
தஞ்சுடைய விருள்தழைப்பத் தரள மாங்கே
தண்மதியின் நிலாக்காட்டப் பவளந் தன்னால்
செஞ்சுடர்வெ யில்விரிக்கு மழகார் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

பஞ்சிய—செம்பஞ் சூட்டிய, பஞ்சுபோன்ற எனவுமாம். பின்னை—நப்பின்னைப் பிராட்டி. பொன்னன்—இரணியன். உகிர்வேல்—நகங்களாகிய வேல். தஞ்சு—தஞ்சம்.

5. தெவ்வாய மறமன்னர் குருதி கொண்டு
திருக்குலத்தி லிறந்தோர்க்குத் திருத்தி செய்து
வெவ்வாய மாகீண்டு வேழ மட்ட
விண்ணவர்கோன் தாளணைவீர்! விகிர்த மாத
ரவ்வாய வாள்நெடுங்கண் குவளை காட்ட
அரவிந்த முகங்காட்ட அருகே யாம்பல்
செவ்வாயின் திரள்காட்டும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

முதலடி பரசுராமாவதாரத்தைச் சுட்டுகிறது. மா—குதிரைவடிவாய் வந்த கேசி யென்னும் அஸுரன். வேழம்—குவலயாபீடம். விகிர்தம் மாதர்—வெவ்வேறான மகளிர்.

6. பைங்கண்விறற் செம்முகத்து வாலி மாளப்
படர்வனத்துக் கவந்தனொடும் படையார் திண்கை
வெங்கண்விறல் விராதனுக விற்கு னித்த
விண்ணவர்கோன் தாளணைவீர்!-வெற்புப் போலும்
துங்கமுக மாளிகைமே லாயங் கூறும்
துடியிடையார் முகக்கமலச் சோதி தன்னால்
திங்கள்முகம் பனிபடைக்கு மழகார் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

விறல்—மிடுக்கு. துங்கம் முகம்—உயர்ந்த முன்பிரதேசம். ஆயம் கூறும்—தோழமை சொல்லி அழைக்கிற.

7. பொருவில்வலம் புரியரக்கன் முடிகள் பத்தும்
புற்றுமறிந் தனபோலப் புவிமேற் சிந்தச்
செருவில்வலம் புரிசிலைக்கை மலைத்தோள் வேந்தன்
திருவடிசேர்ந் துய்கிற்பீர்! திரைநீத் தெள்கி
மருவிவலம் புரிகைதைக் கழியூ டாடி
வயல்நண்ணி மழைதருநீர் தவழ்கால் மன்னித்
தெருவில்வலம் புரிதரள மீனுங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

வலம்புரி—பலங்கொண்ட. நீத்து—விட்டு. எள்கி—இளைத்து. வலம்புரி- சங்கம். கைதை—தாழை.

8. பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத்தன் னுந்தியிலே தோற்று வித்துக்
கறைதங்கு வேல்தடங்கண் திருவை மார்பிற்
கலந்தவன்தா ளணைகிற்பீர்! கழுநீர் கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணிச்
சிறைவண்டு களிபாடும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

திரு-இலக்குமி. கழுநீர்—செங்கழுநீர். பொதிசோறு—(தாழம்பூவுள்) நிறைந்த தாதுக்கள்.

9\. செங்கமலத் தயனனைய மறையோர் காழிச்
சீராம விண்ணகரென் செங்கண் மாலை
அங்கமலத் தடவயல்சூ ழாலி நாடன்
அருள்மாரி யரட்டமுக்கி யடையார் சீயம்
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்
கொற்றவேற் பரகாலன் கலியன் சொன்ன
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூ ழுலகுக்குத் தலைவர் தாமே.

அரட்டமுக்கி—விரோதிகளைத் தலையெடுக்கவொட்டாமல் செய்பவர். அடையார்—பகைவர்.



# திருவாய்மொழி.

திருவாய்மொழியைச் செய்தருளியவர் நம்மாழ்வார் என்கின்ற ஸ்ரீ சடகோப முனிவர். இவர் மற்றைய ஆழ்வார்களுக்கெல்லாம் தலைவராவர். இவரது அவதாரஸ்தலம் திருக்குருகூர். இது பாண்டியநாட்டிலுள்ளது. இவர்க்கு 'மாறன்' முதலிய வேறு திருநாமங்களு முள. இவரது வருணம் வேளாள வருணம்.

'திருவாய்மொழி' என்னும் இப்பிரிவு நாலாயிரத்தில் இறுதியானது. மற்றை மூவாயிரமும் இதற்கு அங்கமெனப் பெறும். 'திருவாய்மொழி' என்பதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர்; அது கேட்டுணர்க; ஈண்டுரைப்பின் விரியும்.

## மூன்றாம்பத்து: 9-ம்—திருவாய்மொழி.

### சொன்னால் விரோதம்.

பகவத் குணானுபவத்தில் பெருவிருப்புடைய ஆழ்வார், 'உலகினரைத் துதிப்பதனால் பயனில்லை' எனவும், 'திருமாலைத் துதித்தால் எல்லா நற்பயன்களும் கைகூடும்' எனவும், 'ஆகவே அவனை என்றேனும் துதிக்க வம்மின்' எனவும் உபதேசிப்பது இப்பதிகத்தின் கருத்து.

1. சொன்னால் விரோதமி தாகிலுஞ் சொல்லுவன் கேண்மினோ
என்னாவி லின்கவி யானொரு வர்க்குங் கொடுக்கிலேன்
தென்னா தெனாவென்று வண்டு முரல்திரு வேங்கடத்
தென்னானை யென்னப்ப னெம்பெரு மானுள னாகவே.

தென்னா தெனாவென்று—மதுவிருப்பத்தாலே தென்னா தென்னாவென்று. என் ஆனை—எனக்கு ஆனைபோல் அநுபாவ்யனானவன்.

2. உளனாக வேயெண்ணித் தன்னையொன் றாகத்—தன் செல்வத்தை
வளனா மதிக்குமிம் மானிடத் தைக்கவி பாடியென்?
குளனார் கழனிசூழ் கண்ணன் குறுங்குடி—மெய்ம்மையே
உளனாய வெந்தையை யெந்தைபெம் மானை யொழியவே.

எந்தைபெம்மான்—என் குலநாதன்.

3. ஒழிவொன் றிலாதபல் லூழிதோ றூழி நிலாவப்—போம்
வழியைத் தருநங்கள் வானவ ரீசனை நிற்கப்போய்க்
கழிய மிகநல்ல வான்கவி கொண்டு புலவீர்காள்!
இழியக் கருதியோர் மானிடம் பாடலென் னாவதே.

வழி—வழிப்பாடான கைங்கர்யம். நிற்க—ஒழிய.

4. என்னாவ தெத்தனை நாளைக்குப் போதும்? புலவீர்காள்!
மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள்
மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால்
தன்னாக வேகொண்டு சன்மஞ்செய் யாமையுங் கொள்ளுமே.

தன்னாகவேகொண்டு—தனக்கே யாகக்கொண்டு. சன்மஞ் செய்யாமை—பிறப்பறுத்தல்.

5. கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை
வள்ளல் புகழ்ந்துநும் வாய்மை யிழக்கும் புலவீர்காள்!
கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல் லாந்தருங் கோதில்என்
வள்ளல் மணிவண்ணன் றன்னைக் கவிசொல்ல வம்மினோ.

கிளர்த்தன்ன—கிளறினாற்போன்ற. வள்ளல் புகழ்ந்து—உதாரமாகப் பாடி.

6. வம்மின் புலவீர்! நும் மெய்வருத் திக்கைசெய் துய்ம்மினோ
இம்மன் னுலகினிற் செல்வரிப் போதில்லை நோக்கினோம்
நும்மின் கவிகொண்டு நும்நுமிட் டாதெய்வ மேத்தினால்
செம்மின் சுடர்முடி யென்திரு மாலுக்குச் சேருமே.

கைசெய்து—கைத்தொழில் செய்து. இட்டாதெய்வம்—இட்டதேவதை.

7. சேருங் கொடைபுக ழெல்லையி லானையோ ராயிரம்
பேரு முடைய பிரானையல் லால்மற்று யான்கிலேன்
மாரி யனையகை மால்வரை யொக்குந்திண் டோளென்று
பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும்பொய்கள் பேசவே.

எல்லையிலான்—எல்லை கடந்திருக்குமவன். பற்றை—சிறுதூறு; தூறுபோல் நிஷ்பிரயோசனமானவன். கிலேன்—சக்தனல்லேன். இங்ஙனம் கில் பகுதியாகத் தேவாரத்திலும் வருகின்றது.

8. வேயின் மலிபுரை தோளிபின் னைக்கு மணாளனை
ஆய பெரும்புக ழெல்லையி லாதன பாடிப்போய்க்
காயங் கழித்தவன் தாளிணைக் கீழ்ப்புகுங் காதலன்
மாய மனிசரை யென்சொல்ல வல்லேனென் வாய்கொண்டே.

வேயின் மலிபுரை மூங்கிலைப்பார்க்கிலும் மேம்பட்ட ஒப்பு. பின்னை—நப்பின்னைப் பிராட்டி. காயம்—சரீரம். காதலன்—ஆசையுடைய நான்.

9. வாய்கொண்டு மானிடம் பாடவந் தகவி யேனலேன்
ஆய்கொண்ட சீர்வள்ள லாழிப் பிரானெனக் கேயுளன்
சாய்கொண்ட விம்மையுஞ் சாதித்து-வானவர் நாட்டையும்
நீகண்டு கொள்ளென்று வீடுந் தரும்நின்று நின்றே.

சாய்-மென்மை. நின்றுநின்று-முறையாக.

10. நின்றுநின் றுபல நாளுய்க்கு மிவ்வுடல் நீங்கிப்போய்ச்
சென்றுசென் றாகிலுங் கண்டுசன் மங்கழிப் பானெண்ணி
ஒன்றியொன் றியுல கம்படைத் தான்கவி யாயினேற்
கென்றுமென் றுமினி மற்றொரு வர்கவி யேற்குமே?

மற்றொருவர்கவி-மற்றொருவரைப் பாடுங்கவி.

11. ஏற்கும் பெரும்புகழ் வானவ ரீசன்கண் ணன்றனக்கு
ஏற்கும் பெரும்புகழ் வண்குரு கூர்ச்சட கோபன்சொல்
ஏற்கும் பெரும்புக ழாயிரத் துள்ளிவை யும்மோர்பத் து
ஏற்கும் பெரும்புகழ் சொல்லவல் லார்க்கில்லை சன்மமே



# தேவாரம்.

---

இராசராசச் சோழன் வேண்டுகோளின்படி நம்பியாண்டார் நம்பியால் வகுக்கப்பட்ட சைவத் திருமுறைகள் பதினொன்றனுள் முதலேழும் தேவார மெனப்படும். தேவார மென்பது தெய்வத்தன்மை பொருந்திய தெய்வப்பாடல் என்று பொருள்படும்; தே—தெய்வத்தன்மை; வாரம்—தெய்வப்பாடல்; தெய்வத்தைத் துதிக்கும் பாடல் தெய்வப்பாடல். வார மென்பதை வாளா பாடல் என்றுகொண்டு, தேவபாணி என்பதுபோலத் தேவார மென்பதும் தேவனைப் பரவும் பாடல் என்று பொருள்கொள்வது மொன்று.

தேவாரம் பாடினவர்கள் சம்பந்தர், அப்பர், சுந்தரர் என மூவர். அப்பரும் சம்பந்தரும் சமணரையும் புத்தரையும் வாதுசெய்தல் முதலியவற்றால் வென்று சைவசமயத்தை நிலைபெறச் செய்தமையால் இம்மூவரும் சைவ சமயாசாரியர் எனப்படுவர் அப்பருக்கு மறுபெயர் திருநாவுக்கரசர்; சம்பந்தரின் முழுப்பெயர் திருஞானசம்பந்த ரென்பது.

சம்பந்தரும் அப்பரும் ஒரேகாலத்தினர். சம்பந்தர் தமது தேவாரத்தில் சிறுத்தொண்டரை எடுத்துக் கூறியுள்ளார். (செங்காட்டங்குடி, 10). சிறுத்தொண்டர் வாதாவிகொண்ட நரசிம்ம போத்தரையன் என்னும் நரசிம்ம வர்ம பல்லவனிடம் மந்திரியாயிருந்து அவனுக்காகப் படையெடுத்துச் சென்று பழைய வாதாவி நகரத்தை அழித்தவர். இது ஏழாம் நூற்றாண்டினிடையில் நிகழ்ந்தது. ஆகவே அப்பர் காலமும் சம்பந்தர் காலமும் ஏழாம்நூற்றாண்டின் பிற்பகுதியாகும். சுந்தரர் சேரமான் பெருமாள் காலத்தவர். சேரமான் பெருமாள் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியி லிருந்தவ ரென்ப.

இம்மூவருடைய சரிதங்களை ஆறுமுகநாவலரெழுதிய பெரியபுராண வசனத்தில் பரக்கக் காணலாம்.

---

# தேவாரம்.

## சம்பந்தர்.

1 தோடு டையசெவி யன்விடை ஏறிஓர்
தூவெண் மதிசூடிக்
காடு டையசுட லைப்பொடி பூசிஎன்
உள்ளம் கவர்கள்வன்,
ஏடு டையமல ரான்முனை நாள்பணிந்
தேத்த அருள்செய்த
பீடு டையபிர மாபுர மேவிய
பெம்மான் இவன்அன்றே.

2. புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்
டைம்மேல் உந்தி
அலமந்தபோதாக, "அஞ்சேல்"என் றருள்செய்வான்
அமரும் கோயில்,
வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர
மழைஎன் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரம்ஏறி முகில்பார்க்கும்
திருவை யாறே.

---

1. தோடு—ஓலை; பெண்கள்காதணி. ஓலையாற் செய்யப்பட்டமையின் தோடெனப்பட்டது. ஏடு—இதழ். மலரான்—பிரமன். பீடு—பெருமை. பிரமாபுரம்—சீகாழி. பெம்மான்—பெருமான்.

2. ஐ—சிலேட்டுமம். அலமருதல்—அலம்வருதல், சுழலல். நடமாடும் மடவார்களை மின்னென்றும் முழவை இடி என்றும் எண்ணிக்கொண்டு மந்திகள் சுழன்று மரத்திலேறி முகிலை நோக்கும் என்க. அருள்செய்வான் அமருங்கோயில் திருவையாறு என முடிக்க. திருவையாறு—திருவாதி; இது தஞ்சாவூர்த் தாலுகாவிலுளது.

3 விடலேறு படநாகம் அரைக்கசைத்து வெற்பரையன்
பாவை யோடும்
அடலேறொன் றதுவேறி "அஞ்சொலீர்,பலி" என்னும்
அடிகள் கோயில்,
கடலேறித் திரைமோதிக் காவிரியின் உடன்வந்து
கங்குல் வைகித்
திடலேறிச் சுரிசங்கம் செழுமுத்தங் கீன்றலைக்கும்
திருவை யாறே.

4. ஊன்பாயும் உடைதலைகொண் டூரூரின் பலிக்குழல்வார்,
உமையாள் பங்கர்,
தான்பாயும் விடையேறும் சங்கரனார், தழலுருவர்,
தங்கும் கோயில்,
மான்பாய வயலருகே மரம்ஏறி மந்திபாய்
மடுக்கள் தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல மொட்டலரும்
திருவை யாறே.

5. சாடுபயில் வீடு,முடை ஓடுகலன், மூடும்உடை
ஆடை புலிதோல்,
தேடுபலி ஊணதுடை வேடமிகு வேதியர்
திருந்து பதிதான்,
நாடகம தாடமஞ்ஞை, பாடஅரி, கோடல்கை
மறிப்ப, நலமார்
சேடுமிகு பேடைஅனம் ஊடிமகிழ் மாடமிடை
தேவூ ரதுவே.

---

3. விடல்—விடர், மலைப்பிளப்பு. அசைத்தல்—கட்டுதல். பலி—பிச்சை. திடல்—திடர். சங்கம் கடல் ஏறி, மோதி, வந்து, ஏறி, முத்து இன்று அலைக்கும் என்க.

4. ஊரூரின்—ஊர்கள்தோறும்.

5. காடு—சுடுகாடு. முடை—நாற்றம். ஓடு—தலையோடு; ஆமையோடுமாம். வேதியரது பதி. அரி—வண்டு, கோடல்—காந்தள். சேடு—அழகு. திருத்தேவூர் நாகபட்டினந் தாலுகாவில் கீழ்வேளூருக்குத் தெற்கி லுள்ளது.

6. என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே,
இருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை?
முழுமணித் தாளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி ஆதரித் தேத்தியும் பாடியும்
வழிபடும் அதனாலே.

7. என்பினால் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந்
திதுநம் இல்லம்
புன்புலால் நாறுதோல் போர்த்துப்பொல் லாமையான்
முகடு கொண்டு
முன்பெலாம் ஒன்பது வாய்தலார் குரம்பையின்
மூழ்கி டாதே
அன்பன் ஆரூர்தொழு துய்யலாம் மையல்கொண்
டஞ்சல் நெஞ்சே.

8. கொட்டமுழ விட்டவடி வட்டணைகள் கட்டநட
மாடி, குலவும்
பட்டநுதல் கட்டுமலர் மட்டுமலி பாவையொடு
மேவு பதிதான்,
வட்டமதி தட்டுபொழி லுட்டமது வாய்மைவழு
வாத மொழியால்
சட்டகலை எட்டுமரு வெட்டும்வளர் தத்தைபயில்
சண்பை நகரே.

---

6. தரளம்—முத்து. வாணன்—வாழ்நன், வாழ்பவன். ஆதரித்தல்—பூசித்தல். நெஞ்சமே, வலஞ்சுழி வாணனை வழிபடுவதற்கு என்ன புண்ணியம் செய்தனை என்க. திருவலஞ்சுழி கும்பகோணந் தாலுகாவி லுளது.

7. வாய்தல்—வாயில். குரம்பை—வீடு. ஆரூர்—திருவாரூர். (Tiruvalur).

8. முழவு கொட்டாநிற்க இட்ட அடியானது வட்டணைகள் கட்ட நடமாடுஞ் சிவன். பட்டமணிந்த நுதலிலே கட்டும் மலரில் மட்டு மலிந்த பாவை. வட்டமான மதி தட்டுகின்ற பொழிலினுள்ளே தமது மொழியினால் கலைகள் எட்டுமருவு எட்டையும் தத்தைபயில் சண்பை நகரென்க வட்டணை—தாளம்போடல். சண்பை நகர்—சீகாழி. மட்டு—தேன். எட்டு மருவெட்டு—அறுபத்துநாலு. தத்தை—கிளி. சட்ட என்பது செப்பமுணர்த்தி நிற்பதோர் இடைச்சொல்.

9. சுற்றமொடு பற்றவை துயக்கற அறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடும் அடியார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலகம் ஏற்றக்
கற்றவன் இருப்பது கருப்பறிய லூரே.

10. கோழைமிட றாக,கவி கோளும்இல வாக,இசை
கூடும் வகையால்
ஏழைஅடி யார்அவர்கள் யாவைசொன சொன்மகிழும்
ஈசன் இடமாம்,
தாழைஇள நீர்முதிய காய்கமுகின் வீழநிரை
தாறு சிதறி
வாழைஉதிர் வீழ்கனிகள் ஊறிவயல் சேறுசெயும்
வைகா விலே.

11. மங்கையர்க் கரசி, வளவர்கோன் பாவை,
வரிவளைக் கைம்மட மானி,
பங்கயச் செல்வி, பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழல் உருவன், பூதநா யகன்,நால்
வேதமும் பொருள்களும் அருளி,
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே.

---

9. துயக்கற—மயக்கமின்றி. அடியார்கள் மற்றவரை—அடியார்களவரை, அடியார்களை; மற்று அசை. அடியார்களை வானுலகேற்றக் கற்றவ னிருப்பது கருப்பறியலூரெனக. இந்தத்தலம் சீகாழித் தாலுகாவி லுள்ளது.

10. மிடறுகோழையாக, கவிகள் பொருள்கோள் இலவாக, இசைகூடிய வகையினால் ஏழை அடியார் பாடியபாட்டு. தாழை—தெங்கு. தாறு—குலை. வாழையினது உதிர்ந்து வீழ்கின்ற கனிகள். தேங்காய் வீழ, பாக்குக்குலை சிதறி, வாழைப் பழம் வீழ்ந்து தேன்ஊறி வயலைச் சேறுசெய்யும் வைகாவில். திருவைகா தஞ்சாவூர் ஜில்லா பாபநாசந்தாலுகாவி லுளது.

11. மங்கையர்க்கரசி—இயற்பெயர். வளவர்கோன்—சோழன். மானி—பெண். பங்கயச் செல்வி—திருமகள். பாண்டிமாதேவி—பாண்டிநாட்டுக் கோப்பெருந்தேவி. அங்கயற்கண்ணி—மீனாக்ஷி. ஆலவாய்—மதுரை.

12. விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள் பாடல்விளை
யாடல் அரவம்
மங்குலொடு நீள்கொடிகள் மாடமலி நீடுபொழில்
மாகற லுளான்,
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்களணி
செஞ்சடை யினான்,
செங்கண்விடை அண்ணல்அடி சேர்பவர்கள் தீவினைகள்
தீரு முடனே.

13. கண்காட்டும் நுதலானும் கனல்காட்டும் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டும் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டும் கொடியானே.

14. பேயடையா பிரிவெய்தும்; பிள்ளையினோ டுள்ளம்நினை (வு)
வாயினவே வரம்பெறுவர்; ஐயுறவேண்டா ஒன்றும்;
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே.

15. மண்ணொடுநீ ரனல்காலோ டாகாய மதியிரவி
எண்ணில்வரும் இயமானன் இகபரமும் எண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே.

---

12. விங்கு என்பது இஞ்சி என்பர். பாடலாடலின் அரவமும் கொடிகளையுடைய மாடமும் மலிந்த நெடிய பொழிலுடைய மாகறல் என்க. கொங்கு—தேன். மாகறல் செங்கல்பட்டு ஜில்லாவில் காஞ்சிபுரம் தாலுகாவி லுள்ளது.

13. பயிர்காட்டும் புயலான்—பயிர்முளைத்தற்குக் காரணமான முகிலானவன். விடைகாட்டும் கொடியான் நுதலானும், கையானும், உருவானும், சடையானும், இசையானும், புயலானும், உறைவானும் எனமுடிக்க. வெண்காடு—சுவேதாரணியம் இது, சீகாழித்தாலுகாவில் காவிரிப்பூம்பட்டினத்துக்கு வடமேற்கே மூன்று மைல் தூரத்தி லுளது.

14. உமைபங்கனது வெண்காட்டிலுள்ள முக்குளநீரில் தோயும் வினையார் பிள்ளையினோடு உள்ளம் நினைவாயின வரம்பெறுவர்; ஒன்றும் ஐயுறவேண்டா; அவர் தம்மைத் தீவினை தோயா; பேய் அடையா, பிரிவு எய்தும் என வினைமுடிக்க.

15. மண்முதலிய ஐம்பூதங்கள், மதி, இரவி, இயமானன் என்பன அட்டமூர்த்தங்கள். இயமானன்—ஆன்மா. விண்ணவர்கோன்—தேவேந்திரன்.

16. பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற உம்பர்அப்
பாலேசேர்வாய் ஏனோர்கான் பயில்கண முநிவர்களும்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னோடும்
சேர்வார் நாணாள் நீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாம்
சந்தித்தே இந்தப்பார்ச் சனங்கள்நின்று தங்கணால்
தாமே காணா வாழ்வாரத் தகவுசெய் தவனதிடம்,
கந்தத்தால் எண்டிக்கும் கமழ்ந்திலங்கு சந்தனக்
காடார் பூவார் சீர்மேவும் கழுமல வளநகரே.

17. இயல்இசை எனும்பொருள் நின்திறமாம்
புயல்அன மிடறுடைப் புண்ணியனே,
கயல்அன வரிநெடுங் கண்ணியொடும்
அயல்உல கடிதொழ அமர்ந்தவனே,
கலனாவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்
நிலனுடைமாறும் இன்புற நிறைமதி அருளினனே.

18. இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்,
கடறனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே,
இதுவோ எமையாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்?
அதுவோ உனதின்னருள், ஆவடுதுறை அரனே?

16. பந்தம்—தொடர்பு. சிலம்பின் மங்கை—பார்வதி. சந்தித்தல்—தலைப்படல். தகவு—அருள். கந்தம்—வாசனை. எப்பாலும் பயின்றுநின்ற உம்பரும், அப்பால் சேர்ந்த இடத்திலுள்ள ஏனோரும், கானில் பயிலும் முநிவர் கணமும் வந்திப்பப் பார்வதியோடும் சேர்ந்துள்ள கடவுள் நாளும் கயிலையிலே விளங்குகின்ற தன்மைக ளெல்லாவற்றையும் இந்தப்பாரில் சனங்கள் தலைப்பட்டுத் தம் கண்ணாற்கண்டு வாழ் வடைய அருள் செய்தவன திடம் கழுமல வளநகர் என்க. கழுமலம்—சீகாழி.

17. புண்ணியனே, அமர்ந்தவனே, இயலும் இசையும் நின்திறமாம்; நிறை மதியை அருளினனே நின் கலனாவது வெண்டலை என முடிக்க. புகலி—சீகாழி.

18. வேதியனே, அரனே, இடருற்றாலும் தளர்ந்தாலும் நோயுற்றாலும் உன் கழலையே நான் தொழுதெழுவேன்; அப்படிப்பட்ட எம்மை ஆளுமாறு இதுவோ? எமக்கொன்றும் ஈவதில்லையாயின், அதுவோ உமதருள்? என்க. திருவாவடுதுறை மாயூரத் தாலுகாவி லுளது.

19. வாழினும் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேன்அல்லேன்,
தாழ்இளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழ்இள மதிவைத்த புண்ணியனே,
இதுவோ எமையாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்?
அதுவோ உனதின்னருள், ஆவடுதுறை அரனே?

20. வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதம் இல்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே?
பாதி மாதுடன் ஆய பரமனே,
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே.

## அப்பர்.

1. மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்,
யாதும் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்;
கண்டேன்அவர்திருப் பாதம், கண்டறி யாதன கண்டேன்.

2. சுண்ணவெண் சந்தனச் சாந்தும், சுடர்த்திங்கட் சூளா மணி
வண்ண உரிவை உடையும், வளரும் பவள நிறமும், [யும்,
அண்ணல் அரண்முரண் ஏறும், அகலம் வளாய அரவும்,
திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்;
அஞ்சுவது யாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை.

---

19. மேற்பாட்டிற்போல முடிக்க. புனல் – கங்கை. போழ் இளமதி – பாதியாகிய இளஞ்சந்திரன்.

20. ஆதம் – ஆதரவு, அன்பு. இல்லி – இல்லாதவர்கள். அமண் – சமணர், ஜைனர். தேரர் – பௌத்தர். பரமனே, அமணொடு தேரரை (நான்) வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே? ஆதியே, ஞாலத்தில் நின் புகழே மிகுதல்வேண்டும் என்க.

1 மாதர் – அழகு. கண்ணி – தலையிலணியும் மாலை. போது – புஷ்பம். சுவடு – அடிப்பாடு. ஐயாறு – திருவாதி.

2. சூளாமணி – சூடாமணி, முடிமணி; சூளை – முடி. உரிவை – தோல். அண்ணல் – பெருமை. அரண் – காவல். அகலம் – மார்பு. வளாய – சூழ்ந்த, வளைந்த. கெடிலம் – ஒரு நதி.

3. என்னில் ஆரும் எனக்கினி யார்இல்லை;
என்னி லும்இனி யான்ஒரு வன்உளன்:
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே.

4. மாசில் வீணையும், மாலை மதியமும்,
வீசு தென்றலும், வீங்கிள வேனிலும்,
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணைஅடி நீழலே.

5. விறகில் தீயில்,நன் பாலின் படுநெய் போல்,
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்;
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

6. மனிதர் காள்,இங்கே வம்மொன்று சொல்லுகேன்:
கனிதந் தால்கனி உண்ணவும் வல்லிரே?
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே.

7. கங்கை ஆடில்என்? காவிரி ஆடில்என்?
கொங்கு தண்குும ரித்துறை ஆடில்என்?
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடில்என்?
எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே.

8. பேர்ஆ யிரம்பரவி வானோர் ஏத்தும்
பெம்மானைப், பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை,
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்

3. உயிர்ப்பு—மூச்சு, சுவாசம். திருவின்னம்பர் கும்பகோணந் தாலுகாவிலுள்ளது.

5. உறவாகிய கோலைநாட்டி உணர்வாகிய கயிற்றினால் முறுக வாங்கிக் கடைய என்க. உறவு—அன்பு. உணர்வு—ஞானம். முன்னிற்றல்—தோன்றல்.

6 வம் (வம்மின்)—வாருங்கள். ஏசற்றவர்கள்—இளைத்தவர்கள், துக்கமடைந்தவர்கள்.

7. கொங்கு—பூந்தாது. ஓங்கு—ஓங்கு; குறுக்கல்விகாரம்.

8. வாராதசெல்வம்—முத்தி. போரான்—போரையுடையவன். புள்ளிருக்கும் வேளூர்—வைத்தீசுரன்கோயில். இது சீகாழித் தாலுகாவிலுளது. ஆற்ற—மிக.

தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்,
திரிபுரங்கள் தீஎழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப், புள்ளிருக்கும் வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.

9. ஊன்உடுத்தி, ஒன்பது வாசல் வைத்து,
ஒள்எலும்பு தூணா உரோமம் மேய்ந்து,
தாம்எடுத்த கூரை தவிரப் போவார்
தயக்கம் பலபடைத்தார் தாம ரையினார்
கான்எடுத்து மாமயில்கள் ஆலும் சோலைக்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
வான்இடத்தை ஊடறுத்து வல்லைச் செல்லும்
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.

10. நாமார்க்கும் குடிஅல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்;
ஏமாப்போம்; பிணிஅறியோம்; பணிவோம் அல்லோம்;
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை.
தாமார்க்கும் குடிஅல்லாத் தன்மை ஆன
சங்கரன் நல்சங்கவெண் குழைஓர் காதின்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடிஇணையே குறுகி னோமே.

11. என்றும்நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்;
இருநிலத்தில் எமக்கெதிர் ஆ வாரு மில்லை;
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்;
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்.
ஒன்றினால் குறைவுடையோம் அல்லோம்; அன்றே
உறுபிணியார் செறல்ஒழிந்திட் டோடிப் போனார்;
பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே.

---

9. ஊன்—தசை. கூரை—வீடு. போவார்—போவார்க்கு; நான்கனுருபு செய்யுள்விகாரத்தால் தொக்கது. தயக்கம்—அசைவு. தாமரையினார்—பிரமன். கான்—வாசனை. கபாலப்பன்—கபாலி, சிவன். திருக்கழிப்பாலை தென்ஆர்க்காடு ஜில்லா சிதம்பரந்தாலுகாவில் சிவபுரியினுள்ளது.

10. நடலை—வருத்தம். ஏமாத்தல்—இறுமாத்தல். ஆள்—அடிமை.

11. இடைதல்—சாய்தல், மெலிதல். செறல்—வருத்துதல்.

12. அப்பன்நீ, அம்மைநீ, ஐய னும்நீ;
அன்புடைய மாமனும் மாமி யும்நீ,
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ,
ஒருகுலமும் சுற்றமும் ஓரூ ரும்நீ,
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய்நீ,
துணையாய்என் நெஞ்சம் துறப்பிப் பாய்நீ,
இப்பொன்நீ, இம்மணிநீ, இம்முத் தும்நீ,
இறைவன்நீ, ஏறூர்ந்த செல்வன் நீயே.

13. குலம்பொல்லேன், குணம்பொல்லேன், குறியும் பொல்லேன்,
குற்றமே பெரிதுடையேன், கோல மாய
நலம்பொல்லேன், நான்பொல்லேன், ஞானி அல்லேன்,
நல்லாரோ டிசைந்திலேன், நடுவே நின்ற
விலங்கல்லேன், விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்,
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்,
இலம்பொல்லேன், இரப்பதே ஈய மாட்டேன்,
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே.

14. சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வான்ஆளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்லர் ஆகில்;
அங்கம் எலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆஉரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே.

---

12. துய்ப்பன—உண்பன. உய்ப்பன—சேர்ப்பன. தோற்றுதல்—உண்டாக்குதல்.

13. குறி—குறிப்பு, கருத்து. பொல்லேன்—தீயவன், கெட்டவன். கோலம்—அழகு. நலம்—அன்பு. இலம்—இன்மை.

14. சங்கநிதி பதுமநிதி—சங்கம், பதுமம் என்னும் எண்ணையுடைய நிதி. சங்கு வடிவாயநிதி, பதும வடிவாகியநிதி யென்பாருமுளர். மங்குதல்—கெடுதல். ஏகாந்தர்—ஒருவரையே சேர்ந்தவர், அன்பர். தொழுநோய்—பெருவியாதி. ஆ—பசு. மாதேவற்கு ஏகாந்தர் அல்லராகில், அவர் செல்வம் மதிப்போம் அல்லோம் என்க.

15. உயிரா வணம்இருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெ ழுதி
உயிர்ஆ வணம்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி;
அயிரா வணம்ஏறா தான்ஏ றேறி
அமரர்நா டாளாதே ஆரூர் ஆண்ட
அயிரா வணமே,என் அம்மா னே,நின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே.

16. நிலைபெறுமா றெண்ணுதியேல், நெஞ்சே, நீவா:
நித்தலும்எம் பிரான்உடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையினால் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
'சங்கரா, சய,போற்றி, போற்றி' என்றும்
'அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதி' என்றும்
'ஆரூரா' என்றென்றே அலறா நில்லே.

17. பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்,
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்,
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்,
சொல்லுகேன் கேள்,நெஞ்சே, துஞ்சா வண்ணம்
'உற்றவரும் உறுதுணையும் நீயே' என்றும்,
'உன்னை அல்லால் ஒருதெய்வம் உள்கேன்' என்றும்,
'புற்றரவக் கச்சார்த்த புனிதா' என்றும்,
'பொழில்ஆரூ ரா'என்றே போற்றா நில்லே.

---

15. உயிராவணம்-மூச்சுவிடாது. இழி-படமெழுதுந்துணி. உயிர் ஆவணம் செய்திட்டு-உயிரைவிற்று விலைச்சீட்டெழுதி. ஆவணம்-விலைச்சீட்டு. உணரப்படுவாரோடு ஒட்டிவாழ்தி-உணரப்படுவாரோடு சேர்ந்தவன் ஆவாய்; உணரப்படுவாய். அயிராவணம்-(1) அயிராவதயானை, (2) யானை.

16. நிலைபெறுமாறு-உலகத்து நிலைத்திருத்தல், மன்னுதல். அலகிடல்-பெருக்கல். மெழுக்கு-மெழுகுதல். திருவாரூர் நாகபட்டினந் தாலுகாவி லுளது.

17. பாற்றல்-அடிபாறச் செய்தல், நீக்குதல்.

18. ஐயினால் மிடறடைப்புண் டாக்கை விட்டு
ஆவியார் போவதுமே, அகத்தார் கூடி
மையினால் கண்ணெழுதி மாலை சூட்டி
மயானத்தில் இடுவதன்முன், மதியஞ் சூடும்
ஐயனார்க் காளாகி அன்பு மிக்கு
அகங்குழைந்து மெய்யரும்பி அடிகள் பாதம்
கையினால் தொழும்அடியார் நெஞ்சின் உள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

19. மைப்படிந்த கண்ணாளுந் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லால்
ஒப்புடையன் அல்லன், ஒருவன் அல்லன்,
ஓரூரன் அல்லன், ஓர் உவமன் இல்லி,
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவன்அருளே கண்ணாகக் காணின் அல்லால்,
இப்படியன், இந்நிறத்தன், இவ்வண் ணத்தன்,
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.

20. உடம்பெனும் மனைய கத்து உள்ளமே தகளி யாக,
மடம்படும் உணர்நெய் அட்டி உயிர்எனும் திரிம யக்கி
இடம்படும் ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.

## சுந்தரர்.

1. வாழ்வாவது மாயம்;இது மண்ணாவது திண்ணம்;
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்;
தாழாதறம் செய்ம்மின்;தடம் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே.

18. ஐ—சிலேட்டுமம். அகத்தார்—வீட்டிலுள்ளார். மெய் அரும்பி—மெய் புளக மரும்பி. கன்றாப்பூர் நாகபட்டினந்தாலுகாவில் திருவாரூருக்குத் தெற்கே ஆறு மைல் தூரத்தி லுள்ளது. நடுதறி—திருக்கன்றாப்பூரிலுள்ள சிவலிங்கம் நடுதறி வடி வாயுள்ளது. 19. உவமன்—ஒப்பு.

20. தகளி—அகல். மடம்—அறியாமை. படுதல்—கெடுதல். உணர்—உணர்வு. அட்டி—சொரிந்து, வார்த்து. இடம்படுதல்—அகலுதல். கடம்பமர்காளை—கடப்ப மாலையை யணிந்த முருகக்கடவுள்.

1. வாழ்வு—உயிர்வாழ்க்கை. மாயம்—பொய். இது—இவ்வுடல். பசிநோயை யடைத்துவைத்த பறியாகிய இவ்வுடல் பாழடைவது பிறவிக்கடலில். ஆதலால்

2. இறைகளோ டிசைந்த இன்பம்; இன்பத்தோ டிசைந்த வாழ்வு;
பறைகிழித் தனைய போர்வை, பற்றியான் நோக்கி னேற்கு.
திறைகொணர்ந் தீண்டித்தேவர் செம்பொனும் மணியும்தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர் அப்பனே அஞ்சினேனே.

3. மத்த யானை ஏறிமன்னர் சூழவரு வீர்காள்,
செத்த போதில் ஆரும்இல்லை; சிந்தையுள்வைம் மின்கள்.
வைத்த உள்ளம் மாற்றவேண்டா; வம்மின்மனத் தீரே,
அத்தர் கோயில் எதிர்கொள்பாடி என்பதடை வோமே.

4. தோற்ற முண்டேல் மரணம்உண்டு; துயரம்மனை வாழ்க்கை;
மாற்றம் உண்டேல் வஞ்சம்உண்டு நெஞ்சம்;மனத் தீரே,
நீற்றர் ஏற்றர் நீலகண்டர் நிறைபுனல்நீள் சடைமேல்
ஏற்றர் கோயில் எதிர்கொள்பாடி என்பதடை வோமே.

5. பொன்னார் மேனியனே, புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே,
மன்னே, மாமணியே, மழபாடியுள் மாணிக்கமே,
அன்னே, உன்னைஅல்லால் இனியாரை நினைக்கேனே?

6. நீள நினைந்தடியேன், உமைநித்தலும் கைதொழுவேன்,
வாளன கண்மடவாள் அவள்வாடி வருந்தாமே, [றேன்;
கோளிலி எம்பெருமான், குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்
ஆளிலை; எம்பெருமான், அவைஅட்டித் தரப்பணியே.

---

காலந்தாழ்க்காது அறத்தைச் செய்ம்மின்கள்; கேதாரமென்னுங்கள் என்க. திருக்கேதாரம்–the modern Kedar. இது இமயமலைச் சாரலி லுள்ளது.

2. இறைகள்–கடவுள். அனையது–சடைக்குறை. போர்வை–உடல். பற்றிநோக்குதல்–உற்றுநோக்குதல். அறைகழல்–ஒலிக்கின்றகழல். ஆரூர்–திருவாரூர்.

3. ஆரும் இல்லை–ஆருந்துணையில்லை. சிந்தையில் வைம்மின்–இதனை மறவாதிர்கள். எதிர்கொள்பாடி என்னுந்தலம் மாயூரந்தாலுகாவி லுள்ளது.

4. தோற்றமுண்டேல் மரணமுண்டு–பிறப்பது இறக்கும். மாற்றம் (பேச்சு) உண்டேல் நெஞ்சத்தில் வஞ்சம் உண்டு. நீற்றர்–திருநீறு புனைந்தவர். ஏற்றர்–எருத்து வாகனத்தர். நிறைபுனலைச் சடைமேல் ஏற்றவர்.

5. அசைத்தல்–கட்டல். திருமழபாடி திருச்சிராப்பள்ளி ஜில்லா உடையார்பாளையந் தாலுகாவி லுளது.

6. நீளநினைந்து–நெடிதுநினைந்து. நித்தலும்–எப்போதும். வாளனகண்மடவாள்–பரவை. இதிற்குறித்த கதையைப் பெரியபுராணத்தில் காண்க. திருக்கோளிலி. நாகபட்டினந்தாலுகாவி லுள்ளது.

7. அந்த ணாளன்உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்தன் ஆருயிர் அதனை
வவ்வி னாய்க்குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீஎனை நமன்தமர் நலியில்
இவன்மற் றென்அடி யானென விலக்கும்
சிந்தை யால்வந்துன் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர்உ ளானே.

8. இண்டைமலர் கொண்டுமணல் இலிங்கம தியற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறியதா தையைத்தாள்
துண்டம்இடு சண்டிஅடி அண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கனதூர் வினவில்
மண்டபமும் கோபுரமும் மாளிகை சூளிகையும்
மறைஒலியும் விழவொலியும் மறுகுநிறை வெய்திக்
கண்டவர்கள் மனம்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடும் கலயநல்லூர் காணே.

9. திருவும் வண்மையும் திண்திறல் அரசும்
சிலந்தி யார்செய்த செய்பணி கண்டு
மருவு கோச்செங்க ணான்தனக் களித்த
வார்த்தை கேட்டுநுன் மலரடி அடைந்தேன்,
பெருகு பொன்னிவந் துந்துபன் மணியைப்
பிள்ளைப் பல்கணம் பண்ணையுள் நண்ணித்
தெருவும் தெற்றியும் முற்றமும் பற்றித்
திரட்டும் தென்திரு நின்றியூ ரானே.

---

7. அந்தணாளன்—மார்க்கண்டன். வண்மை—வலிமை. நமன்தமர்—யமதூதர். நலிதல்—வருத்தல். திருப்புன்கூர் சீகாழித்தாலுகாவி லுள்ளது.

8. இண்டை—புலிதொடக்கி என்னுங் கொடி. சண்டி—சண்டேசுர நாயனார். இவர் கதையைப் பெரியபுராணத்தில் காண்க. விடங்கன்—அழகன். சூளிகை—மேல்வீட்டின் முகப்பு. திருக்கலயநல்லூர் கும்பகோணம் முனிசிபல் எல்லைக்குள் தென்கிழக்கிலுள்ளது. இது இப்போது சாக்கோட்டை என்று வழங்கும்.

9. கோச்செங்கட் சோழன் சரிதத்தைப் பெரியபுராணத்துட் காண்க. பண்ணை—இன்பவிளையாட்டு. தெற்றி—திண்ணை. திருநின்றியூர் மாயூரம் தாலுகாவி லுள்ளது.

10. தம்மானை அறியாத சாதியார் உளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகி
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டி லாடல் [ர்தன்
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்தன் அடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன் [னும்
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே.



10. தம்மான், எம்மான் என்பன தாம், யாம் என்பவற்றினடியாகக் கிளைமைப் பொருள் குறித்துவந்த சொற்கள். விகிர்தனை என்பது விகிர்தன் என ஐ உருபுகெட்டு நின்றது. கைம்மா—யானை. கரிகாடு—சுடுகாடு. திருவதிகை வீரட்டானம் தென் ஆர்க்காட்டு ஜில்லாவில் கடலூர்த்தாலுகாவி லுள்ளது.

# பட்டினத்துப் பிள்ளையார்.



பட்டினத்துப்பிள்ளையார் என்பவர், அவருடைய பெயர் குறிக்கிறபடி, காவேரிப்பூம்பட்டினத்தில் வசித்தவர். இவருக்கு மறுபெயர் திருவெண்காடர் என்பது. இஃது இவர் திருவெண்காட்டில் பிறந்ததைக் குறிக்கும். (திருவெண்காடு முற்காலத்தில் காவேரிப்பூம்பட்டினத்தின் ஒருபகுதியாக இருந்ததாகத் தெரிகின்றது. இப்போது அப்பட்டினத்துக்கு வடமேற்கே மூன்று மைல் தூரத்தி லுள்ளது. இது சீகாழித்தாலுகாவி லுள்ளது.) பட்டினத்துப் பிள்ளையார் துறவுபூண்டு தலயாத்திரைசெய்து சென்னைக் கருகிலுள்ள திருவொற்றியூரைச் சேர்ந்து அங்கு சமாதி அடைந்தன ரென்ப. இவர் இயற்றிய பிரபந்தங்கள் ஐந்து. அவை கோயினான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்ப முடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபது என்பன. இவ்வைந்தும் சைவத் திருமுறைகளுள் ஒன்றாகிய பதினொன்றாந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன. இவர் பாடிய தனிப்பாடல்கள் பலவும் ஒன்றுசேர்க்கப்பட்டுப் பட்டணத்தார் பாடல் என்னும் பெயரால் வழங்கிவருகின்றன.

ஒன்பதாம் நூற்றாண்டி லிருந்த மாணிக்கவாசகரையும் சிவவாக்கிய தேவரையும் வரகுணபாண்டியனையும் வியந்து பாடுதலின் பட்டினத்தார் அவர்களுக்குப் பிற்பட்டவராவர்; இவருடைய பாடல்கள் பதினொன்றாந் திருமுறையில் சேர்க்கப்பட்டுண்மையின் அத்திருமுறை வகுத்த நம்பிஆண்டார் நம்பிக்கு முற்பட்டவராவர். நம்பியாண்டார் நம்பி அபயகுலசேகரனென்னும் இராசராசச்சோழன் வேண்டுகோளின்படி சைவத்திருமுறை வகுத்தவர். இராசராசன் கி. பி. 985-ம் ஆண்டு தொடங்கிக் கி. பி. 1013-ம் ஆண்டு வரை அரசாண்டவன். இராசராசன் மகனாகிய இராசேந்திரச்சோழன் காலத்தும் நம்பியாண்டார் நம்பி இருந்தவராகத் தெரியவருதலின், அவர் காலம் பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியாம். ஆகவே பட்டினத்தார் காலம் பத்தாம் நூற்றாண்டாக இருக்கவேண்டு மென்ப.



# பட்டினத்தார் பாடல்.

உழப்பின் வாரா உறுதிகள் உளவோ?
கழப்பின் வாராக் கையற வுளவோ?
அதனால்
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித், தூர்வைசெய்து,
அன்பென் பாத்தி கோலி, முன்புற
மெய்யெனும் எருவை விரித்(து), ஆங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு, நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி, நேர்நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
பட்டி அஞ்சினுக் கஞ்சி,உட் சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்,
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை இளந்தளிர் காட்ட, அருகாக்
காமக் குரோதக் களைஅறக் களைந்து
சேமப் படுத்துழிச், செம்மையின் ஓங்கி
மெய்ம்மயிர்ப் புளக முகிழ்த்திட்(டு), அம்மெனக்
கண்ணீர் அரும்பிக், கடிமலர் மலர்ந்து,
புண்ணிய
அஞ்செழுத் தருங்காய் தோன்றி, நஞ்சுபொதி
காள கண்டமும் கண்ஒரு மூன்றும்

---

1. உழப்பு—முயற்சி. கழப்பு—முயற்சியின்றிக் காலத்தைக் கழித்தல்.

2. கையறவு—(செயலறவு) வருத்தம்.

3 புனம்—நிலம். கட்டை—அடிமரம்.

4. தூர்வை—தூர்த்தல். வேரகழ்ந்த இடங்களைத் தூர்த்தல்.

8. ஆர்வம்—அன்பு. 10. பட்டி—கள்ளமாடு. அஞ்சு—பஞ்சப்புலன்.

11. வாய்ந்தபின்—(இவ்வாறு வித்து முளைத்தற்கு ஆதாரமாகிய பலவும்) நன்று யமைந்தபின். 12. நந்துதல்—கெடுதல்.

13. காட்ட—காட்டும்படி. அருகா—குறையாத.

15. சேமப்படுத்துழி—சேமஞ்செய்தபோது. சேமம்—காவல்.

16. மெய்யில் மயிர் சிலிர்த்ததுண்டாகி; முகிழ்த்தல்—குமிழ்ப்புவடிவடைதல்.

18. அஞ்செழுத்து—பஞ்சாக்ஷரம்.

தோள்ஒரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை அதனினும் உறுசுவை உடைத்தாய்க்
காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேண்உயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர,
எம்ம னோர்கள் இனிதின் அருந்திச்
செம்மாந் திருப்பச், சிலர்இதின் வாராது
மனம்எனும் புனத்தை வறும்பாழ் ஆக்கிக்
காமக் காடு மூடித் தீமைசெய்
ஐம்புல வேடர் ஆறலைத் தொழுக,
இன்பப் பேய்த்தேர் எட்டா தோடக்,
கல்லா உணர்வெனும் புல்வாய் அலமர,
இச்சைவித் துகுத்துழி யான்எனப் பெயரிய
நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்,
பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்
பாவப் பஃறழை பரப்பிப், பூஎனக்
கொடுமை அரும்பிக், கடுமை மலர்ந்து,
துன்பப் பல்காய் தூக்கிப், பின்பு
மரணம் பழுத்து, நரகிடை வீழ்ந்து,
தமக்கும் பிறர்க்கும் உதவா(து)
இமைப்பில் கழியும் இயற்கையோர் உடைத்தே.

---

24. சேண்உயர்—மிகவுயர்ந்த. சேண்—உயரம்.

30. ஆறலைத்தல்—வழிப்பறித்தல். ஆறு—வழி. 31. பேய்த்தேர்—கானல்.

32. புல்வாய்—மான். அலமரல்—சுழலல், துயருறல்.

33. இச்சை—ஆசை. உகுத்தல்—சொரிதல். யான்—அகங்காரம்.

35. கவடு—கிளை. 36. பஃறழை—பல்தழை. லகரமும் தகரமும் மயங்கா; ஆகையால் தகரம்வர லகரம் ஆய்தமாகத் திரிந்தது. (நன். மெய். 25.)

எம்மனோர் மருதத் தீங்கனி அருந்திச் செம்மாந்திருப்ப, இதின் வாராது, மனமெனும் புனத்தைப் பாழாக்கி, இச்சைவித்து உகுத்துழி, யான் எனப்பெயரிய நச்சு மாமரம் முளைத்து, போக்கி, பரப்பி, அரும்பி, மலர்ந்து, தூக்கி, மரணம் பழுக்க, நரகிடை வீழ்ந்து, உதவாது கழியும் இயற்கையுடையோர் சிலரை (27) (இவ்வுலகம்) உடைத்து என்று வினை முடிவுசெய்க.

மேவிய புன்மயிர்த் தொகையோ? அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ? தோல்இடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ? புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ? கூறுசெய்(து)
இடைஇடை நிற்கும் எலும்போ? எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ? வழுவழுத்(து)
உள்ளிடை ஒழுகும் வழும்போ? மெள்ளநின்(று)
ஊரும் புழுவின் ஒழுங்கோ? நீரிடை
வைத்த மலத்தின் குவையோ? வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ? உடம்பிற்குட்
பிரியா தொறுக்கும் பிணியோ? தெரியா(து);
இன்னது யான்என்று அறியேன்; என்னை
எங்கும் தேடினேன் யாதினும் காணேன்!
முன்னம்
வரைத்தனி வில்லால் புரத்தைஅழல் ஊட்டிக்,
கண்படை ஆகக் காமனை ஒருநாள்
நுண்பொடி ஆக நோக்கி, அண்டத்து
வீயா அமரர் வீயவந் தெழுந்த
தீவாய் நஞ்சைத் திருஅமு தாக்கி,
இருவர் தேடி வெருவர நிமிர்ந்து,
பாலனுக் காகக் காலனைக் காய்ந்து,

---

2. பாவிய—பரந்த. 3. புண்—தசை.

6. முடை—நாற்றம். மூளைவிழுது—மூளையாகியவிழுது. விழுது—விழுந்தன்மை அல்லது ஒழுகுந் தன்மையுடையது.

7. வழும்பு—நிணம். 8. ஒழுங்கு—வரிசை.

11. பிரியாது—நீங்காது நின்று. ஒறுக்கும்—வருத்தும்.

12. & 13. யான் என்பது மயிர், தோல் முதலியவற்றுள் எதுவென்பது தெரியாது; யான் என்பதை எங்குந் தேடினேன்; ஒன்றிலும் கண்டிலேன்.

14. வரை—மேருமலை. புரம்—முப்புரம். ஊட்டி—உண்பித்து.

15. படை—ஆயுதம். 17. வீதல்—அழிதல்.

18. நஞ்சின்தன்மை ஒழிந்து அமுதஞ்செய்யும் காரியத்தைச் செய்தலின் நஞ்சை அமுதாக்கி என்றார். நஞ்சைப் போனகமாக்கி எனினு மமையும்.

19. இருவர்—பிரம விஷ்ணுக்கள். இக்கதையைக் கந்தபுராணம் அடிமுடிதேடு படலத்திற் காண்க.

20. பாலன்—மார்க்கண்டேயன். இக்கதையைக் கந்தபுராணம் மார்க்கண்டேயப்படலத்திற் காண்க.

சந்தன சரள சண்பக வகுள
நந்தன வனத்திடை ஞாயிறு வழங்காது
நவமணி முகிழ்த்த புதுவெயில் எறிப்ப
எண்ணருங் கோடி இருடிகணங் கட்குப்
புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருஇடை மருத, பொருவிடைப் பாக,
மங்கை பங்க, கங்கை நாயக, நின்
தெய்வத் திருஅருள் கைவந்து கிடத்தலின்,
மாயப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையும் கண்டேன்; காண்டலும்
என்னையும் கண்டேன்; பிறரையும் கண்டேன்;
நின்னிலை அனைத்தையும் கண்டேன்; என்னே!
நின்னைக் காணா மாந்தர்
தன்னையும் காணாத் தன்மை யோரே.

---

அன்றினர் புரங்கள் அழல்இடை அவியக்
குன்றுவளைத் தெய்த குன்றாக் கொற்றத்து
நுண்பொடி அணிந்த எண்தோட் செல்வ,
காபிலைநடந் தனைய உயர்நிலை நோன்தாள்
பிறைசெறிந் தன்ன இருகோட் டொருதிமில்
பால்நிறச் செங்கண் மால்விடைப் பாக,
சிமையச் செங்கோட் டிமையச் செல்வன்
மணிஎனப் பெற்ற அணிஇயல் அன்னம்,
வெள்ளைச் சிறுநகைக் கிள்ளைப் பிள்ளை,

---

21. சரளம்–தேவதாரு. வகுளம்–மகிழ். 23. முகிழ்த்த–அரும்பிய.

25. புரக்கும்–செய்யும். cf. "அழற்புரந்த வடர்தாமரை." (புறம்–29.)

26. இடைமருது–மத்தியார்ச்சுனம், திருவிடைமருதூர். இது கும்பகோணத் தாலுகாவி லுளது.

29. படலம்–கண்ணில்வளர்ந்து பார்வையை மறைக்கும் ஒருவகைச் சவ்வு. cf. "பழியதனைப் பாராதே படலமென்கண் மறைத்திட்டாய்." சுந்தரர், திருவெண்பாக்கம், 1. 30. நாட்டம்–கண்.

1. அன்றினர்–பகைவர்; திரிபுரத்தசுரர். புரம்–முப்புரம்.

2. குன்று–மேருமலை. 4. நோன்தாள்–வலியகால்.

7. சிமையம்–மலையுச்சி. இமையம்–இமயமலை. சிமையம் இமையம் இரண்டும் போலி. 9. நகை–பல்.

குயில்எனப் பேசும் மயில்இளம் பேடை,
கதிர்ஒளி நீலம் கமலத்து மலர்ந்தன
மதர்அரி நெடுங்கண் மானின் கன்று,
வையம் ஏழும் பன்முறை ஈன்ற
ஐய திருவயிற் றம்மைப் பிராட்டி,
மறப்பெரும் செய்கை அறப்பெரும் செல்வி,
எமைஆ ளுடைய உமையாள் நங்கை,
கடவுட் கற்பின் மடவரல் கொழுந,
பவள மால்வரைப் பணைக்கை போந்தனைய
தழைசெவி எண்தோள் தலைவன் தந்தை,
பூவலர் குடுமிச் சேவல்அம் பதாகை
மலைதுளை படுத்த கொலைகெழு கூர்வேல்
அமரர்த் தாங்கும் குமரன் தாதை,
பொருதிடம் கொண்ட பொன்னி புரக்கும்
மருதிடம் கொண்ட மருத வாண,
நின்னது குற்றம் உளதோ? நின்னினைந்(து)
எண்ணரும் கோடி இடர்ப்பகை கடந்து,
கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா,
இறப்பையும் பிறப்பையும் இகந்து, சிறப்பொடு
தேவர் ஆவின் கன்றெனத் திரியாப்
பாவிகள் தமதே பாவம். யாதெனில்,—
முறியாப் புழுக்கல் முப்பழம் கலந்த
அறுசுவை அடிசில் அட்(டு) இனி திருப்பப்,
புசியா தொருவன் பசியால் வருந்துதல்

---

14. ஐய—வியப்புடைய. ஐ—வியப்பு.
17. மடவரல்—மடப்பத்தினை உடையவள், பெண்.
18. பணைக்கை—பெருத்தகை.
19. எண் தோள் தலைவன்—விநாயகன்.
20. குடுமி—உச்சி. பதாகை—கொடி.
21. மலை—கிரௌஞ்சகிரி. 22. குமரன்—முருகன்.
23. பொருது—கரையைப்பொருது. இடம்கொண்ட—அகன்ற.
24. வாண—வாழ்ந; விளி.
28. இகந்து—நீங்கி. 29. ஆவின்கன்று—பசுவின்கன்று.
31. முறியா—இடைமுரியாத. புழுக்கல்—சோறு.
32. அட்டு—சமைத்து. 34. அயினி—உணவு, சோறு.

அயினியின் குற்றம் அன்று; வெயிலின்வைத்(து)
ஆற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப
மடாஅ ஒருவன் விடாஅ வேட்கை
தெண்ணீர்க் குற்றம் அன்று; கண்அகன்று
தேந்துளி சிதறிப் பூந்துணர் துறுமி
வானுகம் கிடந்த சோலை கிடப்ப
வெள்ளிடை வெயிலிற் புள்ளிவெயர் பொடிப்ப
அடிபெயர்த் திடுவான் ஒருவன்
நெடிது வருந்துதல் நிழற்றீங் கன்றே.

---

பேசு வாழி, பேசு வாழி,
ஆசையொடு மயங்கி மாசுறு மனமே,
பேசு வாழி, பேசு வாழி.
கண்டன மறையும்; உண்டன மலமாம்;
பூசின மாசாம்; புணர்ந்தன பிரியும்;
நிறைந்தன குறையும்; உயர்ந்தன பணியும்;
பிறந்தன இறக்கும்; பெரியன சிறுக்கும்;
ஒன்றொன் றொருவழி நில்லா. அன்றியும்,
செல்வமொடு பிறந்தோர், தேசொடு திகழ்ந்தோர்,
கல்வியிற் சிறந்தோர், கடுந்திறல் மிகுந்தோர்,
கொடையிற் பொலிந்தோர், படையிற் பயின்றோர்,
குலத்தின் உயர்ந்தோர், நலத்தினின் வந்தோர்,
எனையர்எம் குலத்தினர் இறந்தோர்! அனையவர்
பேரும் நின்றில போலும்! தேரின்
நீயும் அஃதறிதி அன்றே? மாயப்
பேய்த்தேர் போன்றும், நீப்பரும் உறக்கத்துக்

---

35. நாற்றமிட்டு-வாசனை ஊட்டி. cf. "நாற்றமுரைக்கும் மலருண்மை" (நான்மணிக்கடிகை) என்பதில் நாற்றம் வாசனையெனப் பொருள் படுவது காண்க.

36. மடா-பருகாத. ஒருவன் விடா வேட்கை-ஒருவனது நீங்காத தாகம்.

38. துணர்-பூந்தாது. துறுமுதல்-நெருங்குதல்.

39. வானுகப்-மலைற்குன்று. 40. பொடிப்ப-அரும்ப.

2. ஆசையொடு-ஆசையால். 5. மாசு-அழுக்கு, குற்றம்.

9. தேசு-புகழ். 12. நலம்-சுகம்.

13. எம்குலத்தினர் இறந்தோர் எனையர். எனையர்-எத்துணையர்.

14. போலும்-அசை. 16. பேய்த்தேர்-கானல். 22. இழுக்கம்-குற்றம்.

கனவே போன்றும், நனவுபெயர் பெற்ற
மாய வாழ்க்கையை மதித்துக், காயத்தைக்
கல்லினும் வலிதாக் கருதிப், பொல்லாத்
தன்மையர் இழிவு சார்ந்தனை நீயும்,
நன்மையில் திரிந்த புன்மையை ஆதலின்;
அழுக்குடைப் புலன்வழி இழுக்கத்தின் ஒழுகி
வளைவாய்த் தூண்டிலின் உள்இரை விழுங்கும்
பன்மீன் போலவும்,
மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்,
ஆசையாம் பரிசத்து யானை போலவும்,
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்,
வீசிய மணத்தின் வண்டு போலவும்,
உறுவ துணராச் செறுவுழிச் சேர்ந்தனை;
நுண்நூல் நூற்றுத் தன்அகப் படுக்கும்
அறிவில் கீடத்து நுந்துழி போல
ஆசைச் சங்கிலிப் பாசத் தொடர்ப்பட்(டு)
இடர்கெழு மனத்தினோ டியற்றுவ தறியாது
குடர்கெழு சிறையறைக் குறங்குபு கிடத்தி;
கறவை நினைந்த கன்றென இரங்கி
மறவா மனத்து மாசறும் அடியார்க்(கு)
அருள்சுரந் தளிக்கும் அற்புதக் கூத்தனை

---

23. தூண்டிலின் உள் இரை—தூண்டிலின் உட்பாகத்துள்ள இரை.

25. மின்னுபு என்பதைப் பெயரெச்சமாகக்கொள்க.

27. புள்—அசுணப்புள்.

29. உறுவது—மேல்வருவது. செறுவுழி—கொல்லுமிடம்; கொலைக்களம்.

30. தன்அகப்படுக்கும்—(அந்நூலுள்)தன்னை அகப்படுத்திக் கொள்ளும்.

31. கீடம்—புழு; உலண்டு. நுந்துழி—சாந்தன்மை cf. "நுண்ணூற்குடம்பை நுந்துழிபோல"—சங்கற்பநிராகரணம். 2.

Lines 30 and 31 refer to the silkworm's spinning its cocoon and enveloping itself in the cocoon when it is about to change into a chrysalis.

34. குடர்கெழுசிறை—கருப்பை. அறைக்கு—அறைக்கண்; நான்காவது ஏழாவதன் பொருளில் வந்தது. உறங்குபு—உறங்கிக்கொண்டு. கிடத்தி—கிடக்கின்றனை; முன்னிலை வினைமுற்று.

35. கறவை—பசு.

மறையவர் தில்லை மன்றுள் ஆடும்
இறையவன் என்கிலை என்நினைந் தனையே?

---

அருளு வாழி, அருளு வாழி,
புரிசடைக் கடவுள், அருளு வாழி.
தோன்றுழித் தோன்றி நிலைதபக் கறங்கும்
புற்புதச் செவ்வியின் மக்கள்யாக் கைக்கு
நினைப்பினும் கடிதே இளமை நீக்கம்;
அதனினும் கடிதே மூப்பின் தொடர்ச்சி;
அதனினும் கடிதே சதுமென மரணம்;
வாணாள் பருகி உடம்பை வறிதாக்கி
நாள்நாள் பயின்ற நல்காக் கூற்றம்.
இனைய தன்மைய திதுவே. இதனை
எனதெனக் கருதி இதற்கென்று தொடங்கிச்
செய்தன சிலவே; செய்வன சிலவே;
செய்யா நிற்பன சிலவே. அவற்றிடை
நன்றென்ப சிலவே; தீதென்ப சிலவே;
ஒன்றினும் படாதன சிலவே. என்றிவை
கணத்திடை நினைந்து களிப்பவும் கலுழ்பவும்

---

38. தில்லை—சிதம்பரம். மன்று—சபை.

மனமே, இறந்தோர் எனையர்; அனையர்பெரும் பின்றில; நீயும் அஃதறிதி; ஆயினும், புன்மையை ஆதலின், மதித்து, கருதி, சார்ந்தனை; புலன்வழி ஒழுகிச் செறுவுழிச் சேர்ந்தனை; இயற்றுவதறியாது உறங்குபு கிடத்தி; அற்புதக் கூத்தனை இறையவன் என்கிலை; என் நினைந்தனை? பேசு பேசு என்று வினைமுடிவு செய்க.

3. நிலைதப—நிலைகெட. கறங்குதல்—சுழலல். 4. புற்புதம்—நீர்க்குமிழி.

9. பயின்ற—பயின்றது; விகாரம். நல்காமை—உதவாமை. நாள்நாள் என்னு மடுக்கு இடைவிடாமைப் பொருட்டு. கூற்றம் வாணாளைப்பருகி, உடம்பை வறிதாக்கி, அதனோடு எப்போதும் பயின்றுளது என்க.

10. இது—யாக்கை. யாக்கை இத்தன்மைத்து.

12. செய்தன, செய்வன எல்லாம் வினை.

15. ஒன்றினும் படாதன — நன்று தீது இரண்டினும் படாதன. இவற்றை வேறுவினை என்றுகூறி, கையை நொடித்தான், காலை நெட்டிவிட்டான், உறப் பழுக்கை உருட்டி யுதிர்த்தான், வேர்வையைத் துடைத்தான், சோற்றைப் பிசைந் தான் என உதாரணமுங்காட்டுவர் சுவாமிநாததேசிகர்.—இலக்கணக் கொத்து, சூத்திரம், 81.

கணக்கில் கோடித் தொகுதி; அவைதாம்
ஒன்றொன் றுணர்வுழி வருமோ? அனைத்தும்
ஒன்றா உணர்வுழி வருமோ? என்றென்று
தெளிவுழித் தேறல் செல்லேம்; அளிய
மனத்தின் செய்கைமற் றிதுவே! நீயே
அரியை சாலஎம் பெரும, தெரிவுறில்
உண்டாய்த் தோன்றுவ யாவையும் நீயே
கண்டனை; அவைநினைக் காணா; அதுதான்
நின்வயின் மறைத்தோய் அல்லை; உன்னை
மாயாய் மன்னினை நீயே; வாழி.
மன்னியும் சிறுமையின் கரந்தோய் அல்லை;
பெருமையிற் பெரியோய் பெயர்த்தும் நீயே;
பெருகியும் சேணிடை நின்றோய் அல்லை;
தேர்வோர்க்குத் தம்மினும் அணியை நீயே;
நண்ணியும் இடைஒன்றின் மறைந்தோய் அல்லை,
இடையிட்டு நின்னை மறைப்பதும் இல்லை;
மறைப்பினும் அதுவும்,
நீயே ஆகி நின்றதோர் நிலையே;
அஃதா அன்று,
நினைப்பருங் காட்சி நின்நிலை இதுவே;
நினைப்புறுங் காட்சி எந்நிலை அதுவே;
இனிநனி இரப்பதொன் றுடையம்;மன மருண்டு

17-20. அவ்வினைகள் தாம் ஆராயுமிடத்து ஒவ்வொன்றாக வருமோ? அல்லது எல்லாம் ஒன்றாக வருமோ? என்று நாம் தெளிவடையேம் என்க.

20. அளிய—அளிக்கத்தக்க.

22. அரியை—உணர்தற்கரியை. சால—மிகவும்.

23. உண்டாய்—உற்பவித்து.

24. கண்டனை—உளவாக்கினை. அது—அத்தோற்றம்.

26. மாயாய்—மறைக்காது; வினையெச்சமுற்று. 27. கரத்தல்—ஒளித்தல்.

29. சேண்—தூரம். 30. தேர்வோர்—ஆராய்பவர்.

31. நண்ணியும்—கிட்டியும். 32. மறைப்பது—மறைக்கும்பொருள்.

33&34. அன்றி ஒருபொருள் மறைப்பினும் அப்பொருளும் நீயே ஆவை.

35. காட்சி—தோற்றம்.

புன்மையின் நினைத்துப் புலன்வழிப் படரினும்
நின்வயின் நினைந்தேம் ஆகுதல், நின்வயின்
நினைக்குமா நினைக்கப் பெறுதல், அனைத்தொன்று
நீயே அருளல் வேண்டும்; வேய்முதிர்
கயிலை புல்லென, எறிவிசும்பு வறிதாக,
இம்பர் உய்ய, அம்பலம் பொலியத்,
திருவளர் தில்லை மூதூர்
அருநடம் குயிற்றும் ஆதி வானவனே.

---

6. களிவந் தமுதூறிக், கல்மனத்தை எல்லாம்
கசியும் படிசெய்து, கண்டறிவார் இல்லா
வெளிவந் தடியேன் மனம்புகுந்த தென்றால்;
விரிசடையும் வெண்ணீறும் செவ்வானம் என்ன
ஒளிவந்த பொன்னிறமும் தொல்நடமும் காட்டும்
உடையான் உயர்தில்லை அம்பலமொன் றல்லால்,
எளிவந் தினிப்பிறர்பால் சென்றவர்க்குப் பொய்கொண்
டிடைமிடைந்த புன்மொழியால் இச்சைஉரையோமே.

7. நடமாடி ஏழுலகும் உய்யக் கொண்ட
நாயகரே, நான்மறையோர் தங்க ளோடும்
திடமாட மதில்தில்லைக் கோயில் கொண்ட
செல்வரே, உமதருமை தேரா விட்டீர்;

---

38. புன்மையின்—குற்றமாக.

39&40. உம்மை நினைத்தலும் உம்மை நினைக்குமாறு நினைத்தலுமாகிய அவ்வொரு வரத்தை.

42. கயிலை புல்லென—கைலைமலை பொலிவழிய. எறி விசும்பு—ஒளிவீசுகின்ற வானுலகு. 43. இம்பர்—இவ்வுலகம். அம்பலம்—கனகசபை. ஆதிவானவனே அருளல் வேண்டும் என முடிக்க.

6. கண்டறிவாரில்லாத வெளி கன்மனத்தை எல்லாம் களிவந்து அமுதூறிக் கசியும்படி செய்து என் மனத்து வந்து புகுந்தது; ஆதலின் அவன் தில்லை அம்பலத்தைப் புகழ்வதன்றி இனிப் பிறர்பால் எளிவந்து சென்று பொய்கொண்டு மிடைந்த புன்மொழியால் இச்சை உரையேம் என வினைமுடிக்க. வெளி—ஆகாயம், அஃதாவது அருவாகிய கடவுள். 'விரிசடையும்......உடையான்' என்பது அவன் என்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. "பொருளொடு பெயராச் சுட்டுப் பெயராயினும்" என்னுஞ் சூத்திரம் (தொல். சொல் கிளவி. 37) பார்க்க.

7. நாயகரே, செல்வரே, நீர் உமதருமையை இத்துணைத்தெனத்தேராமையால் வானோர்க்குத் தஞ்சுண்டாக நஞ்சை உண்டீர்! இதனை உமதிடப்பக்கத்திலுள்ள உமா

இடமாடி இருந்தவளும் விலக்கா விட்டால்,
என்போல்வார்க் குடனிற்க இயல்வ தன்று;
தடமாலை முடிசாய்த்துப் பணிந்த வானோர்
தஞ்சுண்டா அங்கருநீர் நஞ்சுண் டீரே.

8. தொடர நரைத்தங்கம், முன்புள ஆயின
தொழில்கள் மறுத்(து), ஒன்றும் ஒன்றியிடா(து), ஒரு
சுளிவு தலைக்கொண்டு, புன்புலை வாரிகள்
துளைஒழுகக், கண்டு, சிந்தனை ஒய்வொடு
நடைகெட, முன்கொண்ட பெண்டிர் பொருஒரு
நடலை நமக்கென்று வந்தன பேசிட,
நலிஇரு மற்கஞ்சி, உண்டிவெறு,விழு
நரக உடற்கன்பு கொண்டலைவேன், இனி,
மிடல் ஒடியப்பண் டிலங்கையர் கோன்ஒரு
விரலின் அமுக்குண்டு பண்பல பாடிய
விரகு செவிக்கொண்டு, முன்புள தாகிய
வெகுளி தவிர்த்தன்று பொன்றி யிடாவகை
திடமருள் வைக்கும் செழுஞ் சுடர்,ஊறிய
தெளிஅமுதத்தின் கொழுஞ் சுவை,நீடிய
தில்லைநகரிற் செம்பொன் அம்பலம் மேவிய
சிவனை நினைக்கும் தவம்சது ராவதே.

9. அறந்தான் இயற்றும் அவனிலும் கோடி அதிகம்இல்லம்
துறந்தான்; அவனில் சதகோடி உள்ளத் துறவுடையோன்;
மறந்தான் அறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற்(று)
இறந்தான் பெருமையை என்சொல்லுவேன்கச்சி ஏகம்பனே.?

---

தேவியால் விலக்கமுடியாதாயின் எம்போல்வரால் இயல்வதென்னை? என்க. நடம்—பஞ்சகிருத்திய நடனம். அவரது அருமை ஏழுலகுமுய்ய நடமாடுதலால் வருவது.

8. அங்கம் தொடர நரைத்து, மறுத்து, ஒன்றியிடாது, தலைக்கொண்டு, ஒழுக, (அதனைக்) கண்டு சிந்தை ஓய்ந்து நடையும் கெடுதலால், பெண்டிர் பொருராய், பேசிட, அஞ்சி, வெறுத்து, அன்புகொண்டலைவேற்கு இனிச் சதுராவது சிவனை நினைக்கும் தவம் என்று வினைமுடிக்க. இலங்கையர்கோன் பொன்றியிடாவகை அருள் செய்தவன் என்றமையால் எனக்கும் அருள் செய்வன் என்பது கருத்து. தொடர—முழுதும். சுளிவு—கோபம். புலைவாரி—புலால்நீர். துளை ஒழுக—துளைகளினின்றும் ஒழுக. துளைகள்—ஒன்பது வாயில்கள். நடை—ஒழுக்கம், மரியாதை. நடலை—வருத்தம். மிடல்—வலி. விரகு—உபாயம். பாடியவிரகு—பாடியபாட்டு; இன்முகங் காணுமருந்து என்றாற்போல. சதுர்—உபாயம்.

9. இருவாதனை—புண்ணிய பாவ வாசனை.

10. ஊரும் சதமல்ல, உற்றார் சதமல்ல, உற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல, பெண்டீர் சதமல்ல, பிள்ளைகளும்
சீரும் சதமல்ல, செல்வம் சதமல்ல, தேசத்திலே
யாரும் சதமல்ல, நின்தாள் சதம்,கச்சி ஏகம்பனே.

11. முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவில்ஒரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு, பின்னும்இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லால்பொன்னின்அம்பலவர்
அடிசார்ந்து நாமஉய்ய வேண்டும்என்றேஅறி வார்இல்லையே.

12. ஐயும் தொடர்ந்து விழியும் செருகி அறிவழிந்து
மெய்யும்பொய் யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்
செய்யும் திருவொற்றி யூர்உடை யீர்,திரு நீறும்இட்டுக்
கையும் தொழப்பண்ணி ஐந்தெழுத் தோதவும் கற்பியுமே.

13. தாயும் பகை;கொண்ட பெண்டீர் பெரும்பகை; தன்னுடைய
சேயும் பகை;உற வோரும் பகை;இச் செகமும்பகை;
ஆயும் பொழுதில், அரும்செல்வம் நீங்கில்இங்(கு). ஆதலினால்
தோயும்நெஞ் சே,மரு தீசர்பொன் பாதம் சுதந்தரமே.

14. வாளால் மகவரிந் தூட்டவல் லேன்அல்லன்; மாதுசொன்ன
சூளால் இளமை துறக்கவல் லேன்அல்லன்; தொண்டுசெய்து
நாள்ஆறில் கண்இடந் தப்பவல் லேன்அல்லன்; நான்இனிச்
சென்(று)
ஆளாவ தெப்படி யோதிருக் காளத்தி அப்பருக்கே?

15. வீடு நமக்குத் திருஆலங் காடு; விமலர்தந்த
ஓடு நமக்குண்டு வற்றாத பாத்திரம்; ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல் லாம்தர; நல்நெஞ்சமே,
ஈடு நமக்குச் சொலவோ ஒருவரும் இங்கில்லையே.

---

10. சதம்—நிலை.

12. ஐ—சிலேட்டுமம்.

14. வாளான் மகவரிந்தூட்டினவர் சிறுத்தொண்டர்; மாது சொன்ன சூளால் இளமை துறந்தவர் திருநீலகண்டர்; நாள் ஆறில் கண்ணிடந்தப்பினவர் கண்ணப்பர். இவர்கள் சரித்திரத்தைப் பெரிய புராணத்திற் காண்க.

15. வற்றாதபாத்திரம்—அக்ஷயபாத்திரம், எடுக்கெடுக்கக் குறையாத பாத்திரம்.

16. வினைப்போக மேஒரு தேகம்கண் டாய்;வினை தான்ஒழிந்தால்
தினைப்போ தளவும்நில் லாதுகண் டாய்;சிவன் பாதம்நினை;
நினைப்போரை மேவு; நினையாரை நீங்(கு);இந் நெறியில்நின்றால்
உனைப்போல் ஒருவர்உண் டோமன மே எனக் குற்றவரே.?

17. அத்தமும் வாழ்வும் அகத்துமட் டே;விழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டே;விம்மி விம்மிஇரு
கைத்தலம் மேல்வைத் தழும்மைந் தருஞ்சுடு காடுமட்டே;
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே.

18. ஒன்றென் றிருதெய்வம்;உண் டென் றிரு;உயர்செல்வம்எல்லாம்
அன்றென் றிரு; பசித்தோர் முகம்பார்; நல் லறமும்நட்பும்
நன்றென் றிரு; நடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென் றிரு: மனமே, உனக்கே உப தேசமிதே.

19. அழுதாற் பயன் என்ன? நொந்தாற் பயன்என்ன? ஆவதில்லை.
தொழுதாற் பயன் என்ன? நின்னை ஒருவர் சுடஉரைத்த
பழுதாற் பயன் என்ன? நன்மையும் தீமையும் பங்கயத்தோன்
எழுதாப் படிவருமோ? சலியாதி(ரு.)என் ஏழைநெஞ்சே.

20. அஞ்சக் காம்எனும் கோடாலி கொண்டிந்த ஐம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி, வளங்கள்செய்து,
விஞ்சத் திருத்திச், சதாசிவம் என்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித்தேன்; வளர்த்தேன் சிவபோகத்தையே.



16. நினை, மேவு, நீங்கு மூன்றும் முன்னிலை ஏவல்.

17. அத்தம்—(அர்த்தம்) பொருள். மெத்திய—மிக்க.

18. தெய்வம் என்பதை முன்னும்பின்னும் கூட்டுக.

19. சலியாதிரு—வேசாறுதிரு.

20. அஞ்சக்கரம்—பஞ்சாக்ஷரம். புலக்கட்டை—புலத்திலுள்ள கட்டையை. புலம்—நிலம். கட்டை—அடிமரம். மேலே "உழப்பின் வாரா உறுதிகள்" என்றற்றொடக்கத்து அகவலில்வரும் "நெஞ்சப்புனத்து வஞ்சக்கட்டையை" என்பதை நோக்குக. புஞ்சம்—திரட்சி.

# குமரகுருபரர்.



குமர குருபரர் திருநெல்வேலி ஜில்லாவிலே ஸ்ரீ வைகுந்த மென்னு மூரிலே, வேளாண்குலத்திலே, இருநூற்றெண்பது வருடங்களுக்கு முன்னே பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் சண்முகசுந்தரக் கவிராயர்; தாயார் பெயர் சிவகாமசுந்தரி. இவர் இளமையிலேயே துறவுபூண்டு மாயூரத்துக் கருகிலுள்ள தருமபுரவாதீனத்தில் நான்காங் குருமூர்த்திகளாய் எழுந்தருளி யிருந்த ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை யடைந்து அவரிடத்து ஞானோபதேசம் பெற்றவர். இவர் பாடிய பிரபந்தங்களுள் ஒன்றாகிய பண்டார மும்மணிக் கோவை என்பது மேற்குறித்த ஸ்ரீ மாசிலாமணி தேசிகருடைய புகழைக் கூறுவது. இவர் எல்லாமாகப் பதினொன்கு பிரபந்தங்கள் பாடியுளர். அவற்றுள், நீதிநூல் 1, கலிவெண்பா 1, பிள்ளைத்தமிழ் 2, இரட்டைமணிமாலை 2, மும்மணிக்கோவை 2, நான்மணிமாலை 1, கலம்பகம் 2. இவர் தாம் இயற்றிய மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழை மதுரையிலே அரசுபுரிந்திருந்த திருமலை நாயகர் சமுகத்தில் அரங்கேற்றினர் என்ப. திருமலைநாயகர் அரசு புரிந்தது கி. பி. 1623-ம் ஆண்டு தொடுத்து கி. பி. 1659-ம் ஆண்டுவரை.



# குமரகுருபரர் பாடல்.

பூமலி சததளப் பொன்னர் தாதுகு
காமர்பீ டிகையிற் கருணையொடு பொலிந்து
வீற்றுவீற் றமைந்த விரிதலைப் புவனம்
பாற்பட வகுத்த பழமறைக் கிழவனும்,
மதுக்குடம் உடைந்தாங் ககழ்க்கடை திறந்து
பிரசவூற் றிருந்து முருகுகொப் புளிப்ப
வண்டுழு துழக்கும் தண்துழாய் அலங்கல்
புரவுபூண் டகிலம் பொதுக்கடிந் தளிக்கும்
கருணைபூத் தலர்ந்த கமலக் கண்ணனும்,
அஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட் டன்னமும்
செம்மயிர்க் கருங்கண் வெள்ளெயிற் றேனமும்
ஆகுபு தனித்தனி அலமரா சிவந்த
மீகெழு பாஞ்சுடர் வெளிப்பட்(டு), அம்ம!
எம்மனோர் போல இனிதெழுந் தருளிக்
கைம்மா றற்ற கணக்கில்பே ரின்ப
மோனவாழ் வளிக்கும் ஞான தேசிகன்—
விரிகதிர் பரப்பும் மரகதத் தகட்டில்
சுடர்செய் செம்மணி இடைஇடை பதித்தெனப்
பாசடைப் பரப்பிற் பதும ராசிகள்
சேயிதழ் விரிக்கும் செழுமலர் ஓடையும்,

---

1. பூ—அழகு. சதம்—நூறு. தளம்—இதழ்.
2. பீடிகை—ஆசனம். 3. வீற்றுவீற்று—வேறுவேறு.
4. பால்—பகுதி. மறைக்கிழவன்—பிரமன்.
6. பிரசம்—தேன். முருகு—வாசனை. கொப்புளித்தல்—காலுதல்.
8. பொதுக்கடிந்து—பொதுமைநீக்கி, தனக்கே உரிமையாக்கி.
10. சுதை—அமுதம். அமுதத்தின் நிறம் வெண்ணிறம். 11. ஏனம்—பன்றி.
12. அலமரல்—சுழலல். சிவந்த—உயர்ந்த. 13. அம்ம—வியப்பிடைச்சொல்
17. தகடு—இலைபோன்ற மெல்லிய வடிவு.
19. பாசடை—பசியஇலை. பதுமராசி—தாமரைமலரின் தொகுதி.

அண்டகோ ளகையும் எண்டிசா முகமும்
கோட்டுடைத் தடக்கை நீட்டி அளந் தென்னச்
சேட்பட நிவந்த செண்பகா டவியும்,
கால்கிளர் விசும்பில் கற்பகா டவிக்கு
வேலிஇட் டன்ன வியன்மணிப் புரிசையும்,
மருங்குசூழ் கிடந்த வண்தமிழ்க் கமலைப்
பெரும்பதி புரக்கும் பொருட் குரிசில்—
நான்மறை நவின்ற நற்பொருள் இவைஎன
மோனவா சகத்தால் முப்பொருள் நவிற்றுபு
நன்னலம் புரியும் ஞானப்பிர காசன்—
இன்அருள் பழுத்த செந்நெறிச் செல்வன்—
திருக்கிளர் ஞானத் திருந்திழைக் கணியாம்
அருட்பெருஞ் சைவத் தருங்கலன் நாப்பண்
ஆசற விளங்கும் மாசிலாமணி—
அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்
துள்ளதன் படிவம் உணர்த்துவ கடுப்ப
மாநிலத் தமர்ந்த ஞானசம் பந்தன்
பொன்னடிக் கமலம் சென்னிவைத் திறைஞ்சுதும்,
இருகால் சுமந்த ஒருபெருஞ் சேவகத்

21. அண்டகோளகை—பிரமாண்டமாகிய கோளம்.

23. சேண்—தூரம். நிவத்தல்—உயர்தல்.

26. கமலைப்பெரும்பதி—திருவாரூர். 29. முப்பொருள்—பதி, பசு, பாசம்.

32. திருந்திழை—பெண். 33. அருங்கலன்—ஆபரணம்.

34. மாசிலாமணி-குற்றமில்லாத இரத்தினம். தருமபுர வாதீனத்தில் நான்காங் குருமூர்த்தமாக இருந்தவர் ஸ்ரீமாசிலாமணிதேசிகர். அவர்மேல்தான் பண்டார மும்மணிக்கோவை குமரகுருபரரால் பாடப்பட்டது. இப்பாட்டு அம்மும்மணிக்கோவையின் முதற்பாட்டு.

35. அமண்—சமணர், ஜைனர். கவுணியர் பெருந்தகை—கௌண்டின்னிய கோத்திரத்தில் உதித்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள். இவர் தேவாரம் பாடினவர்களுள் ஒருவர். இவர் சரித்திரத்தைப் பெரிய புராணத்திற் காண்க.

36. பிள்ளைமை—குழந்தைத் தன்மை. பிள்ளைமைவிடுத்த பருவம் — பேரிளமைப்பருவம். படிவம்—வடிவம். 37 கடுப்ப—நிகர்ப்ப.

38. ஞானசம்பந்தன்—தருமபுரவாதீனத்து முதற்குருமூர்த்தியின் பெயர். அப்பெயரை அங்குவரும் ஏனைய குருமூர்த்திகளுக்கும் இட்டு வழங்குதல் மரபு.

40. சேவகம்—யானைதுயிலிடம். இங்கு உடம்பு சேவகமாக உருவகிக்கப்பட்டது. 41. களிறு—யானை. தம்புலம்—தத்தமிடம். 42. கானகம்—காடு.

ஐம்புலக் களிறுந் தம்புலத் திழுப்ப
ஊனுடைப் பிறவிக் கானகத் துழலா(து),
வினைய முத்திநா டெய்த, ஓர்
ஞான வாரணம் நல்குதி எனவே.

---

கொடியும் முரசும் கொற்றவெண் குடையும்
பிறர்கொளப் பொறாஅன் தானே கொண்டு
பொதுநீங்கு திகிரி திசைதிசை போக்கிச்
செவியிற் கண்டு கண்ணிற் கூறி
இருநிலம் புரக்கும் ஒருபெரு வேந்தன்,
மிக்கோன் ஒருவன் வெறுக்கை நோக்குழித்
தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோன்ற,
இழப்புறு விழுமம் எய்தி, அழுக்கறுத்து,
மற்றது பெறுதற் குற்றன தெரீஇ,
அயிற்சுவை பெறாஅன் துயிற்சுவை உறாஅன்
சிறுகாற்று வழங்காப் பெருமூச் செறிந்து,
கவலையுற் றழிவதூஉம் காண்டும்;
அதாஅன்று,
விறகெடுத் தூர்தொறும் சுமந்து விற்றுக்
கூலிகொண்டு
புற்கையும் அடகும் மாந்தி, மக்களொடு
மனையும் பிறவும் நோக்கி, அயல்மனை
முயற்சிஇல் மகனை இழித்தனன் எள்ளி,

---

44. வாரணம்—யானை.

மறைக்கிழவனும், கமலக்கண்ணனும் காணாது அலமர சிவந்த பரஞ்சுடர் வெளிப்பட்டுவந்த ஞானதேசிகனும், கமலைப் பெரும்பதி புரக்கும் குரிசிலும், ஞானப்பிரகாசனும், செல்வனும், மாசிலாமணியுமாகிய ஞானசம்பந்தனது அடிக்கமலங்களை, ஞானவாரணம் நல்குதி என இறைஞ்சுதும் என முடிக்க.

4. இவ்வடியோடு "கண்ணிற்சொலிச் செவியினோக்கு மிறைமாட்சி" என்னும் நீதிநெறி விளக்கத்தை ஒப்பிடுக.

6. வெறுக்கை—செல்வம். 7. சுருங்கி—குறைந்து.

8. இழப்பு—இழவு. விழுமம்—துன்பம். அழுக்கறுத்து—பொறாமையுற்று.

9. மற்றது—மிக்கோன் ஒருவன் வெறுக்கை (6).

10. அயிற்சுவை—ஊணுண்ணுதல். துயிற்சுவை—நித்திரைகொள்ளல்.

15. புற்கை—கூழ். அடகு—இலைக்கறி. மாந்தி—உண்டு.

எனக்கிணை இலைஎன இணையன்மற் றொருவன்
மனக்களிப் புறீஇ மகிழ்வதூஉம் காண்டும்;
அதனால்,
செல்வம் என்பது சிந்தையின் நிறைவே;
அல்கா நல்குர வவாஎனப் படுமே.
ஐயுணர் வடக்கிய மெய்யுணர் வல்லதை
உவாக்கடல் சிறுக உலகெலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற் கரும்புணை இன்றே;
அதனால்,
இருபிறப் பமைந்த ஒருபிறப் பெய்தும்
நான்மறை முனிவர் மூவா யிரவரும்
ஆகுதி வழங்கும் யாக சாலையில்
தூஉ நறும்புகை வானுற எழுவ(து)
எழுநாப் படைத்த மூத்தீக் கடவுள்
கடல்அமிழ் தமிழ்ந்தாங் கவிஅமிழ் துண்ண
வரும்பெருந் தேவரை வானவர் கோனொடும்
விருந்தெதிர் கொள்கென விடுத்தது கடுக்கும்
வலன்உயர் சிறப்பின் புலியூர் கிழவ, நின்
அருள்பெற் றுய்தற் குரியன் யான்எனிற்
பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்த
அல்லல் செய்யும் அவாஎனப் படும் அவ்
வறுமையி னின்றும் வாங்கி

---

21. அல்கா—சுருங்காத. நல்குரவு—வறுமை.

22. ஐயுணர்வு—பஞ்சப்புலன். மெய்யுணர்வு – தத்துவஞானம். அல்லதை என்பதில் ஐ சாரியை.

23. உவாக்கடல்—பருவகாலத்துக் கடல். 24. புணை—தெப்பம்.

26. நான்மறை முனிவர் மூவாயிரவர்—தில்லை மூவாயிரவர்.

27. ஆகுதி—தேவர்க்கு வழங்கும் ஊண்பலி. 28. தூ—சுத்தம்.

30. அவி—தேவர்களை உத்தேசித்து ஓமாக்கினியில் விடும் நெய் முதலியன.

32. கடுக்கும்—ஒக்கும். நறும்புகை எழுவது விருந்தெதிர் கொள்கென விடுத்ததை ஒக்கும் என்க. கடுக்கும் சிறப்பின் என ஒட்டுக.

33. கிழவன்—உரியவன். 35. பவக்கடல்—பிறவிக்கடல்.

37. வாங்கி—எடுத்து.

புலியூர் கிழவ, (33) இருநிலவேந்தன் சவலையுற்றழிவதும், (12) விறகு விற்றுண்போன் மனக்களிப்புறீஇ மகிழ்வதும் (19) காண்டும்; அதனால், செல்வம் என்பது சிந்தையின் நிறைவும் (20) நல்குரவென்பது அவாவும் (21) ஆகும்; இவ்வவா

அறிவின் செல்வம் அளித்தருள் எனக்கே.
வண்டுகூட் டுண்ணு நுண்துளி பிலிற்றித்
தண்தேன் உறைக்குந் தடமலர்ப் பொதும்பரின்
விழுக்குலை தெறிப்ப விட்புலத் தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகில்,
செடிபடு முல்லைக் கொடிபடர்ந் தேறித்
தலைவிரித் தென்னக் கிளைதொறும் பணைத்து
மறிந்துகீழ் விழுந்த நறுந்துணர்க் கொடிகள்
நாற்றிசைப் புறத்தும் நான்றன மடிந்து
தாற்றிளங் கதலித் தண்டினில் படர; அப்
பைங்குலைக் கமுகில் படர்சிறை விரித்தொரு
கண்செய் கூந்தல் களிமயில் நடிப்ப,
நெடுந்தாள் மந்திகள் குடங்கையில் தூக்கி
முட்புறக் கனிகள் தாக்கக், கொட்புறும்
வானரம் ஒன்று வருக்கைத் தீங்கனி
தான்எடுத் தேந்துபு தலைமேற் கொண்டு
மந்திகள் தொடா மருண்டுமற் றந்தப்
பைந்துணர்க் கொடியில் படர்தரு தோற்றம்,
வடம்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்(து)
அணங்களுள் ஒருத்தி ஆடினள் நிற்பப்,
பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்,
குடந்தலைக் கொண்டொரு கூண்கழைக் கூத்தன்
வடம்தனில் நடக்கும் வண்ணம தேய்க்கும்
பூம்பணை மருதத் தீம்புனற் கமலைத்

---

வைக் கடத்தற்கு மெய்யுணர்வன்றிப் புணை வேறில்லை; அதனால் என்னை இவ்வவாவினின்றும் (24) எடுத்து (37) மெய்யுணர்வு அளித்தருளும் (38) எனமுடிக்க.

1. கூட்டுண்ணல்—கொள்ளைகொண்டுண்ணல். பிலிற்றல்—கொப்புளித்தல்.

2. உறைத்தல்—துளித்தல். 3. விழுக்குலை—சிறந்த குலை. தெறித்தல்—இடைமுரிதல். விட்புலத்தவர்—தேவர். 4. பழுக்காய்—பழுத்த காய், பாக்கு.

6. பணைத்து—பிழைத்து, மேலேறாது தவறி. மறிந்து—விலங்கி.

7. துணர்—பூங்கொத்து. 8. நாலுதல்—தொங்குதல். 9. தாறு—குலை.

11. கூந்தல்-மயிற்றோகை. 12. மந்தி-பெண்குரங்கு. குடங்கை-உள்ளங்கை.

13. முட்புறக்கனி—பலாப்பழம். கொட்பு—சுழற்சி. 14. வருக்கை—பலா.

18. வடம்—கயிறு. 20. பணை—முரசு. கொட்டல்—அடித்தல.

21. கழைக்கூத்தன்—கம்பங் கூத்தாடி. 23. பணை—வயல். கமலை—திருவாரூர்.

திருநகர் புரக்கும் கருணையங் கடவுள்,
அன்பெனும் மந்தரத் தாசைநாண் பிணித்து
வண்துழாய் முகுந்தன் மதித்தனன் வருந்த
அருட்பெருங் கடலில் தோன்றி, விருப்பொடும்
இந்திரன் வேண்ட உம்பர்நாட் டெய்தி
அந்தமில் திருவொடும் அரசவற் குதவி
ஒருகோல் ஓச்சி இருநிலம் புரப்பான்
திசைதிசை உருட்டும் திகிரியன் சென்ற
முசுகுந் தனுக்கு முன்நின் றருங்குப்
பொன்னுல கிழிந்து புடவியில் தோன்றி
மன்னுயிர்க் கின்னருள் வழங்குதும் யாமென
மேவர வழங்குமால் மன்ற;
யாவிரும் நமர்காள், இறைஞ்சுமின் நீரே.

---

25. மந்தரம்—மந்தரமலை. ஆசைநாண்—ஆசையாகிய கயிறு.

26. முகுந்தன்—விஷ்ணு. மதித்தல்—(மர்த்தித்தல்) கடைதல்.

28. உம்பர்நாடு—மேலுலகம். 31. திகிரி—ஆஞ்ஞாசக்கரம்.

35. மன்ற—தேற்றப்பொருளில் வருவதோ ரிடைச்சொல்.

36. நமர்காள்—நமர்கள் என்பதன் விளி. நமர்—நம்மவர்; கள்-பன்மைவிகுதி.

பச்சிளங்கமுகுக்குக் (4) கழைக்கூத்தாடிகளது கம்பமும் (18), முல்லைக் கொடி நாற்றிசைப் புறத்தும் நான்று மடிந்து படர்தலுக்கு (9) கம்பத்தை வடஞ் சூழ்ந்து கிடத்தலும் (18), களிமயில் நடித்தலுக்கு (11) அணங்குகளாடுதலும் (19), மந்திகள் முட்புறக் கனிகளைக் குடங்கையிற்றூக்கித் தாக்கலுக்கு (13) மருங் கினர் பெரும்பறை கொட்டுதலும் (20), வானரம் வருக்கைத் தீங்கனி தலைமேற் கொண்டு கொடியிற் படர்தற்குக் (17) கூன் கழைக்கூத்தன் குடந்தலைக்கொண்டு வடந்தனில் நடத்தலும் (22) உபமானம். இதனோடு சிந்தாமணி நாமகளிலம்பகம் ௫௭-ம் பாட்டை ஒப்பிடுக.

ஆதியில் திருமால் பூசித்திருந்த சோமாஸ்கந்த மூர்த்தத்தை இந்திரன் பெற்றுச் சுவர்க்கலோகத்தில் வைத்துப் பூசித்ததையும், அதனை இந்திரனிடத்திருந்து முசுகுந்தச் சக்கரவர்த்தி பெற்றுப் பூமியிற்கொணர்ந்து திருவாரூரில் ஸ்தாபித்ததையும் கந்தபுராணம் கந்தவிரதப் படலத்திற் காண்க.

கமலைக்கடவுள், முகுந்தன் மதித்தனன் வருந்தத் தோன்றி, முசுகுந்தனுக்கு முன்னின்று, பொன்னுலகிழிந்து மன்னுயிர்க் கின்னருள் வழங்கும்; அவனை நமர்காள் நீவிர் யாவரும் இறைஞ்சுமின் என முடிக்க. (உம்பர் நாட்டு) எய்தி (28) உதவி (29) என்னும் வினையெச்சங்கள், சென்ற (31) என்பதனோடு முடியும்.

1. மண்டலம் போற்றுருவம் அமுதமய மாய்முழு
 மதிக்கடவுள் எனவருதலால்,
வாளுறு தலைமடுக் கப்பொங்கும் ஆனந்த
 மாக்கடல் இடைத்தோன்றலால்,
2. தண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்கரத்
 தாமரை முகிழ்த்திடுதலால்,
சகலபுவ னத்திலும் உயிர்ப்பயிர் தழைப்பநல்
 தண்ணளி சுரந்திடுதலால்,
3. துண்டமதி நதியொடு பொதிந்தவே ணிப்பரஞ்
 சோதிகட் பொறி யாதலால்,
தோன்றல்இவன் நின்னையொத் துளனால் நினக்கும்ஒரு
 துணைஇவன் போல்இல்லைகாண்;
4. அண்டாண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொ
 டம்புலீ, ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்,
 அம்புலீ, ஆடவாவே.

1. சொற்றரு பெரும்புலவர் கலைஅமுது கொளவிருந்
 தோகைமேல் கொண்டருளினாய்,
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதும்அச்
 சோதிவே லையுமுகந்தாய்,

---

இதுவும் அடுத்த பாட்டும் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் வருவன.

1. மண்டலம் உலகத்தார். முழுமதிக் கடவுள் என்பது சந்திரனுக்கும் புலவனுக்குமாம். புலவனென்பது முருகற்கொருபெயர், புலம்—அறிவு.

வாளுறு தலைமடுக்கப் பொங்குமானந்த மாக்கடல் என்பது சந்திரனுக்கு வரும்போது கங்கைபோய் விழுகின்ற கடல் என்றும் முருகற்கு வரும்போது கங்கையையணிந்த சிவனென்றும் பொருள் கொள்க.

2. தண்டல்—கெடுதல். பெண்களது வாய்போன்ற குமுதம் விள்ளவும் கைபோன்ற தாமரை குவியவும் என்று சந்திரனுக்கும், வள்ளிநாச்சியாருடைய வாயாகிய குமுதம் விள்ளத் தனது கையாகிய தாமரையைக் கூப்புதலினால் என்று முருகற்கும் கொள்க. தண்ணளி—அருள்.

3. பரஞ்சோதியினுடைய கண்ணாகிய பொறி சந்திரன்; பரஞ்சோதியினுடைய கண்ணிற்றோன்றிய நெருப்புப் பொறி முருகன்.

4. கந்தபுரி—வேளூர்—புள்ளிருக்கும் வேளூர்—வைத்தீசுரன் கோயில்.

1. புலவர்—தேவர்; சங்கப் புலவர். கலையமுது—சந்திர கலையாகிய அமுது; சாஸ்திரங்களின் சுவை. கொளவிருந்தோகை—(கொள விருந்து ஓகை) கொள்ள விருந்திடுதலாகிய உவகை; (கொள இருந் தோகை) கொள்ள பெரிய மயில்.

2. குற்றமில் குணத்தைக் குறித்தஇர வலர்முகம்
கோடா தளித்தல்செய்தாய்,
கோகனக நாயகன் வரக்கூ விடும்குக்
குடம்கொடிய தாகவைத்தாய்,

3. உற்றிடும் இதழ்க்குமுதம் விண்டுதண் தேன்ஒழுக
ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்,
உன்செய்கை எம்பிரான் தன்செய்கை போலுமால்
உனையும்இவன் ஒவ்வாதிரான்,

4. அற்பொதி களத்தவன் அளித்தகும ரேசனுடன்,
அம்புலீ, ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்,
அம்புலீ, ஆடவாவே.



தோற்றி, உகந்தாய். உதித்து முன்பெருகி மலைபோல அலைமோதுகின்ற அந்த அக்கினியை உடைய கடலையும் உகந்தாய்; வெளிப்பட்டுச் சீறிக் கிரௌஞ்ச கிரியைப் போலக் கடலையுந்தாக்கிய ஒளிபொருந்திய வேற்படையை உகந்தாய்.

2. இரவலர்-இரவில் அலரும் குமுதம் முதலிய புஷ்பங்கள்; யாசகர். கோகனகநாயகன்—தாமரைநாயகனாகிய சூரியன். குக்குடம்—கோழி. கொடியதாக—கொடுமைசெய்வதாக. துகிற்கொடியாக.

3. இதழ்க்குமுதம்—பூவிதழை உடைய குமுதம்; வாயாகிய குமுதமலர். ஒளிநிலா நகை முகிழ்த்தல்—ஒளியையுடைய நிலாவின் நகையை (சந்திரிகையை)ப் பரப்புதல்; ஒளிபெற்ற புன்முறுவ லரும்புதல்.

# தாயுமானவர்

தாயுமானவர் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள வேதாரணியத்தில் பிறந்தவர்; வேளாண் மரபினர். இவர் தந்தை பெயர் கேடிலியப்பபிள்ளை என்ப. கேடிலியப்பபிள்ளை தமது மூத்த புதல்வனைத் தமது தமையனுருக்குத் தத்த புத்திரனுகக் கொடுத்ததன்பின், திரிசிரபுரத்தில் எழுந்தருளியிருக்கும் தாயுமானேசுரருடைய அருளினுல் பிறந்தமைபற்றி இவருக்குத் தாயுமானவர் என்று பெயரிடப்பட்டது.

கேடிலியப்பபிள்ளை திரிசிரபுரத்திலிருந்து 1704 – ம் வருஷமுதல் 1731—ம் வருஷம் வரை அரசாண்ட விஜயரங்க சொக்கநாத நாயகரிடம் பெரிய சம்பிரதி உத்தியோகத்திலிருந்தவர். அவர் இறந்தபின் அவர் பார்த்துவந்த வேலையை ஏற்றுத் தாயுமானவர் மேற்சொன்ன சொக்கநாத நாயகரிடம் சிறிதுகாலம் உத்தியோகம் செய்திருந்தார். நாயக ரிறந்ததன்பின் இவர் திரிசிரபுரத்தை விட்டு நீங்கித் தலயாத்திரை செய்துகொண்டு இராமநாதபுரத்தை அடைந்து தமது தமையனுர் விருப்பத்தின்படி ஒரு பெண்ணை விவாகம் செய்து இல்லறத்தி லிருந்தனர். அப்பெண் கனகசபாபதிப்பிள்ளை என்னும் ஒரு புதல்வனைப் பெற்றவுடன் இறந்துவிட்டனளாக, தாயுமானவர் துறவறம் பூண்டு சிவத்தியானம் செய்துகொண்டும் அரிய தமிழ்ப் பாடல்களைப் பாடிக்கொண்டுமிருந்து 1742—ம் வருடம் இராமநாதபுரத்துக்கடுத்த லக்ஷ்மீபுரமென்னும் தேவைநகரில் விதேகமுத்தி அடைந்தனர் என்ப.

தாயுமானவர் சமஸ்கிருதமும் நன்கு பயின்றவரென்பது அவருடைய பாடலால் நன்றுகத் தெரியும்.

விஜயரங்க சொக்கநாத நாயகரிடம் உத்தியோகம் செய்தவராதலின், தாயுமானவர் காலம் 1700—ம் வருடமுதல் 1742—ம் வருடம்வரை என்று கொள்ளலாம்.

தாயுமானவருடைய பாடல், அருணகிரிநாதர் பாடல்போல, வடமொழிச்செறிவு மிகவுமுடையது; ஆயினும், இன்னேசைத்தாயும் எளிதில் பொருளுணரக்கூடியதாயு முள்ளது; உலகவழக்கி லுள்ளனவாய் இலக்கணத்துக்கமையாத சொற்கள் பயின்றுவருவது; சமஸ்கிருதச் சொற்கள் தற்பவமாக மாற்றப்படாது தம் சுவரூபத்துடன் பிரயோகிக்கப்பட்டுள்ளது.

தாயுமானவருடைய மதம் சுத்தாத்துவித சித்தாந்த சைவம்.

# தாயுமானவர் பாடல்.

1. அங்கிங் கெனாதபடி எங்கும்ப்ர காசமாய்
   ஆனந்த பூர்த்தியாகி,
அருளொடு நிறைந்ததெது? தன்அருள் வெளிக்குளே
   அகிலாண்ட கோடிஎல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
   தழைத்ததெது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது? சமயகோ டிகள்எலாம்
   தந்தெய்வம் எந்தெய்வம்என்(று)
எங்கும் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது?
   எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லஒரு சித்தாகி இன்பமாய்
   என்றைக்கும் உள்ளதெது?மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லையுள தெது?அது
   கருத்திற் கிசைந்த(து); அதுவே
கண்டன எலாம்மோன உருவெளிய தாகவும்
   கருதிஅஞ் சலிசெய்குவாம்.

2. ஆழ்ஆழி கரையின்றி நிற்கஇலை யோ?கொடிய
   ஆலம்அமு தாக இலையோ?
அக்கடலின் மீதுவட அனல்நிற்க இல்லையோ?
   அந்தரத் தகிலகோடி
தாழாமல் நிலைநிற்க இல்லையோ? மேருவும்
   தனுவாக வளையஇலையோ?
சத்தமே கங்களும் வச்ரதான் ஆணையிற்
   சஞ்சரித் திடஇல்லையோ?

---

1. எது எது வென்று முடியும் வினாக்கள் ஆறும் கடவுளின் இலக்கணத்தைக் குறிக்கின்றன. இவ்விலக்கணங்களையுடையதுவே கடவுள் என்று கருதுதற்கிசைந்தது; அதுவே காணப்படுவதெல்லாம்; அதனையே மௌனநிலையில் தோன்றும் உருவெளியாகக் கருதி வணங்குவாம் என்க.

2. ஆழி—கடல். ஆலம்—நஞ்சு. வடஅனல்—வடவாமுகாக்கினி. அகிலகோடி—கோடி உலகம். அகிலம்—உலகம். தாழாமல்—கீழாகாமல்; கீழ்விழாமல். வச்ர

வாழாது வாழவே இராமன்அடி யால்சிலையும்
  மடமங்கை ஆகஇலையோ?
மணிமந்த்ரம் ஆதியால் வேண்டுசித் திகள்உலகை
  மார்க்கத்தில் வைக்கஇலையோ?
பாழான என்மனம் குவியஒரு தந்திரம்
  பண்ணுவ துனக்கருமையோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
  பரிபூர ணானந்தமே.

ஆசைக்கோ ரளவில்லை; அகிலம்எல் லாம்கட்டி
  ஆளினும், கடல்மீதிலே
ஆணைசெலவே நினைவர்; அளகேசன் நிகராக
  அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்;
  நெடுநாள் இருந்தபேரும்
நிலையாக வேஇனும் காயகற் பம்தேடி
  நெஞ்சுபுண் ணாவர்;எல்லாம்,
யோசிக்கும் வேளையில், பசிதீர உண்பதும்
  உறங்குவதும் ஆகமுடியும்.
உள்ளதே போதும்.நான் நான்எனக் குழறியே
  ஒன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல், மனதற்ற
  பரிசுத்த நிலையைஅருள்வாய்,
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற
  பரிபூர ணானந்தமே.

---

தரன்—இந்திரன். மணி—குளிகை. மனம்குவிதல்—மனம் ஒடுங்குதல். ஆலம் அமுதானது பாற்கடலில் தோன்றிய நஞ்சு சிவபெருமானுக்கு உணவாயது. மேரு தனுவாக வளைந்தது திரிபுர தகனத்தில். இராமன் அடியால் சிலை மடமங்கையானது கௌதமர் சாபத்தால் கல்லுருவடைந்த அகலிகை இராமனுடைய பாததூளியால் சாபநீங்கியது.

3. அகிலம்—பூமி. அளகேசன்—குபேரன். காயகற்பம்—காயசித்திக்குரிய மருந்து. நான் நான் எனக் குழறி—நான் நான் என்று அகங்காரம் பேசிட்டு. பாசக் கடல்—ஆசைக்கடல். மனதற்ற—மனத்தினுடைய செயலற்ற. பரிபூரணம்—முழு நிறைவு.

4. பத்திநெறி நிலைநின்றும், நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்,
பரவையிடை மூழ்கியும், நதிகளிடை மூழ்கியும்,
பசிதாகம் இன்றிஎழுநா
மத்தியிடை நின்றும்,உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்தும்,
மௌனத் திருந்தும்,உயர் மலைநுழைவு புக்கியும்,
மன்னுதச நாடிமுற்றும்
சுத்திசெய் தும்,மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்,
சொல்லரிய அமுதுண்டும், அற்பஉடல் கற்பங்கள்
தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் தும்,ஞானம் அலதுகதி கூடுமோ?
சித்தாந்த முத்திமுதலே,
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே,
சின்மயா னந்தகுருவே.

5. கானகம் இலங்குபுலி பசுவொடு குலாவும்நின்
கண்காண; மதயானைநீ
கைகாட்ட வும்கையால் நெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்திவருமே;

---

4. ஞானத்தால் அல்லது முத்தியில்லை என்றபடி. பத்திநெறி—பக்திமார்க்கம். பூமிப்பரப்பை வலமாக வருதல்—பூப்பிரதக்ஷிணம் செய்தல். பரவையிடை மூழ்கலும் நதிகளிடை மூழ்கலும்—தீர்த்தஸ்நானம் செய்தல். எழுநா—அக்கினி. மலைநுழைவு—மலைக்குகை. புக்கும் என்பது சந்தத்தின் பொருட்டுப் புக்கியும் எனத் திரிந்து நின்றது. தசநாடி சுத்தி செய்தல்—கற்பங்களுண்டு நாடிகளின் மலினமகற்றல். மூலப்பிராணன்—மூலாதாரத்திலுள்ள பிராணவாயு. அங்கி—அக்கினி. சோமவட்டம்—சந்திரமண்டலம். சந்திரமண்டலம் பிரமரந்திரத்திலுள்ளது. அமுது—சந்திரமண்டலத்திலிருந்து வரும் அமிர்தம். கற்பம்—கற்பகாலம், பிரமன் வாழ்நாள். சித்தி—காயசித்தி. சித்தாந்தமுத்திமுதல்—சைவசித்தாந்தத்திற் கூறும் முத்திக்கு முதல்வன். சிரகிரி—திரிசிராப்பள்ளி. சின்மயம்—சித்மயம், ஞானமயம்.

5. நெகிடி—நெருப்பிடுங்கலம். போனகம்—உணவு. காமதேனு—விரும்பியதைக் கொடுக்கும் பசு. அ—பண்டறிசுட்டு. போற்றி—இகரவீற்று வியங்கோள், வாழ்க என்பது பொருளாகக் கொள்க. சய—வெல்க; வடமொழி. கருணாகரமுகம்—கருணையே வடிவாகிய முகம். நவநாதசித்தர்கள்—சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்கள். சுகர்—சுகப் பிரமரிஷி. வாமதேவர்—ஒரு ரிஷி; இவர் பிரமஞானத்தில் சிறந்தவர்;

போனகம் அமைந்ததென அக்காம தேனுநின்
பொன்அடியில் நின்றுசொலுமே;
புலிராசர் கவிராசர் தவராசன் என்றுனைப்
போற்றிசய போற்றிஎன்பார்;
ஞானகரு ணாகர முகம்கண்ட போதிலே
நவநாத சித்தர்களும்உன்
நட்பினை விரும்புவார்; சுகர்வாம தேவர்முதல்
ஞானிகளும் உனைமெச்சுவார்;
வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடும்;உன்
மகிமையது சொல்லஎளிதோ?
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

6. பண்ணேன் உனக்கான பூசைஒரு வடிவிலே;
பாவித் திறைஞ்ச,ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயேஇருத்தி; அப்
பனிமலர் எடுக்கமனமும்
நண்ணேன்; அலாமல் இருகைதான் குவிக்கஎனில்,
நாணும்;என் உளம் நிற்றிநீ;
நான்கும் பிடும்போத ணக்கும் பிடாதலால்,
நான்பூசை செய்யல்முறையோ?
விண்ணேவிண் ஆதியாம் பூதமே, நாதமே,
வேதமே, வேதாந்தமே,
மேதக்க கேள்வியே, கேள்வியாம் பூமிக்குள்
வித்தே,அவ் வித்தின்முளையே,
கண்ணே, கருத்தே,என் எண்ணே, எழுத்தே,
கதிக்கான மோனவடிவே,
கருதரிய சிற்சபையில் ஆநந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

---

வேதந்தோன்றிய காலத்திருந்தவர்; பலவேதமந்திரங்களுக் காசிரியர்; தாய் வயிற்றி லிருக்கும்போதே பிரமஞானமடைந்து விளங்கியவர். மந்திரம் — வேதமந்திரம், யோகதந்திரம்—யோகநூல்.

6. வடிவு—உருவம். இறைஞ்சல்—வணங்கல். உன்னைப் பூசைசெய்தற்குப் பூ எடுக்கவோ எனின், மனம் வருவதில்லை; ஏனெனின், அப்பூவில் நீ இருக்கின்றனை. கை கூப்பி வணங்கவும் என் மனம் நாணும்; ஏனெனின் என் மனத்தில் நீ எழுந்

7. உடல்குழைய, என்பெலாம் நெக்குருக, விழிநீர்கள்
ஊற்றென வெதும்பிஊற்ற,
ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
ஓருறவு முன்னிஉன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துள் நடுக்குறப்,
பாடிஆ டிக்குதித்துப்,
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பிஆர்த் தார்த்தெழுந்து,
மடல்அவிழும் மலர்அனைய கைவிரித் துக்கூப்பி,
"வானே,அவ் வானில்இன்ப
மழையே, மழைத்தாரை வெள்ளமே, நீடூழி
வாழி"என வாழ்த்திஏத்தும்
கடல்மடை திறந்தனைய அன்பர்அன் புக்கெளியை;
கல்நெஞ்ச னுக்கெளியையோ?
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

8. கன்னல்அமு தெனவும்முக் கனிஎனவும் வாயூறு
கண்டெனவும் அடிஎடுத்துக்
கடவுளர்கள் தந்ததலை; அழுதழுது, பேய்போல்,
கருத்தில்எழு கின்றஎல்லாம்
என்னதறி யாமைஅறி வென்னும்இரு பகுதியால்
ஈட்டுதமிழ். என்தமிழினுக்
கின்னல்பக ராதுலகம் ஆராமை மேலிட்
டிருத்தலால், "இத்தமிழையே

தருளியிருக்கின்றாய். விண்—பரவெளி. விண்ணாதியாம் பூதம்—ஆகாயம் முதலிய பஞ்சபூதம். நாதம்—நாததத்துவம்; ஒலி. மேதகவு—மேம்பாடு. எண்—கணிதம். எழுத்து—இலக்கணம்.

7. முன்னுதல்—நினைத்தல். வான்—சிதாகாயம். வானில் இன்பமழை—ஆனந்தம். மழைத்தாரை வெள்ளம்—ஆநந்தப் பெருக்கு. ஊழி—ஊழிகாலம். மடை—மதகு.

8. கன்னல் அமுது—கருப்பஞ்சாறு. கண்டு—கற்கண்டு. ஆராமை மேலிட்டிருத்தலால் என் தமிழினுக்கு உலகம் இன்னல் பகராது என மாறுக. ஆராமை—அன்பு. படித்தீர், இத்தமிழைச் சொன்னவன் யாவன்? அவன் முத்திசித்திகளெலாம் தோய்ந்த நெறியைச்சொல்லும் என, அவர் (படித்தவர்கள்) நீங்கள் (சித்தர்கள்) சொன்ன உண்மைகளில் சிறிது தோய்ந்தவன் என விளக்கமாகச் சொல்ல. பின்னல் பெற—

சொன்னவ்னி யாவன்?அவன் முத்திசித் திகளெலாம்
தோய்ந்தநெறி யே,படித்தீர்,
சொல்லும்"என, அவர்"நீங்கள் சொன்னஅவை யிற்சிறிது
தோய்ந்தகுண சாந்தன்"எனவே
மின்னல்பெற வேசொல்ல, அச்சொல்கேட் டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

9. கல்லாத பேர்களே நல்லவர்கள், நல்லவர்கள்;
கற்றும்அறி வில்லாதஎன்
கர்மத்தை என்சொல்வேன்? மதியைஎன் சொல்லுவேன்?
கைவல்ய ஞானநீதி
நல்லோர் உரைக்கிலோ, கர்மம்முக் கியம்என்று
நாட்டுவேன். கர்மம்ஒருவன்
நாட்டினு லோபழைய ஞானம்முக் கியம்என்று
நவிலுவேன். வடமொழியிலே
வல்லான் ஒருத்தன் வரவும்,த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்.
வல்லதமிழ் அறிஞர்வரின், அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்.
வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தைஎன்? முத்திதருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

10. எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும்என்
இதயமும் ஒடுங்கவில்லை;
யான்எனும் அகந்தைதான் எள்ளளவும் மாறவில்லை;
யாதினும் அபிமானம்என்

---

விளக்கமாக. விகசிப்பது—மலர்வது. வித்தகம்—வன்மை; ஞானமுமாம். கணம்—கூட்டம்.

9. கர்மம்—வினைப்பயன். கைவல்ய ஞானநீதி—முத்திக்கேதுவாகிய ஞானத்தின் முறை. கைவல்யம்—முத்தி. நவிலல்—சொல்லல். புகலல்—சொல்லல்.

10. அபிமானம்—பற்று, ஆசை. ஜென்மம்—பிறப்பு சீலம்—ஒழுக்கம். தவம் என்பது "மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி

சித்தமிசை குடிகொண்ட(து); ஈகையொ டிரக்கம்என்
சென்மத்தும் நான்அறிகிலேன்;
சீலமொடு தவவிரதம் ஒருகனவில் ஆயினும்
தெரிசனம் கண்டும்அறியேன்;
பொய்த்த மொழிஅல்லால் மருந்துக்கும் மெய்ம்மொழி
புகன்றிடேன்; பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது, சும்மா இருந்தருள்
பொருந்திடாப் பேதைநானே.
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
அவனிமிசை உண்டோ?சொலாய்,
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

11. கல்லேனும், ஐய,ஒரு காலத்தில் உருகும்;என்
கல்நெஞ்சம் உருகஇலையே!
கருணைக் கிணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க ஒருகடவுளோ?
வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும்பெரு
வழக்குக் கிழுக்கும்உண்டோ?
வானமாய் நின்றின்ப மழையாய் இரங்கிஎனை
வாழ்விப்ப துன்பரம்காண்.

---

சுருக்கலும், கோடைக்கண் வெயினிலே நிற்றலும், மாரியினும் பனியினும் நீர் நிலே நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களை ஒம்புதல்." விரதமாவது "இன்ன அறம் செய்வல் எனவும் இன்ன பாவம் ஒழிவல் எனவும் தம்மாற்றலுக்கேற்ப வரைந்து கொள்வது." சும்மா இருத்தல்–மௌனமாயிருத்தல். பேதை–அறிவிலி. அறிவிலி நான் என்க. ஏகாரம் அசை. அத்தனை–(என்னைப்போன்ற) அவ்வளவு. பகிரண்டம்–வெளிஅண்டம்.

11. இணங்காத–வசமாகாத. நான்முகனால் கற்பிக்கமுடியாது என்றபடி. நீ நான்முகனிலும் வல்லன் ஆதலால் நீ செய்ததை நான்முகனால் மாற்றமுடியாது; உன் எண்ணத்துக்கு மாறாகவும் அவனால் செய்யமுடியாது. வானம்–சிதாகாயம். இன்பமழை–ஆநந்தம்; மேலே 7–ம் பாட்டைப்பார்க்க. பரம்–பாரம். சேய்–பிள்ளை, நீதம்–நீதி. புகலிடம்–புகுமிடம். அயல்–புறம்பு. நிர்க்குணம்–குணமில்லாதது. வாரி–கடல்.

பொல்லாத சேய்எனில் தாய்தள்ளல் நீதமோ?
புகலிடம் பிறிதும்உண்டோ?
பொய்வார்த்தை சொல்லிலோ? திருவருட் கயலுமாய்ப்
புன்மையேன் ஆவன்,அந்தோ!
சொல்லான் முழக்கிலோ? சுகமில்லை. மௌனியாய்ச்
சும்மா இருக்கஅருளாய்,
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

12. "அரும்பொனே, மணியே, என்அன்பே, என்அன்பான
அறிவே,என் அறிவில்ஊறும்
ஆனந்த வெள்ளமே," என்றென்று பாடினேன்;
ஆடினேன்; ஆடிநாடி
விரும்பியே கூவினேன்; உலறினேன்; அலறினேன்;
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்.
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனா னாலும்,உனை
இடைவிட்டு நின்றதுண்டோ?
என்றுநீ அன்றுநான் உன்அடிமை அல்லவோ?
யாதேனும் அறியாவெறுந்
துரும்பனேன் என்னினும், கைவிடுதல் நீதியோ?
தொண்டரொடு கூட்டுகண்டாய்,
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

13. காகமா னதுகோடி கூடிநின் றாலும்,ஒரு
கல்லின்முன் எதிர்நிற்குமோ?
கர்மமா னதுகோடி முன்னேசெய் தாலும்,நின்
கருணைப்பிர வாகஅருளைத்

12. உலறுதல்–காய்தல், வாடுதல். வேசற்று–சலித்து என்று நீ அன்று நான் உன் அடிமை–நீ எப்போது உண்டோ, அப்போதே நான் உனக்கு அடிமை: நான் அநாதியே உனக்கடிமை என்றபடி.

13. கர்மம்–வினை. அருட்டாகம்–அருளின்மேல் தாகம். வினை எத்தனைப் பெரியதாயினும் ஈசுவரனது திருவருளை அவாவி நிற்பவரை ஒன்றுஞ் செய்யாது;

தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ?
தமியனேற் கருட்டாகமோ
சற்றும்இலை என்பதுவும் வெளியாச்சு; வினைஎலாம்
சங்கேத மாய்க்கூடியே,
தேகமா னதைமிகவும் வாட்டுதே; துன்பங்கள்
சேராமல் யோகமார்க்க
சித்தியோ வரவில்லை; சகசநிட் டைக்கும்என்
சிந்தைக்கும் வெகுதூரம்.நான்
ஏகமாய் நின்னோ டிருக்கும்நாள் எந்தநாள்?
இந்நாளின் முற்றுறாதோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே.

14. இனியே தெமக்குன்அருள் வருமோ? எனக்கருதி
ஏங்குதே நெஞ்சம்ஐயோ!
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பர்என்
றெண்ணவோ திடம்இல்லையே.
அநியாய மாய்இந்த உடலைநான் என்று,வரும்
அந்தகற் காள்ஆகவோ?
ஆடித் திரிந்துநான் கற்றதும் கேட்டதும்
அவலமாய்ப் போதல்நன்றோ?
கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனிஆகித்

---

வினை என்னை வருத்துதலான், நான் திருவருளை அவாவவில்லை என்பது வெளிப்படை. வாதித்தல்—வருத்துதல். சங்கேதம்—ஒருப்பாடு. யோகமார்க்க சித்தியோ வரவில்லை—யோகநெறி எனக்குச் சித்திக்கவில்லை. சகசநிட்டை — இடைவிடாது நிட்டையிலிருத்தல். நிட்டை—மனத்தைக் கடவுளிடத்தே நிறுத்திச் சலியாதிருத்தல். ஏகமாயிருத்தல்—இரண்டறக்கலந்திருத்தல். இகபரம்—இம்மை மறுமை.

14. உடலை நான் என்று—உடலை நான் என்று கருதி. அவலம்—பயனற்றது. கனல் வாதை—பசிப்பிணி. கனல்—உதராக்கினி.

தனியே இருப்பதற் கெண்ணினேன். எண்ணமிது
சாமிநீ அறியாததோ?
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

15. தந்தைதாய் தமர்தாரம் மகவென்னும் இவையெலாம்
சந்தையிற் கூட்டம்;இதிலோ
சந்தேகம் இல்லை.மணி மாடம்மா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வும்ஓர் இந்த்ரசா லக்கோலம்.
வஞ்சனை பொறாமைலோபம்
வைத்தமன மாம்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை இலாத கனவே
எந்தநா ளும்சரி எனத்தேர்ந்து தேர்ந்துமே
இரவுபகல் இல்லாஇடத்(து)
ஏகமாய் நின்றநின் அருள்வெள்ள மீதிலே
யான்என்ப(து) அறவும்மூழ்கிச்
சிந்தைதான் தெளியாது சுழலும்வகை என்கொலோ!
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

16. கந்துகம் மதக்கரியை வசமாய் நடத்தலாம்;
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம்; ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்;
கட்செவி எடுத்தாட்டலாம்;

---

15. தமர்—உறவினர். இந்திரஜாலக் கோலம்—மாயவடிவு. வஞ்சனை, பொறாமை, லோபம் முதலியவற்றுக் கிருப்பிடமாகிய மனமான புழு. மலபாண்டம்—மலம் வைத்த பாண்டம், உடல். வாஞ்சனை—விரும்புதல். ஏகம்—தனிமை. தேசோமயம் — ஒளிவடிவு.

16. கந்துகம்—குதிரை. வசமாய்—வசமாக்கி. கட்செவி—பாம்பு. வேதித்து—ரசவாதம் செய்து; பொன்னல்லாத மற்றைலோகங்களைப் பொன்னாக்கி. மற்றொரு சரீரத்தில் புகுதல்—கூடுவிட்டுக் கூடுபாய்தல்; பரகாயப் பிரவேசம்செய்தல். சலமேல் நடத்தல்—ஜலஸ்தம்பனம். கனல்மேல் இருத்தல்—அக்கினிஸ்தம்பனம்.

வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோ கத்தையும்
 வேதித்து விற்றுண்ணலாம்;
வேறொருவர் காணாமல் உலகத் துலாவலாம்;
 விண்ணவரை ஏவல்கொளலாம்;
சந்ததமும் இளமையோ டிருக்கலாம்; மற்றொரு
 சரீரத்தினும் புகுதலாம்;
சலமேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்;
 தன்னிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
 திறம்அரிது, சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
 தேசோ மயானந்தமே.



# தேம்பாவணி.



வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணி என்னும் தமிழ்க் காப்பியம் அவரது கையெழுத்துப் பிரதிக்கொப்ப, கி.பி. 1851-ல் புதுவையில் அச்சிடப்பட்டது. 'தேம்பாவணியில் விளக்கப்படுகின்ற பிரதான வர்த்தமானங்கள்......சத்திய வேதாகமங்களினின் றெடுத்த உண்மை நிறைந்த சரித்திரங்களென்ப துறுதி.' சத்திய வேதாகமங்க ளென்பது கிறிஸ்தவ மதத்திற் காதாரமாயுள்ள விவிலியநூலையும் அதற்குச் சார்பாய்ச் செய்யப்பட்டுள்ள நூல்களையும் குறிக்கும். இத் தேம்பாவணி முதற் காண்டத்தில் பத்தாவது படலமாகிய மகவருள்படலம் இங்குப் பதிப்பிக்கப்படுகின்றது. அப் படலம் இயேசுநாதர் உலகி லவதரித்த சிறப்பினை விளக்கும்.

The following about Constantius Beschi is from the October issue of the *Christian College Magazine* of 1891:

Among the few Europeans whose names are cherished in South India, and who have distinguished themselves by a perfect mastery and use of the vernaculars of the country, Constantius Beschi is specially entitled to honour. His knowledge of Tamil has been rarely equalled and could hardly be surpassed even by Hindus. His literary works in that language challenge comparison with those of the greatest Tamil poets of the palmy days of vernacular literature.

Constantius Beschi was born in the province of Mantua, North Italy, in the small town of Castiglione, which lies some ninety miles west of Venice. The date of his birth was November 8, 1680. Of his early years and education nothing is known, but he joined the Society of Jesus on October 21, 1698, when he was eighteen years of age. It may be accepted as probable that he arrived in India in 1706 and landed at Goa. That he commenced the study of Tamil immediately on his arrival is beyond question, and after having spent some time in Goa preparing for his work, he proceeded to Tinnevelly. Bishop Caldwell is of opinion that 1708 is the latest date that can be assigned for his arrival there. Beschi came to India as a missionary, and his first field of labour was the Tinnevelly District. The congregation at *Vaḷakankuḷam* in that district was established in 1714 by Brandolini, and his testimony may be accepted, that Beschi was stationed at

*Kāmayanāyākkanpaṭṭi* in 1714, 1715, and 1716, and that while there he frequently visited the village of *Kaittār*, which is situated on the Madura Road, eighteen miles from Palamcottah. From the time of his entrance upon missionary work, Beschi appears to have assumed the position of a guru. In this, he did not follow Robert de Nobili who became a *Sannyāsi* and practised a severe asceticism, nor did he follow John de Britto, whose relation to the people whom he sought to teach was eminently familiar and sympathetic. The æsthetic element was strong in Beschi, and this, added to a dignity of manner which was natural to him, would probably have made asceticism like De Nobili's distasteful as well as difficult. Anyhow he was no ascetic.

In 1716, he went to Madura, but of his life there, nothing is known, and in 1720, he was stationed at *Vaḍagarpaṭṭi* a village near Trichinopoly. During all these years his study of Tamil was continued and his mastery of it had become so complete that in 1724 his great work, the *Tēmbāvaṇi* was published. The poetic merit of this work is so high that since his time in the whole of the Tamil country nothing has been produced which can at all approach it in excellence.

In the year 1727, his prose work, *Vēdiyaroḻukkam*, a book of instructions for catechists, was prepared by him. For the purpose for which this work was written, it is not likely to be surpassed; every page bears witness to the experience as well as the ability of the writer. In style, it is a perfect model of Tamil prose, it is free from verbosity, and its sentences do not all end in the dreary terminus of a finite verb. Beschi's Tamil prose sparkles with life, and is never dull. He wrote the commentary to the *Tēmbāvani* in 1729, when he was residing in the village of *Ārūr*, near Trichinopoly, in which village he continued to reside for a number of years. There his life appears to have been placid and undisturbed and we may conjecture that during this period many of his other Tamil works were written. Of these the following may be mentioned:—1. *The Adventures of Guru Simple*; 2. *Vēdaviḷakkam*; 3. *A Tamil and French Dictionary*; 4. *A Tamil and Portuguese Dictionary*; 5. *A Tamil and Latin Dictionary*; 6. *The Catur*

*Akarādi*; 7. *A Grammar of Shen Tamil*; 8. *A Grammar of Kodun Tamil*; 9. *Tonnūl Viḷakkam.* Many other works also came from his pen; e.g. *Vāman Kātai, Tirukkavalur Kalambakam, Annei Aḻunkal Antāti, Kitteri Ammāl Ammānai, Jnāna Uṇarttal, Pētakamaruttal, Tiru Sabai Kaṇidam* and *Aḍaikkala Mālai.* Besides this long list of works, we are indebted to him for at least one improvement in the writing of Tamil, viz. the addition of the curve which now serves to distinguish the long vowels ê and ô from the short ones. These works show that his ardour in study continued unabated, and that he filled all his years with eminently useful activity; yet all this work must be regarded but as the generous and beneficent overflow of a life brimming with enetgy and consecrated to his special work as a missionary.

His life and work, and especially the excellence of his literary labours will make it impossible that he should ever be forgotten. The fact that one possessed of gifts and graces which qualified him to adorn and benefit the most select and cultured society of Europe, voluntarily contented himself with a life in an obscure village in South India, is deeply impressive. There, far removed from the great, and vain, and restless world, he passed his last years in teaching simple and ignorant men, and found solace and joy in the God whom he served, and the truth which he knew and loved. And from thence he finally passed to join the glorious company of the immortals.

The name adopted by Beschi after he arrived in the Tamil country was *Dhairyanāthan*, which is a free translation of his name Constantius, but we are told that after the publication of his *Tēmbāvaṇi*, the title of Vīramahāmuni was conferred upon him by pundits of the Tamil country, and though no particulars of how and when it was conferred have come down to us, there appears to be no reason for disputing the accuracy of the statement. It is by this name that he is, and will continue to be, best known among the people of South India.

For further particulars of the life of this interesting author, see the *Madura District Manual*, by Mr. J. H. Nelson, I.C.S., Part III, pp. 160, 298-300, and Bishop Caldwell's *History of Tinnevelly*, pp. 238-43.



# தேம்பாவணி.

பத்தாவது

## மகவருள் படலம்.

1. நிலமுறை பகையைச்[1]சீக்கி
   நிகரில்[2]ஔக் தவியா னென்பான்
வலமுறை ஒருவன் ஆண்ட
   வளமையாற் செருக்குற் றெங்கும்
பலமுறை பிரிந்த யாரும்
   பண்டுறை காணி யூர்போய்க்
குலமுறை [3]இறையும்[4]எண்ணுங்
   கொணர்ந்திடப் [5]பணியிட் டானே.

[1] வென்று. [2] Cæsar Augustus. [3] வரி, கையிறை. [4] எண்ணிக்கை. [5] ஏவல்.

2. இப்பணி கேட்டு வேதத்
   தெழினுதற் றிலதம் ஒப்ப
[1]ஒப்பணி கடந்த சூசை
   உளத்தழற் புகுத்தி னாற்போல்
[2]வெப்பணி உயிரு லாவும்
   [3]வெய்துற லாற்ற மொய்கொள்
[4]அப்பணி [5]உலக வேந்தின்
   அன்னையை நோக்கிச் சொல்வான்.

[1] ஒப்பற்ற. [2] வேகும். [3] துயரை. [4] கடல்சூழ்ந்த. [5] உலகநாதனைச் சூல் கொண்ட மரியை.

3. மன்னவன் உலகில் எங்கும்
   வகுத்ததோர் பணியீ தன்றோ!
பின்னவன் பணித்த வாற்றால்
   [1]பெத்திலேம் என்னும் வாய்ந்த

[1] Bethlehem.

என்னகர்க் கிறையும் எண்ணும்
ஈவதற் கேகல் வேண்டும்
அன்னதற் கடியேன் செய்யு
மாறெவன் அருளிச் செய்வாய்.

4. [1]விண்டல மகத்து வேந்தர்
வேந்தனும் உனது மைந்தன்
[2]மண்டல மகத்துத் தோன்றி
[3]மனுமகன் பிறப்ப [4]நாளாய்த்
[5]தண்டலை யகத்து விள்ளும்
தாதினும் நொய்தா ணீயும்
[6]கண்டக மகத்தென் ணோடு
துணைவரக் கருத லாமோ.

1 வானுலகின். 2 பூவுலகில். 3 மனிதனாக. 4 நாளாகவும். 5 பூந்தோட்டத்தில் மலர்ந்த பூ இதழினும் நொய்ய பாதத்தையுடைய. 6 முள்ளால் நிறைந்த வழியில்.

5. [1]மின்னிநா விடிவெற் பீர்ந்து
வேறிரு கூறு செய்வ
துன்னிநா [2]னுய்ய லாற்றேன்
ஒருநொடி பிரிந்து போகின்
[3]முன்னிநான் அடைநோய் நீக்க
[4]முதல்வற்கேட் டவன்செய் யேவல்
பன்னிநான் செய்வ தென்னே
பகர்தியே யென்றான் சூசை.

1 மின்னிவீழ் செந்தீ இடியாற்பிளந்த மலையை வேருக்கினும் போலாகுமென்று எண்ணி. 2 பிழைத்தல். 3 என் உள்ளங்கொண்ட துன்பத்தை. 4 முதல்வனை

6. என்றருமா [1]மறைவடிவம்
வந்துதவன் இவைகூறப்
பின்[2]றருயா வையுமுணர்ந்தும்
பேரிறையோன் றனைத்தாங்குந்
[3]துன்றருமா மாட்சிமையாள்
தன்றுணைவன் சொற்பணிய
அன்றருமா மகவினைத்தாழ்ந்
ததற்[4]கியற்றும் பணிகேட்டாள்.

1 வேதம். 2 வரும். 3 கிடைத்தற்கரிய 4 செய்யும் முறையை.

7\. கேட்பதருந் தகைக்கிறைவன்
கேட்டுரைத்த திருவுளமே
[1]கோட்பதருங் குணக்கிழத்தி
[2]கொழுந[3]னுளத் தெழச்சொல்லி
[4]வேட்பதரு மணமணத்த
உயிரிரண்டும் வேறாகா
[5]வாட்பதரு நயத்திருவர்
மாநகர்க்கே குதுமென்றாள்.

[1] குறையில்லாத. [2] கணவன். [3] களிகூர. [4] விரும்புதற்கரிய மணமொன் றாய்க் கட்டின. [5] வாடாத இன்பத்தோடு.

அ. [1]குவட்டாய வெள்ளநிகர்
கூர்த்துவகை பெருகியெழத்
[2]துவட்டாத தூய்தவனும்
துணைவியெனும் ஆயிழையும்
உவட்டாத பணிமுறையாற்
செல்லவென உணர்வுற்றார்
[3]சவட்டாத அன்புரிமைச்
சால்பினிரண் டன்றிலொத்தார்.

[1] மலையுச்சியினின்றெழுகும். [2] துவளாத. [3] ஒழியாது பிரியாத.

9\. பூண்மின்னு மணிப்பேழை
போன்றருஞ்சூல் முற்றணிந்தாள்
[1]கோள்மின்னு முடிதாழக்
கொழுநனைத்தான் றொழவவனும்
மாண்மின்னு மனம்வெருவி
வணங்கப்பின் பிருவர்தொழும்
தாள்மின்னு மகன்தந்த
ஆசியொடு [2]தடங்கொண்டார்.

[1] நக்ஷத்திரங்கள் சூழ்ந்த தலையைத் தாழ்த்தி. [2] பிரயாணமாயினர்.

10\. வஞ்சத்தார் மனம்போல
இருண்டவிரா [1]வாட்டுமொளி
[2]விஞ்சத்[3]தா ரணியறியா
வெயில்வெள்ள மும்பெருகத்

[1] ஒழிக்கும். [2] மிக. [3] வானவர் செய்த வெயில்.

[4]தஞ்சத்தார் தவஞ்செய்தோர்
[5]தகைபோல இவர்க்கிருள்சூழ்
எஞ்சத்தா மிரவுபக
லென்றறியா தேகுகின்றார்.

[4] நிறைந்த தவம். [5] பெருமை.

11. [1]பான ளாவுழி பாயிருள் [2]நீத்தொளி
தான ளாவிய தன்மையி னாயினர்
போன [3]வாயிலெ லாம்[4]புரை நீத்தருள்
ஆன தாருயிர் [5]ஆகுல மாறவே.

[1] சூரியன் திரியுமிடத்து, (பால்—பகல்.) [2] ஒழிந்து. [3] இடம். [4] பாவம். [5] துயர்.

12. சோலை சூழ்[1]வரை தூங்கிய தீம்புனல்
[2]மாலை சூழ்வழி ஒல்லென வந்துபாய்ந்
[3]தாலை சூழ்வய லார்ந்து விளைந்தநெல்
[4]வேலை சூழ்வளை முத்தென [5]எய்ந்ததே.

[1] மலையினின்று இழிந்தோடின. [2] மாலையின் சாயலாய் மலிய மலர்ந்த பூம்பொழில் வழியாய். [3] சூழ ஆலைகள் ஆடும்வயல். [4] கடலிலுள்ள சங்கு. [5] தோன்றியது.

13. மாலை [1]யாரும் மணமக ளாமெனச்
சோலை யார்தருப் [2]பூம்பணைத் தோற்றமே
[3]மாலை யார்[4]உடு காட்டிய வானெனச்
[5]சேலை வார்பொய்கை தேன்மலர் விள்ளவே.

[1] அணிந்த. [2] பூங்கொம்பு. [3] இரவில். [4] நக்ஷத்திரம். [5] மீன்களையுடைய குளங்கள்தோறும்.

14. [1]கொம்பினார் குயில் கூவவும் மஞ்ஞைகள்
[2]பம்பி யாடவும் பைஞ்சிறைத் தேனொடு
தும்பி பாடவும் தூயன நாணவும்
நம்பி மாதொடு நன்னெறி போயினான்.

[1] கொம்புகள் தோறும். [2] பொலிந்து.

15. ஓடையாய்ப் பெரிதொலித்துப்
பெயர்ந்த வெள்ளம் ஒழுகியபின்
கோடையாய் வற்றுமென
வழியிற் கொண்ட கூர்[1]நயமே

[1] மகிழ்ச்சி.

[2]மாடையா யிலங்குநகர்
வந்து மாற்றி மருவியதோர்
பீடையாய் [3]உணங்கன்றூர்
வருந்தும் பெற்றி பெரிதெனவே.

[2] பொன். [3] வாடும்.

16. மண்சிறையை [1]ஒழித்தவர்தம்
வருத்தம் [2]காணு வழிமுடுகித்
தண்சிறைசெய் கடல்மூழ்கிப்
பருதி [3]அங்கண் தாழ்ந்தொளிப்ப
ஒண்சிறைசெய் அளிகளழ
முளரி தன்[4]தா துடன்றடைப்பக்
[5]கண்சிறைசெய் கங்குலுற
நகரிற் சென்றூர் கருணைவலார்.

[1] ஒழிக்க வந்தவர். [2] காணுதபடி. [3] அதனுள். [4] இதழ்க்கதவினை அடைக்கவும். [5] கண்ணுக்குச் சிறையாக இருண்ட இரா தவக்கும்போது.

17. [1]சாதியினுல் நிகர்க்கரிய
மலர்மென் றுளின் தகுதிநலாள்
[2]வீதியினுல் எய்தியநோ
யாற்ற [3]வெஃகி [4]வெயில்மிடைந்த
ஓதியினு லுளத்துயர்ந்தோன்
[5]ஒதுங்குங் தன்மைத் துறையுள்[6]அருட்
சோதியினு லவிர்முகத்தில்
உறவோர் கேட்டுத் துருவினனுல்.

[1] செண்பகம். [2] வழிநடந்து. [3] விரும்பி. [4] தெளிந்த உணர்வோடு. [5] ஒதுங்கியிருக்கும்படி ஒரு மனையிலிடந்தேடி. [6] அருளால் மலர்ந்த முகத்தோடு.

18. அடைப்பதற்கே யருங்கடலாம்
அவாவுட் பொங்கி [1]யாக்கமிவண்
கிடைப்பதற்கே யுறவுகிளை
[2]தேடும் பாலாற் கிளர்நிரப்பிற்
படைப்பதற்கே யரியபொருட்
கொண்டார்க் கல்லாற் பயன்பயவாத்
துடைப்பதற்கே யரும்வறுமை
யவர்க்கொன் றுண்டோ சுற்றமதே.

[1] ஊதியம். [2] தேடினதனுல்.

19. நஞ்[1]செஞ்சாக் [2]காஞ்சிரங்காய்
அழகென் றெண்ணி [3]நச்சுவர்போல்
[4]விஞ்செஞ்சா வினைபயக்கும்
பொருளே வெஃகி விழிகடந்த
[5]மஞ்செஞ்சா வருட்செல்வம்
[6]எண்ணு மூடர் [7]வறியரெனு
நெஞ்செஞ்சாத் திருவோரை
எவரோ வென்று நீக்கினரால்.

[1] குறையாத. [2] எட்டிப்பழம். [3] விரும்புவார். [4] மிகுதி குறையாத (மிக்க) துன்பத்தை. [5] வடிவுகுறையாத. [6] மதியாத. [7] வறியர் எனத்தோன்றி.

20. பொன்னன்ன பொலிந்தநகர்
புடைகள் தோறும் புகுந்நின்றூர்
மின்னன்ன [1]விரைந்திரிய
உருமென் [2]றன்னூர் விடைந்துடற்றப்
[3]பின்னன்ன முகில்உறைபெய்
யன்ன சூசை பெரிதழுது
முன்னன்ன நக[4]ருதவி
யுணர்ந்த பாலால் முழு[5]துளைந்தான்.

[1] விரைவில் திரிய. [2] அவ்வூரார் சினந்து சீறினதினால். [3] மின்னி இடித்த மேகம் மழையைத் துளித்த தன்மையால். [4] ஆதரவாகுமென்று நினைத்ததனால். [5] வருந்தினன்.

21. நான்செய்த குறைதானோ
நகரே செய்த [1]நவைதானோ
தான்செய்த [2]விதிதானோ
தரணி காக்கத் தற்பரனீங்
கூன்செய்த உடலொ[3]டெழ
இடமொன் றில்லை உலகிலெனுத்
[4]தேன்செய்த பூவுயர்த்தோன்
அரற்றி விம்மித் திரிவானும்.

[1] பாவம். [2] கட்டளை. [3] பிறக்க. [4] மதுவைப்பொழிந்த பூங்கொடியோன்.

22. இகழுவரென் [1]றிகழ்வின்றி
யருளுற் றின்னா ரிகழ்ந்தாரும்
புகழுவரென் றுசிநலம்
புகன்று வாழ்த்திப் புரை[2]யெண்ணு
நிகழுவரே நெகிழுவரே
வணங்கிக் கேட்கின் [3]நிந்தையுறி
மகிழுவரே மருட்டுமவா
[4]அரிந்து வாய்ந்த மாட்சிநலோர்.

1 இகழாமல். 2 எண்ணுமல் திரிவார் குழைவார். 3 நிந்தைகளைக் கேட்டு
4 அறுத்து உயர்ந்த.

23. தன்னுயிர்சேர் துயர்கண்டு
மகிழ்ந்த நல்லோன் [1]தன்னுயிரின்
இன்னுயிர்சேர் துயர்[2]ஆற்று
விரும்பி யெங்கும் இரிந்திரப்ப
மன்னுயிர்சேர் உறவெமக்குச்
சேரா வென்னில் வறியரொனுத்
துன்னுயிர்சேர் இரக்கமெமக்
கிலதே னென்னுச் சொலலுற்றுன்.

1 துணைவி. 2 பொருமல்.

24. அடுக்கிரப்பார்க் காரவமுற
வளித்த [1]நன்றி [2]பனுர்க்கடலே
மடுத்திருப்பக் கரையன்றே
வென்று கூப்பி வணங்கிருகை
யெடுத்திருப்பக் [3]காய்முகனே
டெள்ளுந் தன்மைத் தெவரெவருங்
கடுத்திருப்பக் கண்ணருவி
கடுக நொந்தான் [4]கடிக்கொடியான்.

1 நன்மை. 2 துன்பக்கடலை மறித்தடைக்கும் கரை. 3 சினத்தால் காய்ந்த முகத்தோடு எல்லாரும் இகழ்ந்து கோபித்ததனுல். 4 வாசப்பூங்கொடியோன்.

25. துன்புற்ற காலொருவர்க்
கிரங்கிச் செய்த துணையுறுதி
யின்புற்ற காலொருவர்
மறந்தா லஃதே யிவர்க்குறுதி

[1]பின்புற்ற காலுயர்வான்
தரும்வித் தென்பான் [2]பெரிதுவப்ப
முன்புற்ற கால்மொழிவாய்
ஞான மென்று முனிநகைத்தார்.

1 இறுதிக்காலம் வந்தபோது. 2 அப்போது அவர் நாம் மிகவும் களிகூர முன்னே வந்தாயாகில் இந்த ஞானங்களைச் சொல்லலாமே யென்று அவனை நகைத்தார்.

26. [1]பால்நேரப் பாடியபண்
[2]கோகிற் கின்பம் பயவாப்போல்
வேல்நேரப் பாய்துயர்கொண்
டிவற்றைக் கொன்னே விளம்பியிவர்
[3]நூல்நேரப் பாய்நெடிய
மறுகிற் கெல்லா நொந்[4]தொழுகிற்
[5]கோல்நேரப் பாவியபகை
யிறையும் எண்ணுங் கொடுத்தனரே.

1 இனிய பால்போல. 2 கழுதைக்கு. 3 நூலிலும் வழாமல் ஓடின நெடுந்தெரு. 4 நடக்கும்போது. 5 இராசகட்டளையின்படி.

27. செய்முறையா வையுந்[1]திருந்தித்
திறம்பா நீதிச் செழுந்தகவோர்
கைமுறையாம் இறைதந்து
மலர்த்தாள் நல்லாள் [2]தடி வருந்த
[3]மொய்முறையாற் கடலொக்கு
நகர மெல்லா [4]முடுகியபின்
[5]மைமுறையால் இரவின்நடு
மருவக் கண்டு [6]வளன்சொல்வான்.

1 திருந்த. 2 மிகவும். 3 பொருதலையும். 4 விரைவில் திரிந்தபின். 5 இருண்ட. 6 சூசை.

28. [1]நிலத்தியல்பாற் [2]றுளிநன்னீர்
திரிந்த தோற்ற நிகரெனச்சேர்
குலத்தியல்பாற் [3]கிழமைநிலை
திரிகு மென்றூர் குறைகிளரென்

1 Comp. Kural 452. 2 பெய்யும் துளி. 3 குணமும் மாறும்.

[4]கிலத்தியல்பாற் கிளைத்தனவிக்
[5]கேத மெல்லாங் கிடைத்துளைய
நலத்தியல்பாற் றகைநல்லாய்
வருந்தி யென்றால் [6]நகவானாய்.

[4] அற்பத்தினாலல்லவோ. [5] துயர். [6] நிந்தையும் அடைந்தாய்.

29. [1]முற்செய்கை பயத்ததுயர்
அகற்றி யெம்மை முயன்றளிக்கும்
தற்செய்கை தளிர்ப்பத்தாழ்ந்
திறைவ னிங்கண் டான்[2]மகனாய்
[3]நற்செய்கை யொன்றுமிலா
வடியன் றன்னை நண்ணியகால்
[4]மற்செய்கை வீங்குவயத்
துயர்ந்தோ னேனும் வருந்தானோ.

[1] பாவம். [2] மனிதனாய். [3] தருமம். [4] அளவிறந்த வல்லமையுடையோனாயினும்.

30. [1]உடைநகர்கண் வாழரசன்
வறுமை நாடி யுதிப்பச்சீர்
மிடைநகர்கண் பதியல்ல
தென்றோ வின்னார் [2]விலகியெமக்
கிடைநகர்கண் ணிடமின்றி
யிரிந்த தன்மை யிமிழிலினிப்
[3]புடைநகர்கண் கண்ட[4]முழை
புணரப் போகிற் [5]புரிவென்றான்.

[1] செல்வ வானகரில். [2] தள்ளி. [3] நகர்ப்புறத்தில். [4] குகை. [5] நல்லது.

31. [1]இத்தலை யிவனும்நன் றென்று பேரொலி
மொய்த்தலை பெருங்கடல் நிகர்[2]முற் றூர்கடந்
[3]தத்தலை யிருமையோர் அமரர் செய்யொளி
மைத்தலை நடுநிசி மயங்கப் போயினார்.

[1] இத்தன்மையால். [2] மூதூர். [3] அந்தப் பெருமையோர்.

32. [1]கோளைவாய்ப் புகழ்தரக் கோல வானவர்
[2]பாளைவாய்க் கமுகுபாய் பலவின் காயுடைச்
[3]சூளைவாய்ப் பொய்யெனத் துளித்த தேன்செயும்
[4]மூளைவாய்த் தண்பொழில் கடந்து [5]முன்னினார்.

[1] பாடித் துதிகளைச் சொல்ல. [2] பாளையை விரித்த கமுகு பாய்ந்து. [3] வேலி.
[4] சேறு பாய்ந்து குளிர்மை பொருந்தின சோலை. [5] முன்னே போயினார்.

33. [1]கள்ளுடைக் கயத்தெழுங் கமலப் பொய்கையும்
புள்ளுடைக் கனியினூற் பொலிந்த சோலையு
முள்ளுடைப் புடைகடந் துளத்தி லுன்னிய
[2]எள்ளுடைப் புறநிலை [3]யினிழி லெய்தினார்.

1 மதுக்கலந்த தண்ணீர் எழுந்த. 2 இகழ்ச்சியுள்ள. 3 இனிதாக.

34. உயரிய வரைபகிர் உறுப்பு போன்றெனப்
[1]பெயரிய கல்மிசை பெருங்கல் சேர்த்திய
துயரியல் தோன்றிடம் விலங்கு துன்னிட
[2]மயரிய இடமொரு முறையதோ தாமரோ.

1 பேர்ந்த. 2 வருத்தம் பொருந்தின இடம்.

35. [1]வீசறை வளிமழை விளிப்ப வாய்திறந்
[2]தேசறை கிழவிதீ எரிமு கத்தொடு
[3]பாசறை பரிப்புநோய் பதிய யிற்றிய
[4]வாசறை உருவெனு முறையதோ தாமரோ.

1 வீசியடிக்கும். 2 ஏசலைச்சொல்லும். 3 துன்பமும் அச்சமும் நோய்களும் குடியாயிருக்கப் பதியை அமர்த்தின. 4 குற்றத்துக்கு ஓர் அறைச்சாயலாய் நின்ற.

36. [1]கலங்கெழுந் திரைபெறி கடலெ னூநகர்
புலங்கெழு [2]மிடைமனுப் [3]புழங்க லாமையும்
விலங்கெழு மிடமெனு வெறுத்த வம்முறை
நலங்கெழு மிறையவன் பிறப்ப நாடினான்.

1 கலங்கி எழுந்த. 2 நெருங்கும். 3 பழக இடம் இல்லாயினும்.

37. [1]ஆவருள் தீதுள அகமும் [2]வந்தடை
தேவருள் புக்கபின் சேர்த்த பான்மையால்
[3]நோவருள் முறையிவர் நுழைந்த காலலர்க்
காவருள் வனப்பொடு களித்த தாமரோ.

1 (அவா) இச்சை தந்த. 2 அப்பாவத்தை நீக்கியடைந்த. 3 நோய்செய்த.

38. தணிவருஞ் சினத்தொடு [1]தகைத்த கற்றினார்
[2]அணிவருங் குணத்திலீங் கமலன் நாடிய
பணிவரு மிடிநலம் [3]பயக்கின் றாரெனுத்
துணிவரு மன்பெழுந் [4]தாசி சொற்றினார்.

1 இடங்கொடாமல். 2 அடைதற்கரிய முறைமையால். 3 அடையத்தந் தார். 4 துதித்தார்.

39. [1]அருப்பயன் நஞ்சினை யாக்கும் பாம்பெனு
இருப்பவர் நயன்செயப் [2]பகைக்கும் [3]மேலலார்
நெருப்படத் [4]துமிப்பவரை [5]நிழற்றுங் காவெனுப்
[6]பெருப்பகை செய்வரைப் பேணு மாட்சியார்.

[1] இனியபாலை நஞ்சாக்கும். [2] பகைப்பர். [3] நீசர். [4] வெட்டினவர்க்கும். [5] நிழல்தரும். [6] பெரும்பகை.

40. [1]பொதிர்த ருங்கனி பொழிந்து வாய்ந்தருள்
முதிர்த ருங்கணுள் [2]முழந்தின் நின்றிவண்
எதிர்த ரும்[3]பொரு வின்றி யின்புறக்
கதிர்த ருஞ்[4]சுத [5]னசையக் கண்டனள்.

[1] நிறைந்த. [2] பூழந்தாளினின்று. [3] ஒப்பு. [4] குமாரன். [5] தன்வயிற்றுள் அசைய.

41. திருமு கஞ்செறி சுடர்ச்சி றப்பினு
லொருமு கஞ்செறி யொளிகள் ஆயிரம்
தருமு கம்பகற் [1]றருக [2]காலமாய்க்
[3]குருமு கங்கொளும் குணக்கொத் தாளரோ.

[1] தர, செய்ய. [2] உதயகாலமாய். [3] சிவந்தமுகமாய் ஒளிரும்.

42 உலக மூன்றினும் உவமை நீக்கிய
[1]இலயை மூன்றினும் இழிவில் கன்னியாய்
அலகில் [2]மூன்றினுள் நடுவ மைந்தனை
[3]நிலவு மூன்றினும் நிறப்ப வீன்றனள்.

[1] பிள்ளையைப்பெறுமுன்னும் பெறும்போதும் பெற்றபின்னும் முக்காலத்தும் அழியாத. [2] Father, Son, and the Holy Ghost. [3] முச்சுடரினும் விளங்க.

43. [1]வாய்ப்ப டாநுழை பளிங்கின் வாய்கதிர்
போய்ப்ப டாவொளி படரும் போன்றுதாய்
நோய்ப்ப டாதருங் [2]கன்னி நூக்கிலா
தாய்ப்[3]ப டாவயத் தமலன் தோன்றினான்.

[1] வாசலைத்திறவாமல் தூய பளிங்கிடத்தில் நுழைந்த கதிர் புறப்பட்டுப்போய்ப் படாத காந்தியை விரித்ததுபோல. [2] கன்னிமை அழியாமலும். [3] படாத வல்லமைகொண்டு.

44. மாத மார்கழி வைகல் ஐயைந்தாய்
ஏதி லாநிசிக் [1]கிருத்தை மூவைந்தாய்
ஆதி நாளென [2]ஆதி நாதனைக்
காதல் நாயகி களிப்பின் நல்கினாள்.

[1] நாழிகை. [2] இயேசுவை.

45. [1]தீபம் உற்றுமேல் உலவு செஞ்சுடர்
[2]சாபம் உற்றுழி சாபம் தீர்த்தெமை
[3]ஆப தத்திறை யளிப்பத் [4]தாய்மடித்
தாப தத்தெழீஇத் தரையி றோன்றினான்.

[1] ஒளிர்ந்து. [2] (சூரியன்) தனுவிராசியில் நடக்கும்போது. [3] துன்பத்தினின்று. [4] தாய்வயிற்றினின்று உதித்து.

46. தோன்றி னானென நசையு நீண்டினாற்
போன்[1]றி வாவுதேர் முடுக்கிப் போ[2]ம்பொளி
கான்[3]றி ராசிவங் களிப்ப [4]மாலிமெயல்
லீன்றி ராவன்று குறுகிற் றென்னவே.

[1] ஏறினபொற்றேரை. [2] கதிரைவீசி. [3] தாமரை. [4] சூரியன் பகலைச் செய்ததினால்.

47. இரவின் மீன்களும் [1]இரவி பின்றையும்
பரவி னாலெனப் பரப்புந் தங்கதிர்
[2]புரவி னேழ்மடங் கொளிர்ந்த பொற்பினை
[3]விரவின் காணக்கண் விளக்கல் மானுமே.

[1] பகலில் சூரியனும் (பின்றை—பின்). [2] தருகையின். [3] நன்றாய்.

48. [1]பாய்ந்த வான்தருப் பருவ மின்றியும்
ஈய்ந்த தீங்கனி யியையப் பூத்தலும்
[2]வேய்ந்த நாயகன் விளைத்த நன்றியால்
வாய்ந்த [3]ஓகையின் [4]முறுவல் மானுமே.

[1] வானிற்பாய்ந்த மரங்கள். [2] மனிதனாய்த்தோன்றின கடவுள். [3] களிப்பு. [4] சிரித்தது.

49. [1]சொக்க ளாவுருத் தோன்றிய தோன்றலை
[2]மிக்க யேலொடு காபிரி யேல்விழைந்
தொக்க வேந்தின ரொக்கவும் தாய்முனர்
மக்கள் நாதனை மாண்பெழக் காட்டினார்.

[1] வடிவு. [2] Michael and Gabriel, வானவர்.

50. [1]பொதிர்கொள் பூமணம் போன்மக வீன்றனள்
கதிர்கொள் சேயொடு கண்கள் கலந்தகால்
எதிர்கொள் [2]வெஞ்சுடர் காண்முழு [3]இந்தெனா
முதிர்கொள் ளின்ப முகத்து விளங்கினாள்.

[1] தான்குறைபடாமல் பூமுகை வாசனை விட்டதுபோல. [2] சூரியனை. [3] சந்திரன்.

51. தன்னை யீன்றன தாய்தனை [1]நோக்கலோ
டன்னை நீபுமென் சாயலி னுகெனு
[2]மின்னை வீறிய தோன்றல் விளம்பினுன்
என்னை யாள்பவள் இன்பலை மூழ்கவே.

[1] நோக்கி. [2] மின்னி விளங்கின.

52. [1]தந்தை யீன்றன தாயுந்தன் [2]சேயனை
இந்தை நேர்நுதல் தாழ்ந்திறைஞ் சிட்டபின்
[3]சிந்தை யோங்கம ரரவள் செங்கையின்
[4]முந்தை தோன்றலைத் தந்துமுன் [5]னேற்றினுர்.

[1] தன் கடவுளாகிய தகப்பனைப்பெற்ற. [2] குமாரனை. [3] உணர்விற் பொங்கின இரு வானவர். [4] பிதாவாகிய கர்த்தாவின் திருமகனை. [5] ஏத்தினுர், வணங்கினுர்.

53. [1]காந்த ளேரிய செங்கரத் தேந்தினள்
[2]ஏந்த மார்பி லிறுகவுஞ் சேர்த்தனள்
வாய்ந்த பூம்பதம் [3]நீவி வணங்கினள்
[4]ஆய்ந்த நூற்கடந் தாருணர் வெய்தினுள்.

[1] கார்த்திகைப்பூ. [2] உயர்ந்த. [3] தடவி. [4] ஆராய்ந்தடைந்த கல்விகளைக் கடந்த ஞானமே அடைந்தாள்.

54. [1]தெருள்சு ரந்த திரைப்புவி [2]யார்ந்துணப்
பொருள்சு ரந்துயிர்க் [3]குண்டி பொழிந்தனன்
[4]மருள்சு ரந்த வடுக்கெட மைந்தனுய்
[5]அருள்சு ரந்தமு [6]தாய்தர [7]நுங்கினுன்.

[1] தெளி. [2] நிறையஉண்ண. [3] உணவுகளை. [4] மயக்கத்தால் வந்தபாவம். [5] அன்பினுற் சுரந்த முலைப்பாலை. [6] தாய். [7] உண்டான்.

55. இந்து நேர்நுதல் [1]மீன்கள் நேர்விழி
[2]பிண்டை நேர்முகம் நீர்மையாற்
[3]கந்த நேர்நளிர் தாது நேருடல்
காட்டு நாதனை [4]யம்புயச்
சந்தம் நேரிய கன்னி நேர்கையி
ரும நேரிய முத்தெனச்
[5]சிந்து நேர்நயம் மூழ்கு சீர்மையி
[6]றேற நோக்கினன் சூசையே.

[1] விண்மீன்விழி. [2] தாமரைமுகம். [3] வாசமலருடலைக்காட்டு. [4] கன்னித் தாயின் கைத்தாமரையின்மேல் விளங்கின முத்தின் சாயலாக. [5] இன்பக்கடலில் முழுகி [6] உள்ளம்தேற

56. [1]அன்பு றக்கடல் என்றெ லாவுயிர்
ஆண்ட ளித்தருள் நாயகி
துன்பு றத்துணை யாய மாண்பருள்
[2]துற்று மார்புடை மாதவன்
இன்பு றத்துணை யாத லாமென
இன்றெ ழுந்துறை நாதனை
உன்[3]பு றத்திடை வந்து கென்றல
ரொத்த செங்கர நீட்டினான்.

[1] அன்பின் கடலாய். [2] நிறைந்த. [3] கையிடை.

57. விட்பு லத்துய ரேக வாணையின்
வேந்தர் வேந்தெனுந் தேவனை
உட்பு லத்துவ ணக்க மிக்குற
உற்றெ டுத்திட நாணினான்
மட்பு லத்திணை யற்ற [1]மாதரை
வாய்ந்த சொற்கொடு தேறினான்
கட்பு லத்துறு [2]மாரி யோடுரு
கைத்த லங்களி லேந்தினான்.

[1] மரி. [2] மழை.

58. கைத்த லத்திலெ டுத்து மார்பொடு
காத லோங்க வணைத்தலும்
முத்த மிட்டலும் [1]நோக்கி நீட்டலும்
முற்ற நீரில் நனைத்தலும்
[2]சித்த முற்றலும் நாண்ம லர்க்கழல்
சென்னி யின்மிசை வைத்தலும்
இத்தி றத்திலும் உண்ம கிழ்ந்துறு
மின்ப மெல்லையு மில்லையே.

[1] கண்ணில் ஒற்றி. [2] சித்தம் ஓங்கி.

59. [1]மீன்வ ரம்பென மின்னும் நீண்விழி
மீண்டி மைப்பில கண்வளன்
[2]வான்வ ரம்பென வாம வோவியம்
மான நின்றன ளொன்[3]றெரீஇத்

[1] மீன்களுக்கு வரம்பாகிய நீண்ட திருக்கண் இமையாது. [2] வான் அழகினால் எழுதப்பட்ட சித்திரம்போல. [3] உணர்ந்து.

[4]தேன்வ ரம்பென வின்பு தேறிய
ஆவி யாயின சேயனைக்
[5]கான்வ ரம்பென விண்ட தாயது
கஞ்ச வங்கையி லீந்தனன்.

[4] தேனிலும் இன்பத்தைச்செய்ய. [5] வாசம்பொருந்தி மலர்ந்த (தாமரைக்கை.)

60. [1]ஊச லம்புலி யுற்ற தொத்தென
வொள்ளி ரண்டுவெண் சாமரை
[2]காச லம்பிய மேனி காட்டிய
காதல் வானவர் வீசவே
[3]பாச லம்புரி பாழி பற்றிய
பள்ளி பண்பொடு வீங்கினன்
[4]ஆச லம்புரி யாசை யால்நிறை
ஆகு லக்கட [5]ழார்த்தனன்.

[1] இரண்டு சந்திரன் ஊசலாடின தன்மைதோன்ற. [2] மணியணிகளையணிந்த. [3] பச்சைமாலையாற் செய்யப்பட்ட படுக்கையைப்பற்றி வந்த நித்திரையை இனி தாகக் கொண்டான். [4] பாவங்களைக் கொண்டுவிடும். [5] தூர்த்த நாதன்.

61. விண்ணே புரக்கும் [1]அருட்டுஞ்சான்
விரிசெவ் விதழ்த்தா மரைத்தவிசின்
கண்ணே யன்னப் [2]பார்ப்பென்னக்
கன்னி கரத்திற் றுஞ்சியகால்
உண்ணோர் உணர்[3]வுய்த் துயர்வேதத்
துரைமந் திரவாய் மொழித்தவத்தோன்
பண்ணோர் பானோர் மாக்குயினோர்
பாடிப் படர்நற் புகழுற்றுன்.

[1] தயையில் தூங்காதவன். [2] குஞ்சு. [3] (உணர்வைக்) கொண்டு (புகழுற்றுன்.)

62. களித்த நாளில் [1]அரும்புந்தென்
காலே இனிதீங் கரும்புதியே
துளித்த [2]நானத் தேனரும்பத்
துணர்நாண் மலர்காள் அரும்புதிரே

[1] வீசும். [2] வாசம்.

விளித்த [3]நாகு மாங்குயில்காள்
விளைதேன் [4]பாவை அரும்புதிரோ
அளித்த நாதன் நான்[5]கனிய
அன்பு [6]துயிலாத் துயில்கின்றான்.

[3] இளங்குயில்காள். [4] பாவிசையாற்பாடுங்கள். [5] கனிகூர. [6] துயிலாமல்.

63 [1]கண்பட் டுறங்கக் கண்டேனோ
கருணா கரனே களிக்கடலே
புண்பட் டுளையும் நெஞ்சிற்கோர்
[2]பொருவா மருந்தே [3]அருளன்பே
[4]மண்பட் டலையும் கடலன்ன
[5]மருளென் னெஞ்சிற் குயிர்நிலையே
[6]எண்பட் டுயர்ந்த செல்வரசே
எம்மே லிரங்குந் தயையிதுவோ.

1 கண்மூடி. [2] நிகராத. [3] அருளால் நிறைந்த அன்பே. [4] பூவுலகைச்சூழ்ந்து. [5] மயங்கும். [6] எண்ணப்படாத.

64. வான்தோய் நயங்கள் பயந்தோய்நீ
மண்தோய் துயர்[1]நீத் தளித்தோய்நீ
தேன்தோய் இன்பத் தமைந்தோய்நீ
[2]சேண்மேற் புகழப் படுவோய்நீ
நான்தோய் உணர்வின் உயர்ந்தோய்நீ
[3]நானென் றாக அவதரித்தே
ஊன்தோய் உடல்கொண் டன[4]வன்பின்
உணர்[5]விட் டெனக்குப் பணியாயோ.

[1] தீர்த்து. [2] வான்மேல். [3] என்னைப்போலாக. [4] அன்பின் தன்மையைக் கண்டுகொள்ள. [5] தந்து.

65. நூல்வாய்ப் புகழ்மே லுயர்ந்தோய்நீ
நோய்வாய் மருந்திற் கனிவோய்நீ
கோல்வாய் கோடா நீதிநெறி
கொண்டெவ் வுலகும் புரந்தோய்நீ

[1]வேல்வாய்க் குருதி பாய்ந்திறப்ப
மெய்கொண் டாயோ விதையறியாக்
கால்வா யிலைப்போ றியங்கியவென்
கருத்திற் குணர்வை உணர்த்தாயோ.

[1] வேல்முதற் பலகருவிகளால் திருவிரத்தத்தைச் சிந்தி இறக்கவோ இவ்வுடலைக்கொண்டாய்.

66. தேறுந் தமையின் முனிவோய்நீ
[1]சினத்திற் கருள்செய் கனிவோய்நீ
கூறுங் [2]கலையற் றுணர்வோய்நீ
கூறுந் [3]தொனியற் றுரைப்போய்நீ
மாறும் பொருள்யா விலுநின்றே
மாறா நிலைகொள் மரபோய்நீ
ஈறும் தவிர்ந்துன் புகழ்க்கடலாழ்ந்
தெனக்கே கரைகாட் டருளாயோ.

[1] கோபத்திலேயும். [2] கல்வியைப்படியாமல். [3] சப்தமில்லாமலே.

67. [1]ஒளிநாக் கொடுவான் சுடர்புகழ
ஒளிநாக் கொடுபன் மணிபுகழக்
[2]களிநாக் கொடுபற் புள்புகழக்
[3]கமழ்நாக் கொடுகா மலர்புகழத்
[4]தெளிநாக் கொடுநீர்ப் புனல்புகழத்
தினமே புகழப் படுவோய் நீ
[5]அளிநாக் கொடுநா னுனைப்புகழ
அறியா [6]மூகை உணர்த்தாயோ.

1 கதிராகிய நாக்கால். [2] களித்த நாக்கால். [3] வாசனையால். [4] தெளிந்த திரையால். [5] அன்பை நாக்காகக்கொண்டு. [6] ஊமை.

68. என்றான் அழுதான் உள்ளுருகி
யின்பக் கட[1]லாழ்ந் தன்றாழ்ந்தான்
[2]குன்றா விறையோன் தயைக்கடலுட்
குளித்தான் நீந்திக் கரைகாணான்
சென்றா னென்ன மெய்ம்மறந்தே
[3]சிறிதோர் கால்நின் றுணர்ந்தவைவான்
நின்றார் கண்டுள் ளதிசயிப்ப
நிகரில் லன்பால் மீண்டுரைப்பான்.

[1] அமிழ்ந்தி அமிழ்ந்தினன். [2] குன்றாத்—தயைக்கடல். [3] சிறிதுநேரம் இருந்தபொழுது.

69. அறம்தாய் தந்தை சுற்றமுமற்
றனைத்தும் நீயே கதிநீயே
பிறந்தா யுலகிற் குயிரன்னாய்
பிறந்தெந் துயரு மெம்பகையும்
[1]துறந்தா யெங்கள் சிறைதீர்த்தாய்
[2]துகள்பூட் டியவீட் டுயர்வாயில்
திறந்தா யிவையா வருமறியத்
[3]திறன்செய் தருள்செய் திரங்காயோ.

1 அகற்றினாய். 2 பாவம் அடைத்த. 3 வல்லமையும் தயையுங்கொண்டு இரங்கிச் செய்யாயோ.

70. குருவாய் வந்தோய் ஒளிப்பாயோ
கோதா ரிருமர் வெஞ்சுடரின்
உருவாய் வந்தோய் ஒளியாயோ
உயர்வான் [1]நிகரே மண்கனியக்
[2]கருவாய் வந்தோய் இக்[3]கருணைக்
கண்கொண் டெவரும் களித்தறியத்
தருவாய் வந்[4]தோ யிலவன்பின்
தகவோய் திருவோ யெனத்தொழுதான்.

1 நிகராக. 2 கருப்பத்தின் முறையால் அவதரித்து. 3 கருணையைக் கண்ணாலே கண்டு. 4 ஓயாத அன்பு.

71. [1]துஞ்சுந் தன்மைத் தெவ்வுலகுந்
துணையற் றுள்வோ னிவைகேட்டு
[2]விஞ்சுந் தன்மைத் தோங்கவளன்
[3]விழைவே விளைக்கும் விழிவிழித்தான்
[4]எஞ்சுந் தன்மை யுதவியதா
னியைந்த தன்மை யுலகுணர்த்த
[5]அஞ்சும் தன்மைத் தெதிரிறைஞ்சு
மமரர்க் [6]குரையா தேவவிட்டான்.

1 தூங்கினதன்மையைக் காட்டி. 2 மிகவும் ஆசை மனதில் ஓங்க. 3 ஆசை. 4 ஒருவன் சிறுமையைக் கொண்ட தன்மைக்கு உதவியைச்செய்யும் தான் இங்கே பிறந்தமைந்த செய்தியை உலகிற்கு உணர்த்த. 5 அஞ்சினதன்மையால் எதிர் விழுந்து வணங்கி நின்ற. 6 உரையைச் செய்யாமல் உள் ஏவினான்.



# சீறாப்புராணம்.

## நபியவதாரப் படலம்.

இச்செய்யுட்கள் மகம்மதியரது புராணமாகிய சீறாப்புராணத்தில், நபி அவதாரப்படலத்தினின்றும் எடுக்கப்பட்டவை. அப்புராணத்தை இயற்றிய வர், எட்டையாபுர சமஸ்தான வித்துவானாய் விளங்கிய உமறுப் புலவர் என்னும் மகம்மதியராவர். இராமநாதபுரத்துக்கும் கீழ்க்கரைக்கும் இடையி லுள்ள ஓர் சிற்றூரே இவரது பிறப்பிடம். இவர் சிறிதுகாலத்திற்கு முன்னி ருந்தவர். இவர் தமிழ் நன்குணர்ந்த வித்துவசிரேட்டர். சீறாப்புராணம், மகமது நபியைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு அவரது பிறப்பிறப்பு வீரபராக் கிரம முதலியவற்றை விவரித்துரைக்கும் ஓர் காவியம். சீறாப்புராணம் மகம்மதியரால் கொண்டாடப்படுவது.

1. பெருகிய கோடிசந் திரப்பிர காசமாய்
வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே
கருணைவீற் றிருந்தசெங் கமலக் கண்ணிணைத்
திருநபி வருமவ தாரஞ் செப்புவாம்.

2. [1]கடியி ருந்தெழு கற்பக முஞ்சுடர்
வடிவி ருந்த [2]மணியும் [3]வனசமும்
படியுங் [4]கார்முகி லேழும் பழித்துவிண்
குடியி ருத்துங் கொழுந்தடக் கையினார்.

[1] கடி—வாசனை. [2] மணி—சிந்தாமணி. [3] வனசம்—தாமரை. [4] கார்—கரிய.

3. [1]கொன்னுனை வெண்ணிறக் கோட்டு [2]வாரணச்
செந்நிறக் [3]குருதியிற் றிமிர்ந்து வாய்கழீஇ
மின்னவிர் [4]கணமணி விளங்கு மாமுடி
[5]யொன்னல ருயிரைமேய்ந் துறங்கும் வேலினார்.

[1] கொன்னுனை—பகைவரைக் கொல்லும் நுனியினையுடைய. [2] வாரணம்—யானை. [3] குருதி—இரத்தம். [4] கணம்—கூட்டம். [5]ஒன்னலர்—பகைவர்.

4. [1]வரபதி யுலகெலாம் வாழ்த்து [2]மக்கமா
புரபதிக் கதிபதி யென்னும் பூபதி
[3]பரபதி யரசர்கள் பணிந்தி றைஞ்சிய
நரபதி யப்துல்லா வென்னு நாமத்தார்.

[1] வரம்—சிரேஷ்டம். [2] மக்கமாபுரபதி—மக்கமாபுரம் (Mecca) என்னும் நகர். [3] பரபதி—அன்னியநாடு.

5. செழு[1]மழை முகிலென வமுதஞ் சிந்திட
வழிகதிர் நபியென வகுத்த பேரொளி
பொழிகரத் தப்துல்லா விடத்திற் பொங்கியே
[2]யெழிறரு திருநுத லிடத்தி லங்குமே.

[1] மழைமுகில்—நீருண்டமேகம். [2] எழில்—அழகு.

6. [1]அயிலுறை செழுங்கரத் தப்துல் லாவெனும்
பெயரிய [2]களிறுக்கோர் [3]பிடியும் போலவ
ருயிரென விருந்தசைந் [4]தொசிந்த [5]பூங்கொடி
மயிலெனு மாமினா வென்னு மங்கையே.

[1] அயில்—வேற்படை. [2] களிறு—ஆண்யானை. [3] பிடி—பெண்யானை. [4] ஒசிந்த—வளைந்த. [5] பூங்கொடி—பூங்கொடியைப்போன்ற இடையினையுடைய.

7. இற்புகுந் தெழுமதி யிலங்கு மாமணி
விற்புரு வக்கடை [1]மின்க ளாயகம்
[2]பொற்பெலாம் பொதிந்தபொற் கொடிநற் பூவையர்
கற்பெலாந் திரண்டுருக் கொண்ட கன்னியே.

[1] மின்கள்—மின்னலைப்போன்ற இடையினையுடைய பெண்கள். [2] பொற்பெலாம் பொதிந்த—அழகெலாம் அமைந்த.

8. அறத்தினுக் கில்லிட மருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையிற் பூமிக் கெண்மடங்
குறைப்பெருங் குலத்தினுக் கொப்பி லா[1]மணி
சிறப்பினுக் குவமையில் லாத செல்வியே.

[1] மணி—மாணிக்கம்.

9. இத்தகைக் குலமயி லாமி னாவெனு
முத்தவெண் ணகைக்கனி மொழியு மோகனச்
சித்திர அப்துல்லா வென்னுஞ் [1]செம்மலு
மொத்தினி தமுதமுண் டுறையு நாளினில்,

[1] செம்மல்—அரசன்.

10. [1]திங்க ளாமிற ஜபுமுதற் றேதிவெள் ளியிராத்
துங்க [2]வார்கழன் முகம்மது பேரொளி துலங்கி
யெங்க ணாயக ரப்துல்லா நுதலிடத் திருந்து
மங்கை யாமினு வயிற்றினிற் றரித்தது வன்றே.

[1] திங்களாம் இறஜபு—இறஜபுமாதம்—அதாவது, மோஹறம் மாதத்தின் எட்டாவது மாதம். [2] வார்கழல்—நீண்ட வீரகண்டை அணிந்த பாதத்தினையுடைய.

11. திருத்தும் [1]பொன்னக ரமரரே திரண்டு[2]வா னவரே
கருத்தி னுண்மகிழ்ந் தெவ்வையு மலங்கரித் திடுமின்
வருத்த மொன்றிலா முகம்மதை யாமினு வயிற்றி
லிருத்தி னேனென வுரைத்தன னியாவர்க்கு [3]மிறையோன்.

[1] பொன்னகர் அமரர்—தேவலோகத்தில் வசிக்கும் தேவர்கள். [2] வானவர்—ஆகாய வாசிகள். (சித்தர் முதலானோர்) [3] இறையோன்—தலைவனாகிய கடவுள்.

12. பாந்த வாய்க்கொடும் [1]பாந்தளும் விடங்கொள் [2]பஞ் சரமுங்
கரிந்து பொங்கிய குழிகளுங் கனற்பொறி [3]கதுவ
வெரிந்து செந்நெருப் பொழுகிய நரகங்க ளேழும்
விரைந்த வித்தடைத் திடுகவென் றனன்முதல் வேந்தன்.

[1] பாந்தள்—பெரும்பாம்பு. [2] பஞ்சரம்—கூடு (கூண்டு) [3] கதுவ—அதிகமாகப்பற்ற.

13. அந்தண் கொன்னக ரடங்கலு மலங்கரித் ததுவும்
வெந்த பாழ்நர கங்களை யடைத்தபல் விதமுஞ்
[1]சந்த திண்புய முகம்மது நபிதரித் ததுவு
மிந்த வாறுக ளனைத்தையு மறிந்திபு லீசு.

[1] சந்த—அழகிய.

14. கரைவ னேங்குவன் மலங்குவன் கலங்குவன் கதறி
யிரைவன் கன்னத்திற் கையைவைத் திருந்தெழுந் திருப்பன்
தரையின் மேல்விழுந் தெனக்கிலை யினிச்சிங்கா சனமென்
றுரைம றந்திடக் கிடந்தன னிருகணீ ரொழுக.

15. அறிவ ழிந்தமன் னவன்றனை மக்கள்வந் தடைந்து
குறியுந் துன்பமும் வந்தவா றேதெனக் கூறி
நிறையு மக்களோ டுறும்வர லாறெலா நிகழ்த்தி
யுறையு மில்லிட [1]மிவணிலை நமக்கென வுரைத்தான்.

[1] இவண்—இவ்வுலகத்தில்.

16. இந்த வாசகங் கேட்டலும் மக்களெல் லோருந்
தந்தை யேயிதற் கென்செய்வோ மெனத்தடு மாறிப்
[1]புந்தி நொந்துநொந் தவரவர் திசைதிசை புகுந்தார்
சிந்தை நொந்திபு லீசுவுந் திகைத்திருந் [2]திடைந்தான்.

[1] புந்தி—உள்ளம். [2] இடைந்தான்—நீங்கினான்.

17. கோதறப் பழுத்து மதுரமே கனிந்த
கொவ்வைவா யரம்பையர் வாழ்த்தித்
தீதற நெருங்கி யேவல்செய் திருப்பச்
செழுங்கம லாசனத் திருந்த
மாதருக் கரசி யாமினு [1]வுதர
மனையிடத் திருந்துமா நிலத்தி
லாதாம் பெருக நல்வழிப் பொருளா
யகுமது தோன்றின ரன்றே.

[1] உதரமனையிடத்திருந்து—கருப்பத்திலிருந்து.

18. நெறிநிலை திரியா [1]மருண்மக மிகுந்து
நெடுநில மெங்கணும் பரந்து
துறவறந் தவறி யில்லற மடிந்து
சுடரிலா மனையது போலக்
குறைபடுங் கால மிருளெனுங் குபிரின்
குலமறுத் தறநெறி விளக்க
[2]மறுவிலா தெழுந்த [3]முழுமதி போல
மகம்மது நபிபிறந் தனரே.

[1] மருள்—மயக்கம். [2] மறு—களங்கம். [3] முழுமதி—பூரணசந்திரன்.

19. பானுவின் கதிரா விடருறுங் காலம்
படர்தரு தருநிழ லெனலா
யீனமுங் கொலையும் விளைத்திடும் [1]பவநோ
யிடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்
[2]தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்க்
குறைஷியின் றிலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
மகம்மது நபிபிறந் தனரே.

[1] பவநோய்—பிறவிப்பிணி. [2] தீனெனும்—ஜீவர்கள் என்னும்

20. செங்கதிர் பரப்பி யுலகெலாம் விளக்கித்
திரிதின கரனும்வெள் ளமுதந்
தங்கிய கிரணச் [1]சசியுமந் தரத்திற்
றவழ்தரு [2]முடுக்குல மனைத்தும்
பொன்கொளி யெவையுஞ் [3]சுவனநா டனைத்தும்
பூதலம் விசும்புமற் றனவு
மிங்கெழின் முகம்மது தொளிவினி லென்று
மிவர்க்கெவை யுவமைசொல் லுவதே.

[1] சசி—சந்திரன். [2] உடுக்குலம்—நக்ஷத்திரக் கூட்டம். [3] சுவன நாடு—ஸ்வர்ண (பொன்) நாடு, சுவர்க்கம்.



# PART IV.

# புலவராற்றுப்படை.

இந்நூலை இயற்றினவர் திருக்குருகூர்ச் சிறிய இரத்தினக்கவிராயர். இவர் மாறனலங்கார வுரையாசிரியரான திருமேனி இரத்தினக் கவிராயருடைய வழியில் வந்தவர். இந்நூல் அரங்கேறிய காலம் கொல்லமாண்டு 868 (கி-பி. 1692): இடம் திருச்சிராப்பள்ளி. அது சொக்கநாத நாயகர் மனைவியான மங்கம்மாள் (1689-1704) அரசுபுரிந்திருந்த காலம்.

இவ்வாற்றுப்படை, பழைய ஆற்றுப்படைகள்போல் கடின நடையில் இல்லாமல், உலகவழக்கையும் காலப்போக்கையும் ஒட்டி எளிய நடையில் அமைந்திருத்தலால், இது எல்லாருக்கும் இன்பந்தருவதாயிருக்கின்றது. சிருங்கார ரசமமைந்த பாகங்களையும் மற்றுஞ் சில பாகங்களையும் நீக்கித் தொடர்ச்சியறுதபடி இந்நூல் இங்கே சுருக்கிப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. நூல் முழுவதையும் படிக்க விரும்புவோர் அதனை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

இந்நூலின் பாட்டுடைத் தலைவரான வடமலையப்பப் பிள்ளை, திருச்சிராப்பள்ளியில் கார்காத்தவேளாண் குலத்தில் சைவமரபில் நாரணக்குடைக் கோத்திரத்தில் பிறந்தவர். இளமையில் இவர், தாய் தந்தையரை இழந்து, நாயக்கர் குலகுருவான தாதாசாரியரிடம் வளர்ந்து கல்விபயின்று, நாயக்கவரசில் சேனாபதியாகி, நற்குண நற்செய்கையால் அரசனுடைய அபிமானம் பெற்று, ஐயன் என்னும் பட்டத்தோடு திருநெல்வேலிக்கு ராஜப் பிரதிநிதியானார். அதனால் இவருடைய பெயர் (வடமலையப்பப்பிள்ளை + ஐயன்) வடமலையப்பப்பிள்ளையன் என வழங்கலுற்றது. இவர் இருந்து அரசியல் நடத்திய இடம் இரையூர். இது இராசையென்றும் வழங்கும். இவருடைய அரண்மனை "திருநெல்வேலிப் பதியில் மேலைரதவீதியில் குறுக்கிட்டுச் செல்லும் சுடலைமாடன் கோவிற்றெருவில், தற்காலம் பிள்ளையன் கூட்டத்தார் வசிக்கும் மாளிகைகள் அமைந்த இடமே என்றும், வடமலையப்பப்பிள்ளையன் கச்சேரி இப்பொழுது பிள்ளையன் கட்டளையாபிஸ் வைத்திருக்கும் நவாங்கப் பட்டகசாலையென்று பேர்போன இடமென்

றும் கேள்வி" என்று இவர் இயற்றிய மச்சபுராண அச்சுப்பிரதியின் முகவுரை (தாம்ஸன் கம்பெனி, சென்னை) கூறுகின்றது.

இவ்வாற்றுப்படையில் புலவரை ஆற்றுப்படுத்திய புலவன் பாட்டுடைத்தலைவரைச் "சைவ சித்தாந்தம் கைவருகுரிசில்" என்றும்

"பாவியற் றமிழ்தேர் காவியப் புலவர்
கரகம் பிதத்துடன் சிரகம் பிதம்செயத்
தேனூற் றிருந்து செவிதொறுங் கனிய
நானூற்றுக் கோவையும் நாற்கவி வண்ணமும்
பலர்புகழ் சீரோத் தலபு ராணமும்
இருநிலம் புகழும் ஒருகலம் பகமும்
நீடில குவப்பப் பாடிநிலை நிறுத்தும்
கூறுசொற் கவிதா சாருவ பௌமன்"

என்றும் புகழ்வதாகக் கூறியிருத்தலாலும், மச்சபுராணம் அரங்கேறிய காலம் கொல்லமாண்டு 882 (கி-பி. 1706-1707) வியஞூ ஆதலாலும், மச்சபுராணம் ஆற்றுப்படையிற் கூறிய நூல்களுக்குப் பிற்பட்டதாகும்.



# புலவராற்றுப்படை.

(EXPUNGED AND EXPURGATED.)

காவிளை யாடும் களிமயில் கடுப்ப[1]
நாவிளை யாடும் நற்றமிழ்க் கவிஞன்;
கவி[2]யொடு வாதி[3] கமகன்[4] வாக்கி[5]யெனப்
புவியிடம் பழிச்சிய[6] புலமை யாளன்;
அறம்பொரு ளின்பம்வீ டாமெனும் நான்கும்
திறம்பட வுணர்ந்து செப்புநா லறிஞன்;
தொல்காப் பியமுதல் ஒல்காப்[7] பனுவலுள்
எழுத்துச் சொற்பொருள் யாப்பணி எனத்துறை
பழுத்த இலக்கணப் பவ்வம்[8] கடந்தும்
கலக்கும்வெங் கலிக்[9]கடல் கடப்பரி தாகி;
ஈகை யென்னும் இரும்புணை[10] யேற்றி
ஓகை[11]சேர் செல்வமென் றோர்பெருந் தீவினில்
சேர்த்தி,உயிர் காக்கும் தியாகி[12] யென்றோர்
கீர்த்திபெறு மீகான்[13] கிடைத்த வின்மையினால்;
தொல்லை[14]சூழ் வினையாம் சுழிசுழித் தலைப்பச்,
செல்லல்[15]கூர் அவாவெனும் திரை[16]யெடுத் தெறிய,
வன்பசி யென்னும் மகரமீன் விழுங்கத்,
துன்ப மென்னும் சுற[17]வெதிர் பாயக்,
கவலை யென்னும் கடுங்காரா[18] ஈர்ப்பத்,

[1] போல. [2] கவி, ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் நாற்கவியைப் பாடுவோன். [3] வாதி காரணமும் மேற்கோளும் எடுத்துக்காட்டிப் பிறன்கோள் மறுத்துத் தன்மத நிறுத்துபவன். [4] கமகன் அரும்பொருளைச் செய்பொருணடையாய்க் காட்டி விவகரிப்பவன். [5] வாக்கி அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருட் பயன்களைக் கேட்கவும் வேட்கவும் விரித்துக் கூறுவோன். [6] துதித்த. [7] தளராத. [8] கடல். [9] வறுமை. [10] பெரிய தெப்பம். [11] உவகை. [12] கொடையாளன். [13] மாலுமி.

[14] பழமை. [15] துன்பம். [16] அலை. [17] சுறு. [18] முதலை.

துவளுபு மேனி சோர்ந்து நடுநடுங்கியும்,
அன்புள சிந்தையர் ஆருநட் டோரெனும்
வன்பி[1]லர் ஓட்டை வங்க[2]த் தேறலும்,
அப்புறத் தியங்கா தலைதலை மீதுறக்
குப்புறந் தாழ்ந்து கூட அமிழ்ந்தியும்,
எவ்வழி யேனும் இனிமுயன் றுய்து[3]மென்
றவ்வழி உஞற்றும்[4] அருந்தொழிற் பாசியைப்
பற்றெனப் பற்றிப் படர்தலும் நைந்துநைந்
தற்றிடை சிதைப்ப அலக்க[5]ணுற் றிரங்கியும்,
ஆக்க[6] மென்னும் அக்கரை சேர்துமென்
றாக்கமில் இர[7]வெனும் ஓர்பசு மட்குடம்
கைக்கொடு நீந்தக் கரைந்துகரைந் தேகலும்
அக்குடம் போல அகங்கை கரைந்து;
நல்குர வென்னும் நடுக்கான் புகுந்து,
மல்குவெந் துயராம் வனத்தீ வளைப்பக்,
கிளை[8]யெனும் தூறு[9]கால் தளை[10]யெனச் சுற்ற,
மாயா இரவெனும் வன்பேய் தொடர,
ஈயா வன்கணர் எனுந்தேள் கொட்ட,
நெடும்பசி யென்னும் கொடும்புலிக் கிரையாய்,

மானமும் குலமும் வண்மையும் பொறையும்
ஞானமும் தருமமும் நன்மையும் குடிபோய்க்
கருத்துறு பயமும் கவ்வை[11]யும் பழியும்
வருத்தமும் பிணியும் வதியும் ஆலயமாய்:
படல்[12]கொடு சாத்தும் இடனிலா மனையும்,
காய்ந்த புத்தோலை வேய்ந்திடாக் கூரையும்,
வெளியறக் கற்றை விரித்துவான் முகட்டில்
துளிவிழா திறுக்கிச் சுற்று முகடும்,
பொருக்கறத் தெளித்துப் பெருக்கா முன்றிலும்,
புரை[13]யறத் தீற்றி[14]ப் புதுக்காச் சுவரும்,
தரையலால் மெத்தை தழுவாச் சேக்கை[15]யும்,
மெழுகிமென் கோலம் எழுதாத் திண்ணையும்,

---

[1] உறதி. [2] கப்பல். [3] உய்தும்–பிழைப்போம். [4] செய்யும். [5] துன்பம். [6] செல்வம். [7] யாசகம். [8] சுற்றத்தார். [9] பற்றை, thicket. [10] கால்விலங்கு.

[11] துன்பம். [12] படலை; தழைக்கற்றை. [13] துளை; ஓட்டை. [14] பூசி. [15] படுக்கை.

கழுநீர் கலைந்து பொழியாத் தொட்டியும்,
பொங்கா அடுப்பும் புகையா அட்டி[1]லும்,
அங்கார் பதம்[2]வைத் தடுக்காக் குழிசி[3]யும்,
அயன்மனை புகுதாச் செயன் மனையாட்டி
மஞ்ச ணீராடி வயங்கா[4] மேனியும்,
அஞ்சனம்[5] தீட்டா அயில்[6]விழிக் கடையும்,
செம்பஞ் செழுதா அம்புய[7]ப் பாதமும்,
வரிவளை புனையா இருகைக் காந்த[8]ளும்,
திலகம் பொறியாத் திங்கள்[9] வாணுத[10]லும்,
[11]இலகுவெண் துகில்பெறு திருகு[12]நூ லிடை[13]யும்,
மைம்முகிற்[14] காடென வகிர்ந்து[15]சிக் கறுத்து
மொய்ம்மலர் செருகி முடியாக் கூந்தலும்,
நயனிலா நடையும், நகையிலா முகமும்,
பயனிலா மொழியும், பரிவிலா உளமும்,
பாலொடு வறந்து பசியொடு வெதும்பித்
தோலொடு திரங்கி[16]ச் சுருங்கிய மார்பும்;

அம்மார்பு நெருடி[17] அரும்பசி பொறாது
விம்முசெங் கனிவாய் மென்பசுங் குழவி
சுவைத்தலும் ஒருபாற் சுவைத்துளி பெறாது,
நெடிதுயிர்த்[18] தயர்ந்து துடிதுடித் தேங்கி,
நோய்முக நோக்கிய தாய்முக நோக்கி,
சரிதழ் உண்கண் நீர்கரைந் தொழுக,
மூரல்வெள்[19] ளெயிற்றின் முளைநிலா வொழுக
மழலை[20]யந் தொனிவிடுத் தழுமிளங் குரலும்,
முற்பட முதிர்ந்த பொற்பு[21]டைச் சிறுஅர்
ஒருபொழு தாயினும் ஊண்சுவை காணா
திருபொழு தேமாந்[22] திணைக்கவுள்[23] அதைப்ப[24],
எண்ணெய் காணாது தண்முடி காய.

1 மடைப்பள்ளி. 2 சோறு. 3 பானை. 4 விளங்காத. 5 மை. 6 கைவேல். 7 தாமரை. 8 காந்தள் போன்ற கை. 9 சந்திரன். 10 ஒளிபொருந்திய நெற்றி. 11 விளங்கும். 12 சுருங்கிய, மெல்லிய. 13 நூல்போல் நுண்ணிய இடை. 14 கார்மேகம். 15 (இடம் வலமாகப்) பங்குசெய்து. 16 திரைந்து, wrinkle.

17 உறுத்தித்தடவி. 18 பெருமூச்சு விட்டு. 19 சோறுபோல் வெண்மையான பல். 20 திரம்பாத மென்சொல். 21 அழகு. 22 ஆசைப்பட்டு. ("அருந்தேமாந்த நெஞ்சம்" புறம். 101) 23 கதுப்பு. 24 வீங்க.

மிளகு காணா தொளிமுகம் மழுங்க,
நரம்பெழுந் தென்பு நிரம்பமெய் தோன்ற,
எக்கிய[1]வயிறால் இலைபோல் குழைய,
நக்கிய கடைவாய் நாவொடு பிசுக்குற[2]க்,
கழங்கெனப் பசிய கண்கள் உட்குழியப்,
பழந்துணிக் கந்தை பறந்திடை நால[3],
ஆயே ஆயே ஈயாய் கூழென
முகிற்றலைப் பருவம்[4] முழக்கெழு தேரையின்
துகிற்றலை பற்றித் தொடர்ந்தழு தரற்றலும்,
காண்டொறுங் காண்டொறும் கவலுறு சிந்தையன்:
ஈண்டினி என்செய்தூஉம்[5] என்செய்தூஉ மென்னப்
"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொரு"[6]ளெனத் துணிந்தும்,
"திரைகட லோடியும் திரவியம் தே"டென
உரைசெயும் ஔவை உரைபகுத் துணர்ந்தும்,
வாழ்ந்தார்க் குறவு வழியினும் உளதாம்
தாழ்ந்தார்க் குறவிலை தம[7]ரினு மென்றும்,

கல்லா வறிவுடைப் பொல்லா மூர்க்கரைக்,
கைப்புறப் பழுத்த காஞ்சிரை[8] போன்றும்
உப்புநீர் போன்றும் உவர்ப்புறு செல்வரை,
நீரினுட் கிடப்பினும் நெட்டி[9]போல் சிறிதுள்
வீர[10]மும் இரக்கமும் இல்லாப் புல்லரை,
உயர்குடிப் பிறந்து முளைக்கரும் பதடி[11]யின்
பெயர்பெறும் திறனிலாப் பேதை மாந்தரை,
மாங்கனி தொடாது வளைக்குமுள் வேலியின்
தாங்கொடா விடினும் தடுக்கும் நீசரை,

---

1 ஒரு புறம் வற்றி வளைந்த. 2 ஒட்டிக்கொள்ள. 3 தொங்க. 4 கார்காலத் தொடக்கம். 5 என்ன செய்வோம் 6 இது குறட்பா. 7 சுற்றத்தார்.

8 எட்டி. 9 நெட்டி—கிடைச்சி, கிடை; a kind of cork-tree used for making artificial flowers, toys, etc.

"நீருட் பிறந்து நிறம்பசிய தாயினும்
ஈரம் கிடையகத் தில்லாகும்—ஒரும்
நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்தும்
அறைப்பெருங் கல்அன்னர் உடைத்து." நாலடியார்.

10 உள்வீரம்—ஈரநெஞ்சு. 11 பதர்.

முற்புரி தவத்தால் அற்பவாழ் வெய்தி
இந்திரப் பட்டம் வந்தது தமக்கென
ஒருவரை எண்ணு திருசெவி செவிடாய்
விழிகண் குருடாய் மொழியுமூங் கையுமாய்
மெய்யும் காலும் கையும் எழாது
முன்பொரு சொல்லும் பின்பொரு மொழியும்
கண்டால் ஒன்றும் காணு தொன்றும்
உண்டால் ஒன்றும் உண்ணு தொன்றும்
பலபல பிதற்றிக் கலகலென் றொலித்துச்
சட்டஞ்செய் துவகைத் திட்டஞ்செய் பவர்போல்
முன்னிறை யிரட்டி பின்னிறை யேற்றி
அடுங்கோ லென்னக் கொடுங்கோல் செலுத்தி
அடியடி யென்ன அடித்தடித் தெளிய
குடியலைத் தோட்டும் கொடிய பாதகரை,

செல்வநிலை யன்றெனும் செய்கை குறியாது,
ஈதலே அறமெனும் நீதி கருதாது,
உரனூர் பகுவாய் உணர்விலாக் காகமும்
காவா கரைந்துணக்[1] கண்டு தெளியாது,
படிறுபல விளைத்துக் கொடிறுக உடைக்கும்
கூர்ங்கை யல்லவர்க் கீர்ங்கை விதிராது[2]
வறியவர்க் காணின் மொறுமொறுத் திகழ்ந்து
பகைத்தவ ரென்னத் திகைத்தெதிர் நோக்கி
இஞ்சி தின்ற வெஞ்சினக் குரங்கென
அகங்கெட வாளா முகங்கடு கடுத்துக்
கல்லெறிந் தன்ன வல்லுரை கூறி,
நாய்போல் குரைத்துப் பேய்போல் குனித்துத்
தள்ளெனத் தள்ளித் தலைக்கடை யடைத்துத்,
தண்டிய[3] குண்டோ தான்போல் தொந்தியும்
பண்டி[4]யும் பாவமும் பருக்கப் பருத்து,
நம[5]ரிவர் நமக்கிவர் நண்பினர் உரிய

---

1 "காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள." திருக்குறள்

2 "ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு." திருக்குறள்.

3 மிகைத்தெழுந்த. 4 வயிறு. 5 நம்மவர்.

தமரென அடுத்தோர் தமக்கும் எள்ளளவும்
பாத்துணு தளவில் பழம்பொருள் புதைத்துவைத்
தீத்தொகு தேன்போல் இழக்கும் மூடரை,[1]
வேனிலிற் றளர்ந்து விடாய்கெட நுகர்வான்
கானலை[2] நீரெனக் கருதுபு[3] சென்றெனக்,
கற்பசு[4] மடிப்பால் கறப்பான் புக்கென,
வற்புறு மணல்நெய் வடிப்பான் இசைந்தென
வறிதினில் அடுத்துப் பெறுபயன் வேண்டி,

இரவலர்[5]க் கொருகா சீயாக் கைகளை
வரை[6]விலா தளிக்கும் மழைமுகில்[7] என்றும்,
பொய்மொழிந் துரையாப் புரை[8]கொள்பாழ் முகத்தை
மை[9]யொழிந் திலங்கும் வாண்மதி என்றும்,
ஒருவரைத் தாங்கா ஊனிலாப் புயங்களை
இருவரைச் சிகர[10]த் திகலுடைத் தென்றும்,
வழுவறத் தேர்ந்து வடித்துநன் மதுரம்
தழுவிய நவரச[11]த் தண்டமிழ்ப் பாகைக்
காட்டுக் கெறித்த கதிர்நிலா என்ன,
மேட்டுக் கிறைத்த விழுப்புனல் என்னப்,
போதமில் செவிடர்முன் ஊதுசங் கொலிஎனக்,
கமரி[12]டை உகுத்த அமிர்தென, ஆங்கவர்
தொள்ளா[13] மரச்செவி யுள்ளே தூஉய்,
"வேளையன் றின்று நாளைவம்" என்ன,
வழிபல தேய்ந்து குழிபட நடந்து
நூல்கொளும் தமிழை நுவன்றிடும் வாய்போல்
கால்களும் சலித்துக் கருத்தழும் பேற

---

1 "உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமும் செய்யார் கொடாஅது
வைத்தீட்டி னார்இழப்பர் வான்றோய் மலைநாட,
உய்த்தீட்டும் தேனீக் கரி." நாலடியார்.

2 Mirage. 3 நினைத்து. 4 கல்லால் அமைத்த பசு.

5 யாசகர். 6 அளவு, நீக்குதல். 7 "மாரிமாட் டென்னாற்றுங் கொல்லோ உலகு."—திருக்குறள். 8 குற்றம். 9 கருமை, களங்கம். 10 peak. 11 The nine passions or emotions, as expressed in poetry:—வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சிருங்காரம், கருணை, கோபம், நகை, சாந்தம். 12 நிலப்பிளப்பு. 13 துளையாத.

ஊர்தரு சகடத் துருளை[1] போலவும்
பேர்தரும் ஊசற் பிறழ்வடம் போலவும்
போவதும் வருவதும் ஆவதே தொழிலாய்,
நாட்செல நாட்செலத் தாழ்ச்சியாய்ப் பலமும்
பஞ்சி[2]யாய்க் கழிய,

விஞ்சிநீள் கலி[3]யால்
இரைமுகக் கிரிமுன் வருபொறிப் பாந்தள்[4]அப்
பாந்தள் வாய்ப்பட்டு மாந்து[5] தேரை
கொடிச்சிறு தூண்டில்வாய்த் துடித்தெழு கெண்டை
பருந்துவாய்க் கவ்வ வருந்தும் பார்ப்பு[6]த்,
தொகப்படும் ஓட்டில்[7]வந் தகப்படும் பறவை,
அலை[8]வாய்க் கரும்பு, வேலை[9]வாய்த் துரும்பு,
வலைவாய்ப் புகுமொரு மானெனத் தியங்கி,
உலைவாய் மெழுகென உருகிவெய் துயிர்த்துச்,
சிதலை[10] தின்ற முதுமரம்[11] போலவும்,
புல்லுரீஇ[12] படர்ந்த சில்லி[13] போலவும்,
இளங்களி றுண்ட விளங்கனி[14] போலவும்,
தும்பி குடைந்த தம்பம் போலவும்
உள்ளுற மெலிந்து வெள்ளுடல் கோதாய்ச்
சலமதி[15] எனமறிச் சஞ்சலம் பெரிதுற;
நாழிகை ஒருநாள் நாள்ஒரு மாதம்
வாழிய மாதம்ஓர் வருடமாய் நீடத்
திரிதரு நாள்ஓர் இரவிடைச், சவியா[16]
ஒடுங்கிய மெய்யன், கொடுங்கை[17] அணையாக
ஒருசிறி தாங்கே இருவிழி முகிழ்ப்பக்

---

[1] வண்டியின் சக்கரம். [2] கிட்டாதது. பஞ்சி – உலகவழக்குச்சொல். [3] வறுமை. [4] பாம்பு. [5] வருந்துகின்ற. [6] பறவைக்குஞ்சு. [7] கண்ணி, புட்படுக்குங்கயிறு. [8] கரும்பாலை. [9] கடல். [10] செல், white ants. [11] சிதலை தினப்பட்ட ஆலமரத்தை.—நாலடியார். [12] புல்லுருவி–புல்லூரி–a parasitic plant. (ஆலின்மேற் புல்லுருவி–நல்லமரத்திலே புல்லுருவி பாய்ந்தாற்போல). [13] சிறுகீரை. [14] களிறு–வேழம். வேழம்–தேஙா போயிற்று என்றூற் போல்வதொரு நோய், விளாங்காய்க்கு வருவது–சிந்–நாம–203; குணமாலை 174. [15] சலத்தில் தோன்றும் சந்திரபிம்பம் அலையால் அலைவதுபோல. [16] சவித்து. [17] மடக்கிய.

கனவுகண் டிதுஓர் நன[1]வென விழித்தனன்.

களிப்பொடும் எழுந்து வெளிப்புறப் படுதலும்,
அந்தணர் இருவர் வந்தது கண்டனன்;
பிறைவட மணிந்த பெண்ணணங் கனையவர்
நிறைகுடஞ் சுமந்து நேர்வரக் கண்டனன்;
கரிக்குரீஇ இடம்பாய்ந் திருக்குதல் கண்டனன்[2],
கருடன்வந் திடமாய் அருடாக் கண்டனன்:[3]
நன்றிகூர் நிமித்தமீ தென்றுகொண் டாடினன்.

திகழும் வெண்டாள[4]மும் செம்பொனும் வரன்றி[5]
மொகுமொகென் றருவி முழங்கிவீழ் குன்றும்
ஆர[6]மும் தேக்கும் அசோகமும் நாகமும்
வேர[7]லும் ஐவனம்[8] விளையும் சாரலும்
சிறையடித் தக[9]வும் செழுங்களித் தோகை[10]யும்
கறையடி[11]த் திரளும் கடும்போர் மடங்க[12]லும்
உறப்புலி எதிர்பாய் மறப்புலி[13]க் குழாமும்
விடாவடி வள்ளுகிர்க் குடாவடி[14]த் தொழுதி[15]யும்
பெருகுடிக் குறவர் சிறுகுடி[16]க் குரம்பை[17]யும்
நிரம்பிய குறிஞ்சிப் பெரும்புலம் கடந்தனன்.

---

1 Real vision சாக்கிரம்.

அக்கனவாவது:—மேற்குமலையில் பசிதாகத்தால் வருந்திய ஒரு சேவல் வானம்பாடி தன் சுற்றத்தோடும் குஞ்சுகளோடும் கிழக்கு நோக்கி வந்தது. வழியில் நல்லமழை பொழிய அவை மழைத்துளிகளை அருந்தி மகிழ்ச்சியோடு மீண்டன. அதைக்கண்டு வருகின்ற வழியில் ஓரிடத்தில் ஒரு மங்கையைப் பாகத்தில் தழுவிய ஒரு தலைவன் என்னைப் பார்த்து இன்சொல் சொல்லி என் கையில் ஒரு மாதுளங்கனியைக் கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு இங்கே விரைந்துவந்தேன். [இந்தக் கனவின் பயனை மனையாளுக் கறிவித்து]

2 வால்நீண்ட கரிக்குருவி வலமிருந்து இடம் போனால், கால்நடையாய்ப் போனவர்கள் கனகதண்டிகை ஏறுவார்கள். 3 வெண்டலைக்கருடன் வந்திடமானால் எவர்கைப்பொருளும் தன்பொருளாகும்.

4 முத்து. 5 கொழித்து. 6 சந்தனமரம். 7 மூங்கில். 8 மலைநெல். 9 அகவும்—ஆடும். 10 மயில். 11 யானை (உரல் போன்ற அடியை யுடையது) 12 சிங்கம். 13 வேங்கை. 14 கரடி (குடைவாகிய அடியை உடையது.) 15 கூட்டம். 16 குறிஞ்சிநிலத்தார். 17 சிறுகுடில்.

விராவரும்[1] பாரரை[2]க் குராவும் மராவும்
காரையும் கரிந்த சூரையும் இருப்பையும்
சருகுபட் டுலர்ந்த கருகுலைக் கள்ளியும்
விட[3]ரெழுந் தெங்கணும் படர்வெயிற் கான[4]லும்
முரிசிறை[5]க் கழுகு[6]ம் விரிசிறைப் பருந்து[7]ம்
முன்னாய் வெகுண்டிகல் செந்நாய்க் கணமும்
மிடைந்த வெம்பாலைக் கொடுந்திணை கடந்தனன்.

பைங்குலை முல்லையும் செங்குலைக் காந்தளும்
நறுஞ்சினைக் குருந்தும் குறுஞ்சுனைக் கலுழி[8]யும்
தாற்றுக்கதிர்[9] வரகும் ஏற்றுத்தொறு நிரை[10]யும்
மது[11]வியல் கூந்தல் பொதுவியர் குரவையும்[12]
மன்னிய முல்லை நன்னிலம் கடந்தனன்.

தடம்பணைச்[13] செந்துணர்[14] அடம்[15]பின் கானமும்
விரும்பு வெண்முகைமுத்[16] தரும்புபுந் நாகமும்
தாங்குலைங் குடக்காய்[17] தூங்குமுட் கைதை[18]யும்
திவள்[19]சினைப் பணில[20]மும் தவழ்கழிக் கான[21]லும்
முடைப்புலால்[22] பகரும்[23] கடைப்படு களமும்
அப்பள வளாய[24] உப்பள[25] வளமும்
கைவல[26]ப் படலையும் கைவலத் திமில[27]ரும்
பாய்மரம் விரித்து வேய்மரக் கல[28]மும்
பட்டின வளாக[29]மும் மட்டிலா திசைந்த
நெய்தலஞ் சூழல் நெய்தனில் சாருமுன்,

மற்றதன் மருங்கில் வான்முக[30] டளந்து
சுற்றிய பளிக்கு[31]ச் சுவர்மணி மாடமும்,
தோரணம் நாற்றும்[32] துகிற்கொடி மறுகு[33]ம்,

---

1 விரவிய, கலந்த. 2 பரு + அரை—trunk. 3 கமர், வெடிப்பு. 4 Mirage. 5 வினைத்தொகை. 6 Eagle. 7 Kite. 8 முல்லைநிலக் கான்யாறு. 9 தாறு + கதிர்; (தாறு—குலை); கொத்தாய்க் காய்க்கும் கதிர். 10 ஏறு + தொறு + நிரை = எருதுகளையுடைய பசுக்களின் கூட்டம். 11 தேன். 12 பொதுவியர் — இடைச்சிகள். குரவை—கைகோத்தாடுங் கூத்து. பொதுவியர் குரவை—ஆய்ச்சியர் குரவை. 13 பெரியநீர்நிலை. 14 பூங்கொத்து. 15 அடம்பங்கொடி. 16 முத்தைப்போல். 17 திரண்டகாய். 18 தாழை. 19 மெலிந்த. 20 சங்கு. 21 கடற்கரைச்சோலை. 22 முடைநாற்றம் வீசுகிற புலால். 23 விற்கும். 24 அப்பு அளவளாய—நீர்கலந்த. 25 Salt-pans. 26 பாசி. 27 திமிலர்—செம்படவர். 28 கப்பல். 29 வளாகம்—இடம். 30 உச்சி. 31 பளிங்கு, கண்ணாடி. 32 தூக்கும். 33 வீதி.

ஆரண வேதியர்க் கக்கிரகாரமும்,
சித்திர முகப்பு[1]ம், தேவரா லயமும்,
நித்திலப் பெருந்தூண் நிரைத்த காவண[2]மும்,
நித்தலும் பொழிஅன சத்திர[3] சாலையும்,
கூடக[4]க் கையினர் நாடகத் தரங்கும்,
வாழையும் பலாவும் மடற்பசும் பூக[5]மும்,
தாழையும் மாவும் தழைத்த பூங்காவும்,
குவளையும் கமலமும் குமுதமும் செறிந்து
தவளையும் கயலும் தாவும் வாவிகளும்,
அடைகரைப் புளின[6]மும், குடையுநீர் மதகும்,
ஆற்றுநீர்ப் படுகை[7]யும், ஊற்றுநீர்க் கேணி[8]யும்,
கன்னலம் படப்பை[9]யும், செந்நெலங் கழனியும்,
உழுதொழில் மாறா மழவ ரோதையும்,
ஆலையும், இளமரச் சாலையும், எங்கணும்
சூழ்ந்து,விண் ணிமையவர் வாழ்ந்தபொன் னுலகம்
நவநிதி[10] யொடுபோந் தவனியில் வந்தெனத்,
தரையூர் சிறப்புடை இரையூர்[11] புகுந்தனன்.

திருந்துபொற் கோயில்[12] செழுமணி முகப்பிடை
இருந்தனன். அக்கணத் தெறிகடல் முழக்கென
வல்லி[13]யங் குறுங்கண்[14]வார்ப் பல்லியம்[15] கறங்கத்,
தண்கதிர் மதியென வெண்குடை கவிப்பத்,
தேமரு மெல்லிதழ்த் தாமரை முகத்தியர்
காமரு கற்றைவெண் சாமரை இரட்ட,
எள்ளடை[16] நாசியர் வெள்ளடை[17] உதவ,
முகபடம்[18] இலகிய புகர்[19]முக விகட[20]ப்
போதக[21]க் கழுத்தின் மீதிலோர் புலவன்

[1] Front, porch. [2] பந்தல். [3] அன்னசத்திரம். [4] கைவளை. [5] கமுகு. [6] மணற்குன்று. [7] ஆற்றங்கரையடுத்த நன்செய் arable land near a river. [8] கிணறு. [9] கன்னல்-கரும்பு. படப்பை-தோட்டம். [10] கச்சபநிதி (tortoise-like)-காவநிதி – சங்கநிதி (chank-like)-குந்தநிதி (the gem of felicity)-நீலநிதி-(blue-lotus-like gem)-பதுமநிதி (lotus-like)-மகரநிதி-மகாபதுமநிதி (major lotus-like) முகுந்தநிதி (a gem resembling quicksilver.) [11] வடமலையப்பப் பிள்ளையனுடைய தலைநகர்.

[12] அரண்மனை. [13] வல்லி-உச்சமாகிய இசை. [14] சிறியகண். [15] வாச்சியம். [16] அடை-உவமவுருபு. [17] வெற்றிலை. [18] யானையின் முகப்போர்வை. [19] புள்ளி. [20] பெரியது. [21] யானை.

எதிர்ந்தனன் மன்னோ எதிர்ந்தனன் மன்னோ.
“அதிர்ந்தன யாவை? ஈண் டடைகுநர்[1] யார்?” என
அத்திசை நோக்கலும் இத்திசை நோக்கினன்.
யானெதிர்செல அவன் தானெதிர் அணுகினன்.
ஒருவர் ஒருடல் ஒருயிர் இவரென
இருவரும் இருமார் பிசைந்துறத் தழுவினம்.
விள்ளருங் காதல் மீதூர[2] மீதூர
உள்ளமும் வாய்மையும் ஒன்றுபட் டுவந்தனம்.
நலிந்தவெங் கலியால் நாடொறும் புலவ,
மெலிந்தனை கொல்லோ மெலிந்தனை கொல்லோ?
முற்றிய உன்துயர் முழுவதும் நீங்குதற்
குற்றது காலம்: உரைக்குவல்[3] கேளாய்:—

“மாரிசூழ் குடுமி நேரி[4]மால் வரையான்
கரைபொரு தரங்க[5]த் தாளமா நதியான்
இயலிசை முத்தமிழ் யாவரும் உணர்ந்து
பயிலிருங் கோளப் பாண்டி நன்னாடன்
இரையூர்[6] வளை[7] தவழ் இரையூர்க் கதிபன்
பரசிய மூவகை முர[8]சதிர் முன்றிலன்
ஆழிசூழ் புவிபுகழ் மேழியந் துவசன்[9]
சற்குண லளிதன் சரசசல் லாபன்
மருண்டு சொப்பனத்தும் இரண்டுரை யாத
சத்திய வசனன் நித்திய கல்யாணன்
அன்பு கனிந்த இன்பக் கொழுங்கனி
பெருமைக் களஞ்சியம் தருமக் கொள்கலம்[10]
கற்றவர் கண்மணி உற்றவர் பிராணன்
நாவலர் கற்பகம் மேவலர் கூற்றம்
ஏற்றவர் கலிநோய் மாற்று சஞ்சீவி
தரைமுழு தாளும் துரைகள் சிகாமணி
தந்திர விவேகி மந்திர யூகி

---

1 வருபவர். 2 மேற்பட, அதிகப்பட. 3 உரைப்பேன்.

4 சோழதேயத்தோர் மலை. அதனால் சோழனுக்கு நேரியன் என்றொரு பெயர் உண்டு. திருவள்ளுவமாலையில் “மும்மலையும்” என்னும் செய்யுளையும் அதன் உரையையும் பார்க்க 5 அலை. 6 ஒலிதவழும். 7 சங்கு. 8 மங்கலமுரசு வெற்றிமுரசு கொடைமுரசு. 9 கலப்பைக் கொடியுள்ளவன் (வேளாளன்). 10 பாத்திரம்.

ஒருதனி வீரப் பொருதிறல் சேவகன்
சைவ சித்தாந்தம்[1] கைவரு குரிசில்,

பாவியல் தமிழ்தேர் காவியப் புலவர்
கரகம் பித[2]த்துடன் சிரகம்பிதம் செயத்
தேனூற் றிருந்து[3] செவிதொறும் கனிய
நானூற்றுக் கோவையும் நாற்கவி வண்ணமும்
பலர்புகழ் சீரோர்த் தலபு ராணமும்
இருநிலம் புகழும் ஒருகலம் பகமும்
நீடுல குவப்பப் பாடிநிலை நிறுத்தும்
கூறுசொல் கவிதா சாருவ பௌமன்,[4]

தரு[5]வொப் பெனவெழு தாரணி புரக்கும்
இருவப் பன்பெறும் இராச குமாரன்,
ஞானகரன், அபிமான பரணன்,
செந்தமிழ்க் குதவும் தியாக வாரிதி,
முத்துநா யகமிவர் மூவேந் தருக்கும்
பெருமைபெற் றுயர்ந்த அருமைமைத் துனவேள்,
இராசைப் பதிவளர் இருவப் பனையருள்
வரிசைப் பெரியவன் வடமலை யப்பனைத்
தஞ்சமென் றடைந்தேன்: அஞ்சலென் றளித்தான்.
இத்திறம் பாவலன் கைத்திறம் பாடினன்.
ஆதலால் நீயும் அவனையே பாடிப்
போதி"என் றுரைப்பப், புகழ்ந்தவற் பணிந்து[6]
"சிந்தையில் எழுந்த சிறுகளி முதிரத்
தந்தனை செல்வம் தமிழ்வலோய்!" என்னச்
சென்றனன்.

பொற்குடம் செறிந்தொளிர் ஆடகக்
குன்[7]றென உயர்ந்த கொடிநெடு மாளிகைப்
பச்சொளி நீலப் பருக்குமிழ் செறித்த

---

[1] சிவாகமத்தின் ஞானகாண்டப் பொருளைச் சுருக்கி இனிது விளக்கும் தமிழ் நூல்கள். அவை பதினான்கு.

[2] கம்பம்—அசைவு. கரகம்பிதம்—கையசைப்பு: to shake the hand in approval. சிரகம்பிதம்—தலையசைப்பு: to nod the head in approval. [3] To flow with honey, to be mellifluous. [4] (சர்வ—all. பூமி—earth) சக்ரவர்த்தி.

[5] பஞ்சதரு. [6] அவனை வணங்கி. [7] ஆடகக்குன்று—பொன்மலை.

வச்சிர கபாடம் வருத்தநீள் முன்றிலில்
முறையிடும் தெவ்வர்[1] முறைமுறை முத்தம்
திறையிடும் தூழனி செறிந்தபொன் வாசலில்
நின்றனன்.

"சமையம்[2] யா"தென்று வினுதலும்,
ஆதுலர்[3] வறியோர் அடுத்தவர் உற்றவர்
ஏதிலர் பெரியவர் யாரையும் அழைத்து
வரிசையின் முறைமுறை நிரை[4]பெற இருத்திக்
கனியுமுக் கனி[5]யும் இனியபாற் குழம்பும்
இறுகுவெண் டயிரும் நறியவா னெய்[6]யும்
மறுவிலா அடிசிலும் மலிந்துதேக் கெறிய
அறுசுவைக் கறியொடும் அன்பொடும் அருத்தி
மனந்துணிந் தெவர்க்கும் வரையா தம்பொன்
தினந்தினம் பொழியும் தியாகமண் டபத்துச்
சீரிய தமனிய[7]ச் சிங்கா தனத்து
வேதியர் ஒருபால் விருந்தினர் ஒருபால்
வாதிய லேழிசை வல்லவர் ஒருபால்
காவலர் ஒருபால் கவிமழை பொழியும்
பாவலர் ஒருபால் பதிந்துசூழ்ந் திருப்ப
இருந்தவன் விரைந்தாங் கெழுந்தெதிர் வந்தனன்.

பரிந்துமுன் நெடுநாள் பழகுநண் பினர்போல்
"முற்றவத் துறுபயன் உற்றதின்" றென்றனன்.
"வருக"என் றொருகை இருகையிற் றாங்கினன்,
வியப்புடன் உள்ளே பயப்பய[8]க் கொடுபோய்த்
திருத்திகழ் ஆசனத் திருத்தி இருந்தனன்.
முளரியின் மலர்மகள்[9] முகமலர் குடிகொள
ஒளிபெற எனதுடல் உளமொடு புளகெழ[10]
விதிவிளை தெறுகலி விடைகொள[11] அருள்மழை

---

[1] பகைவர்.

[2] பார்க்கத்தக்க காலம். [3] நோயாளிகள். [4] ஒழுங்கு. [5] வாழை பலா மா. [6] வாசனையுள்ள பசுநெய். [7] பொன்.

[8] பைய பைய—மெதுவாக. [9] இலக்குமி. [10] மயிர் சிலிர்க்க. [11] தெறுகலி யானது இனிநான் உன்னைவிட்டுப் போகிறேனென்று விடைகொள்ள.

குதிகொள இணைவிழி குளிர நோக்கினன்.

"குருமணி மகாக் குழை[1]க் காதழக!
அருள் பரிமளிக்கும் அம்புய விலோசன[2]!
சுந்தர சீதள சந்திர வதன!
மடலவிழ் குவளைமேல் வரியளி துளிநறை
இடையிடை பொதுளிய[3] இருபுய பூதர[4]!
பலகலை நிபுண! பார்த்திப சேகர[5]!
கலியுக கன்ன[6]! கருணை கடாக்ஷ!
கற்றவர் துணையே! உற்றவ ருயிரே!
முதியபாட் டமுதமே! மதுரைவீட் டரசே!
இரசையம் பதிவாழ் கருணையங் கடலே!
தடமலை யேந்தும் வடமலை வேந்த!"
என்றுசொல் மதுர இயற்றமிழ் இசையொடும்
துன்றுநற் பொருளொடும் சுவைபெறக் கேட்டனன்.
பெருகிய உவகை கரைகடந் தேற
மூட்டுபொன் கஞ்சுக[7]ப் பூட்டற நிமிர்ந்து
வென்றிகொள் மணிப்புயம் வீங்குறப் பலகால்
நன்றுநன் றென்ன நன்முடி அசைத்தனன்.

பொருக்கென எழுந்து சாக்கறை[8] திறந்தனன்.
பகைத்திடும் அரசர் திகைத்திட நாளும்
திறைகொணர்ந் தளித்த நிறைபசுங் கனகம்
செய்ய பட்டாடை துய்யமென் தூசு
மின்னிய சரப்பணி பின்னுபொன் அரைஞாண்
மணிவிர லாழி அணிமணிக் குண்டலம்
நித்தில மாலை சித்திர மகுடம்
நவமணிப் பதக்கம் கவின்மணித் தண்டிகை
வேண்டுவ வேண்டுவ விரைந்திவை முதலா
ஆண்டகை கொள்கென அன்பொடும் வழங்கினன்.

---

[1] மகரகுண்டலம். [2] தாமரைபோன்ற கண்களுள்ளவனே. [3] நெருங்கிய. [4] (பூதரம்—மலை) இரண்டு புயங்களாகிய மலையுள்ளவனே. மலைபோன்ற புயங்களுள்ளவனே. [5] சேகரம்—தலை, முடி. [6] கலியுகத்தில் கர்னனுக்குச் சமானமானவனே. [7] சட்டை, கவசம்.

[8] warehouse.

போற்று செந்தமிழ் முருகாற்றுப் படைக்காச்
செந்தில் வாழ்முருகன் வந்துநக் கீரன்
வன்சிறை தவிர்த்தென[1] என்சிறை தவிர்த்தனன்.
தன்கட னுமென் றென்கடன் தீர்த்தனன்
மாடும் தொழுவும் வயலும் தோட்டமும்
வீடும் விளக்கும் விளங்குறச் செய்தனன்.
ஒருகுறை யில்லா துயர்ந்தனன் எளியேன்.
பெருகிய சுற்றமும் பெண்டிரும் மக்களும்
கற்ற பாவலரும் சுற்றவா துலரும்
சூழ்ந்து வாழ்வுற, இனி தூழி
வாழ்ந்தவன் புவிமேல் வாழி[2]வா ழியவே.



[1] இது சீகாளத்திப்புராணம் நக்கீரச் சருக்கத்தில் விரித்துரைத்திருக்கின்றது. அதில் கவனிக்கத்தக்க பாகம்: — சிவபூசையில் வைத்த மனம் சிறிது திறம்பினோர் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரை மலை முழையிலே கூட்டி வைத்துவிட்டு அன்னோர் மற்றொருவரைத் தேடித் திரிந்த பூதமொன்று, நக்கீரர் ஒரு தடாகத்தருகே பூசைசெய்திருத்தலைக் கண்டு, அவர் எதிரில் வீழ்ந்த ஆலிலையின் பாதியை மீனாகவும் மற்றப் பாதியைப் பறவையாகவுமாற்றி அவர் மனதைக் கவரும்படி செய்து அவரையும் கொண்டுபோய்ச் சிறைசெய்து, நீராடி வந்து உண்போமென்று போயிற்று. அதுகண்ட நக்கீரர் திருமுருகாற்றுப் படையைப் பாடி அறுமுகனருளாலே தம்மையும் மற்றையோரையும் காத்தனர். [2] அவன் புவிமேல் இனிது ஊழிவாழ்ந்து வாழி வாழிய.

# தொண்டைமண்டல சதகம்.



மாவண்டூரிலிருந்த கஸ்தூரிமுதலியார் குமாரர் கறுப்பமுதலியார் வேண்டுகோளின்படி, பொன்விளைந்த களத்தூரில் செங்குந்தர் மரபினராகிய படிக்காசுப்புலவர் பாடியது. இவர் பாடிய மற்றொருநூல் புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம். இவருடைய பாடலின் சிறப்பு,

மட்டாருந் தென்களந்தைப் படிக்காசன் உரைத்ததமிழ்
வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்த வேட்டைத்
தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னாலும் வாய்மணக்குந்
துய்ய சேற்றில்
நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது
நளினந் தானே.

என்ற பாட்டால் விளங்கும்.



தொல்காப்பியப் பாயிரம்.

படவேங்கடற் கடலன்ன தொல்காப்பியப் பாயிரஞ்சொல்
விடவேங்கட மின்றியே பனம்பாரர் மற்றெல்லை சொல்லக்
கடவேங்கட லன்னசெந் தமிழ்க்கேயென்று காட்டுதற்கு
வடவேங்கடந் தென்குமரி யென்றார்தொண்டை மண்டலமே.

பனம்பாரனுர் அகத்தியருடைய மாணாக்கர் பன்னிருவரில் ஒருவர்.

பாரதம்பாடிய பெருந்தேவனுர்.

சீருறும் பாடல்பன் னீரா யிரமுஞ் செழுந்தமிழ்க்கு
வீரர்தம் சங்கப் பலகையில் ஏற்றிய வித்தகனுர்
பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண்
மாருதம் பூவின் மணம்வீ சிடும்தொண்டை மண்டலமே.

பாரதம்பாடிய பெருந்தேவனுர் கடைச்சங்கத்தின் முடிவுகாலத்தில் இருந்த புலவர்களில் மிக முதியவர். இவருடைய பாரதவெண்பா உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள். குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு முதலிய நூல்களின் கடவுள் வாழ்த்துக்கள் இவராற் பாடப்பட்டவை.

### முதுமொழிக்காஞ்சி.

ஊரார் மலிபுலி யூர்க்கோட்ட நற்குன்றத் தூரிலுள்ள
தீரா வளமலி பாக்கிழ வோன்[1]புகழ் சேக்கிழவோன்[2]
காராளன் கூடல் கிழவோன்[3] முதுமொழிக் காஞ்சி[4]சொற்ற
வாரார் புரிசை கிழவோ[5]னும் வாழ்தொண்டை மண்டலமே.

[1] பாக்கிழார். [2] சேக்கிழார். [3] கூடல்கிழார்.

[4] பத்ததிகாரமாய் ஒவ்வோரதிகாரமும் பப்பத்து முதுமொழியால் அமைந்த நூல். "ஏதமில் அறமுதல் இயல்பிலையென்னும், மூதுரை பொருந்திய முதுமொழிக்காஞ்சி" என்பது இலக்கண விளக்கம். [5] புரிசைகிழார்.

### நன்னூல் & சின்னூல்.

தன்னூர்ச் சனகை[1]யில் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூல்[2] உரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்,
சின்னூல்[3] உரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்,
மன்னூ புரத்திரு வன்னமின்னே, தொண்டை மண்டலமே.

[1] சனகாபுரம். [2] சீயகங்கன் என்னும் அரசன் வேண்டுகோளால் இயற்றிய இலக்கணம். [3] நூலாசிரியர் தொண்டைநாட்டுக் களத்தூரிற் பிறந்தவர்: ஆருகதர். நேமிநாத தீர்த்தங்கரர் பெயரால் செய்யப்பட்டமையின் நூற்பெயர் நேமிநாதம் எனவழங்கும்.

### கருணாகரத் தொண்டைமான்.

பண்டையோர் நாளையில் ஒரேழ் கலிங்கப் பரணி[1]கொண்டு
செண்டையு மேருவில் தீட்டுவித் தோன்[2]கழற் செம்பியன்[3]செய்
தொண்டைநன் னாடு புரக்கின்ற கோனந்தித் தோன்றல்[4]வெங்கள்
வண்டை[5]யர் கோனம் கருணா கரன்தொண்டை மண்டலமே.

[1] கலிங்கத்துப் பரணி. [2] (எல்லைக் கல்லாகக்கொண்டு அதில்) எழுதுவித்தவன். [3] முதலாங் குலோத்துங்கன். [4] நந்தித் தொண்டைமான். [5] வண்டலூர். சென்னைக்கும் செங்கற்பட்டுக்கும் இடையில் உள்ள ஒரு ரெயில்வே ஸ்டேஷன்.

கலிங்கத்துப் பரணியை இயற்றினவர் குலோத்துங்கனுடைய ஸமஸ்தான வித்துவானான ஜயங்கொண்டான் கவிச்சக்கரவர்த்தி.

### "வையகமெல்லாம்"

பொய்யக மாகிய மாயாப் பிரபஞ்சம் போக்குதற்குக்
கையக நெல்லி[1]க் கனியதன் றேகச்சி யேபெரிதாய்
மெய்யக மேபுரி காரிகை[2]ப் பாட்டில் விளங்கவைத்த
"வையக"[3]மென்னும் தமிழே புனைதொண்டை மண்டலமே.

[1] கரதலாமலகம். [2] யாப்பருங்கலக் காரிகை என்னும் யாப்பிலக்கணம்.

[3] அப்பாட்டாவது:—

* "வையகமெல்லாம் கழனியா—வையகத்துச்
செய்யகமே நாற்றிசையில் தேயங்கள்—செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு—வான்கரும்பின்
சாறேயந் நாட்டுத் தலையூர்கள்—சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாம்—கட்டியுள்
தானேற்ற மான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சியகம்."

என நான்காவது சூத்திரத்தில் பலவிகற்பத்தான் வந்த ஏழடிப்பஃறொடை வெண்பாவுக்குக் காட்டிய உதாரணம்.

* Read the following:—"There are some ancient memorial verses, as they are called, which describe the manner in which the Vellalas followed their chief into *Tondaimandalam*. The poetess, for the lines are attributed to a woman, compares the invasion to the flowing of the juice of the sugarcane over a flat surface. The juice crystallises, and the crystals are the various village communities. In the middle is one lump of peculiarly fine sugar the place where is the temple of the God. Homely as is the image, it seems to me in one respect peculiarly felicitous."—SIR HENRY SUMNER MAINE in *Early Institutions*.

கம்பர்வாக்குப் பொய்யாமை.

அழுவதுங் கொண்டு புலம்பாமல் நஞ்சுண் டதுமறைத்[1]தேர்
எழுவதுங் கொண்டு புகழ்க்கம்ப நாடன் எழுப்ப[2]விசை
முழுவதுங் கொண்டொரு சொற்பேச நெய்யின் முழுக்கையில்
மழுவதுங் கொண்டு[3] புகழ்கொண்ட தால்தொண்டை மண்டலமே.

[1] குலோத்துங்கன் சபையில் ராஜசேவையிலிருந்த வெண்குன்றத்தூர் தவளகிரி முதலியார் தமது மைந்தன் தமது தோட்டத்தில் பாம்பு கடித்திறந்த சமயத்தில் விருந்தாக வந்த கம்பருக்கு அந்தச் செய்தி தெரியாதபடி மறைத்து.

[2] சங்கதி தெரிந்தபோது

ஆழியான் பள்ளி அணையே அவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—ஊழியான்
பூணேஅப் பூணான் புரமெரித்த பொற்சிலையின்
நாணே அகல நட

என்ற பாடலைச் சொல்லி எழுப்ப.

[3] தவளகிரி முதலியார் குமாரன் அவருடைய சேவையில் அமர்ந்திருந்த காலத்தில், ஏரெழுபதின் சிறப்புப் பிரஸ்தாபமானதைக் கேட்ட அரசன், "வேளாளர்

அவ்வளவு சிறப்புடையரென்று பாடல் பெறத் தக்கவரோ? கம்பர் சொல் மெய்யாமோ?" என்று சங்கித்தான். முதலியார் தன் பாலியத்தில் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்ல, அதைக்கேட்ட அரசன் பின்னும் சந்தேகபடைய, அவர், காய்ச்சிய நெய்யில் முழுகி யெழுந்து, கையில் மழுவை ஏந்திநின்று அரசன் சந்தேகத்தை நிவர்த்திசெய்தார்.

### கச்சியப்ப சிவாசாரியார்.

அந்தப் புரமும் அறுநான்கு கோட்டகத்[1]தாரும்ஒன் றாய்க்
கந்தப் புராணம் பதினா யிரம்சொன்ன கச்சியப்பர்[2]
தந்தப்பல் லக்கையும் தாங்கிக் குமரர்பொற் சந்நிதி[3]க்கே
வந்தப் புராணம் அரங்கேற்றி னார்தொண்டை மண்டலமே.

[1] தொண்டைமண்டலத்து இருபத்துநான்கு கோட்டம்.
[2] கச்சியப்ப சிவாசாரியர். [3] குமரகோட்டம்.

### அந்தகக்கவி வீரராகவ முதலியார்.

ஈழந்[1] திறைகொண் டெதிர்த்தோரை வென்ற இரவிகுலச்[2]
சோழன் கவியும்[3] அவன்தேவி பாடலும்[4] சூட்டிக்கொண்டான்
வேழம் புரைசொற்[5] கவிவீர ராகவன் வீற்றிருந்து
வாழுந் தமிழ்மண் டலமல்ல வோதொண்டை மண்டலமே.

[1] சிங்களத்வீபம், இலங்கை. [2] சூரியகுலம். [3] அக்கவியாவது: —

இன்னங் கலைமகள் கைமீதிற் புத்தகம் ஏந்திஅந்தப்
பொன்னம் பலத்தினில் புக்கிருந்தாள் என்ன புண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்சம் ஏடெனக் கற்றான் ஒருமுத் தமிழையுமே.

[4] அது கிடைக்கவில்லை. [5] கரும்பொத்த இனிய சொல்.

### பரிமேலழகர்.

வள்ளல் சிலைப்பெருமாள், நச்சர், சாத்தர், வழுதிமுதல்
தள்ளுவன் ஆர்க்கும் தலையான பேரையும் தன்னுரையை
விள்ளுவன் ஆர்க்கும் திருக்காஞ்சி வாழ்பரி மேலழகன்,
வள்ளுவ னார்க்கு வழிகாட்டி னான்தொண்டை மண்டலமே.

திருக்குறளுக்கு உரை செய்தவர்கள்:—
தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி—திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தார் இவர்.

### மண்டல புருடன்.

பண்டை நிகண்டு[1] திவாகரம், பிங்கலம், பன்னுரிச்சொல்,[2]
எண்டிசை யின்சொல்[3] வடமொழிச் செய்யுள்எல் லாமுணர்ந்தே
தண்டமிழ் கொண்டு நிகண்டுசூ ளாமணி தானுரைத்த
மண்டல வன்[4]குடி கொண்டது[5] நீள்தொண்டை மண்டலமே.

[1] கல்லக்கோட்டுத் தண்டு முதலிய பழமையாகிய நிகண்டுகள். [2] காங்கேயர் இயற்றிய உரிச்சொல் நிகண்டு. [3] திசைச் சொற்கள். [4] மண்டலபுருடன். [5] வீரை; இப்போது பெருமண்டூர் என்று வழங்கும்.



# சோழமண்டல சதகம்.



இந்நூலை இயற்றியவர் வேளூர் ஆத்மநாத தேசிகர். இவருடைய காலம் கி. பி. 1650க்கும் 1728 க்கும் இடைப்பட்டது: சகஜி மஹாராஜா காலம். இந்நூல் சித்தாய்மூர் அதிபரான அருணாசலவேள் வேண்டுகோ ளின்படி இயற்றப்பட்டது. 1916-ஆம் திருவாரூர், இலக்கண விளக்கப் பரம்பரை, ஸ்ரீ. சோமசுந்தர தேசிகரால் இந்நூல் பாடப்பட்டோர் வரலாற் றுடன் அச்சிடப்பெற்றிருக்கின்றது.

சடையப்பமுதலியார்.

எண்ணத் தரும்பார் உள்ளளவும் இரவி மதியம் எழுமளவும்
கண்ணற் கினிய ராம கதையில் ஒருபான் கவிமுழுதும் [வைத்த
வெண்ணெய்ச் சடையன் சடையனென விறலார்கம்பன் விளங்க
வண்ணத் துரைவே ளாண்பெருமான் வளஞ்சேர் சோழமண்டலமே.

அளிக்கும் படைமூ வேந்தரும்கொண்
டாடும் விருந்தால் அதிசயமாய்த்
திளைக்கும் திரிகர்த்த ராயனெனச்
செப்பும் வரிசைத் திறஞ்சேர்ந்தோன்
விளைக்கும் அரிசி மாற்றியநீர்
வெள்ளம் கிழக்கு விளையுமென
வளைக்கும் பெருமைப் புதுவையர்கோன்
வளஞ்சேர் சோழ மண்டலமே.

இதில் சுட்டியிருப்பது அடியிற்கண்ட வெண்பா:—

புரந்தர தாரு புதுவைச் சடையன்
இருந்தவிய வூர்தெற்கு மேற்குப்—பரந்தபொன்னி
யாற்றுநீ ரால்விளையும், அப்பால் கிழக்கரிசி
மாற்றுநீ ரால்விளையு மாம்.

அவ்வூரில் ஓர் கழனி இன்னும் கழுநீர் பாய்ஞ்சான் என வழங்கிவரு வதே இதற்குச் சான்று.

விருந்து நுகர்வோர் கைகழுவ விளங்கும் புனற்கா விரியென்றூர்
தருந்தா யனைய புகழ்ப்புதுவைச் சடையன் கொடையார் சாற்றவல்
பரிந்தா ரெவர்க்கும் எப்போதும் பாலுஞ் சோறும் பசிதீர [லார்
வருந்தா தளிக்க வல்லதன்றோ வளஞ்சேர் சோழ மண்டலமே.

இதில் சுட்டியிருப்பது கம்பர் பாடிய வெண்பா:—

மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதும் காவிரியே—பொய்கழுவும்
போர்வேள் சடையன் புதுவையான் இல்லறத்தை
ஆர்போற்ற வல்லார் அறிந்து.

இந்த வெண்பா மூவலூரில் சிலாசாசனமாக வெட்டியிருக்கிறது.

### வீரசோழியம்.

ஆரவார விலக்கணநூல் ஐந்து முழங்க அதற்கெதிர்நூல்
பாரின்மீது தமிழ்க்கூத்தன்[1] பாடி யமைத்தான் பயனோர்ந்தே
வீரசோழ னுடனிருந்து வியந்தே வீர சோழிய[2]நூல்
வாரமேற அரங்கேற்றி வைத்தார் சோழ மண்டலமே.

[1] ஒட்டக்கூத்தர் என்பர் சிலர். வேறொரு புலவன் என்பர் சிலர்.

[2] ஐந்திலக்கணங்களைச் சுருங்க உரைப்பது. பொன்பற்றியூர் புத்தமித்திரனார் இயற்றியது. அக்காலத் தரசாண்ட வீரராஜேந்திர சோழன் (1063–1070) பெயரை ஒட்டி இந்நூல் வீரசோழியம் எனப்பெற்றது.

### யாப்பருங்கலக்காரிகை.

இடமண் டியயாப் பருங்கலநூ
லெனுங் காரிகையிற் பதித்தமணித்
தடமண் டியதா மரையின்எனுந்
தமிழ்போல் உலகந் தனில்உண்டே
திடமண் டியஅத் தமிழ்க்குதவும்
சீமான் செழுந்தென் மண்டலமும்
வடமண் டலமும் பரவுபுத்தூர்
வளஞ்சேர் சோழ மண்டலமே.

இங்கே சுட்டிய பாடல் காரிகையில் இருகுறணேரிசை
வெண்பாவிற்குக் காட்டிய உதாரணம்:—

தடமண்டு தாமரையின் தாதா டலவன்
திடலண்டிச் செல்வதனைக் கண்டு—பெடைஞண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந்
தூழி நடாயின னூர்.

இது புத்தூர்வேள் என்னும் ஈகையாளனை ஒரு புலவன் பாடியது. யாப்பருங்கலக்காரிகை என்னும் யாப்பிலக்கணத்தை இயற்றினவர் அமுதசாகரர் என்னும் ஜைனர்.

கரிகாற் பெருவளத்தான் பட்டினப்பாலை கொண்டது

குணக்கின் மலைபோல் பதினாறு கோடி செம்பொன் கொடுத்தவிலை
இணக்கும் ஒருபட் டினப்பாலை எவரும் புகழ்தற் கெளிதாமோ
பணக்குன் றனந்த மேருவெனப் பயில்கா விரிப்பூம் பட்டினம்போல்
மணக்கும் பதிகள் பலகாணும் வளஞ்சேர் சோழ மண்டலமே.

பட்டினப்பாலை பத்துப்பாட்டில் ஒன்பதாவது. கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடியது. கலிங்கத்துப்பரணி இராச பாரம்பரியத்தில் "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன், பத்தொடாறு நூறாயிரம் பெறப் பண்டு பட்டினப்பாலை கொண்டதும்" என உரைத்திருக்கின்றது.



# பாண்டிமண்டல சதகம்.



பாண்டிமண்டல சதகம் மதுரைமாநகரில் வசித்த வீரபூபதி புதல்வரான ஐயம்பெருமாள்பிள்ளை என்பவரால் பாடப்பட்டது. இவர் வேளாளர். மிகவும் பிற்காலத்துப் புலவராயினும் இவர் எக்காலத்திருந்தவரென்பது தெரியவில்லை.

வளங்கொ ளரிய நயினுந் தையர்தொண்டை மண்டலத்தை
விளங்கும் வடமலை தென்காரைக் காட்டை மிகவுயர்த்தார்
நலம்பெற வையம் பெருமாடென் பாண்டிநன் னூட்டினில்வந்
துளங்கொள வோங்கிய வேளாளர் தம்மை யுயர்த்தினனே

என்னும் பதிகப்பாட்டினுல் இச்சதகம் தொண்டைமண்டல சதகத்துக்குப் பின் பாடப்பட்டதென்று தெரிகின்றது.

# பாண்டிமண்டல சதகம்.



1. ஒருகவிக் கோரொரு தேங்காய்பொன் னூற்செய் தொருட்டிக்கல்வி
பெருகச்செய் நாவலர் வாழக் கொடுத்துப் பாபம்பெற்றோன்
திருமலி தஞ்சையிற் கோவைத் தமிழ்கொண்டு செல்வமிக
வருதரு வாகிய வாணனும் பாண்டியன் மண்டலமே.

2. ஏரொக்கும் செஞ்சொல் அகப்பொருள் நூலுக் கிலக்கியமாய்
நேரொக்க வாழும் இரட்டையர் பாடி நிறுத்தவவர்
பூரிக்கத் தஞ்சைநற் கோவைகொண் டேமெச்சிப் பொக்ஷநிதி
வாரிக் கொளச்சொன்ன வாணனும் பாண்டியன் மண்டலமே.

3. தெரிபுல வோர்தம் மதுரைமட் டாச்சொலச் சென்றபொதி
எருதினில் ஏற்றிப் பொதித்தலம் சென்றதற் கேயஞ்சலாய்ப்
பெருமா சார்த்திடக் கப்பல்நற் கோவைப்ர பந்தங்கொண்ட
வருகரு மாணிக்கன் வாழ்வான பாண்டியன் மண்டலமே.

---

1 & 2. இவ்விரண்டு பாட்டும் தஞ்சைவாணன் கோவை பாடினதைக் குறிக்கின்றன. இங்கே தஞ்சை என்பது மதுரைக்கடுத்த தஞ்சாக்கூரை. இவ்வூருக்குத் தலைவனாயிருந்தவன் வாண வமிசத்தில் வந்தான் ஒருவன். இவன் இயற்பெயர் தெரியவில்லை. இவன் அக்காலத்திருந்த பாண்டியனுக்கு மந்திரியாகவோ சேனாபதியாகவோ இருந்தவன். இவன் 'வல்லத்தமர் வென்றவன்' என்றும் 'கன்னடர் மண் கொண்டவன்' என்றும் வேளாளன் என்றும் தஞ்சைவாணன் கோவையால் தெரிகின்றது. கி. பி. 1588-ல் பட்டந்தரித்த வீரபாண்டியனும் வல்லமெறிந்தவனென்று தென்காசிக் கல்வெட்டொன்றால் தெரிகிறது. இவ்விரண்டிலுங் குறித்த வல்லப்போர் ஒன்றேயாயின் தஞ்சைவாணன் காலம் 16-வது நூற்றாண்டாகும். தஞ்சைவாணன் கோவை பாடினது பொய்யாமொழிப் புலவரென்பது பெருவழக்கு. இங்கே இரட்டையர் பாடினதாகக் கூறப்பட்டுளது; இஃது ஆராயத்தக்கது.

3. இப்பாட்டுக் கப்பற்கோவை பாடினதைக் குறிக்கின்றது. இக்கோவையினின்றும் சில பாட்டுக்கள் இலக்கண விளக்கத்து அகத்திணையியலில் மெய்துறைக்கு உதாரணமாக எடுத்துக் காட்டப்படுகின்றன. இக்கோவை பாடினவர் யாரென்பது தெரியவில்லை. இதில் பாடப்பட்டவன் புதுக்கோட்டைச் சமஸ்தானத்தின் தென்பாகத்திலுள்ள கப்பலூரிலிருந்த வீரநாரண னென்னும் பெயருடைய கருமாணிக்கன். இவன் குலத்தால் இடையன் தஞ்சைவாணனைப்போல இவனும் அக்காலத்திருந்த பாண்டியனுக்கு மந்திரியாகவும் சேனைத்தலைவனாகவும் இருந்தவன்;

4. பேறுதந் நாளும் உமையவள் தேகப் பெருநலத்தைக்
கூறும் சவுந்தர லகரியென் ேறார்தமிழ் கூறிமிக
வீறிய நல்ல கவிராச பண்டிதர் மேன்மையொன்ற
மாறன் அரசு புரிந்தாளும் பாண்டியன் மண்டலமே.

5. தேனேறும் இன்சொல் இராமா யணத்தில் திருவழுந்தூர்
ஆனே றனைய தமிழ்க்கம்ப நாடன் அமைத்துவைத்த
தானேரில் கீர்த்திசெய் வெண்ணெய்நல் லூரிற் சடையனெனும்
வானேறு சீர்த்திகொள் வேளாளர் பாண்டியன் மண்டலமே.



பாண்டியனுக்காகக் கன்னடரையும் காடவரையுட் வடமன்னரையும் வென்றவன். இவ்வெற்றிகளைக் கொண்டு இவன் பதின்மூன்றும் நூற்றண்டிலிருந்த ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தவனென்று ஊகித்தற் கிடமுண்டு. இக்கோவை கருமாணிக்கன் கோவை எனவும் வழங்கும். இஃதின்னும் அச்சிடப்படவில்லை.

4. இது சௌந்தரிய லகரி பாடின கவிராசர் பாண்டிமண்டலத்தா ரென்கின்றது. சௌந்தரிய லகரி என்பது வடமொழியிலுள்ள தொருநூல். இதனை இயற்றினவர் ஆதி சங்கராசாரிய ரென்ப. இதனைத் தமிழில் அதிக அழகாக மொழிபெயர்த்தவர் வீரைக்கவிராஜ பண்டிதர் என்பவர். வீரை என்பது இராமநாதபுரச் சீமையிலுள்ள வீரசோழன் என்னுமூர். இக்கவிராஜர் தமிழில் வேறு நூல் செய்ததாகத் தெரியவில்லை. தமிழ்ப் புலவருள் கவிராஜர் என்று கூறப்படுபவர் பலருளர் அவருள் ஒருவரிலிருந்து மற்றொருவரை வேறுபடுத்தற்கு அவர் ஊர்ப்பெயரை முதலிற்சேர்த்து வீரைக் கவிராஜர், சேறைக் கவிராஜர், செங்கோட்டைக் கவிராஜர் என்று கூறுப.

5. இது கம்பரைக்கொண்டு இராமாயணம் பாடுவித்த வெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப முதலியார் பாண்டிமண்டலத்தா ரென்கின்றது. இதன் கருத்துச் சடையப்ப முதலியாரின் முன்னோர் பாண்டிமண்டலத்தா ரென்பதுபோலும். இஃது ஆராயத்தக்கது.

# கொங்குமண்டல சதகம்.

1. நிலவுல கத்திற் பலகலை தேர்ந்த நிபுணருள்ளே
"புலவன் திருவள் ளுவ" னென நேயம் பொருந்தவுரை
குலவு மதுரைத் தமிழா சிரியர்செங் குன்றூர்கிழார்
வலிமை யுறவரு செங்கோ டையுங்கொங்கு மண்டலமே

2. நாட்டினைத் தம்பி கொளக்காடு சென்று நலிவுறுநாள்
பாட்டிசைத் தோர்புல வன்வேண்ட என்தலை பற்றியறுத்
தீட்டியென் தம்பி யிடத்தீயிற் கோடிபொன் எய்துமென்று
வாட்டடங் கைத்தரு மக்குமணன் கொங்கு மண்டலமே.

3. சாதலை நீக்கும் அருநெல்லி தன்னைத் தமிழ்சொலவ்வைக்
காதர வோடு கொடுத்தவன் கன்னலை அங்குநின்று
மேதினி மீதிற் கொடுவந்து நட்டவன் மேன்மாபோர்
மாதிரஞ் சூழ்அரண் மேவுவ துங்கொங்கு மண்டலமே.

---

இச்சதகம் பாடினார் யாரென்பது தெரியவில்லை.

1. மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழார் என்பவர் திருவள்ளுவ மாலை பாடிய புலவருள் ஒருவர். அவர் பாடிய பாட்டு வருமாறு:—

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர்.

குன்றூர்—குறுக்கல்விகாரம். செங்கோடை என்பது திருச்செங்கோடு.

2. குமணன் தமிழ்நாட்டில் முன்னாளிலிருந்த ஒரு சிற்றரசன். அவன் தம்பியால் காடு கொள்ளப்பட்டுக் காடுபற்றி யிருந்தபோது அவனைப் பரிசில் வேண்டிப் பெருந்தலைச் சாத்தனார் பாட, அவன் தான் நாடிழந்ததனினும் தன்னைப்பாடிய புலவன் பரிசில் பெறாது பெயர்தல் இன்னாதென எண்ணித் தன்னிற் சிறந்தது பிறிதொன்றின்மையின் தன் தலையை அப்புலவருக் கீவானாக வாளைக் கொடுத்தனன். இதனைப் புறநானூறு 164, 165-ம் பாட்டுக்களாலறிக. இட்டல்—சேர்த்தல்.

3. அவ்வை ஆத்திசூடிமுதலிய பாடிய அவ்வை. அவ்வைக்கு நெல்லிக்கனிகொடுத்தவன் அதிகமான் நெடுமான் அஞ்சி. இதனைப் புறநானூறு 91-ம் பாட்டாலறிக. அதிகமான் நெடுமான் அஞ்சியின் முன்னோர் கரும்பைத் தேவருலகிலிருந்து மண்ணுலகத்தின் கொண்டுவந்ததைப் புறநானூறு 99, 392-ம் பாட்டுக்களாலறிக.

4. நீதப் புகழுத யேந்திரன் காதை நிகழ்த்துதற்குக்
கோதற்ற கொங்கினின் மூன்று பிறப்புற்ற கொள்கையன்றி
மேதக்க சொற்சங்கத் தார்வெள்க வேகொங்கு வேளடிமை
மாதைக்கொண் டுத்தரஞ்சொன்னதுவுங்கொங்கு மண்டலமே.

5. சொல்காப் பியத்தின் குணதோஷம் தேர்ந்து சொலுவதற்கு
தொல்காப் பியங்கற்க நீண்ட ததனைச் சுருக்கியிசை [த்
தொல்காப் பெரும்பவ ணந்தி,என் றோதி உபகரித்த
வல்கா வலன்சீய கங்கனின் றூள்கொங்கு மண்டலமே.



---

4. இது கொங்கு வேளாரால் பெருங்கதை யென்னும் உதயணன்காதை பாடப்பட்ட வரலாற்றைக் குறிக்கின்றது. இதிற் சுட்டப்பட்ட கதை இதுவென்பது தெரியவில்லை. நீதம்—நீதி.

5. இது பவணந்திமுனிவரைக்கொண்டு நன்னூலியற்றுவித்த சீயகங்கன் கொங்கு நாட்டானென்கின்றது. இவன் முழுப்பெயர் ஸ்ரீமத் குவளாலபுர பரமேஸ்வரன் கங்ககுலோத்பவன் சீயகங்கன் அமராபரணனான திருவேகம்பமுடையான் என்பது. இவனிருந்தரசாண்ட குவளாலபுரம் இப்போது கோலாறு (Kolar) என்று கூறப்படும். இவன் கொங்குநாட்டானேவென்பது ஆராயத்தக்கது. ஓல்குதல்—தளருதல்.

# ஆசிரியரும் மாணாக்கரும்.

(ஆத்திரேயன் பேராசிரியன்.)

வலம்புரி முத்தில் குலம்புரி பிறப்பும்,
வான்யா றன்ன தூய்மையும், வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்,
திங்கள் அன்ன கல்வியும், திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும், யாவதும்
அஃகா அன்பும், வெஃகா உள்ளமும்,
துலைநா அன்ன சமநிலை உளப்பட
எண்வகை உறுப்பினர் ஆகித்; திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும், தாளாண் மையும்,
உலகியல் அறிதலும், நிலைஇய தோற்றமும்,
பொறையும், நிறையும், பொச்சாப் பின்மையும்,
அறிவும், உருவும், ஆற்றலும், புகழும்,
சொற்பொருள் உணர்த்தும் சொலல் வன்மையும்,
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்,
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னரும் சிறப்பின் நல்லா சிரியர்.

---

ஆத்திரேயன்—அத்திரிகோத்திரத்தான்.

1. வலம்புரி—வலம்புரிச்சங்கு. 2. வான்யாறு—கங்கை.

4. திங்களன்ன கல்வி—பூரணசந்திரன்போல நிறைந்த கல்வி.

5. திங்களையும் ஞாயிற்றையும்போலத் தவறாத வாய்மை. வாய்மை—சத்தியம். யாவதும்—சிறிதும்.

6. அஃகுதல்—குறைதல். வெஃகுதல்—விரும்புதல்.

7. துலைநா—தராசின் நடுநாக்கு. சமநிலை—ஒருபாற் கோடாத தன்மை, நடுநிலை.

9. வேளாண் வாழ்க்கை—உலகிற்குபகாரப்பட்டு வாழ்தல். தாளாண்மை—முயற்சி.

10. நிலைஇய தோற்றம்—நிலைபெற்ற உயர்ச்சி.

11. நிறை—மறைபிறரறியாமை. பொச்சாப்பின்மை—மறதியின்மை.

14. காமுறப்படுதல்—விரும்பப்படுதல்.

அறனே பொருட்பயன் இன்பெனும் மூன்றின்
திறன்அறி பனுவல் செப்பும் காலை
முன்னர்க் கூறிய எண்வகை உறுப்பினுள்
ஏற்பன உடையர் ஆகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்,
சொல்லிய பொருளொடு சூழ்ந்து நன்குணர்தலும்,
தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலும்,
செய்ந்நன்றி அறிதலும், தீச்சார் பின்மையும்,
மடிதடு மாற்றம் மானம் பொச்சாப்புக்
கடுநோய் சீற்றம் களவே காமம்
என்றிவை இன்மையும், சென்று வழிபடுதலும்,
அறத்துறை வழாமையும், குறிப்பறிந் தொழுகலும்,
கேட்டவை நினைத்தலும், பாடம் போற்றலும்,
மீட்டவை வினவலும், விடுத்தலும், உரைத்தலும்,
உடையர் ஆகி நடைஅறிந் தியலுநர்
நன்மா ணாக்கர் என்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே.

---

17. பொருட்பயன்—பொருள். 18. திறன்—கூறுபாடு. பனுவல்—நூல்.
23. பயப்படுதல்—பயன்படுதல். 24. தீச்சார்பு—கெட்டவரோடு கூடுதல்.
25. மடி—சோம்பல். மானம்—அகங்காரம், இறுமாப்பு.
28. வழாமை—தவறாமை, வழுவாமை.
30. விடுத்தல்—விடைகூறுதல். உரைத்தல்—பிறர்க்குச் சொல்லல்.
31. இயலுநர்—நடப்பவர்.



# தமிழ்த் தெய்வ வணக்கம்.



இது, திருவனந்தபுரத்தில் மஹாராஜாவின் கல்லூரியில் தத்துவ தரிசன வாசிரியராயிருந்த ராய்பஹதூர் சுந்தரம்பிள்ளை யவர்கள் இயற்றிய மனோன்மணீயம் என்கிற நாடகத்தின் பாயிரம்.

பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா.

இவையிரண்டும் ஆறடித்தரவு.

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்,
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே. (1)

பூமிதேவிக்கு பரதகண்டம் முகமும், தெக்கணம் நுதலும் திரவிடநாடு திலகமும் தமிழணங்கு திலகவாசனையுமாம். ஒளவை பாடிய "வையகமெல்லாங் கழனியா" என்னும் வெண்பாவைப் போன்றது இத்தரவு.

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்,
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமுந்துளுவும்
உன்உதரத் துதித்[1]தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்,[2]
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்[3]து சிதையாவுன்
சீரிளமைத் திறம்[4]வியந்து செயல்மறந்து[5] வாழ்த்துதுமே. (2)

[1] உன் வயிற்றிற் பிறந்து, உன்னிடமாகத் தோன்றி.

[2] ஒரு பாஷை பலவாக விகற்பப்பட்டாலும்.

[3] ஆரியம் நெடுங்காலமாய் நூல்வழக்கா மதனையே.

[4] கன்னிமை. [5] செய்யத்தக்கதை மறந்து. அவசமாய்.

**இவை பன்னிரண்டும் தாழிசை.**

கடல்குடித்த குடமுனிஉன் கரைகாணக் குருநாடில்
தொடுகடலை உனக்குவமை சொல்லுவதும் புகழாமே. (1)

அகத்தியர் தென்னாட்டில் செல்லக் கட்டளை பெற்றபோது சிவபெருமானிடத்தில் தமிழ் அறிவுறுத்தப் பெற்றாரென்பது புராண வரலாறு. "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத், தொடர்புடைய தென்மொழியை உலகமெலாம் தொழுதேத்தக், குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்" என்பது காஞ்சிப்புராணம் "தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்" என்பது கம்பராமாயணம்.

ஒருபிழைக்கா அரனார்முன் உரையிழந்து விழிப்பாரேல்
அரியதுன திலக்கணமென் றறைவதும்அற் புதமாமே. (2)

ஒரு பிழை என்றது "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் பாசுரத்தில் நக்கீரர் காட்டிய பொருட்பிழை. இதனைத் திருவிளையாடற் புராணத்தில் தருமிக்குப் பொற்கிழியளித்த படலம் விரித்துரைக்கின்றது. "விழிப்பாரேல்" என்பதை, ஒன்றுந் தோன்றாமல் விழிப்பாராயின் என்றும், கோபத்தால் நெற்றிக்கண்ணின் தீயெழ விழிப்பாராயின் என்றும் பொருள்கொள்ள வைத்திருக்கிறார்.

சதுமறைஆ ரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே. (3)

ஆரியர் இந்தியாவில் குடியேறுமுன் திராவிடர் இந்தியாமுழுவதும் பரவியிருந்தனரென்பது சரித்திரத் துணிபாதலால் இங்ஙனங் கூறினார்.

வேகவதிக் கெதிரேற விட்டதொரு சிற்றேடு
காலநதி நினைக்கவராக் காரணத்தின் அறிகுறியே. (4)

வேகவதி—வையையாறு. சிற்றேடு என்பது சமணர்கள் மாறுகொண்டபோது சைவத்தின் மகிமையை விளக்கும் பொருட்டுத் திருஞானசம்பந்தர் வையையில் விட்ட ஏடு என்பதாம். திருவிளையாடற் புராணத்தில் சமணரைக் கழுவேற்றிய படலத்தைப் படிக்க. காலநதி நினைக்கவரா என்றார், காலநதியில் தமிழானது வழக்கொழியாமல் நீடித்து வருதலால். ஏடானது காரணத்தின் அறிகுறி எனமுடிக்க.

கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையார்உன் வாசகத்தில் ஒருபிரதி கருதினதே. (5)

திருவாதவூரர் சிதம்பரத்தில் வீற்றிருந்தபோது, வேதியர் வடிவுடன் வந்த சிவபெருமான் "மாணிக்கவாசகன் சொற்படி அம்பலவாணன் கையெழுத்து" எனக் கையொப்பமிட்டுச் செய்த பிரதிகள் திருச்சிற்றம்பலக் கோவையாரும் திருவாசகமும் என்ப. 'கடையூழி வருந் தனிமை' என்றது சர்வசங்காரத்துக் கப்புறம் சிவபெருமான் தான் ஏகனாய்த் தனிமையுற்றிருப்பதை.

தக்கவழி விரிந்திலகும் சங்கத்தார் சிறுபலகை
மிக்கநலம் சிறந்தவுன்றன் மெய்ச்சரித வியஞ்சனமே. (6)

வியஞ்சனம்—அடையாளம். பலகை மெய்ச்சரித வியஞ்சனம் எனமுடிக்க.

வடமொழிதென் மொழியெனவே வந்தஇரு விழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே கிழக்கொடுமேற் குணராரே. (7)

வீறுடைய கலைமகட்கு விழியிரண்டு மொழியாறல்
கூறுவட மொழிவலமாக் கொள்வர்குண திசையறியார். (8)

கலைமகடன் பூர்வதிசை காணுங்கால் அவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா மதியாரோ மதியுடையார். (9)

இம்மூன்று தாழிசையும் கருதியது:—சரஸ்வதி கிழக்கு நோக்கியிருந்தால், அத்தேவியின் இடக்கண் வடக்கும் வலக்கண் தெற்குமாகப் பொருந்தியிருக்கும். ஆகவே தென்மொழி வடமொழிகளை அத்தேவியின் கண்களாகக் கொள்வார்க்குத் தென்மொழி வலக்கண்ணும் வடமொழி இடக்கண்ணுமாகும். இஃதறியாது வடமொழியை உயர்த்திப்பேசிக் கெடுவழக்குத் தொடர்பவர் கிழக்கு மேற்குத் தெரியாத மதியீனராவர்.

குணதிசை—கிழக்கு. சிலேடையால் குணமான (நன்மையான) நெறி என்றுகும்.
பூர்வதிசை—கிழக்கு. சிலேடையால் பழமையான நிலைமை என்றுகும்.

பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே. (10)

ஆதி என்றது ஏனைய சங்கவிலக்கியங்களை. பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனை—அபூத கற்பனை. பற்றினர் கற்பனையைப் பற்றுவரோ என்க.

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி ஒருகுலத்துக் கொருநீதி. (11)

உணர்ந்தோர் நீதியை உள்ளுவரோ எனமுடிக்க. மநுவாதி—மநுதர்மசாஸ்திரம் முதலான பதினெண் மிருதிகள். ஒருகுலத்துக் கொருநீதி—குற்றஞ் செய்தவர்களுக்குக் குற்றத்திற்கேற்ற தண்டனையை ஒரேவிதமாய் விதியாமல் வருணபேதத்துக் கேற்றவாறு வேறுபடுதலான தண்டநீதி.

மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடையென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ. (12)

கனம் சடை என்பன வேதத்தை உருவிடும் விகற்பங்கள். வடமொழி வேதத்தைப் பொருளறியாமல் உருவிடுவோரைப் பரிகாசஞ் செய்கிறார். திருவாசகத்துக் குருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகாராதலால் "மனங்கரைத்து" என்றார். மலம்—மும்மலம்.

என வாங்கு (தனிச்சொல்).

ஆசிரியச் சுரிதகம்.

சிற்புகழ்ந் தேத்துநின் நெடுந்தகை மைந்தர்
பற்பலர், நின்பெரும் பழம்பணி புதுக்கி[1]யும்,
பொற்புடை நாற்கவிப் புதுப்பணி குயிற்றி[2]யும்
நிற்பவர்நிற்க. நீபெறும் புதல்வரில்
அடியேன் கடையேன் அறியாச் சிறியேன்.

[1] பழைய நூல்களின் சாரத்தையெடுத்துப் புதியதாக அமைத்து வழிநூல் இயற்றுதலைக் குறித்தது. இது "Putting old wine in new bottles" என்பது போன்றது.

[2] நாற்கவி—ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம், நாற்கவியாகிய புதுப்பணி. என்றது முதனூல் இயற்றுவதைக் குறித்தது.

கொடுமலையாளக் குடியிருப் புடையேன்
ஆயினும்[1], நீயே தா[2]யெனுந் தன்மையின்
மேயபே ராசைஎன் மீக்கொள ஓர்வழி
உழைத்தலே தகுதியென் றிழைத்தஇந் நாடகம்[3]
வெள்ளிய[4] தெனினும் விளங்குநின் கணைக்கால்
கொள்ளிய சிறுவிர லணியாக்
கொண்மதி அன்பே குறியெனக் குறித்தே.

[1] மலையாள வழக்குகள் சில கொடுந்தமிழாதலால் "கொடு மலையாளம்" என்றார்: தமிழின் ஆபாசமாதலாலும் அங்ஙனங் கூறினாராகக் கொள்ளலுமாம். [2] மலையாளத்துக்குத் தாயகமான பாஷை. [3] மனோன் மணீயம். [4] பொருளழுத்தமில்லாதது.



# PART V.

# புறநானூறு.

கடைச்சங்கப்புலவர் காலத்தில் வழங்கியிருந்த பல தனிப்பாடல்கள் பொருளை ஒட்டியும் அளவை ஒட்டியும் பாவகையை ஒட்டியும் வெவ்வேறாக எட்டுத் தொகைகளாகத் தொகுக்கப்பட்டன. அவை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன. இவற்றுள் புறப்பொருளை ஒட்டிய நானூறு அகவற் பாக்கள் புறநானூறு எனவழங்கும். தமிழ்நாட்டு முற்காலத்து மூவேந்தர் வீரர் புலவர் வள்ளல்கள் பலருடைய சில சரித்திரக் குறிப்புகள் இந்நூலால் விளங்கும். நவின்றோர்க்கினிமையும் ஆழமுடைத்தாதலும் விழுமியது பயத்தலும் விளங்குதாரணத்த தாகுதலும் இந்நூலின் சிறப்பியல்புகள்.

இந்நூலில் இங்கே எடுத்துக்கொண்ட அகவல்கள் கையறுநிலை என்னும் துறையைச் சேர்ந்தவை. கையறுநிலையாவது, அரசன் இறப்ப அவனைச் சேர்ந்தோர் அவ்விறந்துபாட்டைச் சொல்லித் தளர்ச்சி அடைதல். "செங்கழன் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர், கையற வுரைத்துக் கைசோர்ந்தன்று"—புறப்பொருள் வெண்பாமாலை. "வலங்கெழுவேந்தர் வான்புகக் கவிஞர், கலங்கித் தொடுப்பது கையறுநிலையே"—பன்னிருபாட்டியல்.

# புறநானூறு.

## கையறுநிலை.

65. சேரமான் பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற்பெருவளத்தானோடு பொருது புறப்புண் நாணி வடக்கிருந்தானைக் கழாத்தலையார் பாடியது.

மண்[1]முழா[2] மறப்பப், பண்யாழ் மறப்ப,
இருங்கட் குழிசி[3] கவிழ்ந்திழுது மறப்பச்[4],
சுரும்பார் தேறல்[5] சுற்றம் மறப்ப,
உழவர் ஓதை[6] மறப்ப, விழவும்
அகலுள் ஆங்கண் சீறார் மறப்ப[7],
உவவுத் தலைவந்த பெருநாள் அமைய[8]த்
திருசுடர்[9] தம்முள் நோக்கி ஒருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்கு[10]த்,
தன்போல்[11] வேந்தன் முன்புகுறித் தெதிர்ந்த
புறப்புண் நாணி[12] மறத்தகை மன்னன்
வாள்[13] வடக் கிருந்தனன்[14]. ஈங்கு
நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே.

---

1 மார்ச்சனை. 2 தண்ணுமை. 3 பெரிய இடத்தையுடைய பானை. 4 பாலின்மையின் கவிழ்ந்து நெய்கடைதலை ஒழிய. 5 மது. 6 தொழில் செய்யும் ஓசை. 7 சீறார் விழாவினை ஒழிய. 8 உவவு...அமையம் = பூரணை. 9 சூரியனும் சந்திரனும். 10 ஒளித்தாற்போல. 11 தன்னை ஒக்கும். 12 முன்பு...நாணி = மார்பில்தைத்து உருவின புண்ணும் புறப்புண்ணுதலை ஒக்குமென நாணி (என்பதாகக் கொள்ளவேண்டும்). புறப்புண்–முதுகிலே பட்ட புண். (விழுப்புண்–முகத்திலும் மார்பிலும் பட்ட புண்). 13 வாளுடன். 14 வடக்கிருத்தல் என்பது கிழக்கு முகமாகத் தருப்பையைப் பரப்பி, வடக்குநோக்கியிருந்து, தம்முயிர்விடச் செய்து கொள்ளும் ஒரு மஹாவிரதம். இது வடமொழியில் 'பிராயோபவேசப்' எனப் பெறும்.

மறப்ப என்னும் எச்சங்களெல்லாம் வடக்கிருந்தனன் என்னும் வினையோடு முடிந்தன.

இச்செய்தி அகநானூற்றினும்

"கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருது புண்ணாணிய சேரலாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென" என்று குறித்திருக்கிறது.

### 221. கோப்பெருஞ்சோழன் நடுகற் கண்டு பொத்தியார் பாடியது.

பாடுநர்க் கீத்த பல்புக ழன்[1]னே;
ஆடுநர்[2]க் கீத்த பேரன்[3]பி னனே;
அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்[4]னே;
திறவோர்[5] புகழ்ந்த திண்ணன்பி னனே;
மகளிர் சாயல்[6]; மைந்தர்க்கு மைந்து[7];
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்[8].
அனையன் என்னு தத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று[9].
பைதல் ஒக்கல்[10] தழீஇ அதனை
வைகம்[11] வம்மோ, வாய்மொழி[12] புலவீர்,
நனந்தலை யுலகம் அரந்தை[13] தூங்கக்
கெடு[14]வில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினன்[15] புரவலன் எனவே.

### 230. அதியமான் தகடூர்ப்பொருதுவீழ்ந்த எழினியை அரிசில்கிழார் பாடியது.

கன்றமர் ஆயம்[16] கானத் தல்க[17]வும்,
வெங்கால் வம்பலர்[18] வேண்டுபுலத் துறையவும்.
களமலி குப்பை[19] காப்பில வைகவும்,
விலங்குபகை[20] கடிந்த கலங்காச் செங்கோல்[21],

---

[1] பல புகழினையும் உடையன். [2] கூத்தர். [3] ஈத்த அன்பு—ஈத்தற்கு ஏதுவாகிய அன்பு. ஈத்த புகழ்—ஈதலால் உளதாகிய புகழ். [4] செங்கோலை உடையன் [5] சான்றோர். [6] மகளிரிடத்து மென்மையையுடையன். [7] வலியோரிடத்து மிக்க வலியுடையன். [8] புகலிடம். [9] கொண்டுபோயிற்று. [10] துன்பமுற்ற சுற்றம். [11] வைவேம். [12] மெய்யுரை. [13] துன்பம். [14] கேடு. [15] நடப்பட்ட கல்லாயினன். நடுகல்—போரில் வீரர் இறந்தவிடத்து அவருருவம் செய்து பெயரைப் பொறித்து நட்ட கல். "விழுத்தொடை மறவர் வில்விடத்தொலைந்தோர், எழுத்துடை நடுகல்" என்பது ஐங்குறுநூறு.

புலவீர், அத்தக்கோனைக் கூற்றம் இன்னுயிர் உய்த்தது. அதனால் புரவலன் கல்லாயினனென ஒக்கல்தழீஇ அதனை வைகம்வம் எனக் கூட்டிக்கொள்ளவேண்டும்.

கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார்க்கும் பொத்தியார்க்கும் உயிர்த்தோழன். இவன் எல்லாவற்றையும் துறந்து வடக்கிருந்து, உடன் உயிர்நீத்தற்குவந்த பொத்தியாரை 'மகன் பிறந்தபின் வருக' எனக் கூறியனுப்பி, தான் உயிர்நீத்துக் கல்லாயினன்.

[16] பசுக்கூட்டம். [17] தங்க. [18] வழிப்போவார். [19] களத்தின்கண் நிறைந்த நெற்பொலி. [20] எதிரில் நின்று தடுக்கும்பகை. [21] செவ்விய ஆட்சி.

வையகம் புகழ்ந்த வயங்குவினை[1] ஒள்வாள்,
பொய்யா[2] எழினி பொருது களஞ்சேர[3];
ஈன்றோள் நீத்த[4] குழவி போலத்
தன்னமர் சுற்றம் தலைத்தலை இனைய[5]க்
கடும்பசி கலக்கிய இடும்பைகூர் நெஞ்சமொடு
நோயுழந்து வைகிய உலகினும்[6] மிகநனி
நீஇழந் தனையே, அறனில் கூற்றம்!
வாழ்தலின் வரூஉம் வயல்வளன்[7] அறியான்
வீழ்குடி[8] உழுவன் வித்துண் டாங்(கு),
ஒருவ னாருயிர் உண்ணு யாயின்,
நோரார்[9] பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்[10]னோ அவன் அமரடு களத்தே.

235. அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

சிறியகள் பெறினே எமக்கீயு மன்னே!
பெரியகள் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே!
சிறுசோற் றானும்[11] நனிபல கலத்தன் மன்னே!
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே!
என்பொடு தடிபடு வழி யெல்லாம்[12]
எமக்கீயு மன்னே!
அம்பொடு வேல்நுழை வழி யெல்லாம்[13]
தான்நிற்கு மன்னே!

1 போர். 2 மொழிதப்பாத. 3 போர்க்களத்தில் வீழ. 4 கைவிட்ட. 5 வருந்த. 6 உலகத்தாருடைய துக்கத்தைக்காட்டிலும். 7 வயலிடத்து விளையும் வருவாய். 8 தளர்ந்தகுடி. 9 பகைவர். 10 கழிவின்கண் வந்த இடைச்சொல். எழினி களஞ்சேர ஒருவனாருயிரை உண்ணுயாயின் அவன் அமரடுகளத்துப் பல்லுயிரையும் பருகி ஆர்குவை: அது கழிந்ததே எனக் கூட்டிக்கொள்ள வேண்டும்

அதியமான் ...எழினி- போரில் வல்லவனும் சிறந்த கொடையாளியுமாகிய ஒரு செங்கோல் வேந்தன்.

அரிசில்கிழார் பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தைப் பாடித் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையிடம் ஒன்பது நூறாயிரம் காணம் பரிசில் பெற்றவர். பேகன் என்னும் வள்ளலையும் பாடியிருக்கிறார்.

11 சிற்றளவினையுடைய சோற்றின் கண்ணும். 12 எலும்போடு கூடிய மாமிசம் உளதாகிய இடமுழுதும். 13 போர்க்கள முழுவதும்.

நரந்தம்[1] நாறும் தன் கையால்
புலவுநாறும் என்தலை தைவரும் மன்னே!
அருந்தலை இரும்பாணர் அகல்மண்டை[2]த் துளைஉரீஇ[3]
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர்[4] புன்கண் பாவை சோர[5]
அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றவன் அருநிறத்[6] தியங்கியவேலே.
ஆ[7]சா கெந்தை யாண்டுளன் கொல்லோ?
இனிப் பாடுநரும் இல்லை? பாடுநர்க்
கொன்றீகுநரும் இல்லை.
பனித்துறைப் பகன்றை[8] நறைக்கொள் மாமலர்
சூடாது வைகியாங்குப், பிறர்க்கொன்
றீயாது வீயும் உயிர்தவப் பலவே.

238. வெளிமான் துஞ்சியபின் பெருஞ்சித்திரனார் பாடியது.

கவிசெந் தாழி[9]க் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவ[10]லும் பொகுவலும்[11] வெருவா[12]
வாய்வன் காக்கையும் கூகையும் கூடிப்
பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்கும்[13]
காடு[14] முன்னினனே கட்[15]கா முறுநன்.
பாடுநர் கடும்பு[16]ம் பையென் றனவே.
தோடு[17]கொள் முரசும் கிழிந்தன கண்ணே.

---

[1] நரந்தப்பூ. [2] பிச்சாபாத்திரம். [3] துளையை உருவி. [4] தன்னால் புரக்கப் படும் சுற்றத்தார். [5] புல்லிய கண்ணிற்பாவை ஒளிமழுங்க. [6] மார்பு. [7] ஆசு—பற்று. [8] a plant.

அவன் மார்பில் உருவிய வேல் அவனுக்கு மரணத்தை உண்டாக்கியதோடு பாணர் முதலானோருக்கும் மரணத்தை உண்டாக்கலான் ஒரு காலத்தே யாவரிடத் தும் தைத்தது என்றாராகக் கொள்ளவேண்டும்.

அதியமான் நெடுமான்அஞ்சி சேரமானுக்கு உறவினன். இவனுடைய ஊர் தகடூர்; மலை குதிரைமலை. இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன்; காஞ்சிநகரத் திருந்த தொண்டைமானிடம் ஔவையைத் தூது விடுத்தவன்; சேரமான் பெருஞ் சேரல் இரும்பொறையால் வெல்லப்பட்டான் என்று பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்து விளக்குகின்றது.

[9] A sepulchral urn. [10] கழுகின் சேவல். [11] ஒருபுள். [12] அஞ்சாவாய். [13] விரும்பிய வழியே இயங்கும். [14] இடுகாடு. [15] கள்—வீரபானம். [16] சுற்றம். [17] தொகுதி.

ஆளில்,[1] வரைபோல் யானையும் மருப்பிழந் தனவே.
வெந்திறல் கூற்றம் பெரும்பே துறுப்ப[2]
எந்தை யாகுதல் அதற்படல்[3] அறியேன்.
அந்தோ அளியேன்[4] வந்தனென். மன்ற
என்னா குவர்கொல் என்றுன்னி யோ[5]ரே?
மாரியிரவில் மரம்[6] கவிழ் பொழுதின்
ஆரனூர் உற்ற நெஞ்சமொ டோராங்குக்[7]
கண்ணில் ஊமன் கடற்பட் டாங்கு[8]
வரை[9]யளந் தறியாத் திரையரு நீத்த[10]த்
தவலம்[11] மறுசுழி மறுகலின்[12]
தவ[13]லே நன்றுமன் தகுதியும் அதுவே.

239. நம்பி நெடுஞ்செழியனைப் பேரெயின் முறுவலார் பாடியது.

தொடியுடைய தோள்[14]மணந்தனன்;
கடிகாவில் பூச்சூடினன்;
தண்கமழும் சாந்துநீவினன்[15];
செற்றோரை[16] வழிதபுத்தனன்[17];
நட்டோரை உயர்புகூறினன்;
வலியரென வழிமொழியலன்[18];
மெலியரென மீக்கூறலன்[19];
பிறரைத்தான் இரப்பறியலன்;
இரந்தோர்க்கு மறுப்பறியலன்[20];
வேந்துடை யவையத் தோங்குபுகழ் தோற்றினன்[21];

1 பாகர் முதலான ஆளில்லாத. 2 பேது உறுப்ப—இறந்து பாட்டை எய்துவிப்ப, மரணத்தை உண்டாக்க. 3 அவ்விறந்து பாட்டிலே படுதல். 4 அளித்தலை யுடையேன். 5 என்னையடைந்த சுற்றத்தார். 6 மரக்கலம், சப்பல். 7 ஒரு பெற்றிப்பட. 8 கடலில் அழுந்தினாற்போல. 9 எல்லை. 10 வெள்ளத்தின் கண். 11 அவலம்—துன்பம். 12 துன்பமாகிய மறுசுழியின்கட் பட்டுச் சுழலுவதைக்காட்டிலும். 13 இறந்துபடுதல். யான் அங்ஙனம் இறக்கப்பெற்றிலேன் என்பது கருத்து. கண் இழிந்தன, மருப்பிழந்தன என்ற கருத்து, அவற்றால் தொழில்கொள்வார் இன்மையின் அவை பயனிழந்தன என்பதாம்.

பெருஞ்சித்திரனாரால் பாடப்பெற்றவர் குமணன், இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி என்போர். வெளிமான் மிக்க கொடையாளியாகிய ஒரு சிற்றரசன்.

14 மனைவியர் தோள். 15 பூசினன். 16 பகைத்தவரை. 17 இளையொடும் கெடுத்தான். 18 அவர்க்கு வழிபாடு கூறியறியான். 19 மிகுத்துச் சொல்லியறியான். 20 யாதும் இல்லையென்று மறுத்தலை அறியான். 21 வெளிப்படுத்தினன்.

வருபடை எதிர்தாங்கினன்[1];
பெயர்படை புறங்கண்டனன்[2];
கடும்பரிய மா[3]க்கடவினன்;
நெடுந்தெருவில் தேர்வழங்கினன்;
ஓங்கியல களிறூர்ந்தனன்;
தீஞ்செறி தசும்பு[4]தொலைச்சினன்[5];
பாணுவப்பப் பசிதீர்த்தனன்;
மயக்குடை மொழி[6]விடுத்தனன்;
செய்ப வெல்லாம் செய்தன னாகலின்,
இடுக வொன்றோ சுடுக வொன்றோ.
படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலை[7]யே.



[1] தன் எல்லையுள் புகாதபடி எதிர்நின்று தடுத்தான். [2] புறங்கொடுத்ததைக் கண்டு அதன்பின் செல்லாது நின்றான். [3] விரைந்த செலவையுடைய குதிரை. [4] மதுக்குடங்கள். [5] பலர்க்கும் வழங்கித் தொலைவித்தான். [6] நடுவு நிலைமையின் மயக்குதலையுடைய சொற்கள். [7] இடுக...தலையே = புகழை விரும்புவோனது தலையை வாளாலறுத்துப் போட்டாலும் போடுக; அன்றிச்சுடினும் சுடுக; பட்டபடி படுக. ஒன்றோ என்பது எண்ணிடைச் சொல்.

இப்பாண்டியன் அரசர்களுக்குரிய எல்லா இன்பங்களையும் அனுபவித்தவன்: எல்லா நன்மைகளையும் உடையவன்.

# சிலப்பதிகாரம்.



சிலப்பதிகாரம் கோவலன் கண்ணகி என்னும் இருவருடைய கதையைக் கூறும் நூல். இது சேரர்குலத்துதித்த இளங்கோவடிகளாற் பாடப்பட்டது. இளங்கோவடிகள் சேரன் செங்குட்டுவன் தம்பி; நெடுஞ்சேரலாதன் மகன். சிலப்பதிகாரத்தால் அந்நூல் இலங்கை அரசனாகிய கயவாகு காலத்திற் பாடப்பட்டதாகத் தெரிகின்றது. இலங்கை அரசர்களுள் கயவாகு என்னும் பெயருடையோர் இருவர் உளர்; ஒருவர் இரண்டாம் நூற்றாண்டினும் மற்றையவர் பதினொன்றாம் நூற்றாண்டினும் இருந்தவர். சிலப்பதிகாரம் பதினொன்றாம் நூற்றாண்டிற் பாடப்பட்ட தன்றென்பதும் அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் பாடப்பட்டிருத்தல் வேண்டுமென்பதும் பலவகையானும் தேற்றமாதலால், அது இரண்டாம் நூற்றாண்டிலிருந்த கயவாகுகாலத்திலேயே பாடப்பட்டதாதல்வேண்டும்.



# சிலப்பதிகாரம்.

## ஆய்ச்சியரர் குரவை.

1. கன்று குணிலாக் கனிஉதிர்த்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையம் தீங்குழல் கேளாமோ தோழீ.

2. பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலம் தீங்குழல் கேளாமோ தோழீ.

3. கொல்லையம் சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
முல்லையம் தீங்குழல் கேளாமோ தோழீ.

### உள்வரிவாழ்த்து.

4. கோவா மலைஆரம் கோத்த கடல்ஆரம்
தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே;
தேவர்கோன் பூணாரம் பூண்டான் செழுந்துவரைக்
கோகுலம் மேய்த்துக் குருந்தொசித்தான் என்பரால்.

---

ஆய்ச்சியர்—இடைச்சியர். குரவை—கைகோத்தாடுங் கூத்து.

1. கன்று—பசுவின்கன்று. குணில்—குறுந்தடி. கனி—விளாங்கனி. ஆன்—பசு.

3. கொல்லை—புனக்கொல்லை. எல்லை—பகல். இப்பாட்டுக்களில் கொன்றை, ஆம்பல், முல்லை என வருவன இசைக்கருவி. முன்னைய இரண்டும் குழல்; மற்றையது வளை.

4. கோவா மலைஆரம்—சந்தனம். கோத்த கடல்ஆரம்—முத்து. கோவா, கோத்த இரண்டும் வெளிப்படை. தேவர்கோன்—தேவேந்திரன். துவரை—துவாரகை. பூண் ஆரம்—பூணிய ஆரம், மாலை. கோகுலம்—பசுத்திரள். உள்வரி வாழ்த்தென்பது பிறிதோருருவங் கொண்டும் கொள்ளாதும் வாழ்த்துவது.

5. பொன்இமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ஆண்டான்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்;
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
பொன்னம் திகிரிப் பொருபடையான் என்பரால்.

6. முந்நீரின் உள்புக்கு மூவாக் கடம்பெறிந்தான்
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்;
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கல்நவில்தோள் ஓச்சிக் கடல்கடைந்தான் என்பரால்.

### முன்னிலைப்பரவல்.

7. வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்,
கடல்வண்ணன், பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினையே;
கலக்கியகை அசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை,
மலர்க்கமல உந்தியாய், மாயமோ மருட்கைத்தே.

8. அறுபொருள் இவனென்றே அமரர்கணம் தொழுதேத்த
உறுபசிஒன் றின்றியே உலகடைய உண்டனையே;
உண்டவாய் களவினான் உறிவெண்ணெய் உண்டவாய்,
வண்துழாய் மாலையாய், மாயமோ மருட்கைத்தே.

9. திரண்டமரர் தொழுதேத்தும் திருமால்,நின் செங்கமல
இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே;
நடந்தஅடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தஅடி,
மடங்கலாய் மாறட்டாய், மாயமோ மருட்கைத்தே.

5. கோடு—கொடுமுடி. புகார்-கழிமுகம்; இங்கே ஆகுபெயராய்க் கழிமுக முடைய காவிரிப்பூம்பட்டினத்திற் காயிற்று.

6. முந்நீர்-கடல். கடம்பு—கடப்பமரம். கோவாமலை ஆரம் என்றற்றொடக்கத்து மூன்று பாட்டுக்களும் பூவைநிலை, சேர சோழ பாண்டியரைக் காவற்கடவுளாய மாயனாகக் கூறினமையின்.

7. வடவரை—மந்தரமலை. கடல் வண்ணன்—அண்மைவிளி. கடை கயிறு—தயிர் கடைகின்ற கயிறு. மருட்கைத்து—வியப்புடைத்து. முன்னிலைப்பரவல்—கடவுளை முன்னிலையாக்கித் துதித்தல்.

8. அறுபொருள்—ஐயமற்ற பொருள். அடைய—அடங்கலும்.

9. அமரர் திரண்டு என மாறுக. திருமால்—அண்மைவிளி. மடங்கல்—நரசிங்கம். மாறு—பகை.

படர்க்கைப்பரவல்.

10. மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோஅரணும் போர்மடியத் தொல்இலங்கை கட்டழித்த
சேவகன் சீர்கேளாத செவிஎன்ன செவியே?
திருமால் சீர்கேளாத செவிஎன்ன செவியே?

11. பெரியவனை, மாயவனைப், பேருலகம் எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக், கண்ணும்
திருவடியும் கையும் கனிவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்என்ன கண்ணே?
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்என்ன கண்ணே?

12. மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை, நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாஎன்ன நாவே?
நாராயணா என்னா நாஎன்ன நாவே?

## வாழ்த்துக்காதை.

### அம்மானைவரி.

13. வீங்குநீர் வேலி உலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணம் காத்த உரவோன்யார் அம்மானை?
ஓங்கரணம் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை.
சோழன் புகார்நகரம் பாடேலோர் அம்மானை.

10. தம்பி—லக்ஷ்மணன். சோ அரண்—வீரசோ என்னும் அரணம்; இது பாணாசுரனது. கட்டழித்தல்—காவலழித்தல். யால்-கரியவன் என்று பொருள்படும். படர்க்கைப்பரவல்—படர்க்கையிடத்தில் துதித்தல்.

11. உலகமெல்லாம் விரிகின்ற கமல வுந்தி.

12. மடம்—அறிவின்மை. தாழ்தல்—தங்குதல். கஞ்சன்—கிருஷ்ணனுடைய மாமன். நூற்றுவர்—துரியோதனாதியர். ஆரணம்—தொடர்ந்து. பஞ்சவர்—பாண்டவர்.

13. வரி—பாட்டு. அம்மானை வரி—அம்மானையாடும் பாட்டு. பாடேலோரம் மானை என்பதில் ஏலும் ஓரும் அசை.

14. புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவில் உடம்பரிந்த கொற்றவன்யார் அம்மானை?
குறைவில் உடம்பரிந்த கொற்றவன் முன்வந்த
கறவை முறைசெய்த காவலன்காண் அம்மானை.
காவலன் பூம்புகார் பாடேலோர் அம்மானை.

15. கடவரைகள் ஓரெட்டும் கண்ணிமையார் காண
வடவரைமேல் வாள்வேங்கை ஏற்றினன்யார் அம்மானை?
வடவரைமேல் வாள்வேங்கை ஏற்றினன் திக்கெட்டும்
குடைநிழலில் கொண்டளித்த கொற்றவன்காண் அம்மானை.
கொற்றவன்தன் பூம்புகார் பாடேலோர் அம்மானை.

கந்துகவரி.

16. பொன்னிலங்கு பூங்கொடி, பொலம்செய் கோதைவில்லிட
மின்னிலங்கு மேகலைகள் ஆர்ப்பஆர்ப்ப எங்கணும்
தென்னன்வாழ்க வாழ்கஎன்று சென்றுபந் தடித்துமே;
தேவர்ஆர மார்பன்வாழ்க என்றுபந் தடித்துமே.

17. பின்னும்முன்னும் எங்கணும் பெயர்ந்துவந் தெழுந்துலாய்
மின்னுமின் இளங்கொடி வியன்நிலத் திழிந்தெனத்
தென்னன்வாழ்க வாழ்கஎன்று சென்றுபந் தடித்துமே;
தேவர்ஆர மார்பன்வாழ்க என்றுபந் தடித்துமே.

18. துன்னிவந்து கைத்தலத் திருந்ததில்லை நீள்நிலம்
தன்னில்நின்றும் அந்தரத் தெழுந்ததில்லை தான்எனத்
தென்னன்வாழ்க வாழ்கஎன்று சென்றுபந் தடித்துமே;
தேவர்ஆர மார்பன்வாழ்க என்றுபந் தடித்துமே.

---

14. உடம்பரிந்த கொற்றவன்-சிபி. கறவை-பசு. கறவை முறைசெய்தவன்-மநுமுறை கண்ட சோழன்.

15. கடவரை-மதமுடையமலை, திக்கயம். வடவரை-வடக்கின்கணுள்ளமலை, இமயமலை. வேங்கை ஏற்றினன்-புலிபொறித்தவன்.

16. கந்துகவரி-பந்தாடும் பாட்டு. கந்துகம்-பந்து. பூங்கொடி-விளி. தென்னன்-பாண்டியன். பந்து-தெறிக்கும்பந்து. அடித்தும்-அடிப்போம்.

17. பெயர்ந்து வந்தெழுந்துலாய்-புடைபெயர்ந் துலாவி. மின்னுமின் இளங் கொடி-ஒளிவிடுகின்ற மின்னற்கொடி.

18. பந்து வந்து கைத்தலத்திருந்ததில்லை நிலத்திலிருந்து மீதெழுந்ததில்லை என்றது விரைவுபற்றி. பெண்கள் பந்தாடுதலின் விதத்தைச் சிந்தாமணி விமலையாரிலம்

ஊசல்வரி.

19. வடங்கொள் மணிஊசல் மேல்இரீஇ ஐயை
உடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமேல் ஊக்கக்
கடம்பு முதல்தடிந்த காவலனைப் பாடிக்
குடங்கைநெடுங் கண்பிறழ ஆடாமோ ஊசல்;
கொடுவில் பொறிபாடி ஆடாமோ ஊசல்.

20. ஓரைவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த
போரில் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன், பொறையன், மலையன் திறம்பாடிக்
கார்செய் குழலாட ஆடாமோ ஊசல்;
கடம்பெறிந்த வாபாடி ஆடாமோ ஊசல்.

21. வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்
தென்குமரி ஆண்ட செருவில் கயற்புலியான்
மன்பதைகாக் குங்கோமான் மன்னன் திறம்பாடி
மின்செய் இடைநுடங்க ஆடாமோ ஊசல்;
விறல்விற் பொறிபாடி ஆடாமோ ஊசல்.

---

பகம் 64-ம் பாடல் முதல் நான்கு பாடல்களாலும் சூளாமணி சுயம்வரச்சருக்கம் 201, 202-ம் பாடல்களாலு மறிக.

19. ஊசல்வரி-ஊஞ்சலாடும் பாட்டு. வடம்-கயிறு. ஐயை – மாதரியின் மகளாகிய ஐயை. உடங்கொருவர்-உடனின்றவர் ஒருவர். ஒற்றை-ஒற்றைத்தானம். ஊக்கல்-ஆட்டுதல். ஆடுவோம் என்னுந் தன்மைப் பன்மை முற்று ஆடாம் என எதிர்கால இடைநிலை கெட்டுநின்றது.

20. ஓரைவர்-பஞ்சவர். ஈரைம்பதின்மர்-நூற்றுவர். பெருஞ்சோறு போற்றுதளித்த சேரன்-சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்; புறநானூறு இரண்டாம் பாட்டுப் பார்க்க. பொறையன்-மலைநாட்டான்; பொறை-மலை.

21. செருவில் கயற் புலியான்-வில்லும் கயலும் புலியு மமைந்த இலச்சினையையுடையவன். மன்னன்-சேரன் செங்குட்டுவன்.

### வள்ளைப்பாட்டு.

22. தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழல் அவைப்பார் புகார்மகளிர்;
ஆழிக்கொடித் திண்டேர்ச் செம்பியன் வம்பலர்த்தார்ப்
பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல்;
பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்.

23. பாடல்சால் முத்தம் பவழ உலக்கையால்
மாட மதுரை மகளிர் குறுவரே;
வானவர்கோன் ஆரம் வயங்கியதோள் பஞ்சவன்தன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்;
வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்.

24. சந்துரல் பெய்து தகைசால் அணிமுத்தம்
வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்;
கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை
படர்ந்த நிலம்போர்த்த பாடலே பாடல்;
பனந்தோ டுளம்கவரும் பாடலே பாடல்.



22. வள்ளை—உலக்கைப்பாட்டு. காஞ்சி—ஒருமரம். அவைத்தல்—குற்றுதல். செம்பியன்—சோழன் பாழி—வலிமை. ஆரிக்கும்—விரும்பும்.

23. குறுவர்—குற்றுவர். பஞ்சவன்—பாண்டியன். உணக்குதல்—உலர்த்துதல். மேலே "தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பின" (4) என்றதும், "தேவராரமார்பன்" (16) என்றதும், இங்கே "வானவர்கோன் ஆரம்வயங்கிய தோள் பஞ்சவன்" என்றதும் தேவேந்திரன் பாண்டியனுக்கு ஆரங்கொடுத்ததைக் குறிக்கும். இக்கதையைத் திருவிளையாடற்புராணத்து இந்திரன்முடிமேல் வளையெறிந்த படலத்திற் காண்க.

24. சந்து—சந்தனம். வஞ்சி—கருவூர். கோடு—கொம்பு. பனந்தோடு—பனங் குருத்தால் தொடுத்த மாலை.

இப்பாட்டுக்களில் அம்மானைவரி சோழனையும், கந்துகவரி பாண்டியனையும், ஊசல்வரி சேரனையும், வள்ளைப்பாட்டு முறையே இம்மூவரையும்பற்றி வருதல் நோக்கத்தக்கது.

# நச்சினார்க்கினியர்.

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொருள் நுண்ணிதின் உணர்ந்த
போக்[1]கறு கேள்விப் புலவோர் புலத்தின்
நாற்பொருள்[2] பொதிந்த[3] தூக்க[4]மை யாப்பினைத்
தேக்கிய[5] சிந்தைய ராகிப்;

பாற்பட

எழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்றும்
இழுக்கற ஆய்ந்த வழுக்கில்[6] தொல்சீர்த்தித்
தோல்காப்பியம்[7] எனும் தொடர்கெடாப் பாப்பை
மறுவும் குறைவும் இன்றி என்றும்
கலையின் நிறைந்த கதிர்மதி[8] யென்ன
நிலையுடை கலத்[9]தின் நெடுங்கரை காணாக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்
நல்லறி வுடையோர் நயப்பது[10] வேண்டியும்
உரையிடை யிட்ட காண்டிகை[11] உரைத்தும்;

ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற் றெரிந்து
சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்

---

1 குற்றம். 2 அறம் பொருள் இன்பம் வீடு. 3 அடைத்துள்ள. 4 ஆராய்ச்சி. 5 நிரப்பிய. 6 மறத்தலில்லாத. 7 அகத்தியர் மாணக்கர் பன்னிருவரில் ஒருவரும் இடைச்சங்கப் புலவருள் ஒருவருமான தொல்காப்பிய முனிவர் (தொல்காப்பியக் குடியையுடையார்) இயற்றியது. இதற்கு உரை கண்டவர்கள் கல்லாடர், இளம் பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர். 8 மறுவும்...கதிர்மதி—களங்கமும் தேய்வும் என்றுமின்றிச் சோடச கலைகளும் நிறைந்த பிரகாசமுள்ள சந்திரன். 9 மரக்கலம், கப்பல். 10 மெச்சுதல் 11 "பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பின், கரப்பின்றி முடிவது காண்டிகையாகும்"—தொல்காப்பியம். "கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும், அவற்றொடு வினவிடை யாக்கலானும், சூத்திரத் துட்பொருள் தோற்றுவ காண்டிகை."—நன்னூல்.

ஒருபது பாட்டும்[1] உணர்பவர்க் கெல்லாம்
உரையற[2] முழுதும் புரைபட[3] உரைத்தும்;

ஒலித்திரைத் தல[4]த்தின் உணர்ந்தோர் உரைக்கும்
கலித்தொகை[5]க் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமும் ஏனை யுவமமும்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட்[6] கேற்ப
உள்ளுறை யுவம[7]த் தொனித்த பொருளைக்
கொள்பவர்[8] கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
இறைச்சிப் பொ[9]ருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொரு[10]ளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டி[11]ப்
பாட்டிடை மெய்ப்பாடு[12] பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற உரைத்த
நாற்பெயர்[13] பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற இன்னுரை பொருள்பெற விளம்பியும்;

---

1 தெரியலாகிய பத்துப்பாட்டு. தெரியல்—மாலை. பத்துப்பாட்டாவன:—திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை). 2 வினைத்தொகை. 3 மேன்மையாக, சிறப்பாக. 4 ஒலியையுடைய அலைகள் பொருந்திய கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளார். 5 எட்டுத் தொகையுள் ஆறுவது. அகப்பொருட் பகுதிகளை விரித்துக்கூறும் நூற்றைம்பது கலிப்பாட்டுக்களைத் தொகுத்திருத்தலால் இந்நூல் இப்பெயர் பெற்றது. ஆசிரியர் நல்லந்துவனார் இதனைக் கோத்தார் என்ப. 6 அவ்வத்திணையின் முதல் கரு உரிப்பொருள்கள். திணை என்பது, "அகப்பாட்டின் ஒரு பாட்டுக் கேட்டவிடத்து ஐந்திணையுள்ளும் இன்னதொன்றுபற்றி வந்ததென்று சொல்வது." 7 வெளிப்படையுவமம் என்பதற்கு மறுதலையானது. உவமம் வெளிப்படையாகத் தோன்றாமலிருப்பவும் வர்ணியமான கருப்பொருளில் உவமம் தொனிப்பதாக எடுத்துக் காட்டப்படுவது. தொல். பொரு. 300–ம் சூ. உரையில் காட்டிய உதாரணத்தைக் கண்டறியலாம். 8 இரசிக்கத்தக்க மாணாக்கர். 9 உள்ளுறையுவமம் கொள்வதற்கு இடமில்லாமல் வர்ணியமாக வருகின்ற கருப்பொருள். 10 அவ்வத்திணைக்குரிய பகுதிகள். 11 முறை...காட்டி = Construe. 12 "மெய்ப்பாடென்பது புறத்துக்கண்டதோர் பொருள் காரணமாக நெஞ்சின்கண் தோன்றிய விகாரத்தின் விளைவு"—பேராசிரியர். "மெய்ப்பாடு என்பது பொருட்பாடு. அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல்"—நச்சினார்க்கினியர். 13 கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத்திரட்டல், அகலங்கூறல். "பொழிப்பகல நுட்பநூ லெச்சமிந் நான்கிற் கொழித் தகலங்காட்டல்" என்றதுமாம்.

வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணி[1]யைத் தெண்கடல் மாநிலம்[2]
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சி[3]ப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சி[4]த்
திருத்தகு முனிவன்[5] கருத்திது வென்னப்
பருப்பொருள்[6] கடிந்து பொருட்டொடர்[7] படுத்து
வினையொடு முடியப் புனையுரை[8] உரைத்தும்;

நல்லறி வுடைய தொல்பே ராசான்[9]
கல்வியும் காட்சியும் காசினி அறியப்
பொருள்தெரி குறுந்தொகை[10] இருபது பாட்டிற்
கிதுபொருள் என்றவன் எழுதா தொழிய
இதுபொருள் என்றதற் கேற்ப உரைத்தும்;

தண்டமிழ் தெரிந்த வண்புகழ் மறையோன்,
வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
எண்டிசை விளங்க வந்த ஆசான்,
பயின்ற கேள்விப் பாரத்து வாசன்,[11]
நான்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூயஞானம் நிறைந்த சிவச் சுடர்
தானே யாகிய தன்மை யாளன்,
நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்,[12]

---

1 தமிழில் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. சீவகன் என்னும் அரசகுமாரன் கதையைக் கூறுவது (3145–செய்யுள்கள் உள்ளது.) ஜைனசம்பிரதாயங்களை விளக்குவது நூலாசிரியருடைய உட்கோள். 2 நிலத்திலுள்ளார் 3 கருவூர். 4 அறிவு. 5 திருத்தக்கதேவர். 6 பரும்படியான பொருள், நுண்மையற்ற பொருள். 7 பொருளின் தொடர்ச்சி. 8 புதுமையான உரை, அலங்காரமான உரை. 9 பேராசிரியர், தொல்காப்பியம், திருச்சிற்றம்பலக் கோவையார், குறுந்தொகையில் 380 பாட்டு) இவைகளுக்கு உரை இயற்றினவர். 10 எட்டுத்தொகையில் இரண்டாவது. அகப்பொருட் பகுதிகளைப் பொருளாக உடையது. 11 பரத்துவாஜகோத்திரத்தில் பிறந்தவர். 12 தமிழாராய்ச்சியில் இணையற்ற உரையாசிரியர். இவர் இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர் முதலியோர்க்குப் பிற்பட்டவர். பரிமேலழகர் காலத்தவர் என்பதற்குக் கன்னபரம்பரையன்றி வேறு சாட்சி கிடைக்கவில்லை.

இருவினை கடியும் அருவியம் பொதியில்[1]
மருவிய குறுமுனி[2] தெரிதமிழ் விளங்க
வாழி வாழி காலம்
வாழி வாழிஇம் மண்மிசை தானே.

பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டும்கலியும்
ஆரக் குறுந்தொகையுள் ஐஞ்ஞான்கும்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே.

தொல்காப் பியத்தில் தொகுத்த பொருளனைத்தும்
எல்லார்க்கும் ஒப்ப இனிதுரைத்தான்—சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

பச்சைமால் அனையமேகம் பௌவ[3]நீர் பருகிக்கான்ற[4]
எச்சில்நால் திசையும் உண்ணும் அமிழ்தென; எழுநா[5]எச்சில்
மெச்சிநா ணும் விண்ணோர் மிசைகுவர்; வேதபோத
நச்சினார்க்கினிய னெச்சில் நறுந்தமிழ்[6] நுகர்வர் நல்லோர்.



[1] பொதியமலை. [2] அகத்தியர். [3] சமுத்திரம். [4] சொரிந்த. [5] எழுநாக்கையுடைய அக்கினிக்கடவுள். பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப்பெயர். [6] எச்சிலாகிய நறுந்தமிழ்.

# கம்பநாடர்

நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான் மீகி யென்பான்.
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூரில் வாழ்வோன்
காரணி கொடையான் கம்பன் தமிழினாற் கவிசெய்தானே

நடையி னின்றுயர் நாயகன் தோற்ற[1]த்தின்
இடை நிகழ்ந்த இராமாவ தார[2]ப்பேர்த்
தொடை நிரம்பிய தோ[3]மறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயின் தந்ததே

கழுந்த[4]ராயுன கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
அழுந்த வாளிகள் தொடுசிலை ராகவ அபிநவ கவி[5]நாதன்
விழுந்த ஞாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனாய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே

கரைபெறு காண்ட மேழு; கதைகளா யிரத்தைஞ் ஞூறு;
பாசமர் பத்துநாலு; படலநூற் றிருபத் தெட்டாம்;
உரைதரு விருத்தம் பன்னீ ராயிரத் தொருபத் தாறு;
வரமிகு கம்பன் சொன்ன வண்ணமும் எண்பத் தேழே.

எண்ணிய சகாத்தம்எண்ணூற்றேழின்மேல்சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய ராமகாதை பங்குனி அத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேற்றினானே.

---

1 அவதாரம். [2] பரசுராமாவதாரம் ஸ்ரீராமாவதாரம் பலராமாவதாரம் ஆகிய மூன்றில் இடை நிகழ்ந்தது ஸ்ரீராமாவதாரம். [3] குற்றம். [4] கழுந்து—மரவைரம். கழுந்தர்—மனவைரமுள்ளவர், வன்னெஞ்சர்; கழுந்தராயுன கழல்பணியாதவர் என்றது ராக்ஷஸரை. [5] புத்தம் புதிய கவி.

அம்[1]பிலே சிலை[2]யை நாட்டி அமரர்க்கன் றமுதம் ஈந்த
தம்பிரான் என்னத் தானும் தமிழிலே தா[3]லைநாட்டிக்
கம்பநா டுடைய கோமான் கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே நரர்க்குமின் றமுதம் ஈந்தான்.

இம்பர் நாட்டிற் செல்வமெல்லாம் எய்தி அரசோ டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா ஓங்கு நீழல் இருந்தாலும் [யில்
செம்பொன் மேரு அனையபுயத் திறல்சேர் இராமன் திருக்கதை
கம்ப நாடன் கவிதையிற்போல் கற்றோர்க் கிதயம் களியாதே.

தராதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவும் அரமாயிற் றன்றே—இராவணன்மேல்
அம்புநாட் டாழ்வான் அடிபணியும் ஆதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி.

இன்றோநம் கம்பன் இறந்தநாள்? இப்புவியில்
இன்றோநம் புன்கவிகட் கேற்றநாள்?—இன்றேதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள்?

தேவிற் சிறந்த திருமாற்குத் தக்கதெய் வக்கவிஞன்
பாவிற் சிறந்த திருவாய் மொழிபகர் பண்டிதனே
நாவிற் சிறந்தஅம் மாறற்குத் தக்கநன் னாவலவன்
பூவிற் சிறந்தஆழ் வான்கம்ப நாட்டுப் புலமையனே.



உம்பர் நாட்டாரும் உரைசெறி புகழ்மைசால்
கம்பநாட் டாழ்வான் கழறிரா மாயணம்
படிகோ லோச்சும் பஞ்சவன் வளர்த்த
வடிதமிழ்க் குரைகடல் வாயமு தென்கோ?
மறைக்கிழ வோன்றவ மாணநாப் பொலியும்
நறைக்குழல் முடிபுனை நறுமலர் என்கோ?
தொல்லியல் அகத்தியம் தொல்காப் பியமெனச்
சொல்லிய லைந்தின் துகளில்காட் டென்கோ?

---

[1] ஜலம் (திருப்பாற்கடல்). [2] மலை (மந்தரமலை). [3] தாலு—நாக்கு.

ஆய்தொறும் இறும்பூ தளவ விழுச்சுவை
மாய்வின் றுதவலின் வான்றரு வென்கோ?
திராவிடம் அரிறபச் செப்பம் பெறுமா
றாவிடக் கூர்வாய் அரமிஃ தென்கோ?
வெம்பவ வலையொரீஇ விரசையங் கரையின்
உம்பர்வீ டுய்க்கும் ஒருபுணை யென்கோ?
எனவறம் கரைநா இருங்கவிச் செல்வர்
மனமுறக் கிளக்கும் மாண்பிற் றுமே.



மன்னிய அறமுதல்
பாகுபா டுணர்த்தும் பண்புடைத் தாகி,
வாகினின் றோசை மரீஇப் பல்வனப்புச்
செறிந்து,சில் லெழுத்தின் றிட்பநுட் பங்கள்
நிறைந்தின் னடைதழீஇ நெறிப்பட ஒழுகுபு,
பேரியல் பெருங்காப் பியமிதின் ஊங்கு
சீருற உளதெனச் செப்ப வல்லுநர்முயற்
கோடு துன்னூசிக் குடர்வான் பூக்கண்
கூடுறக் காட்டும் கொள்கைய தம்மா.
ஆழ முடைமையின் சூழ்கடல் வையம்
கம்ப சூத்திரம் அம்பரத் தவர்க்கும்
தெரித லரிதென்று செப்பு நெடுமொழி.

[இவை மாடம்பாக்கம் கிருஷ்ணசாமி முதலியார் இ. பி. 1861-ஞ்ல அச்சிட்ட பாலகாண்ட வுரையின் பாயிரத்திடையில் வருவன]



S. P. C. K. Press, University Printers, Madras—1917.
67*